# சிவபெருமானுடன் ஒரு திருநடனம்

## (DANCING WITH SIVA)

**சத்குரு சிவாய சுப்பிரமுனியசுவாமி**

தமிழில்:

கொரட்டூர் கே. என். ஸ்ரீனிவாஸ்

கண்ணதாசன் பதிப்பகம்

23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்,
சென்னை-600017.
தொலைபேசி: 24332682
மதுரை ❖ கோவை ❖ பாண்டி ❖ வேலூர்

## மஹா கணபதிக்கு நமஸ்காரங்கள்



ஓம் ஹ்றீம் க்லீம் க்லௌம் கம் கணபதயே வரவரத
சர்வ ஜனம்மை வசமானய ஸ்வாஹா



*யாழ்ப்பாணத்தின் சத்குரு சிவயோகஸ்வாமியினை (1872 - 1964)*
*ஓவியமாக்கியுள்ளார் இந்திர ஷர்மா.*

*ஒவ்வொரு சைவரும் போற்றும் புனித முப்பட்டை திருநீற்றினை*
*ஞானமெய்திய குரு தரித்துள்ளார்.*

*அவர் எப்போதும் அணியும் கைத்தறி துணியுடன் காணப்படுகின்றார்.*

## இத்தொகுப்பு எனது சத்குரு ஸ்ரீலங்காவிலுள்ள யாழ்ப்பாணம் கொழும்புத்துறை யோகஸ்வாமிக்கு அர்ப்பணம்

*கணேசர், அனைத்துக்கும் மூலமானவர். அழியாத இந்து கலாச்சாரம் உருவாவதற்காக, அனைத்து விக்கினங்களையும் உடைத்து அருளியவர். அவருக்கு நாங்கள் எங்களுடைய வந்தனங்களைக் காணிக்கையாக்குகின்றோம்.*

*இத்தொகுப்பு, எனது சத்குரு, ஸ்ரீலங்கா கொழும்புத்துறையின் யோகஸ்வாமிக்கு அர்ப்பணம். இவர் ஒரு துல்லிய யோகி. ஞானஒளி முழுதும் சித்திக்கப் பெற்ற ஞானி. யாரும் அறியாத இறைமையை அறிந்து, சத்தியத்தைத் தனது உள்ளங்கைகளில் ஏந்தியிருந்தவர். நந்திநாத சம்பிரதாயத்தின் கைலாச பரம்பரையைச் சேர்ந்த இவர், சத்குரு செல்லப்பஸ்வாமியின் பக்திமிகு சிஷ்யன். இத்தொகுப்பில் நீங்கள் காணும் அனைத்தும் இவர் என்னுள் ஏற்றியவை.*

*உள்ளேயே தேடி இறைவனைக் கண்டெடுக்குமாறு யோகஸ்வாமி அனைவருக்கும் கட்டளையிட்டார். சுயம் என்ன என்பதும் அது இறைமையே என்பதும் அப்போது விளங்கி விடும் என்றும், அத்தருணம் முதல் எதிலும் எவரிலும் சிவபெருமானையே காணலாம் என்றும் அறிவுறுத்தினார்.*

*அவரது பெருமை வாய்ந்த போதனைகளில் முக்கியமானது:*

*‘‘சுயம் எனும் இறைமையை அவரவரே தெரிந்து கொள்ளுங்கள். சிவபெருமானே அனைத்தையும் செய்கின்றார். அனைத்தும் சிவனே. ஆடாது அசையாது நில்.’’*

*கிட்டத்தட்ட 2000 ஆண்டுகளுக்கு முன்னர், நம் முன்னோரான திருமூலர், சிவனுடனான திருநடனத்தின் நாடியினை மிகப் பொருத்தமாகத் தந்திருக்கின்றார்:*

முப்பத்தாறு மூலப்பொருட்களும் நடனமாடுகின்றன. சதாசிவன் நடமாடுகின்றார். பிரக்ஞை ஆடுகின்றது. சிவ-சக்தி ஆடுகின்றாள். நகர்பவையும் நகராதவையும் திருநடனமாடுகின்றன. அனைத்துக்கும் மூலமான சிவபெருமான் கருணையெனும் வெள்ளமாய் ஆடும்போது இங்கிருக்கும் அனைத்தும் ஆடுகின்றன... வேதங்களும் நடனமாடுகின்றன. ஏழுலகங்களைத் தேராகவும், ஐந்து சக்கரங்களை அச்சாணியாகவும், மைய குண்டலினி சக்தியினைத் தனது இறை மேடையாகவும் கொண்டு சிவன் அந்தரத்தில் திருநடனம் புரிகின்றார். அவரே ஆழ்மனத்திலுள்ள ஜோதி. அவர் பிரபஞ்சத்தில் ஆடுகின்றார். முக்கடவுளருடனும் அவர் திருநடனமாடுகின்றார். சாந்தமாகித் தன்னுள் அமைதியெய்திவிட்ட ஞானிகளுடன் அவர் திருநடனம் புரிகின்றார். பாட்டில் அவர் ஆடுகின்றார். ஆதார சக்தியில் அவர் நடனம் உறைகின்றது. ஆன்மாக்களில் அவர் நவரசமாய் ஆடுகின்றார். நடனங்களின், திருநடனங்களின், இறை நடனங்களின் தலைவன், சிவன். ததாஸ்து.

# பொருளடக்கம்

## உபநிடதம் ஒன்று
## அழிவற்ற இறையுண்மைகள் – சனாதன தர்மம்

14. சைவர்களுக்கான வாழ்க்கை முறை எத்தகையது?

15. சிவனுடைய திருநடனச் சின்னம் குறிப்பது எதை?

## உபநிடதம் இரண்டு
## கடவுளும் கடவுள்களும் - ஈஸ்வர தேவதா சா

### மண்டலம் 4: நம் தலைமைக் கடவுள்: சிவா

16. நம்முடைய கடவுள் சிவனின் இயல்பு என்ன?

17. வெளிப்படாமல் ரகசியமாய் மறைந்துள்ள சிவனின் சுயம்தான் என்ன?

18. சிவனின் தூய பிரக்ஞையாவது யாது?

19. ஆன்மாவின் இயல்பு என்ன?

20. சிவபெருமானின் பாரம்பரிய வடிவங்கள் என்னென்ன?

### மண்டலம் 5: தர்மத்தின் கடவுளர்கள்: கணேசர் - கார்த்திகேயர்

21. சிவனைத் தவிர மற்ற கடவுளர்கள் இருக்கிறார்களா?

22. கணேசரின் இயல்புகள் என்னென்ன?

23. விநாயகப் பெருமானின் பிரத்தியேகக் கடமைகள் என்னென்ன?

24. கார்த்திகேயக் கடவுளின் இயல்பு என்ன?

25. கார்த்திகேயனின் வேல் உணர்த்துவது எதை?

## உபநிடதம் மூன்று
## அழியாத ஆன்மா - அம்ரிதாத்மா

### மண்டலம் 6: ஆன்மாவின் இயல்பு: ஆத்மஸ்வரூபம்

26. நமது தனிப்பட்ட ஆன்மாவின் இயல்பு என்ன?

27. நமது ஆன்மா, எவ்விதம் சிவனிலிருந்து வேறுபட்டுள்ளது?

28. நமது ஆன்மா, எவ்விதம் சிவனின் ஆன்மாவுடன் ஒத்துள்ளது?

29. சிவனைப் போலவே நாமும் ஏன் எல்லா இடத்திலும் நீக்கமற இல்லை?

30. மோட்சம் என்பதனை இந்துக்கள் எங்ஙனமாய் விளங்கிக் கொள்கின்றார்கள்?

### மண்டலம் 7: கர்மமும் மீண்டும் பிறத்தலும்: ஸம்ஸாரா

31. கர்மம் என்பதனை இந்துக்கள் எப்படி விளங்கிக் கொண்டுள்ளார்கள்?

32. நல்ல கர்மம், தீய கர்மம் என்று உள்ளனவா?

33. மறுபிறப்பு எனும் இயக்கம் என்ன?

34. மரணிப்பது மற்றும் மரணம் ஆகியனவற்றை நாம் எப்படிப் பார்க்க வேண்டும்?

35. மரணத்துக்கு ஒரு மனிதன் தன்னை எப்படிச் சிறப்பாய் தயார்படுத்திக் கொள்ள முடியும்?

### மண்டலம் 8:
### மனிதன் விடுதலை அடைவதற்கான பாதை: சன்மார்க்கா

36. பாதையின் நான்கு நிலைகள் என்னென்ன?

37. சரியா பாதையின் இயல்பு என்ன?

38. கிரியா பாதையின் இயல்பு என்ன?

39. யோகப் பாதையின் இயல்பு என்ன?

40. ஞானப் பாதையின் இயல்பு என்ன?

## உபநிடதம் நான்கு
## உலகம் சிவமயம்

### மண்டலம் 9: மூவுலகங்கள்: திரிலோகம்

41. இப்பிரபஞ்சம் எங்கிருந்து வந்தது?

42. பொருள் சார்ந்த இவ்வுலகத்தின் இயல்பு என்ன?

43. சூட்சும உலகத்தின் இயல்பு என்ன?

44. உயர் சொர்க்க உலகத்தின் இயல்பு என்ன?

45. பிரபஞ்சம், முடிவுள்ளதா? இது நிஜமானதா?

**மண்டலம் 10: நற்பண்புகள்: சர்வபத்ரா**

46. ஆன்மாக்களும் உலகமும் அடிப்படையில் சீரானதுதானா?

47. எதற்காக சில ஆன்மாக்கள் தீமையாக நடந்து கொள்கின்றன?

48. நன்மை மற்றும் தீமை ஆகியனவற்றின் காரணகர்த்தா எது?

49. கருணை மயமான இறைவன் எப்படி தீயசக்திகளை அனுமதிக்கலாகும்?

50. உலகத்தோடு சம்பந்தப்பட்டு வாழ்வதை ஒருவர் தவிர்க்க வேண்டுமா?

**மண்டலம் 11: பாவமும் துயரங்களும்: பாப-துக்கம்**

51. இவ்வுலகத்தில் வேதனைகள் ஏன் உள்ளன?

52. பாவம் என்பது என்ன? இதற்கு நாம் எப்படிப் பரிகாரம் காண்பது?

53. நரகம் என்பது உண்மையில் இருக்கின்றதா? சாத்தான் என்பதும் உள்ளதா?

54. பாவச்செயல்களின் விளைவுகள் யாவை?

55. தப்பான காரியங்கள் செய்வோரைக் கடவுள் தண்டிப்பதுண்டா?

## உபநிடதம் ஐந்து
## தர்மம் - முறையாய் வாழ்வது

**மண்டலம் 12: நான்கு தர்மங்கள்: சதுர்தர்மம்**

56. தர்மம் என்றால் என்ன? அதன் வடிவங்கள் யாவை?

57. பிரபஞ்ச தர்மம் உணர்த்துவது என்ன?

58. சமூக தர்மத்தின் இயல்பு என்ன?

59. மானுட தர்மத்தின் இயல்பு என்ன?
60. தனிமனித தர்மத்தின் இயல்பு என்ன?

**மண்டலம் 13: நற்குணங்கள்: சதாசாரஹ்**

61. நல்லொழுக்கம் என்பதன் பொருள் என்ன?
62. நற்குணங்களின் நான்கு திறவுகோல்கள் யாவை?
63. யாரிடமிருந்து நற்குணம் கற்கப்படுகின்றது?
64. பத்து அற்புதமான கட்டுப்பாடுகள் என்னென்ன?
65. பத்து அற்புதமான ஆச்சாரங்கள் என்னென்ன?

**மண்டலம் 14: காயப்படுத்தாமை: அஹிம்ஸா**

66. அஹிம்ஸை எனும் மிகச்சீரிய பண்பென்றால் என்ன?
67. கொல்லாமையின் உற்பத்தி ஸ்தானம் எது?
68. வன்முறையின் உற்பத்தியிடம் யாது?
69. புலால் உண்ணாமை, காயப்படுத்தாமல் வாழ்வதற்கு உதவுமா?
70. பூமியில் அமைதியை எப்படி அடைவது?

## உபநிடதம் ஆறு
## கிருஹஸ்த தர்மா - குடும்ப வாழ்க்கை

**மண்டலம் 15: கணவன் மனைவி: தம்பதி**

71. திருமணத்தின் மைய நோக்கம் என்ன?
72. கணவனின் கடமைகள் யாவை?
73. மனைவியின் முக்கிய கடமைகள் யாவை?
74. புணர்ச்சி பற்றிய இந்துமதத்தின் பார்வை என்ன?
75. திருமணத்துக்கும் புணர்ச்சிக்கும் உள்ள தொடர்பு யாது?

**மண்டலம் 16: திருமணம்: விவாகம்**

76. சந்தோஷமான திருமணத்துக்கு அடிப்படை என்ன?

77. நம் சமயத்துக்குள்ளேயேதான் நாம் திருமணம் செய்து கொள்ள வேண்டுமா?

78. இந்துத் திருமணங்கள் எவ்வாறு ஏற்பாடு செய்யப்படுகின்றன?

79. இந்துக் குடும்பத்தின் கட்டமைப்பு எத்தகையது?

80. திருமணப் பிரச்சினைகள் எவ்வாறு தீர்க்கப்படுகின்றன?

**மண்டலம் 17: குழந்தைகள்: அபத்யம்**

81. ஒரு திருமணத்தின் முழுமை எது?

82. பெற்றவர்களின் முக்கிய கடமைகள் யாவை?

83. குழந்தைகளுக்கு வழிகாட்டுவதில், எத்தனை கடுமையாக இருக்கலாம்?

84. அனைத்து இளம் வயதினரும் திருமணம் செய்து கொள்ள வேண்டுமா?

85. குடும்ப ஒற்றுமை எப்படிக் காக்கப்படுகின்றது?

## உபநிடதம் ஏழு
## மங்கள கிரியா - புனித கலாச்சாரம்

**மண்டலம் 18: ஞானத்துக்கான வழிகள்: போதி தந்த்ரா**

86. வாழ்க்கையின் இடையூறுகளை நாம் எப்படித் தாண்டுவது?

87. இந்துக்களின் தினசரி யோகப் பயிற்சிகள் யாவை?

88. ஆயுர்வேதமும் ஜோதிடமும் எவ்வாறு பயன்படுத்தப்படுகின்றன?

89. கலை மற்றும் கலாச்சாரத்தினை இந்துக்கள் எப்படி எடுத்துக் கொண்டுள்ளனர்?

90. பிறருக்குத் தருவதில், இந்துமதம் கொண்டுள்ள பார்வை என்ன?

**மண்டலம் 19: புனிதச் சடங்குகள்: சம்ஸ்காரம்**

91. வாழ்க்கைப் பயணத்தில், இந்துக்களின் சடங்குகள் என்னென்ன?
92. குழந்தைப் பிராயத்துக்கான சடங்குகள் யாவை?
93. வயது வந்த காலத்துக்கான சடங்குகள் யாவை?
94. கர்ப்ப காலத்துச் சடங்குகள் யாவை?
95. வயதாகும்போது, முக்கிய கட்டங்களுக்கான சடங்குகள் உள்ளனவா?

**மண்டலம் 20: பண்டிகைகள்: உற்சவங்கள்**

96. சைவத்துக்கான பண்டிகை நாட்கள் யாவை?
97. சிவபெருமானுக்கான அடிப்படை உற்சவங்கள் யாவை?
98. விநாயகப் பெருமானுக்கான முக்கிய உற்சவங்கள் யாவை?
99. முருகக் கடவுளுக்கான முக்கிய உற்சவங்கள் யாவை?
100. மற்ற முக்கிய உற்சவங்கள் யாவை?

## உபநிடதம் எட்டு
## உபாஸனா - புனித வழிபாடு

**மண்டலம் 21: சிவாலயங்கள்: சிவாலயா**

101. சிவாலயத்தின் இயல்பு என்ன?
102. ஆலயங்கள் எவ்வாறு அமைக்கப்பட்டு, கட்டப்படுகின்றன?
103. எப்போது ஒருவர் கோயிலுக்குப் போக வேண்டும்?
104. சிவன் கோயிலுக்கு ஒருவர் எப்படிப் போக வேண்டும்?
105. சிவன் கோயிலுக்குள் என்ன நடக்கின்றது?

**மண்டலம் 22: சிவாலய பூஜைகளுக்கான அதிகாரங்கள்: பூஜை**

106. பூஜையின் உள்ளார்ந்த முக்கியத்துவம் என்ன?

107. அர்ச்சனையின் தனித்துவம் யாது?

108. உருவ வழிபாட்டின் இயல்பு யாது?

109. சிவாலயங்களின் பூசாரிகள், யாவர்?

110. பூஜையின்போது பூசாரி செய்வது என்ன?

**மண்டலம் 23: கடவுளின் மீதான பிரியம்: பக்தி**

111. ஆரம்ப ஆன்மீக அன்பர்களுக்கு மட்டுந்தான் கோயில் வழிபாடா?

112. வழிபாட்டுக்குத் தங்களை எவ்வாறு பக்தர்கள் தயார் செய்கின்றார்கள்?

113. நம் பிரார்த்தனைகள் எவ்விதமாய் கடவுளைப் போய்ச் சேருகின்றன?

114. சைவர்கள் கோயில்களில் மட்டும்தான் வழிபாடு நடத்துகின்றார்களா?

115. இல்லங்களில் இருக்கும் பூஜையறையின் முக்கியத்துவம் என்ன?

## உபநிடதம் ஒன்பது
## மஹாத்மா - புனித ஆண்களும் பெண்களும்

**மண்டலம் 24: சந்நியாச வாழ்க்கை: சந்நியாச தர்மம்**

116. இந்துமத சந்நியாச கலாச்சாரம் எத்தகையது?

117. துறவு வாழ்க்கையின் இலக்குகள் என்ன?

118. சந்நியாசியின் குண்டலினி பாதை என்ன?

119. சந்நியாசியின் தீட்சை கொடுக்கும் உரிமை என்றால் என்ன?

120. சந்நியாசிக்கான புனிதக் கட்டளைகள் யாவை?

**மண்டலம் 25: கடவுளை அறிந்தவர்கள்: ஞானிகள்**

121. இந்துத்துவத்தின் ஆன்மீகத் தலைவர்கள் யாவர்?

122. பக்தன் என்றால் யாது? ஞானி, சத்குரு என்றால் என்ன?

123. புண்ணிய ஆன்மாக்களுக்கு வேறு பெயர்கள் உள்ளனவா?

124. குரு ஸ்தானத்தின் செயல்பாடு யாது?

125. சத்குருவின் தனித்துவப் பணி என்ன?

## உபநிடதம் பத்து
## சாஸ்திரம் - புனித நூல்கள்

### மண்டலம் 26: வெளிப்பட்டுள்ள புனித நூல்கள்: சுருதி

126. இந்து மதத்தில் வெளியாகியுள்ள புனித நூல்கள் யாவை?

127. வேதங்களில் அடங்கியுள்ளவற்றின் சாரம் யாது?

128. இன்றைய தேதியில் வேதங்கள் எங்ஙனம் முக்கியத்துவம் பெற்றுள்ளன?

129. புனித ஆகமங்களின் இயல்பு யாது?

130. இன்றைய தேதியில் ஆகமங்கள் எங்ஙனம் முக்கியத்துவம் பெற்றுள்ளன?

### மண்டலம் 27: அடுத்தகட்ட வேத நூல்கள்: ஸ்மிருதி

131. ஸ்மிருதி எனும் நூலும் இந்துமதத்தின் வேத நூல்களும் வேறுபட்டவையா?

132. வேதங்களையும் ஆகமங்களையும் எவை விஸ்தரிக்கின்றன?

133. இந்துமதத்தில் காவியங்களும் புராணக்கதைகளும் உள்ளனவா?

134. வேறு வகையான புனித நூல்கள் இருக்கின்றனவா?

135. கேள்வி-பதில் வடிவில் உள்ள இதற்கான மூலம் எங்கிருந்து வந்தது?

### மண்டலம் 28: நம்பிக்கையான உத்தரவாதங்கள்: மந்திரங்கள்

136. புண்ணியமான நமசிவாய என்றால் என்ன?

137. நமசிவாய எனும் திருமந்திரம் எப்படிப் பிழையின்றி ஓதப்படுகின்றது?

138. ஜபம் செய்வதற்குக் குரு ஆரம்பித்து வைக்க வேண்டுமா?

139. சைவத்துவத்தின் நம்பிக்கை என்ன?

140. சைவ மதத்தின் நம்பிக்கை எப்படிப் பயன்படுத்தப்படுகின்றது?

## உபநிடதம் பதினொன்று
## தவ வழி - அத்வைத ஈஷ்வரவாதா

### மண்டலம் 29: சந்நியாசமும் இருமையும்: அத்வைதம்-த்வைதம்

141. இந்துமதத்தின் பலதரப்பட்ட தத்துவங்கள் என்னென்ன?

142. ஒன்றே என்ற அத்வைதக் கொள்கையும், இருமை கொண்ட துவைதக் கோட்பாடும் எவ்வாறு வேறுபட்டுள்ளன?

143. அத்வைதமும் துவைதமும் ஒன்றுக்கொன்று ஒத்துப்போகுமா?

144. அத்வைதமும் துவைதமும் கலந்த நிலைமையின் பார்வை என்ன?

145. அத்வைதமும் துவைதமும் கலந்த நிலைமை, வேதங்களில் காணப்படுகின்றதா?

### மண்டலம் 30: சத்தியம் பற்றிய கோணங்கள்: சைவ சித்தாந்தம்

146. சைவ சித்தாந்தத்தின் இரு கிளைகள் யாவை?

147. படைப்பு பற்றிய இரண்டு பார்வைகள் யாவை?

148. கடவுள் மற்றும் ஆன்மா ஆகியனவற்றின் மீதான கருத்துக்கள் யாவை?

149. சாத்தான் (பாவம்) என்பதன் வெவ்வேறான பார்வைகள் யாவை?

150. மகா பிரளயம் என்பது பற்றிய பார்வைகள் எவையெவை?

## உபநிடதம் பன்னிரண்டு

## சம்பிரதாயம் - சக்தியை வழிவழியாய் மாற்றித் தருவது

### மண்டலம் 31: சந்நியாசமும் இருமையும்: அத்வைத-த்வைத

151. இந்து மதத்தின் ‘நாத சம்பிரதாயம்’ என்பது யாது?

152. கைலாச பரம்பரை என்பது யாது?

153. கைலாச பரம்பரையின் ஆரம்பகால ஆச்சாரியர்கள் யாவர்?

154. கடைத்ஸ்வாமி மற்றும் செல்லப்பன் ஆகியோர் யாவர்?

155. மிகச் சமீப காலத்திய கைலாச குருக்கள் யார் யார்?



சத்குரு சிவாய சுப்பிரமுனியசுவாமி

# மூலஆசிரியரின் நூல் அறிமுகம்

*இப்புத்தகத்தினையும் இதில் அடங்கியுள்ள ஆன்மீகப் பொக்கிஷங்களையும் நீங்கள் படிக்கக் கிடைக்கப் பெற்றிருப்பது ஒன்றும் ஒரு விபத்து கிடையாது. இதெல்லாம் இறைவனுடைய திருநடனத்தின் ஓர் அங்கமே.*

*இதோ, உங்கள் உள்ளங்கைகளில் நீங்கள் வைத்திருப்பது, ஒரு தெய்வீக ஞானம். நீங்கள் மற்றும் இறைவன் ஆகிய இரு தொடர்பு பற்றிய இறைஞானம். இந்துமத போதனைகள், நம்பிக்கைகள் மற்றும் ஆன்மீக வழி வாழ்தல் ஆகியன பற்றிய ஆழ்ந்த விளக்கங்கள் கொண்டதொரு பொக்கிஷமிது.*

*இவை மற்றும் இவற்றுக்கும் மேலான சங்கதிகள், தொடரும் அத்தியாயங்களில் உங்களுக்காக காத்திருக்கின்றன.*

*சொல்லப்பட்டிருக்கும் ஞான போதனைகளையும் வழிகாட்டுதல்களையும் தினசரி வாழ்க்கையில் புகுத்த முயற்சி செய்யுங்கள். மெல்ல மெல்ல கடைப்பிடியுங்கள். ஒரு நாள் 'சத்தியம்' எனும் அந்த இறைமையை உள்ளங்கை நெல்லிக்கனியாய் நீங்களே காண்பீர்கள் – மிகமிகச் சுலபமாக.*

*சிவபெருமானுடன் ஒரு திருநடனம்!*

*நமக்கும் இறைவனுக்கும் உள்ள மிக நெருக்கமான தொடர்பினை முன்வைக்கும் எத்தனை அழகானதொரு வாக்கியம்! கடவுளுடன் நடக்கும் திருவிளையாடலைச் சொல்லும் ஓர் அசாதாரணமான பதம்!*

*பிரபஞ்சம் முழுதும் இடைவிடாது நடைபெற்றுக் கொண்டேயிருக்கும் சிவபெருமானின் திருநடனமே,* Cosmic Dance *என்று வர்ணிக்கப்படுகின்றது. இங்கு அனைத்தின் இயக்கமாய் உள்ளதும் இதுவே.*

*அவரது வலக்கையிலிருந்து முழங்கும் டமருகத்தின் - உடுக்கையின் முதல் நாதம், பிறப்பாய் ஆகின்றது.*

*அனைத்தையும் விழுங்கி கபளீகரம் செய்துவிடும் அக்னியாய் அவரது இடக்கையிலுள்ள ஜ்வாலைகள் முடிவைச் சொல்கின்றன. இந்த முடிவும் வேறொன்றும் அல்ல - மற்றதின் துவக்கமே.*

*ஆக முதலும் கடைசியுமாய் உள்ள சிவபெருமானின் திருநடனத்துடன் நாமும் இயைந்து விடும்போது நேர்வது ஒன்றுமல்ல - நாம் செய்யும் அனைத்தும் அவனின் திருநடனமே என்ற ஞானமேயாகும்.*

*நாம் நினைக்கும் அனைத்தும், உணரும் அனைத்தும், பிறப்பு என்று நாம் சொல்லும் இயக்கம் முதல் மரணம் என்று நாம் முடிப்பதாய் நினைத்துக் கொள்ளும் இயக்கம் வரை - எல்லாமும் அவனின் திருவிளையாடலே அன்றி வேறெதும் அல்ல, அல்ல.*

*கடவுளும் மனிதனும் ஒன்றாய் ஒருங்கிணைந்து எப்போதும் புனிதமாய் நகரும் ஓர் இயக்கமே இது.*

*பழங்காலத்திய ஞானியரும் சந்நியாசியரும் கடவுளை விவரிக்க நடனத்தினைத் தெரிவு செய்ததில் நல்ல காரணங்கள் உள்ளன. ஆழ்ந்து பார்த்தோமேயானால், நாம் இருக்கும் இருப்பின் அடிப்படையே, சலனம்தான் - அதாவது* Movement. *இந்த சிறு சமாச்சாரம் இல்லையென்றால், பிரபஞ்சம் இருக்காது. நாம் இருக்க மாட்டோம். அனுபவம் இருக்காது. ஒன்றுமே இருக்காது.*

*ஒளி, ஒரு சலனம். சிந்தனை, ஒரு சலனம். அணுக்கள் நகர்தலில் உள்ளன. வாழ்க்கையே ஒரு சலனயியக்கம்தான். மேலும், இந்துக்கள் ஸ்திரமாய் நம்புகின்றார்கள்: ஆண்டவனும் சலனயியக்கத்தில்தான் உள்ளான்.*

*நடனம் எனும் ஒரே கலையில் மட்டுமே படைப்பாளி மற்றும் அவன் படைக்கும் கலைப்படைப்பு ஆகிய இரண்டிலும் ஒரு துல்லிய ஐக்கியம் நிலவுகின்றது. ஓவியமோ அல்லது செய்யுளோ அல்லது ஒரு கண்டுபிடிப்போ அல்லது இப்படிப்பட்ட திடுமென்று வெடிக்கும் எந்தக் கலை வடிவத்திலும் இல்லாத ஒன்று நடனத்தில் உள்ளது. இக்கலை வடிவம் முடிவடைந்ததும், விட்டு வைக்கப்படும்*

*ஸ்தூலப் பொருள் எதுவும் மிஞ்சாது. நடனம் நிறைவடைந்ததும், சேர்த்து வைக்கவோ அல்லது பார்த்துப்பார்த்துப் பூரிக்கவோ ஒன்றுமிருக்காது.*

*நடனக்கலையையும் ஆடும் நடனக்கலைஞனையும் ஒருவராலும் பிரித்து வைக்க முடியாது. எப்படிக் கடவுளை இவ்வுலகிலிருந்தும் நம்மிலிருந்தும் பிரித்து வைக்க முடியாதோ, அப்படி!*

*சிவன் திருநடனம் புரியும் இடத்துக்கு நடனக்கலையில் ஒரு புனிதமான ஸ்தானம் உண்டு. சிற்சபை அது. சிந்தனையில் அவன் ஆடும் கூடம், சிற்சபை.*

*வேறு விதமாய் சொல்ல வேண்டுமென்றால், இது நம்மில் ஒவ்வொருவரிடத்திலும் நடக்கின்றது.*

*பிரபஞ்சத்தில் சிவபெருமான் புரிந்து கொண்டேயிருக்கும் மிகவும் சிக்கலான திருநடனம், பாரம்பரிய வகையில் 108 நிலைகளாய் குறிப்பிடப்படுகின்றது.*

*இருபது நூற்றாண்டுகளுக்கு முன்னால், கைலாச பரம்பரையின் நந்திநாத சம்பிரதாயம் வழி வந்த ரிஷி திருமூலர், என்றென்றும் தீராமல் இடம்பெற்றுக் கொண்டேயிருக்கும் சிவபெருமானின் திருநடனத்தினை அன்பு ததும்பும் வரிகள் கொண்டு போற்றியுள்ளார்:*

*''அனைத்து உலகங்களிலும், புனிதம் கொண்ட சிவபெருமான் உள்ளார். இருளில் அவர் உள்ளார், பிரகாசத்தில் உள்ளார். கதிரவனில் உள்ளார், நிலவில் உள்ளார். எங்கெங்கும் அவர் உள்ளார். அனைத்து படைப்பிலும் இறைவன் உறைகின்றார். அவர் வந்து போவது ஒருவருக்கும் தெரியாது. அவர்தான், தொலைவு. அவர்தான், அருகாமை. பன்மடங்கானவர் அவர். அவர், ஒன்றே. நீர், பூமி, ஆகாசம், அக்னி, காற்று, உடலில் உள்ள பொறி - இவையெல்லாமும் அவரே. கீழே இங்கு நடந்து கொண்டிருக்கும் ஜீவன் அவரே. அதே சமயம், மரணமற்றவரும் அவரே.''*

*நமக்கெல்லாம் மேலேயுள்ள ஒரே சக்திக்கு கொடுக்கப் பட்டுள்ள உருவகங்களில், மிகவும் அதிசயமான, நுணுக்கமான,*

*கருணைமிகுந்த மற்றும் பூரணமான விவரணை, சிவபெருமான் தான்.*

*வாழும் அனைத்தையும், படைத்து, காத்து, தன்னுடன் இணைத்துக் கொண்டு ரட்சிப்பவன், அவனே.*

*தனக்குள்ளேயே பிரபஞ்சத்தை அடக்கி அதனை இயக்கி வைத்துக் கொண்டிருக்கும் பெருந்தலைவன்.*

*களங்கமற்ற ஜோதி, சிவன். புனிதமான பிரக்ஞையும், சக்தியும், அன்பும் அவனே.*

*காலமோ, வடிவமோ அற்ற ஒரே சத்தியம் அவனே - பரமசிவன்.*

*அதிசயமான உயர் ஆண்டவனான சிவனை வணங்குவோர் சைவர்கள். அவர்களது இனம், சைவ இனம்.*

*இந்து மதத்தினைச் சேர்ந்த கோடானுகோடி மனிதர்களில், ஏறத்தாழ ஐம்பது சதவிகிதத்தினருக்கும் மேலானவர்களாய் சைவர்கள் உள்ளார்கள்.*

*இந்து மதத்தின் இன்னபிற பிரிவுகளுடன் மிக அதிகமாக ஒற்றுமைகளை மட்டுமே சைவம் பகிர்ந்து கொள்கின்றது. வேற்றுமைகளை அல்ல.*

*ஆயினும், இது தனித்து நிற்பது. தனித்துவமானது.*

*இந்து மதத்தின் இரண்டாவது பிரதானமான வைணவத்தைப் போல துவைதம் கூறாமல், தியானமும் யோகமும் சார்ந்த பக்தி மார்க்கத்தை முன்வைத்து இறைவனுடன் ஒன்றோடு ஒன்றாய் கலந்து விடவல்ல அத்வைதத்தைப் போற்றுகின்றது சைவம்.*

*சைவர்களுக்கு, கடவுளும் ஆன்மாவும் ஒன்றே.*

*கடினமான பக்தி மார்க்கம் கொண்டது சைவம். ஒரே கடவுள் அணுகுமுறையும், அவனே சிவன் என்றும், அவனே உள்ளார்ந்த கடவுள் மற்றும் அண்ட சராசர படைப்பாளி என்றும் கருதும் மதமிது.*

*மனிதன் மற்றும் இறைவன் என்ற இருமை கழிந்து இரண்டும் ஐக்கியமாய் கலக்கும் ஒருமையே சைவமாகின்றது. இதன் தத்துவமும் இதுவேயாம்.*

*'சனாதன தர்மம்' என்று பெயர் சூட்டப்பட்டுள்ளது சைவமதம். மனிதயினத்தின் மிகப்பழமையான மதமாய் சைவ இந்துமதம் உள்ளதென பண்டிதர்கள் கணித்துச் சொல்கின்றார்கள்.*

*ஆறாயிரம் முதல் எட்டாயிரம் வருடங்கள் வரை பழமை வாய்ந்தது சைவம் என்று அவர்கள் கணக்கிட்டுள்ளார்கள். இதனையும் கடந்து சிந்து சமவெளி நாகரிகம் செழித்திருந்த காலத்திலேயே சைவம் பெருகியிருந்ததாகவும் சான்றுகளுடன் சொல்லப்படுவதுண்டு.*

*குஜராத்திலுள்ள தோலவிரா எனுமிடத்தில், சைவத்தின் காலம் பற்றிய பாதுகாக்கப்பட்ட சான்றுகள் உள்ளன. இங்கு 1998ல் சைவத்தையொத்த மற்றொரு மதத்தின் சுவடுகளும் அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளன.*

*இருந்தாலும், அறநூல்களாலும் சின்னங்களாலும், சைவம் இல்லாததொரு காலகட்டமாய் எந்தவொரு காலகட்டத்தையும் காட்ட முடியவில்லை. எக்காலகட்டங்களிலும் நிறைந்து காணப்பட்டுள்ளது, சைவம்.*

*இப்போதுள்ள பதினோரு மதங்களில் பத்து மதங்களுக்கு பிறந்த நாள் உள்ளது. அதற்கு முன் அவை இருந்தது கிடையாது. மற்ற அனைத்து மதங்களும் நம்பிக்கைகளும் மனிதனால் ஆக்கப்பட்டவை.*

*சைவம் அப்படி அல்ல. அதற்கு முடிவு வராது.*

*சைவம், தனது வரலாறு நெடுகிலும், மற்ற நம்பிக்கைகளுக்கு உயிர் கொடுத்துள்ளது. புத்தம், சீக்கியம், ஜைனம் மற்றும் இந்து மதத்துக்குள்ளேயே உள்ள பல்வேறு கிளைகள் போன்ற அனைத்துக்கும் தாராளமாய் பிறப்பருளியுள்ளது சைவமதம்.*

*பழமையானதாய் கருதப்படும் இதே மதம்தான், மிகப்பெரிய மதமுமாகும்.*

பூமியில் ஆறில் ஒருவர் இந்து. சமீபத்திய ஆராய்ச்சிகள், இக்கோளில் மிக வேகமாக வளரும் மதமாகவும் சைவமே உள்ளது என்கின்றன.

சைவமதத்தின் பழமையோ அல்லது அதன் பரந்துவிரிந்த அளவோ, அதனை பெரிதானதாய் ஆக்கவில்லை. பெருந்தன்மையுடன் மற்றவர்களின் கருத்துக்கும் மதிப்பளிக்கும் இனிமையான சகிப்புத்தன்மையே இம்மதத்தினை உயர்வாய் பல நூற்றாண்டு காலம் வைத்துள்ளது. கூடவே, சராசரியான கலாச்சாரம், தனிமனிதனுடைய ஆன்மீக பயிற்சிகள் மற்றும் அனுபவங்களுக்குத் தரப்படும் முக்கியத்துவம், ஆண்டவன் எங்கெங்கிலும் நிறைந்துள்ளான் எனும் கருத்து, அனைத்து சைவர்களாலும் கொண்டாடப்படும் 'ஒரே புனிதன்' எனும் சிவனின் மீதான ஆனந்தமான அர்ப்பணிப்பு, சத்தியம் எனும் இறைமை 'சுயம்' என்ற வடிவில் தன்னுள்ளேயே உள்ளது எனும் ஞானம் ஆகியனவும் சேர்ந்து, சைவமதத்தினை அழிக்க முடியாதவொன்றாய் ஆக்கியுள்ளன.

ஒவ்வொரு சைவரும் தனித்துவமானவர்கள். ஆயினும் அனைவரும் ஒரே விஷயத்தைத்தான் வாழ்க்கையில் கேட்கின்றார்கள்: வாழ்க்கையில் ஆனந்தம், பாதுகாப்பு, அன்பு, பாராட்டு, படைப்புத்திறன் கொண்டு சமுதாயத்துக்கு உதவிகரமாய் இருப்பது.

மனிதனுடைய இத்தகைய அடிப்படைத் தேவைகளை பூர்த்தி செய்யுமாறு, நிரூபணமான கலாச்சாரம் கொண்டதொரு ஸ்திரமான மதமாகும் சைவம். உலகினையும், அதில் நம்முடைய ஸ்தானத்தையும் அறிந்து கொள்ள வழிகாட்டும் சிறந்த மதமாகவும் உள்ளது இது.

ஆன்மீக வாழ்க்கையில் இறங்க வேண்டுமென்றால் அதற்குப் பல அடிப்படையான சிறந்த குணாதிசயங்கள் தேவைப்படுகின்றன: பொறுமை, மற்றவர்களுக்கான கனிவு, திறந்த மனப்பான்மை, மனிதாபிமானம், தன்னம்பிக்கை, நிர்வாகத்திறன், பக்தி, அர்ப்பணிப்பு, சரணாகதி போன்ற பல இரும்புக் குணங்களின்

கட்டுமானமே, ஆன்மீகம். இவ்வகையான நற்குணங்களை வளர்த்துக் கொள்ளத் தேவைப்படும் வழிகாட்டுதல்களை வழங்குகின்றது இம்மதம்.

சைவம், வீடு மற்றும் கோயிலை சுற்றியே இயங்குகின்றது. குடும்ப வாழ்க்கை மிகவும் பலம் பொருந்தியது, மதிப்புமிக்கது. வீட்டிலுள்ள பூஜையறையில் தினசரி வழிபாடுகள் நடத்தப்படுகின்றன.

கட்டுமானத்தில் வியத்தகு வகையில் அமைந்து விலைமதிப்பற்ற தெய்வீகமாய் திகழும் கோயில்களும் - உலகெங்கும் பரவியுள்ள இன்னபிற கோயில்களும் புனிதத்தலங்களும் - வாழ்க்கை பிரயாணத்துக்கு அமைதி காட்டும் வழிபாடுகளையும் சடங்குகளையும் செய்கின்றன.

சைவ வழிபாடு, ஒரு கூட்டு வழிபாடாய் இருப்பதைவிட, தனிமனித வழிபாடாகவே உள்ளது. ஒவ்வொரு பக்தரும் அவரவர் வழி இறைவனை நாடும் விதமாய் இருந்தாலும் புனித நாட்களில் கோயில்களெல்லாம் பக்தர்களின் சிவமுழக்கத்தில் நிரம்பிவிடும்.

## அனைத்து இந்துக்களும் எதை நம்புகின்றார்கள்?

ஒன்பது நம்பிக்கைகள் உள்ளன.

1. உலகத்தின் மிகப்பழமை வாய்ந்த அறநூல்களான வேதங்களின் புனிதத்தன்மையை நம்புகின்றார்கள் இந்துக்கள். ஆகமங்களையும் வேதங்களுக்கு இணையானதாக போற்றுகின்றார்கள். இவற்றின் அடிப்படை செய்யுள்கள், ஆண்டவனின் வார்த்தைகளாகின்றன. ஆரம்பமோ முடிவோ அற்ற இறைமதமான சனாதன தர்மத்தின் அஸ்திவாரப் பாறாங்கற்களாக இவை உள்ளன.

2. எங்கெங்கும் நிறைந்துள்ள தெய்வசக்தி ஒன்றே என்று நம்புகின்றார்கள் இந்துக்கள். அவரே இறைவன். அவர், எங்கெங்கும் நிறைந்துமுள்ளார், அதே சமயம் ஆழ் மனத்தினுள்ளேயும் குடிகொண்டுள்ளார். படைப்பாளி மற்றும் சத்தியம்.

3. அண்ட சராசரம், படைத்தல், காத்தல் மற்றும் அழித்தல் எனும் சுழற்சியில் இடைவிடாது ஈடுபட்டுக் கொண்டேயிருப்பதாய் நம்புகின்றார்கள் இந்துக்கள்.

4. நாம் செய்வதாய் நாமே சம்பாதித்துக் கொள்ளும் பலனை கர்மா என்று நம்புகின்றார்கள் இந்து மதத்தினர். நம்முடைய வார்த்தை செயல் மற்றும் நினைப்பு ஆகிய மூன்றினாலும் நம்முடைய தலையெழுத்தினை நாமே எழுதிக் கொள்வதான நம்பிக்கையிது.

5. அனைத்துக் கர்மாக்களும் கரைந்து மோட்சம் எய்தும் வரை ஆன்மாவானது மீண்டும்மீண்டும் பிறப்பெடுப்பதாய் நம்பும் இந்து மதம், மோட்சம் கிட்டும்போதுதான் மறுபடியும் பிறக்கும் நிலை கடந்த விடுதலை ஆன்மாவுக்கு கிடைக்கின்றது என்று சொல்கின்றது. எந்த ஓர் ஆன்மாவும் இத்தகுதியிலிருந்து தள்ளி வைக்கப்பட மாட்டாது என்பதே இந்துமதச்சாறு.

6. நாம் காணமுடியாத உலகங்களில் இறைமை குடி கொண்டுள்ளது என்பது இந்துமத நம்பிக்கை. இவ்வுலகங்களில் உள்ள தேவர்கள் மற்றும் கடவுளர்களுடன், நாம் மேற் கொள்ளும் கோயில் வழிபாடுகள், பூஜைகள், மதச்சடங்குகள் ஆகியன தொடர்பேற்படுத்தும் என்பதும் இதன் நம்பிக்கையே.

7. ஆழ்மனத்தில் குடிகொண்டுள்ள இறைமையான சத்தியத்தை உணர, ஞானமெய்திய சத்குருவின் வழிகாட்டுதல் அத்தியாவசியம் என்பது இந்து மத பக்தர்களின் நம்பிக்கை.

8. எல்லா வாழ்க்கையுமே புனிதமானதுதான் என்பது இந்துக்களின் நம்பிக்கை. அன்பு காட்டி போற்றப்பட வேண்டியதே வாழ்க்கை. ஆகவே அகிம்சையை பழகு.

9. அனைத்து மதங்களுக்கும் மேலானதாக நின்று 'இறைவனை அடைய இதுதான் ஒரே வழி' என எந்தவொரு மதமும் போதிக்கவில்லை என்பது, இந்து மதத்தின் அசைக்க முடியா நம்பிக்கை. ஆனால் நம்பத்தகுந்த எந்த மதமானாலும் அதுவே இறைவனின் அப்பழுக்கற்ற அன்பு மற்றும் ஜோதி ஆகியவற்றின் பாதையாகும். சகிப்புத்தன்மையும் புரிதலும் கொண்டு கடைப்பிடித்தால், இறைமை கிட்டும்.

## சிவபெருமானுடன் ஒரு திருநடனம் - படிப்பதெப்படி?

*இன்று இந்து மதத்தினர் எப்படி வாழ்கின்றார்கள் என்பதனைப் பற்றிய ஓர் அடிப்படைப் புரிதல், வினா விடை வடிவில்*

அமைந்திருக்கும் 'சிவபெருமானுடன் ஒரு திருநடனம்' படித்ததும் நேயர்களுக்கு கிடைக்கும் என்பது எங்களுடைய நம்பிக்கை. இம்மதம் பற்றிய மேன்மையை நாற்பதாண்டுகளுக்கும் மேலாக நாங்கள் பல நாடுகளில் போதித்திருக்கின்றோம்.

இம்மதம், மானுடர்களின் வாழ்க்கைப் போக்கினையே சிறப்பாய் மாற்றவல்லதென்பதை நாங்கள் அறிவோம்.

உள்ளார்ந்த இறைவனுடன் நெருக்கத்தினை மேம்படுத்தவும், கணவன்-மனைவி உறவினை நெருக்கமாக்கவும், குடும்ப ஒற்றுமையை வலிமையாக்கவும், கடவுள் மற்றும் கடவுளர்களுடன் தகர்க்க முடியாத பிணைப்பினை உண்டுபண்ணவும் இம்மதம் பேருதவி புரிந்து வெற்றியைத் தரும் என்பது யாமறிந்ததே.

இவற்றுக்கான திறவுகோல், இப்புத்தகத்தினைப் படிப்பது. படிப்பது என்றால், வெறுமனே இதிலுள்ள செய்யுட்களையும் அவற்றின் அர்த்தங்களையும் மட்டும் படிப்பதென்பதல்ல. விளக்கங்களில் சொல்லப்பட்டுள்ளதைப் போலவே வாழ்ந்து காட்டுதலாகும்.

இப்புத்தகத்தினை தனியாகவோ அல்லது ஒரு குழுவாகவோ உட்கார்ந்து படிக்க ஏழு வழிகள் உள்ளன.

1. இதில் 155 ஸ்லோகங்கள் அடங்கியுள்ளன. நாளொன்றுக்கு ஒரு ஸ்லோகம் மற்றும் அதன் பாஷ்யம் (பொருள்) என்று அமைத்துக் கொள்வது சிறந்தது. அதனை படிக்கவும். அதனை சிந்திக்கவும். உங்களுடைய சொந்த வாழ்க்கையில் கடைப்பிடிக்கவும். இது முடிந்ததும் அடுத்த ஸ்லோகத்துக்கு செல்லலாம். இப்படி செய்தால், ஐந்து மாதகாலத்துக்கு, தினசரி இப்புத்தகத்தின் ஒரு செய்யுளைப் படித்து, அறிந்து, சிந்தித்து, அதன்படி நடக்கும்படி ஆகும். இதையே மீண்டும் ஒருமுறை ஆரம்பத்திலிருந்து செய்தால் கிட்டத்தட்ட ஒரு வருடம் நிறைவுறும்.

2. பன்னிரண்டு உபநிடதங்கள் வகைப்படுத்தப்பட்டு தரப்பட்டுள்ளன. ஒரு மாதத்துக்கு ஒரு உபநிடதம் வீதம் எடுத்துக் கொள்ளலாம். ஒரு குறிப்பிட்ட மாதத்தில் ஆழ்ந்து படித்து குறிப்பெடுத்துக் கொள்ள ஓர் உபநிடத்தினை ஒதுக்கி, சொல்லப்பட்டுள்ள இந்துமத தர்மக் கருத்துக்களை தெள்ளத்

தெளிவாய் மனதில் இறக்கிக் கொள்ளலாம். ஒவ்வோர் உபநிடதமும் முழுக்கவும் வேறுபட்ட களத்தினை விவரிப்பவை. இதில், ஓர் உபநிடதம், ஒருசில மண்டலங்களின் தொகுப்பாய் தரப்பட்டுள்ளது.

3. இப்புத்தகத்தில் 31 அத்தியாயங்கள், மண்டலங்கள் என அமைக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு மண்டலத்திலும் 5 ஸ்லோகங்கள் உண்டு. ஆக, ஒவ்வொரு மண்டலமாய் தினமும் படித்து, ஒரு மாதம் முழுவதும் 155 ஸ்லோகங்களையும் பாராயணம் செய்யலாம். இது மீண்டும்மீண்டும் தொடரும் மாதங்களிலும் கடைப்பிடிக்கப்படலாம்.

4. இப்புத்தகத்தினைப் படிக்கும் மற்றொரு வழி, 'பாடவாரியாய்' அமைகின்றது. உங்களுக்கு பிரியமான பகுதியைத் தெரிந்தெடுத்து, அதுபற்றிப் பேசப்படும் ஸ்லோகங்களாய் கற்றறிதல். உதாரணத்துக்கு 'ஆன்மா.' ஆன்மா பற்றி படிக்க விரும்பினால், அது சம்பந்தப்பட்ட ஸ்லோகங்களாய் புத்தகம் முழுதிலிருந்தும் தெரிந்தெடுத்து கற்கலாம். இதைச் செய்ய ஒருமுறை புத்தகம் முழுதையும் படித்து, உங்களை ஈர்க்கும் ஆன்மீகப் பகுதிகள் எங்கெங்கு வருகின்றன என்ற குறிப்பினை உருவாக்கிக் கொள்ள வேண்டும்.

5. ஐந்தாவது: வழியென்று நாங்கள் குறிப்பிட விரும்புவது, இதிலுள்ள இறைமையான வேத வாக்கியங்களைப் படித்து அதனை ஆழ்ந்து சிந்தித்தல். ஆயிரமாயிரம் வருடங்களுக்கு முன்னால் இதே வேத வாக்கியங்கள் உருவாகி பேசப்பட்டபோது எத்தனை உயிர்ப்புடன் இருந்தனவோ அதே உயிர்ப்புடன் இவை இன்றும் உள்ளன.

6. இப்புத்தகத்தினை ஆரம்ப அட்டை முதல் இறுதி அட்டை வரை அப்படியே படித்து முடிப்பது, ஆறாவது வகை.

7. ஏழாவது: இப்புத்தகம் அதிசயிக்கத்தக்க வகையில் பிரபஞ்ச சக்தியுடன் தொடர்புடையதாகையால், கையில் எப்போதும் வைத்துக் கொண்டு இதன் ஞானத்தை அடைவது... அல்லது இரவில் உங்களது தலையணைக்கு அடியில் வைத்துக்கொள்வது.

## சிவபெருமானுடன் ஒரு திருநடனம் - என்பதனைப் போதிப்பதெப்படி?

*'சிவபெருமானுடன் ஒரு திருநடனம்' என்பதனை பற்றி விரிவுரைகள் அளிக்க நீங்கள் விரும்பினால் அதற்காக பின்வரும் ஒரு சிறு வழிகாட்டியினை நாங்கள் வகுத்துள்ளோம். இந்த அணுகுமுறை பல்வேறு அனுகூலங்களை உள்ளடக்கியது. 1.புத்தகத்தில் உள்ளவற்றை, திரும்பத்திரும்ப சொல்லாமல், ஓர் ஒழுங்குடன் அளிக்கும் வழியினை இது தருகின்றது. 2.வகுப்புக்கான நேரம் நெருங்கும்போது, என்ன பேச வேண்டும் என்ற தீர்மானம் எடுப்பதை உங்களுக்கு இது சுலபமாக்கி தரும். 3.உலகெங்கிலும் இதனைப் போதிக்கும் மற்றும் கற்கும் நபர்களிடையே பலம்வாய்ந்ததோர் ஒருங்கிணைந்த சிந்தனை தொடர்பினை, சொல்லிக் கொடுக்கப்படும் அதே நேரத்தில் இது உண்டுபண்ணித்தரும்.*

*சிறு உரையாயின், அந்நாளுக்கான ஸ்லோகத்தினை எடுத்துக் கொள்ளலாம்.*

*பேருரையாயின், ஒரு மண்டலம் முழுவதையும் எடுத்துக் கொள்ளலாம். அதிலுள்ள ஐந்து ஸ்லோகங்கள், அவற்றின் விளக்கங்கள் மற்றும் கடைசியில் தரப்பட்டுள்ள வேத வாக்கியங்கள் ஆகியனவற்றை இப்பேருரையின் பொருளடக்க மாக்கலாம்.*

*கூடுதலாக, சிறுவர்களுக்கு போதிக்கப்படும்போது, ஓவியங் களையும் குறிகளையும் சின்னங்களையும் பயன்படுத்தலாம். குழந்தைகள் விளங்கிக் கொள்ள ஏதுவாக இந்த படப்பங்களிப்புகள் உதவும். கார்ட்டூன் போன்ற சலனப்படங்களாய் தரும்போது அவை குழந்தைகளுக்கு மிகவும் பிடிக்கும். குழந்தைகளுக்கு இதனை சரிவர நாம் தரும்போது, நம் கலாச்சாரமே நல்ல வகையில் எதிர்காலத்துக்குக் கொண்டு செல்லப்படுகின்றது.*

*நம் மதம் பற்றி வளர்ந்தவர்களுக்கு என்னென்ன சொல்ல வேண்டும் என்பதனை இப்புத்தகம் ஓர் ஒழுங்கான*

கட்டமைப்புடன் எடுத்துச் சொல்கின்றது. மற்ற நம்பிக்கை கொண்டவர்களுக்கும், இந்துமதத்தின் ஆழ்ந்த ஆழமான பாரம்பரியத்தை இது முன்வைக்கின்றது.

ஞானம் பெற்று அதிசய ஆன்மீக உணர்வுகளை அனுபவிக்கும் ஞானியருக்கும் சிந்தை தெளிந்தவர்களுக்கும், மேலும் அவர்கள் இறை அனுபவங்களை அடைந்து பேரானந்தம் கொள்ள இப்புத்தகத்தின் விளக்கங்கள் வழிகோலும். இத்தகையவர்களுக்கு, அவர்தம் உள்ளார்ந்த அனுபவங்களுக்கு அங்கீகாரம் அளித்து, மேற்கொண்டு முயற்சி பண்ணும் நம்பிக்கையை இந்நூல் தருகின்றது.

## விழித்திரு! எழுந்திரு!

'*சிவபெருமானுடன் ஒரு திருநடனம்*' தொகுப்பினை நீங்கள் படிக்கும்போது, மிகப்பழமை வாய்ந்த ஞானமொன்று புதிய முறையில் வழங்கப்படுவதை உணர்வீர்கள். உடனடியாகவே, உங்களுக்குள் ஏதோவொரு மூலையில், இந்த அத்தனை நிஜங்களையும் நீங்கள் ஏற்கெனவே அறிந்தே உள்ளீர்கள் என்பதையும் கண்டுபிடிப்பீர்கள். காலத்தில் பின்னோக்கி நீங்கள் பயணிப்பதை, பல ஜென்மங்கள் கடந்து பயணிப்பதை, காண்பீர்கள். இவற்றையெல்லாம், இப்போது எப்படி படிக்கின்றீர் களோ அதேபோலவே முன்பே நீங்கள் படித்திருக்கிறீர்கள் என்பது நினைவுக்கு வரும்.

உலகத்தில் ஒரு புது தினுசான ஆன்மாக்கள் பெருகி வருகின்றன. அந்த ஆன்மாக்கள் பலமானவை ஆகவே பயம் கிடையாது. மரணம் பற்றியோ, சுகவீனம் பற்றியோ, தெளிவின்மை பற்றியோ அவை கவலை கொள்வதில்லை. அவற்றுக்கெல்லாம் ஒரேயொரு தகுதிதான் உள்ளது. அன்பினை அவை நேசிக்கின்றன... கடவுளையும் கடவுளர்களையும் அவை துதிக்கின்றன என்பதே அது. இத்தனை பலம் வாய்ந்ததாய் இருக்க அவற்றிடம் மேஜிக் கோட்பாடு ஒன்றும் கிடையாது. அவை எதையும் விற்பதில்லை. அவற்றுக்கு எதுவும் தேவையுமில்லை. அவை என்னவோ, அப்படியே உள்ளன அவை. அவற்றுள் ஒன்றாக நீங்களும் ஆகலாம்.

*ஆகவே, நம்பிக்கையுடன் நுழையுங்கள். வெற்றி நிச்சயம். பக்தி, ஞானத்துடன் ஒருங்கிணைக்கப்பட்டால்... சித்தாந்தம் வேதாந்தத்துடன் ஒருங்கிணைக்கப்பட்டால்... ஆகமங்கள், வேதங்களுடன் ஒருங்கிணைக்கப்பட்டால்... இந்து தர்மம், தினசரி வாழ்க்கையுடன் ஒருங்கிணைக்கப்பட்டால்... நீங்கள் தோற்க மாட்டீர்கள்.*

*ஆம்... இது பாதுகாப்பானதொரு பாதை, ஞானம் நோக்கி கொண்டு செல்லும் கிலேசமற்ற வழி. அனுபவித்து, பிறகு உணர்ந்து, பிறகு உங்களது சத்தியமான - இறைமையான - சுயம் எனும் ஆன்மாவுடன் ஐக்கியமாக வழிகோலும் பாதை.*

*விழித்திடுங்கள். எழுந்திருங்கள். இலக்கினை அடையும்வரை நிறுத்தாதீர்கள்!*

*இப்புத்தகத்தினையும் இதில் அடங்கியுள்ள ஆன்மீக பொக்கிஷங்களையும் நீங்கள் கிடைக்கப் பெற்றிருப்பது ஒன்றும் ஒரு விபத்து கிடையாது.*

*இந்த உலகம் மற்றும் உள்ளார்ந்த உலகம் அனைத்திலிருந்தும், உங்களுக்கு அன்பும் வாழ்த்துக்களும்.*

**சத்குரு சிவாய சுப்பிரமுனியசுவாமி,**

**கைலாச பரம்பரையின் நந்திநாத**
**சம்பிரதாயத்தின் 162வது ஜகதாச்சாரியார்,**
**குரு மஹாசன்னிதானம்,**
**கவாய் ஆதீனம், ஹவாய்**
**சத்குரு பூர்ணிமா, ஜூலை 4, 2001.**

# பிரதான பாடம்

*அரை நூற்றாண்டு காலமாய் மேற்கொண்ட தத்துவார்த்த ஆழ்சிந்தனைகள், பல நாடுகளில் சந்தித்த பண்டிதர்களுடனான ஆக்கபூர்வ விவாதங்கள், பத்தாண்டு கால ஆய்வு - ஆகியவற்றிலிருந்து கிடைத்திட்ட பொக்கிஷமான தகவல்களினால், குறிப்பிடும்படியான மூன்று புத்தகங்கள் உருவாயின. 'சிவபெருமானுடனான திருநடனம்' அவற்றில் முதலாவது.*

*'சிவபெருமானுடன் வாழ்வது' மற்றும் 'சிவபெருமானுடன் இரண்டறக் கலப்பது' ஆகியன இரண்டாவது மற்றும் மூன்றாவது புத்தகங்களாகும்.*

*இம்மூன்று புத்தகங்களும் சேர்ந்து வருடத்தின் 365 நாட்களும் தினசரி படிக்க வேண்டிய பிரதான பாடம் என்றாகின்றன.*

*அமெரிக்காவில் எங்களுடைய இந்துமதக் கோயிலை வந்து தரிசித்து செல்லும் பக்தகோடிகளுக்கு உதவும் வண்ணமாய், 1957ஆம் ஆண்டில், பிரதான பாடம் எனப்படும் இம்மூன்று புத்தகங்களின் முதல் பதிப்பு உருவாக்கப்பட்டது.*

*அப்போதிலிருந்து இது பல வடிவங்களில் வெளிவந்து கொண்டிருக்கின்றது: தனிப்பட்ட புரிதல்களுக்கு ஏற்ற பாடங்கள், தொலைதூர பயிற்சி, கவாய் ஆதீனத்திலேயே பதிவு பண்ணப்பட்ட, மொத்தம் 12 பாகங்கள் கொண்ட ஒலிப்பதிவு நாடா பதிவுகள், இதன் தூண்டுதலாக 1993ல் நேர்த்தியாய் உருவான குழந்தைகளுக்கு ஏற்ற பதிப்புகள் பிறகு, 2001ல், இருபது வருட முயற்சிகளின் பலனாய், மூன்று புத்தகங்களைக் கொண்ட இறுதி வடிவமான பிரதான பாடம்.*

*'சிவபெருமானுடனான திருநடனம்' 'சிவபெருமானுடன் வாழ்வது' மற்றும் 'சிவபெருமானுடன் இரண்டறக் கலப்பது'*

ஆகியனவே இறுதிவடிவம் கொண்ட நிலைத்த அந்த மூன்று புத்தகங்கள். உள்ளார்ந்த ஆன்ம அனுபவங்கள், அவற்றை அடையத் தேவையான சாதனா எனப்படும் பயிற்சி முறைகள் போன்றவற்றை உள்ளடக்கி, 1000க்கும் மேற்பட்ட பக்கங்களை கொண்டு அமைந்தது பிரதான பாடம்.

கைலாச பரம்பரையின் நந்திநாதா சம்பிரதாயம் எனும் தலைமுறையைக் கொண்ட இந்த ஆதீனத்தின் அஷ்டாங்க யோகா என்பதன் பொழிப்புரைகளும் விளக்கங்களும் கொண்டதொரு படைப்பாய் அமைந்துள்ளது பிரதான பாடம்.

அஷ்டாங்க யோகா என்பதே ராஜ யோகம் ஆகும். படிப்படியாய் வளர்ந்து, அடுத்தடுத்து வரும் எட்டு முறைகளை கொண்டது இது. ஒவ்வொரு முறையும், அதற்கு முந்தைய முறையை சார்ந்தே வளரும்.

அவையாவன: யம (தன்னடக்கம்), நியம (ஆசார அனுஷ்டானம் மற்றும் சடங்குகள்), ஆசனம் (நிலைப்படுத்தும் பயிற்சிகள்), ப்ராணாயாமா (மூச்சுப்பயிற்சி), ப்ரத்யாஹாரா (புலனடக்கம்), தாரணா (மன ஒருமை), தியானா (தியானம்) மற்றும் சமாதி (ஆழ்நிலையில், இறைமையுடன் கலத்தல்.)

ஒழுங்கான வழிகாட்டுதல் இல்லாத பக்தர்கள், வழக்கமாய் ஏழாவது மற்றும் எட்டாவது முறைகளிலேயே தங்களது ஆன்மீக முயற்சிகளைத் தொடங்க ஆரம்பிப்பார்கள். மற்ற ஆறு முறைகளையும் தவிர்த்து விட்டு இப்படித் துவங்கும் அவர்கள், ஏன் தங்களது முயற்சிகள் உடனடியாய் கனியவில்லை என்று வியப்பார்கள்.

அரை நூற்றாண்டுகால போதனை மற்றும் விளக்கவுரைகள் ஆகியனவற்றின் அனுபவத்தின் பயனாக, என்ன காரணத்துக்காக முதல் நிலையில் பயிற்சியை துவங்க வேண்டும் என்பதனை, முப்பாகமான இந்த பிரதான பாடம் ஐயமற விளக்குகின்றது.

குழப்பமற்ற மனநிலை மற்றும் நல்லொழுக்கம் ஆகியனவற்றை அடித்தளமாக கொண்டு, இங்கிருந்து முதல் நிலையான யம

(தன்னடக்கம்) என்பதில் அடியெடுத்து வைத்து பிறகு படிப்படியாய் முன்னேற வேண்டும் என்பதை பிரதான பாடம் முன்வைக்கின்றது.

பிரதான பாடம் கொண்டுள்ள மூன்று புத்தகங்களில் முதல் பாகமான சிவபெருமானுடன் ஒரு திருநடனம், தத்துவார்த்த மற்றும் வேதங்கள்-ஆகமங்கள் சொல்லும் நம்பிக்கைகளை விரிக்கின்றது. ஒரு சைவ பக்தனிடமிருந்து சைவ இந்து மதம் எதிர்பார்க்கும் அணுகுமுறைகள் என்னென்ன என்பதை இப்பாகம் விளக்குகின்றது.

முதல் பாகத்தில் கூறப்படும் இவையனைத்தையும் விளங்கிக் கொண்டு, கடைப்பிடித்து, வெல்ல வேண்டியது, ஒரு சைவ பக்தனின் முக்கியமான பங்காகின்றது. அப்போதுதான் மற்ற இரண்டு புத்தகங்களில் சொல்லப்பட்டுள்ள உயர் நிலைகளை அடைய சீரானதொரு முன்னேற்றம் நிகழும். மூன்று முதல் எட்டு நிலைகளை விளக்கும் இரண்டாம் மற்றும் மூன்றாம் பாகங்களின் பலன், அப்போதுதான் கிடைக்கும்.

என் பக்தர்கள், வாழ்நாள் முழுக்க தினசரி படித்துப்படித்து பயன்பெற வேண்டிய நூலாகின்றது, பிரதான பாடம். வருடம் அடுத்து வருடம், தலைமுறை தாண்டித் தலைமுறை வரை, அனைத்து பக்தர்களும் படிக்க வேண்டியதாகின்றது.

வாழ்க்கையையே நல்முறையில் உயர்ந்த நிலைக்கு மாற்றித் தரவல்ல பிரதான பாடம், மனிதனை தெய்வமாக்கவல்ல எட்டு நிலைகளையும் தெள்ளத்தெளிவாய் விளக்கி அருள்கின்றது.

ஆகவே, உங்களுடைய வாழ்க்கையை மேம்படுத்தி பேரானந்தம் அடைய நீங்கள் விரும்பினால், பிரதான பாடத்தினை இன்றே துவங்குங்கள்.

இணையதளம், புத்தக வடிவம் மற்றும் தொலைதூர கல்வி பயிற்சி ஆகிய மூவழிகளில் கிடைக்கின்றது. www.gurudeva.org என்பது இணையதள முகவரி.

மூன்று பாகங்களைக் கொண்ட பிரதான பாடப் புத்தகங்களை வாங்கிக் கொள்ளும்போது, உங்களால் எந்நேரத்திலும் படித்தறியும் வழி கிடைக்கின்றது.

*தொலைதூர கல்வி பயிற்சிக்கு* Master - Course@Hindu.org *எனும் மின்னஞ்சலில் தொடர்பு கொண்டால், விவரங்கள் கிடைக்கும்.*

**ஓர் அறிவுரை:**

*தியானத்தை ஆரம்பிக்கும் ஆரம்பக்கால மாணவனிடம் ஒரு வழக்கம் தென்படும். தனக்கான வெளியுலகம் சார்ந்த அனைத்து சமாச்சாரங்களையும் விட்டுவிட வேண்டும், அப்போதுதான் தியானம் மேற்கொள்ள அதிக அவகாசம் கிடைக்கும் என்பதே அவ்வழக்கம். இப்படி செய்தால் தன்னுடைய தியானம் துல்லியமானதாய் அமையும் என்பது அவனுடைய எதிர்பார்ப்பு.*

*ஆனால் மூன்று புத்தகங்களை உள்ளடக்கி உருவாகியுள்ள இந்த பிரதான பாடம் நூலின் இலக்கு இதுவல்ல.*

*தியானம் என்பதைப் பற்றி கேள்விப்படும் முன்னரே பணியிலிருந்தபோது பிரச்சினைகள் பலவற்றை அந்த மாணவன் எதிர்கொண்டிருப்பான். அப்பிரச்சினைகளையொத்த இன்னபிற எதிர்மறை (நெகடிவ்) விசைகளை, வெளியுலகிலிருந்து தன்னை இழுத்துக் கொள்வதனால் ஆரம்பக்கால மாணவன் இப்போது சந்திக்க நேரிடும்.*

*பிரதான பாடத்தின் முக்கிய இலக்கு, ஒருவருடைய வாழ்க்கையின் அனைத்து நிலைகளிலும் மேம்பாட்டினை ஏற்படுத்துவதுதான்.*

*முதல்படியாக, தன்னால் இவ்வுலகில் நேர்மறை (பாஸிடிவ்) விசை கொண்டு இயங்க முடியும் என்பது மாணவனுக்கு புகட்டப்படுகின்றது. அவனது கடமைகளை முழுச்சக்தியுடன் ஆற்றவும், வாழ்க்கை எனும் இயக்கம் - வெளியுலகம், சிந்தனை மற்றும் அவன் ஆகியன கொண்டு - எப்படி ஆக்கப்பட்டுள்ளது என்பதை விளக்கவும் முதற்படி அமைகின்றது.*

*பிறகு, நாளொன்றுக்கு **10, 15** அல்லது **20** நிமிட தியானமும், பிரதான பாடத்தின் ஞானமும், படிப்படியாக புத்தியை மேம்படுத்த எதேஷ்டமானதாய் அமைந்து விடும்.*

*நம் சிந்தனைப் போக்கினை அழகுற மாற்றியமைத்துக் கொள்வதில் உள்ளது எல்லாம். வெளியுலகிலிருக்கும் மாயையான நிஜங்கள் பக்கமாய் சிந்தனையை திருப்பிக் கொண்டேயிருக்காமல், உள்ளே இருக்கும் சத்தியமான இறை நிஜம் நோக்கி சிந்தனையை நிலைநிறுத்த வேண்டியுள்ளது.*

*இத்தகைய சைவ சித்தாந்த அணுகுமுறையுடன் நம்முடைய தத்துவார்த்த கட்டமைப்பு இயைந்துவிடும்போது, சிந்தனையை தியானத்துக்குள் புகுத்திவிடுவது எளிதாகி விடுகின்றது. இது கைகூடியதும், வெளியுலகம் சார்ந்த மாய இயலில் நாம் சுழன்று கொண்டிருந்தாலும் நம்முடைய சிந்தையானது அமைதியான குணம் கொண்ட உள்ளார்ந்த சத்தியத்துடன் மட்டுமே ஒட்டியிருக்கும்.*

*இதற்கான திறவுகோல், நீங்கள் எந்த வேலையைச் செய்து கொண்டிருக்கிறீர்களோ அதில் அதிக சக்தியை செலுத்துவதில் உள்ளது. உதறித் தள்ளிவிடுவதைக் காட்டிலும், அதில் ஆழ்ந்து உழையுங்கள். உங்களையே அந்தப் பணியில் வையுங்கள். அது பற்றி உற்சாகம் கொள்ளுங்கள். அப்போது உங்களுடைய உள்ளார்ந்த சுயத்திலிருந்து, அதிக அளவிலான சக்தியினை நீங்கள் அள்ளி விடுகிறீர்கள்.*

*இப்படியாக, வெளியுலகத்தைக் கருதாது உள்ளார்ந்த இறைமை எனும் சுயத்தினை அச்சாணியாகக் கொண்டு, நரம்பெங்கும் வாழ்க்கைச்சக்தி பெருக்கெடுக்கும்படியாய் ஆக்கிக் கொள்ளும்போது, நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்களோ அந்த வேலையை சிவபெருமானுடைய திருநடனத்தின் ஒரு பகுதியாக நீங்கள் சத்தியமாய் காண்பீர்கள். ஏனென்றால் உங்களுள்ளிருந்து இப்போது பெருக்கெடுத்துக் கொண்டிருப்பது, சிவனின் சக்தியே.*

*இப்பயிற்சியால், இந்த அனுபவத்தால் - மனிதனும் தெய்வமாகும் இந்த அனுபவத்தால் - உங்களது ஆழ்மனதில் படிந்துள்ள முந்தைய ஜென்மங்களின் கர்மபலன்களுடைய லீலைகளை அறுத்தெறிந்து விடலாம். சிவபெருமானுக்காக, உங்களுக்கிடப்பட்டுள்ள தர்மக் கட்டளையை செய்து*

*கொண்டிருப்பவராய் உங்களை நீங்களே புதிதாய் பார்க்க ஆரம்பிப்பீர்கள்.*

*எத்தனை தர முடியுமோ அத்தனை சக்தியினை தந்து நீங்கள் அனைத்தையும் செய்யும் புதியதொரு போக்கினையே உங்களுக்குள் காண்பீர்கள்.*

*உங்களை வரவேற்கின்றோம். மேலே சொல்லியிருப்பவை அத்தனை சுலபமாக அமையாது. ஆனால், எது மிகுந்த பலன் தருமோ அதெல்லாம் சுலபம் கிடையாது.*

**சத்குரு சிவாய சுப்பிரமுனியசுவாமி**

# சிவானந்த தாண்டவம்

சிவபெருமானுடைய நடராஜபாவ பிரபஞ்ச நாட்டியம், ஒரு குறியீடு மட்டும் கிடையாது. அது நிச்சயமான ஓர் உண்மையும் ஆகும்.

படைத்தல், காத்தல் மற்றும் அழித்தல் ஆகிய மூன்றுமிணைந்த ‘மாயா’ எனும் அடிப்படைக் கொள்கையிது. ஆண்டவனின் முடிவற்ற உத்வேகம். உத்வேகத் தாண்டவம். அண்ட சராசரத்தில் உள்ள ஒவ்வோர் அணுவிலும், நம் ஒவ்வொருவரிலும், இந்தத் திருநடனம் இடம்பெற்றுக் கொண்டிருக்கின்றது.

இந்தக் கணத்தில் நாம் அனைவரும் சிவபெருமானுடன் தாண்டவமாடிக் கொண்டிருக்கிறோம். அவர் நம்முள் உள்ளார்.

அவருடைய கிளர்ச்சியான நடனத்தின் நடுவிலும், இறைவனார் சிவபெருமானின் சிரசு, சீர்தூக்கிய சமநிலையில் அதிராமல் அசையாமல் அமைகின்றது. அவரது ‘பாவம்’ களங்கமற்று தெள்ளத் தெளிவாயும் சாந்தமாயும் உள்ளது. ஏதோ அசையாத ஒரு பொருள் அசைவில் இருப்பதைப்போல துல்லியமாய் சமநிலைப்படுத்திய நிலையில் தாண்டவம் இடம்பெற்றுக் கொண்டிருக்கின்றது.

வலக்காதில் உள்ள நாகாபரணம், ஆண்மை. இடக்காதில் பெரிய தட்டாய் மிளிரும் தோடு, பெண்மை. இவையிரண்டும் சேர்ந்து சிவபெருமான் ஆணும் கிடையாது பெண்ணும் கிடையாது என்றும், அவர் இரண்டிலும் ஆழ்ந்து உள்ளார் என்பதையும் காட்டுகின்றது.

சிவனின் மூன்றாம் கண் - நெற்றிக்கண் - ஓர் அக்கினிப்பந்து. இது ஞானத்தைச் சுட்டுகின்றது. ஞானக் கண்ணிது. கடந்தகாலம், நிகழ்காலம் மற்றும் எதிர்காலம் ஆகிய மூன்றையும் அறிந்த கண்.

*சிவபெருமானுடைய கேசம், சுருண்டு நீளநீளமாய் அலைபாய்ந்து கொண்டிருக்கின்றது. சக்திகொண்டு விசையுடன் இயங்கிக் கொண்டிருக்கின்றது. இக்கூந்தலில் உள்ளவை:*

*சேஷநாகம் - உருண்டோடும் வருடங்களைக் குறிக்கின்றது.*

*மண்டையோடு - சிவபெருமானுடைய அழிக்கும் ஆற்றலைக் குறிக்கின்றது.*

*மூன்றாம் பிறை - சிவனின் படைக்கும் ஆற்றலை இது குறிக்கின்றது.*

***கங்கை அம்மன்*** *- இந்தியாவின் முக்கியமான புண்ணிய நதி... அவரிடமிருந்து கொட்டும் கருணையை இது குறிக்கின்றது.*

*சிவனுடைய பின்புறத்து இடக்கை தகிக்கும் ஜ்வாலையை சுமந்திருக்கின்றது. சம்ஹாரம் எனும் இவருடைய அழிக்கும் ஆற்றலை இந்த அக்னி பகவான் சுட்டிக்காட்டுகின்றார். பிரளயத்தின் போது பிரபஞ்சமே விழுங்கி உள்வாங்கிக் கொள்ளப்படுவதை இது காட்டுகின்றது. பிறகொரு முறை சிவபெருமானால் மட்டுமே அது மீண்டும் உருவாக்கப்படும்.*

*இக்கை, பஞ்சாட்சர மந்திரமான* ***ந-ம-சி-வா-ய*** *மந்திரத்தில்,* ***ந*** *என்பதை குறிக்கின்றது.*



*பதிந்திருக்கும் நடராஜ சிவனின் பாதம்,* ***'ம'*** *எனும் அட்சரத்தை குறிக்கின்றது. அவருக்குள்ளேயே அளப்பரிய அளவில் உறைந் திருக்கும் கருணையை இது காட்டு கின்றது. இதுவே திரோதனா சக்தி. இதுவே ஆன்மாக்களை முதிர்ந்து பழுத்து சிவமயமாக ஆக அனுமதிக்கின்றது.*

*அபஸ்மார எனும் உருவத்தின் மீது நாட்டியமாடுகின்றார் சிவபெருமான். இருமை கொண்ட*

*ஆணவத்தினை தரித்திருக்கும் மாயை, ஆன்மாவைச் சூழ்ந்திருக் கின்றது என்பதே இதன் அர்த்தம். இதுவே கடவுளிடமிருந்து நம்மை பிரித்து வைத்துள்ளது.*

*இத்தகைய அபஸ்மாரபுருஷன், கலக்கமும் களங்கமும் அற்று சிவபெருமானின் தூக்கிய பாதத்தினைப் பார்க்கின்றான். எவ்வித பாகுபாடும் காட்டாமல் அனைத்து ஆன்மாக்களுக்கும் அமைதியும் அடைக்கலமும் தந்து இறுதியில் விடுதலையும் அளித்து தன்னுடன் இணைத்துக் கொள்ளும் சிவபெருமானின் பொற்கமலப் பாதங்களை அடைக்கலமாய் ஏற்று பார்க்கின்றான் இவன்.*

*நடராஜ சிவனுடைய இடப்புறத்து முன்கை, **'வா'** என்கிற அட்சரத்தினை குறிக்கின்றது. கஜஹஸ்த நிலையில் இது அமைகின்றது. அதாவது யானையின் துதிக்கை போல. இக்கை, அவரது இடப்பாதத்தினை - கருணை உருவாகும் ஸ்தலமான அனுக்ரஹ சக்தியின் பிறப்பிடத்தினைச் சுட்டுகின்றது. அனுக்ரஹ சக்தியினாலேயே அத்தனை ஆன்மாக்களும் அவரிடம் மறுபடியும் திரும்புகின்றன.*

*வலது மற்றும் இடது கைபுஜங்கள், சமநிலையில் அமைகின்றன. படைப்பு மற்றும் அழிப்பு ஆகியனவற்றை சுட்டும் இவையிரண்டும், சிவபெருமானால் இவ்விரு இயக்கங்களும் சரிசமமாய் நிலைநாட்டப்படுகின்றன என்பதைச் சுட்டிக் காட்டுகின்றன.*

***'சி'** எனும் அட்சரத்துக்கு, சிவனுடைய பின்பக்கத்து வலக்கை அமைந்துள்ளது. இது டமரு எனும் உடுக்கையைப் பிடிக்கின்றது. படைப்பின் இலக்கணமாய் இது அமைகின்றது. 'பரநாதா' எனும் ஓசையற்ற ஒலியுடன் இது ஆரம்பமாகின்றது. இந்த ஆரம்பப்புள்ளியிலிருந்தே பிறக்கின்றது 'ஓம்' எனும் மந்திரம்.*

*'அஞ்சாதே' எனும் அபய முத்திரையினை அளிக்கின்றது வலப்புறத்து முன்கை. படைத்துக் காத்து ரட்சிக்கும் சிவபெருமானுடைய சிருஷ்டி சக்தியினை இது சுட்டுகின்றது. **'ய'** எனும் அட்சரத்துக்கான குறியீடாகின்றது இது.*

*சிவபெருமானே அனுக்கிரக சக்தி என்பதனை, அவரது தூக்கிய கருணை பாதம் உணர்த்துகின்றது. ஆணவம், கர்மம் மற்றும் மாயை*

ஆகிய மும்மலங்களையும் சிவனுடைய அனுக்கிரக சக்தி சித்திக்கும்போது ஆன்மாவானது களைந்து விடுகின்றது. அப்போது, தனக்கும் அவருக்குமான ஒற்றுமையை அது கண்டுபிடித்து விடுகின்றது.

சிவனுடைய தோல், பிங்க் - இளஞ்சிவப்பு - நிறத்தில் ஆனது. அவரது திருவுடல் முழுதும் திகழும் விபூதி, தூய்மையை உணர்த்துகின்றது.

மனிதனைக் காப்பாற்ற சம்சாரம் எனும் ஆலகால விஷத்தை தானே அருந்தி உதவும் கிருபை சிவபெருமானுக்கே வாய்த்துள்ளது என்பதனை அவரது நீலகண்டம் குறிக்கின்றது.

எத்தனை காலங்கள் ஆனாலும் அழியாத அவரது நிலையினை, அவர் அணிந்திருக்கும் மண்டையோட்டு மாலை எடுத்தியம்பு கின்றது.

வழக்கமான சராசரி மனிதனின் உடலில் பயன்படுத்தப்படாமல் முதுகெலும்பின் அடியில் சுருண்டே கிடக்கும் குண்டலினி சக்தி, சிவபெருமானுள் பிரமாதமாய் பொங்கி விளங்குகின்றது என்பதனையே, அவரது உடலில் மிளிரும் நாகம் காட்டுகின்றது.

யோகப் பயிற்சியால் தட்டியெழுப்பப்படும் குண்டலினி சக்தி, தெய்வத்தை உணர வைத்து மனிதனை மேம்படுத்தி விடுகின்றது.

சிவன், புலித்தோலினை அணிந்திருக்கின்றார். இயற்கையாகவே அவருள் இருக்கும் அற்புத சக்தியின் குறியீடாகின்றது இது.

இடையறாத அவரது துரித இயக்கத்தினைச் சுட்டிக்காட்டும் விதமாய் அவரது இடுப்புத்துணி அதிவேக காற்றில் பறந்த வண்ணமுள்ளது.

ப்ரபாவளி என்பது நடராஜ சிவனை சுற்றியுள்ள அக்னி வட்டம். இதனுள் சிவபெருமான் திருநடனமாடுகின்றார். ப்ரபாவளி-யே, ப்ரக்ஞை. ஆக, நமது சிந்தனைக்குள் திருநடனமிடுபவர் சிவபெருமானே என்பதே இது.

இந்த ஒவ்வொரு அக்னிக்கும் மூன்று கிளைகள் உள்ளன. இது பூமி, வெளி மற்றும் ஆகாயம் ஆகிய மூன்றிலும் உள்ள அக்னி சக்தியினை குறிக்கின்றது.

இந்த அக்னி வட்டத்தின் மேலேயுள்ளது, மகா காலம். மகா காலம் என்பது சிவபெருமானே ஆகும். அவரே படைத்து, காத்து, காலம் வரும்போது சம்ஹாரமும் செய்து விடுகின்றார் என்பதன் அறிகுறி இது.

காலமற்ற ஆழ்நிலையில் திருநடனம் புரிந்துக் கொண்டிருக் கின்றார் சிவபெருமான்.

மொட்டவிழும் தாமரையின் இரு இதழ்கள், முகிழ்தலை குறிக்கின்றது. இதிலிருந்து உதயமாகிக் கொண்டேயிருக்கின்றன பிரபஞ்சங்கள்.

ஆக, சிவபெருமானுடைய நடராஜபாவ பிரபஞ்ச நாட்டியம், ஒரு குறியீடு மட்டும் கிடையாது. அது நிச்சயமான ஓர் உண்மையும் ஆகும்.

மனிதயினத்தின் மிகப்பழமையான அறநூல்கள், வேதங்கள். இவை மொத்தம் நான்கு. இவை கூறுகின்றன:

''மகிழ்ச்சி, ஆரோக்கியம் மற்றும் வளம் தந்தருளுமாறு, மூலிகைகளும் பாமாலைகளும் சூட்டி, ருத்ர தேவனான சிவபெருமானை வேண்டுகின்றோம். சூரியனைப்போல எல்லையில்லாது அவன் பிரகாசிக்கின்றான். தங்கத்தை போல தகதகத்துக் கொண்டேயிருக்கின்றான். கடவுளர்களில் இங்ஙனமாய் தங்கமான பிரகாசம் அவன்.'' (ரிக்வேதம்.)

''அவனே அனைத்திலும் உறைந்துள்ள தெய்வம். ஒவ்வொன்றின் உள்ளார்ந்த ஆன்மா சிவனே. அனைத்திலும் உள்ளவன். படைப்பு எனும் தொழிலினை கவனிப்பவன் சிவன். அனைத்திலும் வசிப்பவன். அனைத்தையும் கவனித்துக் கொண்டிருப்பவன். தூய சிந்தனை அவனே. தூய பிரக்ஞை அவனே. இயற்கையின் மூன்று பருவங்களையும் கடந்தவன் அவன்.'' (யஜுர் வேதம்.)

# மொழிபெயர்ப்பாசிரியரின் நூல் அறிமுகம்

*நமக்குள்ளேயே ஆண்டவன் உறைகின்றான் என்பதனை, சித்தர்களும் ஞானியர்களும் பண்டிதர்களும் மெய்கண்டவர்களும், மனிதயினம் உதித்த காலத்திலிருந்து அனுபவபூர்வமாய் கண்டு சொல்லியிருக்கிறார்கள்.*

*தேடல் வேண்டும். இறைமையை தனக்குள்ளேயே கண்டு அடங்க வேண்டும் என்ற தாகம் வேண்டும். எத்தனை தடைக் கற்கள் வந்தாலும், இந்த இலக்கினை அடையாது ஓய்வதில்லை என வேறெதையும் கருதாது உண்மையாய் உழைக்கும் மனத்தெம்பு வேண்டும். அந்த ஆன்மீக உழைப்பு, திருவினையாகும்.*

*29ஆம் வயதிலேயே இல்வாழ்க்கையை துறந்து விட்டு வெளியே கிளம்பினாலும், அலைந்தும் திரிந்தும் முயன்றும் பல்லாண்டுகள் கழித்தே போதிமர ஞானமடைந்தார் புத்தர். இது கி.மு கதை.*

*திருவண்ணாமலை குகைகளுக்குள் வருடக்கணக்காய் தவமிருந்து ஞானமெய்தினார் ரமண மகரிஷி. இது சில வருடங்களுக்கு முந்தைய கைமேல் நெல்லிக்கனி.*

*இப்படியாக தியானமேற்கொண்டு இறைமையை எய்தலாம் என்று வரலாறுகள் பல இருக்கின்றன.*

*இதே சமயத்தில், வேசி வீட்டோடு கிடந்த அருணகிரிநாதரை ஞானியாக்கி உயர்த்தினார் முருகப் பெருமான். இதெப்படி? புத்தரும் ரமணரும் செய்த தியானங்கள் செய்யாத இவருக்கு பலன் கிடைக்கச் செய்ததெது?*

*எல்லாம் பூர்வஜென்ம பலன்கள்.*

*இந்தப் பிறப்பில் எப்படி அலைந்திருந்தாலும், பாவக்கணக்குகள் தீர்ந்த கணத்தே, ஆட்கொள்ளும் காலம் கனிகின்றது. அப்போது எத்தகையவருக்கும் இறைமை ஸ்தானம் கிடைக்கின்றது.*

*இதனை முடிவு செய்பவன் ஒருவன். அவன் பெயரே இறைவன்.*

*இங்ஙனமான தர்மக் கணக்கினை அறியும்போது, இடைவிடாது தர்ம முறையில் வாழ்க்கையை நடத்த வேண்டும் என்பது புலனாகின்றது. சொல்லால், செய்கையால், நினைப்பால் தர்மமே மூச்சாகும்போது பாவங்கள் கரையும் காலம் அருகே வர, இறைவனின் அருட்பார்வையும் சித்திக்கின்றது.*

*இப்படியாக தர்ம வாழ்க்கை வாழ்வது, மிகக் கடினம்.*

*எது தர்மம் என்று கேட்டால் இதற்கு கிடைக்கும் வியாக்யானம் மிக நீண்டது, நெடியது.*

*இதனை விளங்கிக் கொண்டாலும் அதன்படி ஒழுகி வாழ்வது, சாத்தியமாவதில்லை.*

*ஆயினும் சாத்தியமாக்கித் தர அந்தந்த காலகட்டங்களுக்கு ஏற்ற அறநூல்கள் பேருதவி செய்கின்றன. காலத்துக்கு ஏற்றவாறு தர்மவழியை அந்நூல்கள் போதிக்கும்போது, சாமானியனுக்கு அது சிறந்த வழிகாட்டியாய் அமைந்து, அவனைக் கரையேற்றுகின்றது.*

*அப்படியொரு நூல்தான், மூன்று பாகங்கள் கொண்டுள்ள பிரதான பாடம் எனும் முழு நூல்.*

*பிரதான பாடம், மூன்று பாகங்களைக் கொண்ட பெருந்தொகுப்பாய் ஆங்கிலத்தில் வெளிவந்துள்ளது.* Dancing with Siva, Living with Siva *மற்றும்* Merging with Siva *ஆகியன அவை. இவற்றில் முதல் பாகமான* Dancing with Siva *தற்போது தமிழில் என் மொழிபெயர்ப்பில் கண்ணதாசன் பதிப்பக வெளியீடாய் சிவபெருமானுடன் ஒரு திருநடனம் என்று உங்கள் கைகளில் உள்ளது. ஏனைய பாகங்களும் சிவன் அனுக்கிரகத்தால் தமிழில் வெளிவரும் என்று நம்புவோம்.*

*அமெரிக்க கலிபோர்னியா மாகாணத்தில் 1927ல் பிறந்த ஆங்கிலேயர் தான், 'பிரதான பாடம்' எனும் மூன்று அறநூல்களை எழுதுமளவுக்கு ஆன்மீகத்தில் தெய்வமாய் உயர்ந்துள்ள சத்குரு சிவாய சுப்ரமுனியஸ்வாமி ஆவார்.*

*தனது பத்தொன்பதாவது வயதில் பாலே நடனக்கலைஞராய் பரிமளித்துக் கொண்டிருந்த இவருக்கு, இந்திய இந்து மதத்தின் மீது ஏற்பட்ட நாட்டத்தின் காரணமாக இரண்டாம் உலகப்போர் முடிந்த கையோடு இந்தியாவுக்கும் இலங்கைக்கும் பிரயாணமானார்.*

*அப்போது, 1949ல் யாழ்ப்பாணத்து ஞானியரான யோக ஸ்வாமியால் சந்நியாச தீட்சை அளிக்கப்பட்டது இவருக்கு.*

*பிறகு, விரதத்திலேயே இருந்து இடைவிடாத தியானம் மேற்கொண்ட சத்குரு, ஞானம் கண்டார். மாயை அகன்று சிந்தை தெளிந்தார். இருபதாம் நூற்றாண்டின் மிகப்பெரிய இந்துமதத் தலைவராகவும் ஞானியாகவும் மலர்ந்தார்.*

*அவருடைய உள்ளார்ந்த சிவ அனுபவங்களே, மூன்று பெரும் தொகுப்புகளாக வந்துள்ளன.*

*முதல் தொகுப்பான* Dancing with Siva*-வின் முற்பகுதி 155 ஸ்லோகங்களின் அற்புதமான களஞ்சியமாய் அமைக்கப் பட்டுள்ளது. 'ஆன்மீக உலகுக்குள் நுழைவது வெறுமனே இறைவனைக் கும்பிடுவது மட்டும் கிடையாது. அதில் சகிப்புத்தன்மை, பொறுமை, அஹிம்சை என கடைப்பிடிக்க வேண்டிய பல உணர்வுகள் உள்ளன. இவையனைத்துமே பரீட்சைகள். இவற்றில் தேறும்போதுதான் தியானம் போன்ற முயற்சிகளில் இறங்கலாம். அப்போதுதான் தியானம் கைகூடும். மனசு முழுக்க காழ்ப்பினைச் சுமந்து கொண்டு செய்யப்படும் தியான முயற்சிகளின் பலன்கள் மிகவும் குறைவாகவே அமையும்' என்பதன் அடிப்படையில் இந்த முதல் தொகுதியான சிவபெருமானுடன் ஒரு திருநடனம் செல்கின்றது.*

*ஆகவே நம் வாழ்க்கையை நல்ல தர்ம வாழ்க்கையாய் ஆக்கிக் கொள்ளப் போதிக்கின்றது சிவபெருமானுடன் ஒரு திருநடனம்.*

*மற்ற இரண்டு தொகுப்புகளான* Living with Siva *மற்றும்* Merging with Siva *ஆகியன, மேற்கொண்டு நாம் ஆன்மீகத்தில் முன்னேறி இறைவனை நம்முள்ளேயே காணும் வழிவகைகளைத் தருகின்றன.*

*இறைவனை ஆன்மாவுக்குள் கண்டு தெளியும் ஆன்மீகப் பயிற்சிகளும் முயற்சிகளும் நிச்சயம் கடினமானவையே. ஆயினும் அவன் அருள் கிடைக்கும்படியாய், உண்மையாய் செய்யப்படும் முயற்சிகள் வீணாகியது இல்லை.*

*உங்கள் முயற்சியும் சித்திக்க இறைவனருள் பொழிவான்.*

**அன்புடன்,**
**முனைவர் கே. என். ஸ்ரீனிவாஸ்,** Ph.D.,
E-mail: knsrinivas1967@gmail.com
**கைப்பேசி: 9940 456454**

# சனாதன தர்மம்



உபநிடதம் ஒன்று:

*அழிவற்ற இறையுண்மைகள்*

# பரமாத்மாவின் தரிசனம்



**சுயத்தை உணர்தல்**

*அணுவிலும் அணுவானது, நுண்ணியதிலும் நுண்மையானது,*
*மேன்மையெல்லாவற்றையும்விட மேன்மை வாய்ந்தது, ஆத்மா.*

*அனைத்து ஜீவராசிகளின் இதயக் குகைக்குள்ளும் மறைந்து உறைந்து கிடக்கின்றது,*
*இத்தகைய ஆத்மா - ஆத்மன்.*

*யார் ஒருவன் அனைத்து தாகங்களிலிருந்தும் விடுபட்டு விட்டானோ,*
*'அவனை' உறுதியாய் பற்றியதால் துக்கத்தை ஒழித்து விட்டானோ,*
*அவன் பார்ப்பவையெல்லாம் ஆண்டவன்தான்.*

*படைத்த தந்தையின் கருணையால், அவன் காண்பவையெல்லாம்*
*'அவனது' கருணைதான்.*

***-கிருஷ்ண யஜுர் வேதம், ஸ்வேதாஸ்வத்ர உபநிடதம்***

# நான் யார்? நான் எங்கிருந்து வந்துள்ளேன்?

## ஸ்லோகம் 1

*நாம் நம் உடம்போ, சிந்தனையோ அல்லது உணர்ச்சிகளோ கிடையாது என்று அறுதியிட்டுச் சொல்லியுள்ளார்கள் ரிஷிகள். நாம், ஓர் அற்புதமான பிரயாணத்தில் உள்ள தெய்வீக ஆன்மாக்கள். நாமனைவரும் கடவுளிடமிருந்து வந்தவர்கள். கடவுளுக் குள்ளேயே வாழ்பவர்கள். கடவுளோடு கடவுளாய் ஒன்றாய் ஐக்கியப்படுவதற்காக விஸ்தரித்துக் கொண்டிருப்பவர்கள். நிஜத்தில், நாம் தேடிக்கொண்டேயிருக்கிறோமே நிஜம், அதுதான் நாம். ஓம்!*

## விளக்கம்

நாம், எதனாலும் அழிக்க முடியாத ஆன்மாக்கள். பூமி எனும் புனிதப் பள்ளிக்கூடத்தில் வாழ்ந்துக் கொண்டு அதுதரும் அனுபவங்களால் வளர்ந்துக் கொண்டிருக்கும் நாம், இதே இடத்திலேயே பல வாழ்க்கைகளை வாழ்ந்துமிருக்கிறோம்.

''நம் வாழ்க்கையின் உயிர்ப்புதான், கடவுள்... வேறல்ல'' எனும் சத்தியத்தை எளிமையாய் நமக்குரைத்து, கடவுள் நம்முள்ளேயே கிடக்கிறார் எனும் பரிபூரண ஊக்கத்தை ஊட்டியுள்ளார்கள் ரிஷிகள்.

இதையே, ''ஒரு விஷயத்தை மட்டும் கடவுளால் பண்ண முடியாது: கடவுள் நம்மிடமிருந்து அவரை தனியாய் பிரித்தெடுத்துக் கொள்ள முடியாது'' என்று சொல்லி, மேலும் நம்பிக்கையூட்டி முன்னே நகர்த்திச் செல்கின்றனர் பெரும்ஞானியர்.

ஏனென்றால், நம்முடைய உயிரே கடவுள்தான். பறவைகளில் இருக்கும் அவற்றின் உயிர், கடவுள். மீன்களில் உள்ள அவற்றின்

உயிர்ப்பு, கடவுள். விலங்குகளில், அவற்றின் சுவாசமாய் உள்ளார் கடவுள்.

வாழும் அனைத்திலும் அவற்றின் வாழ்வாதாரமாய் விளங்கும் இந்தச் சக்தியினை அறிவுவழி அறிதலே, புத்தியினால் உணர்தலே, அன்பு நதியாய் நம்முள் கடவுள் இருக்கின்றார் என்பதை அறியத் துவங்குவதாகும்.

உலகத்திலுள்ள அனைத்திலும் முடிவின்றிப் புரண்டோடிக் கொண்டிருக்கும் சக்தியும், பிரக்ஞையும், நாமேதான்.

நம்முள், உள்ளே, அடியாழத்தில், இக்கணத்தில் நாம் பரிபூரண மானவர்கள். அந்த ஆழத்தின் எல்லையில் நாம் குற்றமே அற்றவர்கள்.

நமக்குள்ளேயே உறைந்துள்ள இந்த ஆழத்தின் எல்லையை நாம் கண்டுபிடித்தாக வேண்டும். கண்டுபிடித்து, இப்பரிபூரண தகுதியை விட்டு வழுவிவிடாமல் நாம் வாழ்ந்துவிட வேண்டும். எனில், நாம், ‘முழுமையானவர்.’

நம் சக்தியும் கடவுளின் சக்தியும் சரிசமமானவை. ஒன்றே. பந்தபாசங்களுக்கு அப்பாற்பட்ட சூனியத்திலிருந்து எப்போதும் பீறிட்டுக் கொண்டிருப்பது.

நாம் அனைவரும் கடவுளின் அழகழகான குழந்தைகள்.

எனவே வாழ்வாதார சக்தியினை மரங்களிலும், பறவைகளிலும், விலங்குகளிலும், சக மனிதர்களிலும் என அனைத்திலும் தரிசிக்க நாம் ஒவ்வொரு நாளும் முயற்சி எடுக்க வேண்டும்.

மனதார நாம் இப்படி பண்ணும்போது, சிவபெருமானை, அவரது இயக்கத்தில் நாம் தரிசிக்கிறோம்.

**வேதங்கள் ஸ்திரப்படுத்துகின்றன:**

‘‘வாழ்வில் அதன் ஆதாரமாய் - கண்களில் பார்வையாய் - காதுகளில் ஒலியாய் - புத்தியில் சிந்தனையாய், யாரொருவன் கடவுளை அறிகின்றானோ, அவன், அனைத்துக் காரணங்களுக்கு மான ‘மூல காரணத்தினை’ முழுவதுமாய் தானாய் விளங்கிக் கொள்கின்றான்.’’ ஓம் நமசிவாய.



*அமைதியாகிவிட் ட, அடக்கப்பட்டுவிட்ட மனத்தின் சின்னம், கலங்காத தாமரைக்குளம். அதனருகில் அமர்ந்துக்கொண்டு 'ஓம் நமசிவாய' ஓதும் சைவபக்தன், அவன் கையில் இயற்கையாய் மலர்ந்திருக்கும் தாமரை மலரினைப்போல, அவனுள் தானாய் முகிழும் 'கடவுள்' எனும் ஒரே இறுதியை ஆழ்ந்து நினைந்தபடி இருப்பான்.*

*ஓவியத்தின் பின்னால், இந்த உயர்நிலைமைக்கு அவனை முதிர்ச்சியடைய வைத்துள்ள கடந்த ஜென்மங்களின் அனுபவங்கள் தீட்டப்பட்டுள்ளன.*

# நான் எங்கு செல்கிறேன்?
# என் பாதை என்ன?

## ஸ்லோகம் 2

*நாம் அனைவரும் கடவுளை நோக்கி வளர்கிறோம். இதில் அனுபவங்களே பாதை. அனுபவத்தின் வாயிலாக நாம் முதிர்ச்சியடைகின்றோம். பயத்திலிருந்து பயமற்ற நிலைக்கு. கோபத்திலிருந்து விடுதலையடைந்து அன்புக்குள். பேதங்களிலிருந்து விலகி சாந்தத்துக்குள். இருளிலிருந்து அகன்று ஒளிக்குள். இதுவே கடவுளுடனான ஐக்கியம். ஓம்.*

## விளக்கம்

தெய்வீக மறைசக்தியாய் வளர்ந்து வெளிப்படுவதற்காகவே, ஒரு ஸ்தூல சரீரத்தில் நாம் உடம்பெடுத்துப் பிறந்துள்ளோம்.

நாம் உள்ளே ஏற்கெனவே கடவுளோடு ஒன்றாய்தான் இருக்கிறோம்.

இந்த ஐக்கியத்தை எப்படி உணர்ந்து அறிவது என்பதற்கும், பாதையில் தேவையற்ற அனுபவங்களையெல்லாம் எவ்வாறு உருவாக்காமல் பார்த்துக்கொள்வது என்பதற்கும், வழிகாட்டி அருளும் ஞானம் நமது சமயத்தில் அடங்கியுள்ளது.

வேதங்களில் அடங்கியுள்ள ரகசிய அர்த்தங்களையெல்லாம் கண்டுபிடித்து ஆன்மீகப் பாதையை அமைத்துள்ளார்கள் நமது மூதாதையர்கள்... அந்த நிகரற்ற பாதையை அடியொற்றி பின்பற்றுவதே ஞானத்தை எட்டிப்பிடிக்க இங்கு அவசியமாகின்றது.

ரிஷிகளும் ஞானிகளும் தங்களது இடையறா ஆன்மபலத்தால் முயன்று வரையறுத்துத் தந்துள்ள அந்த நிகரற்ற தெய்வீகப் பாதை எத்தகையது? அர்ப்பணிப்பு, வேதாகமங்களைக் கற்றல், பழுதற்ற

ஒழுக்கம், சதாகாலமும் இறைப்பயிற்சி ஆகியவற்றை கடைப் பிடிப்பதால், சூட்சும புத்தியாய் நம்முள் உறைந்துள்ள இறை மலரினை மொட்டவிழ வைக்கத்தக்கதாகும் அது.

மாய உலகத்தின் இன்பப்பிடிகளில் கட்டுண்டுள்ள நாம், இணையற்ற இப்பாதையில் பிரயாணிக்கும் ஆரம்ப காலங்களில், அவதிப்படுகிறோம்... கற்றுத் தெளியும்வரை அல்லாடுகிறோம்.

தெளிவு, நம்மை கருணை மயமாக்குகின்றது. சேவை மனப் பான்மைக்கு விதை போடுகின்றது. ஆன்மீகப் போராட்டத்தின் துவக்கம், தன்னலமற்ற சேவைதான்.

மனித சேவையில் ஈடுபட்டிருக்கும்போது வாழ்க்கை என்றால் என்ன என்ற புரிதல் அகப்படுகின்றது... ஒரே சத்தியத்தையும் மற்ற அசத்தியங்களையும் பிரித்தறியும் நிஜபுத்தி பிடிபடுகின்றது. விளங்குகின்றது.

புத்தி தெளிதலால் மனச்சலனம் குறையும்... அகலும். ஆழமாயும் தடைகளற்றும் புரியும் தியானம் கைவசப்படும்.

இறுதியாய், கடவுளின் பாதாரவிந்தங்களில் சரண் புகும் நிலைக்கு நம்மை உயர்த்தி வைக்கும், தியானம்.

இதுவே, நேரானதும் நிச்சயமானதுமான ஒரே சத்தியப்பாதை.

சன்மார்க்கப் பாதை.

பிறப்பெடுத்ததன் மிகவும் உள்ளார்ந்த நோக்கமான 'சுயத்தை அறிதல்' எனும் இலக்கு நோக்கி நம்மைக் கைப்பிடித்து அழைத்து செல்லும் உன்னதப்பாதை. இதன் மற்றுமொரு முக்கிய விளைவாக 'மோட்சம்' அருளப்படும் - மீண்டும் பிறப்பதிலிருந்து விடுதலை.

**வேதங்கள் மேதாவிலாசமாய் நிச்சயப்படுத்துகின்றன:**

''ஆன்மீகத்தைக் கடுமையாய் கடைப்பிடிக்கும்போது, அன்பும் கருணையும் உள்ளடங்கிய உதாரகுணம் மலர்கின்றது. இதனால் பிரித்தறியும் விவேகம் அடையப்படுகின்றது. விவேகம், நிஜமான 'சுயம்' எனும் தூயசுயத்தை தனித்து அடையாளம் காட்டுகின்றது. இதயத்தாமரையின் தூய்மையான கடவுளை இங்ஙனம் அடைபவன் பிறப்பு இறப்பு எனும் சுழற்சியிலிருந்து விடுதலையா கின்றான்.'' ஓம் நமசிவாய.



*இறைவனை கண்டே தீர்வது என்ற வைராக்கியமே உயர் இலக்கு.*

*உச்சியில் உள்ள இதனை அடைய, எதனையும் கடக்கத் தயங்க மாட்டான் சைவபக்தன்.*

*இப்பாதை, தனிமையாய் போக வேண்டிய ஒன்று. கரடுமுரடானது. கடுமையானது. சோதனைக்குள்ளாக்குவது.*

*எதுநேரினும் தனது இலக்கிலிருந்து கண்களைச் சிறிதும் அகற்ற மாட்டான்.*

*இடையூறுகளால் மனமொடிந்து, கொண்ட வைராக்கியத்தைக் கைநழுவ விடமாட்டான்.*

*நேர்கோடாய் சென்று கொண்டிருக்கும் இவனது பிரயாணம் - 'தனக்குள் கடவுளைக் காணுதல்' எனும் ஒரே குறிக்கோளுடன்.*

# ‘சிவனுடன் திருநடனம்’ என்றால் அர்த்தம் என்ன?

### ஸ்லோகம் 3

*அனைத்து அசைவுகளும் கடவுளில் துவங்கி கடவுளில் முடிகின்றன. மாற்றங்களும் அதனால் நேரும் நடவடிக்கைகளும், ஓயாது சுழன்றுக் கொண்டிருக்கும் ஒரு பிரவாகம்... இந்தச் சுழலில் கட்டுண்டுள்ளது பிரபஞ்சம். இதுவே சிவனின் திருநடனம். நாமெல்லோரும் சிவனுடன் நடனமாடிக் கொண்டிருக்கிறோம். அவர் நம்முள் இருக்கிறார். ஆக, இறுதியில், நாம்தான் திருநடனமாடும் சிவன். ஓம்.*

### விளக்கம்

சிவனின் பிரபஞ்சத் திருநடனத்தை நாம் கெட்டியாகப் பிடித்துக் கொண்டோமேயானால், உலகத்தினை, அது நிஜமாய் எப்படியிருக் கின்றதோ அப்படியே நாம் பார்க்கலாம்.

அந்த நிஜம்: ‘புனிதம்.’

ஆக இது புண்ணியபூமி.

பிரபஞ்ச சிவநடனத்துடன் இணைவது சாத்தியமே. இது சத்தியமே.

இந்தப் பிரபஞ்சத்தில் நாம் பார்க்கும் மற்றும் கேட்கும் அனைத்தும் அசைவுகளே.

சதா அலைபாயும் சிந்தனையின் சலனங்கள் அனைத்தும், அசைவுகளே.

சுழன்றடித்துக் கொண்டு பறப்பதினால் மட்டுமே வாழ்கின்றன பால்வீதிகள். சுற்றிக்கொண்டே நகர்ந்தால்தான் அணுக்களுக்கும் வாழ்வு.

*அனைத்தும் நகர்த்தலில் உள்ளன. அனைத்து அசைவுகளும் சிவனின் திருநடனம்.*

*இந்த அசைவுக்கு எதிராய் நாம் சண்டைபோட்டு, இதற்கு மாறாய்த்தான் இவ்வியக்கம் இருக்க வேண்டும் என்று மல்லுக்கு நிற்கும்போது, சிவ திருநடனத்துக்கு எதிராய் நடனமாடுவோராய் - எதிர்ப்பாய் நடனமாடுவோராய் ஆகி விடுவோம்.*

*நம்மை நாமே பிரித்தெடுத்துக் கொண்டு, நிதர்சனத்துக்கு இணங்காமல் பிடிவாதமாய் எதிர்த்தால், இயற்கையாய் நடைபெறும் இயக்கங்களையும் அசைவுகளையும் விமர்சித்துக் கொண்டு தனிமரமாய் நின்று விடுவோம்.*

*இது ஆகாது.*

*இறை உண்மையை - 'மாற்றங்களும் அதனால் நேரும் நடவடிக்கைகளும்தான் பிரபஞ்சத்தின் இடையறாத முடிவற்ற அசைவுகள்' என்ற இறை உண்மையை விளங்கிக் கொள்ளும் போதுதான், நாம் நம்முடைய சிந்தனைச் சக்திகள் அனைத்தையும் ஒருங்கிணைத்து ஞானம் எனும் எல்லைக்குள் கொண்டு போய் சேர்க்க முடியும்.*

*எது எப்படியுள்ளதோ அப்படியே அதனை ஏற்றுக்கொண்டு, அதற்கு மாறாய் அது இருக்க வேண்டும் என்று விரும்பத் தூண்டாத ஞானப்பிரதேசம் அது!*

*இது நிகழும்போது, நாம் சிவனுடனான திருநடனத்தை அனுபவித்து ஆட ஆரம்பிப்போம். நம்மை சுற்றிலும் எப்போதும் இருக்கின்ற புனித ஓட்டத்துடன் இணைந்து நகரத் துவங்குவோம்.*

*பாராட்டுதல்களையும் பழிச்சொற்களையும், சந்தோஷத்தையும் துக்கத்தையும், செல்வ நிலைமையையும் ஏழைமையையும், சரிநிகர் சமானமாய் பார்ப்போம்.*

*முதிர்ந்து விட்ட ஞானநிலைமையின் கனி இது.*

**வேதங்கள் சமர்ப்பிக்கின்றன:**

*''பரந்து விரிந்திருக்கும் அண்ட சராசரமே, பிரபஞ்சத்தின் ஆன்மா... அதன் உயிர்ப்பு, துடிப்பு. இதுவே இறைமை.*

*அனைத்துவகையான ஜீவராசிகள், அனைத்துவிதமான இயக்கங்கள், அனைத்து தியானங்கள் போன்றவற்றின் அழிவற்ற ஆதாரத் துவக்கம், இதுவே. தனக்குள்ளேயே தன்னுடைய இருதயத்தின் அடியாழத்தில் மறைந்திருக்கும் இந்த இறை ஆன்மாவைக் கண்டுபிடித்து விடும் ஒருவன், அறியாமை எனும் காரிருளை பூமியில் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே அறுத்தெறிந்து விடுகின்றான்.'' ஓம் நமசிவாய.*



*நந்திதேவன் மத்தளம் கொட்டுகின்றார்.*

*சிவபெருமான் பிரபஞ்ச படைப்பில் ஈடுபட்டிருக்குங்கால்,*
*மற்றவர்கள் வீணை போன்ற வாத்தியக் கருவிகளை இசைக்கின்றார்கள்.*

*நம் வாழ்க்கைக்குள் வாழ்பவர் சிவன்.*

*அனைத்து இயக்கங்களிலும் உள்ள சலனவோட்டம் அவர்.*

*நமது எந்தவோர் அனுபவமும் அவருடைய திருநடனத்துடன்*
*நெருக்கமான தொடர்பிலும்  அதனை சார்ந்தும் உள்ளன.*

# சிவனுடன் திருநடனம் புரிய நாம் எப்படிக் கற்பது?

## ஸ்லோகம் 4

*அசைவுதான் நடனம். ஈடுயிணையற்று நேர்த்தியாய் அமையும் உள்ளங்கவர் நடனமே, உயர்ந்தபட்ச ஒழுக்கத்தினாலான நடனம் என்ற தகுதி பெறும். சுய-பரிசோதனை, சரணாகதி, தனிப்பட்ட மாற்றம் மற்றும் பற்பல யோகக்கலை போன்றவற்றால், கடவுளுடன் ஐக்கியமாக நற்பாதையமைத்து அழைத்துப் போகின்றது இந்து மதம். ஓம்.*

## விளக்கம்

ஆன்மீகப் பாதையில் பிரயாணித்து இறைவனுடன் ஒன்றோடு ஒன்றாகிவிட, வேதங்கள், இன்னபிற புராணங்கள் மற்றும் குருவின் போதனைகள் ஆகியனவற்றை நாம் கற்கிறோம்.

கற்று, வாழ்க்கையின் ஒவ்வொரு தினசரி அனுபவங்களிலும் இந்தத் தத்துவார்த்த போதனைகளைக் கடைப்பிடிக்க நாம் பிரயத்தனப்படுகிறோம்.

புத்தியின் - அதாவது, சிந்தனையின் - அதன் நான்கு பாகங் களையும் விளங்கிக் கொள்ள படாதபாடு படுகின்றோம். பிரக்ஞை எனப்படும் சித்தம், இயற்கையாய் அமைந்துள்ள மனம், பகுத்தறி வான புத்தி மற்றும் 'நான்' எனும் மமதையான அகங்காரம் ஆகிய, புத்தியின் மொத்த லட்சணங்களையும் புரிந்து கொண்டுவிட அல்லாடுகின்றோம்.

ஜபம், தியானம், யோகா ஆகியனவற்றை தினம்தினம் நாம் செய்கிறோம். இந்த ஆன்மீக ஒழுக்கத்துக்குத்தான் சாதனா என்று

பெயர். சாதனம் - அதாவது, இறைவனை அடைந்துவிட உதவும் ஒரு உந்துவிசை.

மனதார, புத்தியைக் கட்டி, உடலாலும் பக்தியாலும் நாம் மேற்கொள்ளும் ஆன்மீகப் பயிற்சியால் உள்ளார்ந்த முன்னேற்றம் நிகழ்கின்றது. நமது அணுகுமுறையில் உயர் மாற்றங்கள் விளைகின்றன. நம் குணாதிசயத்தில் நல்லதொரு மெருகு கூடிவிடுகின்றது.

இவையெல்லாம் நிகழ்ந்தால், சிவ நடனத்தில் நாம் இணையத் தகுதியும் பலமும் கிடைத்து விட்டன என்றே அர்த்தம்.

சாதனாவைக் கைநழுவவிடாமல் மேற்கொள்ளும்போது, வெறுமனே மேலோட்டமாய் உலகியலில் மனம் வெதும்பி அல்லல்பட்டு வாழும் நிலை போய், ஆன்மாவின் சுத்திகரிக்கப் பட்ட பரிசுத்த தளத்தில் வாழ நமக்கு வசதி அமைகின்றது.

ஆன்மத்தொடர்பு அறுந்து விடாமல், விட்டுவிடாமல், மேலும் மேலும் அதில் நாம் முன்னேற, சாதனா தினந்தோறும் பழகப்பட வேண்டும். காலந்தவறாமல், முறைதவறாமல், ஒருநாளின் குறிப்பிட்ட அதே நேரத்தில், தினந்தோறும் இடம்பெற வேண்டும். இதற்கு, விடியலுக்கு முந்தைய இளங்காலை நேரம் மிக உசிதமான காலமாகும்.

குருவால் தரப்படும் சவால்களும், பாடங்களுமே, ஓர் ஆன்மீக சாதனையாளருக்குக் கிடைக்கவல்ல மிகச்சிறந்த சாதனாவாகும்.

### வேதம் எச்சரிக்கின்றது:

‘‘நம்பிக்கையெனும் பலமற்று, பொறுப்பும் கவனமும் செலுத்தப்படாது, இலக்கற்று ஒழுங்கீனமாய் அமையும் ஆன்மீகப் பயிற்சியால், உள்ளுறை இறைவனை எக்காலத்திலும் அடைய இயலாது. ஆனால் சரியான முறையில், சாதனா எனும் உண்மையான தேடலைச் செய்வது எப்படி என்பதனை அறிந்து விட்ட ஒருவனுடைய ஆன்மா, கடவுள் எனும் பிரயாணத்தில் ஜம்மென்று ஏறிவிடும்.’’ ஓம் நமசிவாய.



*ஒரு கோயிலின் வெளிப்பிரகாரத்தில்,*
*இரண்டு ஞானியர் சிவபெருமானுடன் இயைந்து ஆட கற்கின்றார்கள்.*

*மத்தளம் இத்யாதிகள் முழங்க இதில் ஆனந்தமாய் பங்கேற்கின்றார் சிவபெருமான்.*

*ஆண்டவருடைய ஆனந்தத் தாண்டவத்தில் மெய்மறக்கும் ஞானியர், கைதட்டிப் பேரானந்தம் அடைகின்றார்கள்.*

# பூமியில் வாழ்வதன் ஒரே நிரந்தர இலக்கு என்ன?

## ஸ்லோகம் 5

*‘சுயம்’ எனும் நிஜமான நான் - அகங்காரம் அற்ற நான் - நம்முள்ளேயே ஆன்மாவின் அடியாழத்தில் இருக்கின்றது. கிடைக்கற்கரிய நிர்விகல்ப ஸமாதி எனும் இந்த இறைநிலையை உணர்வதே, பூமியில் நாம் பிறந்துள்ளதன் ஒரே நிரந்தர இலக்காகும். காலங்களையெல்லாம் கடந்த, வடிவங்கள் எதுவும் அற்ற, எவ்விடத்திலும் அடைப்பதற்கரிய சுயத்தை, சிவத்தை, பரசிவம் என்கிறோம். பரமசிவம் என்றாகின்றது தமிழில். இத்தகைய பரசிவத்தை - சிவமயம் எனும் ஒரே சத்தியத்தை - ஒவ்வொரு ஆன்மாவும் தேடிக் கண்டுபிடிக்கின்றது. ஓம்.*

## விளக்கம்

சுயத்தை உணர்தல் - ஆன்ம ஆழ்ப்பகுதியில் தியான அமைதியில் உள்ள பரசிவத்தைத் தொடுதல் - இது ஒன்றே, ஒவ்வோர் ஆன்மாவின் இறுதி இலக்காய் உள்ளது.

பூமிசார்ந்த அனைத்து லௌகீக சிற்றின்பங்களையும் ஒரு நொடியில் விலக்குதல், இடைவிடாது நிகழும் தொய்யாத தியானம், இன்னும் முளைத்தெழாத கர்மங்களைக்கூட எரித்தல் போன்றவற்றால், இந்த இலக்கினை எட்டி விடலாம்.

ஆன்மாவின் உள்ளூர உறையும் ‘சுயத்தை’ உணர்தலே, மீண்டும் மீண்டும் பிறத்தல் எனும் வட்டத்திலிருந்து விடுதலை தரும் மோட்சத்துக்கான திறவுகோலாகவும் இங்கு அமைகின்றது.

சிந்தனை செய்யும் வலிமையுள்ள நமது புத்தியின் எல்லை களிலிருந்து எங்கோ விலகியிருக்கின்றது தெய்வீகமான ‘சுயம்’.

இது, இயற்கையாய் நாமறிந்துள்ள ஸ்பரிஸங்களைக் கடந்தது, இயக்கங்களுக்கு அப்பாற்பட்டது, நாமறிந்துள்ள மிகவும் உயர்ந்த பிரக்ஞை நிலைகளையும் கடந்து, அதனினும் மிகவுயரத்தில் கோலோச்சுவது.

நம்முள் உறையும் 'சுயம்' எனும் கடவுள், அண்ட சராசரத்தை விடவும் திடமானது.

அடையவோ, எட்டிப்பிடிக்கவோ, விளங்கிக்கொள்ளவோ, கடினமானது. அதாவது தந்திரமானது.

ஆயினும் நமது சிந்தனை மற்றும் ஸ்பரிஸங்களைவிடவும் நமக்கு மிக நெருக்கமானது, அருகாமையானது.

இதுவே, இறுதியான சத்தியம். முடிவான நிஜம்.

இறை நிதர்சனத்தைத் தேடித்தேடி அலையும் ஒவ்வொருவரின் உள்ளும் ஆழத்தில் உள்ள சத்தியம்.

இதனைத் தேடிப்பிடிக்க ஓடியோடி மன்றாடினாலும், கடைசியாய் பெரும் பிரயோஜனம் உண்டு.

கட்டுக்கடங்காத புத்தியை ஆன்மசக்தியின் கட்டுக்குள் கொண்டு வர மேற்கொள்ளப்படும் சாதனாக்கள் எல்லாமே கடும் போராட்டமாய் அமையும். ஆனால் இந்த தர்மயுத்தத்தின் இறுதியில் கிடைக்கும் கனி விலைமதிப்பற்றது... 'சுயம்' எனும் இறைமை அது.

கடுமையான ஆன்மீக சாதனையின் பலன், கைக்கிட்டாத 'சுயம்' இறுதியில் உணரப்படுவதேயாகும்.

பரசிவம் எனும் சிவத்தை உணர்வது, ஓர் உடலில் இருந்தபடியே தான் அனுபவிக்கப்பட வேண்டும். உடலற்று இது சாத்தியமாகாது.

சிவனுடன் ஒத்ததிர்ந்து திருநடனமாடுதற்காகவும், அந்த அனுபவத்துடன் சிவனுடனேயே வாழ்வதற்காகவும், இவற்றின் இறுதியாய் சிவனுக்கும் தனக்கும் வித்தியாசமில்லாத நிலையில் பரசிவத்துடன் ஒன்றோடு ஒன்றாய் கரைந்து விடுவதற்காகவும், ஆன்மாகவாகப்பட்டது, மறுபடியும் மறுபடியும் நர உடம்பெடுத்துப் பிறக்கின்றது.

*ஆம்... ஜீவன்தான், நிதர்சனத்தில் சிவா.*

## வேதங்கள் விளக்குகின்றன:

*''நீருக்குள் ஊற்றப்படும் நீரும், பாலுக்குள் சேர்க்கப்படும் பாலும், நெய்யுக்குள்ளான நெய்யும் எப்படிப் பாகுபாடின்றி ஒன்றாகவே ஐக்கியப்பட்டு விடுகின்றனவோ, அப்படியேதான், தனிப்பட்ட ஓர் ஆன்மாவும் அந்த ஒருபெரும் சுயமும் ஒன்றாகி விடுகின்றன.'' ஓம் நமசிவாய.*



*சிவபெருமான் ஓர் ஆலமரத்தின் அடியில் உட்கார்ந்திருக்கின்றார்.*

*அவரது கால்கள் யோகபந்தத்தால் தியான நிலையில் கட்டப்பட்டுள்ளன.*

*வாழ்க்கையின் காரணம் மற்றும் நிஜமான இலக்கினை தேடுபவர்கள், விடை தேடி அங்கு வருகின்றார்கள்.*

*அகமே கடவுள் என்று அமைதியினாலேயே போதிக்கின்றார் சிவன்.*

*அவர்களுக்குள்ளேயே இருக்கும் சிவலிங்கத்துக்குள் நுழையுமாறு அவர் கட்டளையும் இடுகின்றார்.*

என்னை அஞ்ஞானத்திலிருந்து ஞானம் நோக்கிக் கொண்டு போ. அஞ்ஞான இருளிலிருந்து ஞான ஜோதி நோக்கி அழைத்துப் போ. மரணம் எனும் அநித்தியத்திலிருந்து விடுவித்து அழியாப் பேரானந்தம் எனும் நித்தியம் நோக்கிக் கூட்டிப்போ. சுக்ல யஜுர் வேதம்.

கடவுள் ஒருவன்தான் ஒரே பிரம்மம். பரப்பிரம்மம். அனைத்திலும் மறைந்திருக்கும் சுயம். இவ்வுலகத்தின் ஆதாரம். அஸ்திவாரம். அணுவிலும் நுண்ணியவன். அழிவற்றவன். அதர்வண வேதம்.

ஆத்மாவில் மனதை ஒருநிலைப்படுத்தி தியானம் செய்ய வேண்டும். ஆன்மாவில் உள்ளது வாழ்க்கைக்கான ஆதார ஆவி - அதன் உடல் ஆக்கமே நமது ஸ்தூல சரீரம், அதன் வடிவமே ஒளி, அதன் சாறுதான் வெளி. சிந்தனையின் ஓட்டம் எத்தனை துரிதமானதோ அதற்கு இணையாய் தனது வடிவத்தை மாற்றிக் கொள்ளவல்லது இது. சுக்ல யஜுர் வேதம்.

பொருட்கள் அழியக்கூடியவை. கடவுள் தெய்வீகமானது, ஆகவே அழியாதது. அவன், ஒருவன். அவனே தலைவன். அந்த ஒருபெரும் தலைவன், அழியக்கூடிய அனைத்தையும் கட்டுப்படுத்து கிறான்... அழிவில்லா ஆன்மாவையும் தன் கட்டுக்குள் வைத்துள்ளான். அவனையே தியானம் செய்துகொண்டு, அவனுடன் இரண்டறக் கலந்து கொண்டு, அவனைப் போலவே கொஞ்சங்கொஞ்சமாக மாறிவரும் ஒருவன், கடைசியில், உலக மாயை எனும் விலங்கிலிருந்து அறுபட்டு விடுபட்டு விடுகின்றான். கிருஷ்ண யஜுர் வேதம்.

நானே பரப்பிரம்மம்! நான்தான் அண்டசராசரத்தின் எஜமானன் - கடவுள்! இப்படிப்பட்டதோர் இறுதியான நிலைப் பாடே முக்தி அடைந்தவர்களின் உறுதியான நம்பிக்கை. மற்ற ஏனைய அனைத்து அனுபவங்களும் நம்மை பந்தத்தில் கட்டிப் போட்டுவிடும். ஆன்மா, தான் இந்த உடம்பு கிடையாது என்பதை தெளிவாய் பிரித்தறிந்து விட்டால், அந்த ஆன்மாவுக்கான சொந்தக்காரர் சாந்தத்தின் உச்சியில் ஸ்திரமாகின்றார். அனைத்து தாகங்களிலிருந்தும் அவர் விடுதலை பெற்று விடுகின்றார். தேவிகாலோத்தார ஆகமம்.

மேலானவனாகவும் இல்லாமல் கீழானவனாகவும் இல்லாமல் இருக்க, அப்புறம் இப்புறம் என எப்புறமும் மாறிமாறி அலைபாயாமல் தனக்குள்ளேயே ஒடுங்க, உள்ளும் இல்லாமல் வெளியும் இல்லாமல் தெய்வீகத்தோடு நிலைத்துவிட, 'சுயம்' எனும் ஆன்மாவின் ஆழ்ப்பகுதியை உணர்ந்து எப்போதும் அங்கேயே தங்கிவிடுங்கள். தெய்வீகம் நம்முள் பொங்க, உலக எல்லையைத் தாண்டி ஜோதியாய் நாமே பிரகாசிக்க, ஆன்மாவின் அடிச்சாரத்தைத் தொட்டுணர்ந்து, அதனை நழுவவிடாமல் தொடர்ந்திருங்கள். *சர்வஞானோத்தார ஆகமம்.*

பிரக்ஞை உள்ளது என்றும் சொல்ல முடியாத, பிரக்ஞை அற்றது என்றும் சொல்ல முடியாத ஒன்று. கண்களுக்குப் புலப்படாதது. புலன்களுக்குக் கட்டுப்பட்டுள்ள நரஅறிவுக்கு அகப்படாதது. வரையறுக்க முடியாதது. விவரிக்க இயலாதது. கற்பனைக்கு அப்பாற்பட்டது. நொடியளவுகூட காலம் இல்லாதது. ஊர் பேர் அற்றது. நாம் வகைப்படுத்தும் அனைத்து வேறுபாடுகளையும் தன்னகத்தே கொண்டது. அதுவே: கலக்கமற்ற சாந்தி. அதுவே, கிருபையின் உச்சம். கருணையின் ஊற்று. அதனை அதுவே அனுபவித்து ஆள்வதில் உள்ளது அதன் சாறு... சாரம். இதனையே நான்காம் நிலை என்று சொல்கின்றார்கள். அதாவது, ஆத்மா அல்லது ஆன்மா. இதைத்தான் நாம் அறிந்தாக வேண்டும். *அதர்வண வேதம்.*

அள்ளஅள்ளக் குறையாத ஊற்றென இறைஞானம் தானாய் பிரவாகமெடுக்கும்போது, கட்டுக்கடங்காமல் விரிந்து கொண்டே போகும் பிரபஞ்ச ஞானத்துக்குள் நடமாடும் பிரக்ஞை கைகூடும். இதுவே சிவஞானம், சிவபிரக்ஞை, சிவநிலை. சத்தியத்தின் உச்சக்கட்ட அனுபவம். *சிவ சூத்திரம்.*

படைத்தவன் திருநடனம் புரியும்போது, அவர் படைத்த உலகமும் ஆடுகின்றது. எந்தவோர் அளவுக்கு மட்டும் அவர் நமது புத்தியில் - அறிதலில் - ஞானத்தில் - நிலைபெற்று ஆடுகின்றாரோ, அந்த அளவுக்கு மட்டுமே நமது சிந்தனையும் நடனமாடுகின்றது - இயங்குகின்றது. அவர், தனது நெஞ்சார ஆனந்தக்கூத்தாடும்போது, பற்பல படைப்புகளும் இயைந்து ஆடுகின்றன. கொழுந்து

*விட்டெரியும் தணலாய் அமைந்திருக்கும் படைத்தவனுடைய திருநடனத்தின் பரவசத்துக்குச் சாட்சியாய் நில்லுங்கள். திருமந்திரம்.*

*கடவுளின் திருநடனம், எல்லையற்ற ஒரு பரமானந்தம். இறைவனின் கருணைமயமான அந்தப் பேரானந்த நாட்டியம், விளங்கிக் கொள்ள இயலாத, கற்பனைகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட ஞானக்கடலில் இடம்பெறுகின்றது. ரிக் வேதமும் இன்னபிற வேதங்களும் இதன் பெருமையை வார்த்தைகளால் நிரப்பி மகிழ்கின்றன. கருணைக் கடவுளுக்கு முன்னால் அனைவரும், அனைத்தும் அடிமைகள் என்று அறிவிக்கின்றன வேதங்கள். அனைத்தும் கடவுளுக்கே சொந்தம். அனைத்து இயக்கங்களும் அவனது இயக்கங்கள். எங்கும் எப்போதும் ஊடுருவிப் பரவிக்கிடப்பவன், இறைவன். அதுவே இயற்கை. எப்போதும் பேசாமல் இறைமையிலேயே மவுனித்திருக்கும், ஆனாலும் நமக்காக மவுனம் கலைத்து வார்த்தைகளிட்டு வேதசாரம் தந்துள்ள வேதியரின் சத்திய வார்த்தைகள் இவை. கருணாகர கடவுள்.*

*எவ்வாறு ஒளியாகப்பட்டது இருளை அகற்றுகின்றதோ, அவ்வாறு அறியாமை எனும் இருளை அகற்றிவிடுகின்றது 'சுயம்' எனும் ஆன்ம ஒளியின் பிரகாசம். எண்ணெயில்லாத விளக்கு தானாகவே அணைந்து மறைந்து விடுவதைப் போல, இடையறாது தியானத்தில் ஈடுபட்டு சுயத்தை அடையாளம் கண்டு அதனுடன் கலந்து விட்டவர்களின் ஈகோ எனும் அகங்காரமும் அழிந்து விடுகின்றது. 'சுயம்' எனும் உள்ளுறை தெய்வத்தினைவிட ஒரு மேலான அனுகூலம் கிடையவே கிடையாது. சர்வஞானோத்தார ஆகமம்.*

*அனைத்துக்குமான தலைவன் - இரண்டு கிடையாது. நான்தான் அவன் - அவனுடைய பக்தன் - என்று தியானிப்பதில் விளையும் மகிமை பேரானந்தமயமானது... அது, எனக்கே சொந்தம். தன்னை எப்படி ஒருவன் கற்பனை பண்ணிக் கொள்கின்றானோ அப்படித்தான் அவன் ஆவான். இது இயற்கை விதி. எனவே 'நான்தான் அவன்' என்ற பக்தி சார்ந்த குணாதிசயத்துடனான தியானத்தைக் கடைப்பிடியுங்கள். பிறகு உங்களுடைய அனைத்து*

நடவடிக்கைகளும் அவனது செயல்களாகவே ஆகிப்போகும்.

*நற்சிந்தனை.*

*அனைத்திலிருந்தும் விலகிப்போய், எவ்வித இடைஞ்சல்களும் அற்று, தனிமையில் நான் தியானிக்கிறேன். துளியும் சந்தேகப் படாமல் வேதம் சொல்லும் சாரங்களை அப்படியே அடியொற்றிக் கடைப்பிடித்து, இந்த வாழ்க்கை எனும் கடலளவு வீண் நிலத்தை நான் கடக்கிறேன். பிறகு அங்கு தென்படும் வெற்றிட சூன்யத்தில், வெறும் கற்பனைகளையெல்லாம் ஒதுக்கித் தள்ளிய அவ்வெளியில், நான் கலக்கிறேன். அந்த ஒரே சக்தியில் நான் தியானிக்கும்போது, பராபரத்தினை நான் பார்த்தேன். அந்த ஒரே சக்தியை நான் தியானிக்கும்போது, சிவநிலையை உணர்ந்தேன். அந்த ஒரே சக்தியில் ஒருநிலைப்படுத்தி தியானிக்கும்போது, ஆன்மாவின் ஆழ்நிலைக்குள் நான் இறங்குவதை அறிந்தேன். அந்த ஒரே சக்தியில் நான் ஒருமுகப்படும்போது, யுகம் கடந்து யுகம் சென்று வந்தேன்.*

# இந்து தர்மம்



## இந்துத்துவம்

*‘அவன்’தான் ஆதி. கடவுள்.*
*கணக்கிட முடியாத காலங்களுக்கு முன்னால் பூமியின்*
*ஜீவராசிகளைப் படைத்தான் ‘அவன்.’*

*சொர்க்கத்தை படைத்தான்.*

*ஒப்புமைகளுக்கு அப்பாற்பட்ட அந்த ஒரே சக்தியின் பாதாரவிந்தங்களைத்தான்*
*அனைத்தும் வேண்டுகின்றன.*

*அந்த அனைத்திலும் நீக்கமறப் பரவி நிறைந்திருப்பவனும் அவனே.*

***-திருமந்திரம்***

# இந்துத்துவத்தின் பிரதான கிளைகள் எவையெவை?

### ஸ்லோகம் 6

*சனாதன தர்மம் அல்லது 'அழிவற்றதன் மீதான நம்பிக்கை', என்று இந்துத்துவம் இன்று அறியப்படுகின்றது. இது, வேதத்தினை வாக்காக ஏற்றுக் கொண்டு வாழும் சமயங்களின் ஒரு குடும்பம். இதன் நான்கு அடிப்படை மதப்பிரிவுகளாவன: சைவம், சக்தி வழிபாடு, வைணவம் மற்றும் ஸ்மார்த்தம். ஓம்.*

### விளக்கம்

*உலகம் முழுதும் கோடானுகோடி இந்துக்கள் பரவியுள்ளார்கள்.*

*மனிதவர்க்கத்தில் ஆறில் ஒரு பங்கு இந்துக்கள்.*

*இவர்களனைவரும், நான்கு முதன்மை தெய்வங்களுக்கு கீழாய், நான்கு பிரிவுகளாய் வகுக்கப்பட்டுள்ளார்கள்.*

*சைவப்பிரிவினருக்கு சிவபெருமான் முதன்மை தெய்வம். வைணவர்களுக்கு விஷ்ணு. சக்தி வழிபாட்டில் ஈடுபடுவோருக்கு சக்திதேவி முதன்மை தெய்வமாகின்றாள். பக்தனின் விருப்பத்துக்கு என்ன கடவுளை வணங்குவது எனும் சுதந்திரம் ஸ்மார்த்தப் பிரிவில் தரப்பட்டுள்ளது.*

*இந்த ஒவ்வொரு பிரிவுக்கும் பற்பல குரு பரம்பரைகள், மதத்தலைவர்கள், மடாதிபதிகள், மடக்கிளைகள், புனித நூல்கள், பாடசாலைகள், புனிதத் தலங்கள் மற்றும் நூற்றுக்கணக்கான கோயில்கள் இருக்கின்றன.*

*நான்கு பிரிவுகளுக்குமே அவற்றுக்கென்று கலை மற்றும் கலாச்சார பலம், தத்துவ பொக்கிஷங்கள், பாண்டித்திய மேதமை போன்றவை கொட்டிக் கிடக்கின்றன.*

தங்களுக்கென்று அளப்பரிய அளவிலான மாறுபட்ட நம்பிக்கைகளைக் கொண்டு இவை திகழ்வதால், ஒவ்வொன்றுமே தனிப்பட்ட மற்றும் ஒரு முழுமையான சமயமாக நிலைக்கின்றன.

ஆயினும், மனிதனைத் தெய்வமாக்க முன்னோர்களின் வழிகாட்டுதலால் விளைந்துள்ள பற்பல நம்பிக்கைகள், பலதரப் பட்ட வழிபாடுகள், பல்வகை அணுகுமுறைகள் போன்றவை நான்கு கிளைகளாலும் பொதுவாகவே கடைபிடிக்கப்படுகின்றன.

முன்வினை கர்மம், தர்ம புண்ணியங்கள், மறுபிறப்பு, எங்கும் நிறைந்திருப்பது ஒரே பரப்பிரம்மம், கோயில் வழிபாடு, புனித மதச்சடங்குகள், பலவகை மற்றும் பலதரப்பட்ட தெய்வங்கள், பரம்பரையாய் நீளும் குரு-சிஷ்ய வழக்கம் மற்றும் ஆன்மீக ஆணையகமாய் நால்வகையினராலும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ள வேதங்கள் ஆகியன பொதுவாய் உள்ளன.

அநேக இந்துக்களுக்கு இருப்பிடமாய் இந்திய நாடு விளங்கினாலும் உலகம் முழுவதும் இம்மதம் பரவியிருக்கின்றது.

**வேதம் விளக்குகின்றது:**

''அவன் பிரம்மன். அவன் சிவன். அவன் இந்திரன். அவன் மாறுபாடற்றவன். ஒரே தலைவன். ஒருவன். ஒரே ஜோதி பிரகாசன். அவன் விஷ்ணு. அவன் காலம். அவன் நெருப்பு மற்றும் அவன் நிலவு.'' ஓம் நமசிவாய.



*உலக வாழ்க்கையை துறந்து விட்டதை குறிக்கும் காவியுடை அணிந்து*
*ஜபத்திலிருக்கும் ஆதி சங்கரரைச் சுற்றி, கோடிக் கணக்கான*
*இந்து பக்தர்கள் பூஜிக்கும் ஐந்து தெய்வங்களான*
*சிவன், சக்தி, விஷ்ணு, விநாயகர், முருகன் ஆகிய தெய்வங்கள் வீற்றிருக்கிறார்கள்.*

# ஆழமான ரகசியப் பொக்கிஷமாய் திகழும் ‘சைவம்’ என்றால் என்ன?

## ஸ்லோகம் 7

*உலகின் மிகப்பழமையான ஒரே மதம், சைவமதம். கருணைமயமான ஒரே தலைவனான சிவனை வழிபடும் இந்துமதத்தின் கிளையாகின்றது சைவம். தீவிரமான ஒழுக்க முறைகளையும், உயர் தத்துவங்களையும், குருவை மையமாய்க் கொண்ட முறையையும், பக்தி-ராஜ-சித்த யோகங்களையும், கைவிடாது கடைபிடிக்கும்படி போதிக்கின்றது சைவம். இது, நம்முள் உறைந்துக் கொண்டிருக்கும் சிவனுடன் இரண்டற ஒருநிலையில் ஐக்கியமாகிவிட வழிவகுக்கின்றது. ஓம்.*

## விளக்கம்

*சைவக்கிளை, பழமையானது. புராதனமானது. இதன் வயதினை நிச்சயமாய் கணக்கிட முடியாது.*

*பன்முகம் கொண்டதொரு மதமாய் இப்போது அறியப் பட்டுள்ள இந்து மதத்தின் முன்னோடி, சைவமே.*

*நவீன சிந்து சமவெளி நாகரிகம் இடம்பெற்றிருந்த எட்டாயிரம் வருடங்களுக்கு முந்தைய காலத்திலேயே, சிவ வழிபாடு பெரிதும் வேரூன்றி இருந்திருக்கின்றது என்கிறார்கள் பண்டிதர்கள். சைவம் இல்லாததொரு காலகட்டமே இருந்தது கிடையாது என்கின்றன புனித நூல்கள்.*

*நவீன வரலாறு, ஆறு முக்கிய சைவப் பாடசாலைகளை வகைப்படுத்துகின்றது: சைவ சித்தாந்தம், பசுபதித்துவம், காஷ்மீர் சைவம், வீர சைவம், சித்த சித்தாந்தம் மற்றும் சிவ அத்வைதம்.*

*சைவநெறியின் அழகும், பிரம்மாண்டமும், சராசரி வாழ்வியலிலேயே காணக்கிடைக்கின்றது. இப்பிரபஞ்சத்தில் மனிதனின் நிலை எங்கே என்பதன் மேதாவிலாச விளக்கத்திலும், கோயில் எனும் ஆழ்ந்ததொரு ஞான அமைப்பிலும், சித்த யோக பங்களிப்பிலும், சைவநெறியின் பிரமிப்பு பிரதிபலிப்பதைக் காணமுடியும்.*

*கடவுளிலிருந்து வந்து மீண்டும் கடவுளிடமே செல்லும் மனிதனின் படிப்படியான பரிணாம முன்னேற்றத்தை ஆழமாய் விவரித்துக் காட்டுகின்றது சைவம். ஆன்மாவில் உள்ள பல தளங்களையும், அவற்றை கடந்து ஜோதி ரூபமான இறைவனை அடைந்து ஞான மெய்த ஞானியர் வடிவமைத்துள்ள ஞானமார்க்கங்களையும், சத்தியப் பாதையாய் கண்டுபிடித்துத் தந்துள்ளது சைவநெறி.*

*இந்து மதத்தின் அனைத்துக் கிளைகளையும் போலவே, சைவத்தின் பெரும்பான்மையானவர்களும், பக்தி நிறைந்த குடும்பத்தினர்களாகவே இருக்கிறார்கள்.*

*உலகினை துறப்பதே 'பிறப்பு' எனும் சுழலில் அகப்படாமல் தப்பிக்க உள்ள ஒரே மோட்ச வழி. இதற்குக் கடுமையான அணுகுமுறைகளைக் கடைப்பிடிக்கும் பலநூறு ஸ்வாமிகள் மற்றும் சாதுக்களால் தலைமையேற்று செல்கின்றது சைவக்கிளை.*

### வேதங்கள் நிர்மாணிக்கின்றன:

*''அனைத்திலும் மறைமுகமாய் ரகசியமாகியுள்ளது, சிவன் எனும் ஒரே புனிதம். தூய்மையான வெண்ணையில் படரும் ஆடையைப்போன்ற நுண்ணியமான புனிதம். பிரபஞ்சம் எனும் அமைப்பினையே முழுவதுமாய் சுற்றி கட்டுக்குள் வைத்துள்ள நுண்மைப்படலம். இதுவே கடவுள். கடவுளை உணர்வதினால், இங்கு ஒருவனைப் பிணைத்துப் போட்டுள்ள அனைத்து விலங்குகளிலிருந்தும் அவன் கட்டவிழ்க்கப்படுகின்றான்.'' ஓம் நமசிவாய.*



ஞானமெய்திவிட்டதன் அறிகுறியான மாம்பழத்தை அடைய,
சிவனின் தலைமகன் கணேசன் விரும்புகின்றார்.

முருகன் போட்டியில் குதித்து பறக்க, அனைத்துலகங்களும் அம்மா-அப்பாவான
சிவ-சக்திக்குள் அடக்கம் என்ற நியதிப்படி, இறைவனையும் இறைவியையும் சுற்றி
வந்து வெல்கின்றார் பிள்ளையார்.

# சக்தி வழிபாட்டின் மாயமென்ன? மகத்துவம் என்ன?

### ஸ்லோகம் 8

*அனைத்துக்குமான ஒரே சக்தியினை சக்தி என்றும் தேவி என்றும் பக்திப் பரவசத்தோடு கூறிக் கொண்டாடுகின்றது சக்தி வழிபாடு. சாந்தமும் உக்கிரமும் கொண்ட ஸ்வரூபங்களாக இது அமைகின்றது. தேவி சக்தியினைக் கொண்டாடி அவளையே தியானிப்பவர்கள் மந்திரம், தந்திரம், யந்திரம், யோகம் மற்றும் பூஜைகள் போன்ற வற்றை கடைபிடித்து, பிரபஞ்ச சக்தியைத் தங்களுக்குள் அழைத்து வந்து குண்டலினி (எனப்படும் மனிதனுக்குள் மறைந்திருக்கும் தெய்வீக ரகசியத்தை) சக்தியைத் தட்டியெழுப்புவார்கள். ஓம்.*

### விளக்கம்

சக்தி வழிபாடு வரலாற்று வேலிகளைக் கடந்து தெய்வீகமாய் நீடிக்கும்போது, 'சக்தி இந்துத்துவம்' எனும் ஒழுங்குபடுத்தி உருவாக்கப்பட்ட ஒரு புதுக்கிளை இந்து மதத்தில் பிறக்கின்றது. இந்தியாவில் ஐந்தாம் நூற்றாண்டில் பிறந்த சக்தி வழிபாடு இன்று நான்கு வகைகளில் தன்னை முன்நிறுத்தியுள்ளது: பக்தி சார்ந்த, கிராம தேவதையாக, யோக சக்தியாக மற்றும் பிரபஞ்ச சக்தியாக.

இவையனைத்துமே, உக்கிர சக்தியான காளி மற்றும் துர்கா சக்திகளையோ அல்லது சாந்த வடிவங்களான பார்வதி மற்றும் அம்பிகையின் கருணைகளையோ துணைக்கழைக்கும் வகைகளாக அமைகின்றன.

சக்தி உபாசகர்கள் பூஜை சார்ந்த சடங்குகளைப் பயன்படுத்து கின்றார்கள். குறிப்பாய் ஸ்ரீ சக்கரத்துக்கு புனித பூஜைகளை அளித்து தேவியின் அருகாமைக்கு உரியவர்களாக ஆகின்றார்கள்.

*கிராம தேவதை சார்ந்த தேவி வழிபாட்டில், மந்திரங்களும் தந்திரங்களும் இடம்பெறுகின்றன. ஆவிகளுடனான தொடர்பு, தீமிதி, மிருக பலி போன்றவற்றால், நிவாரணங்களும், பயிர் செழிப்பும், அருள்வாக்கும், தெய்வ சக்தியும் அந்த பக்தனால் எட்டப்படுகின்றன.*

*சக்தி வழிபாட்டில் யோக முறையை பக்தன் கடைப்பிடிக்கும் போது, அவனுக்குள் உறங்கிக் கொண்டிருக்கும் தேவியின் சக்தியான குண்டலினி சக்தியைத் தட்டியெழுப்ப விழைகின்றான்.*

*சஹஸ்ரார சக்கரம் எனும் சக்கரம், மனித உச்சந்தலையில் உள்ளது. இது சிவனின் சக்தியாகும். இதனுடன் குண்டலினி சக்தியை ஐக்கியமாக்கும் பக்தி முயற்சியே, யோக முறை பக்தனின் சக்தி வழிபாடாகின்றது.*

*பிரபஞ்ச சக்தியாக தேவியை வழிபடுபவர்கள், ராமகிருஷ்ண பரமஹம்ஸர் சீர்படுத்தி முன்னேற்றித் தந்த வேதசாரத்தினைக் கடைபிடிப்பவர்களாகின்றார்கள்.*

*'பரிசுத்தமான, வடிவமற்ற, அனைத்தையும் தன்னிடமிருந்து உருவாக்கிக் கொண்டிருக்கும் அந்த ஒரே சக்தியுடன் தன்னை முழுவதுமாய் அடையாளம் காணுவதே ஓர் ஆன்மாவின் ஒரே இலக்கு' என்று போதிப்பது அத்வைதம். சக்தி வழிபாடு, அத்வைதமாகும்.*

*சக்தி வழிபாட்டின் அச்சாணியான புனித நூல்களாக, வேதங்களும், சக்தி ஆகமங்களும், புராணங்களும் அமைகின்றன.*

### தேவி கீதை மேன்மையாய் சொல்கின்றது:

*''நம் அனைவருக்குமான பிரபஞ்ச ஆன்மாவுக்கு முன்னால் நான் தலைவணங்குகின்றேன். மேலும், கீழும், நான்கு திசைகளிலும், பிரபஞ்சத் தாயே, உன்னை வணங்குகின்றேன்.'' ஓம் சண்டிகாயை நமஹ.*



*இங்கு சக்தி பச்சைநிறத்தில் அனுக்கிரகம் புரிகின்றாள்.*

*அழகு, சக்தி, அரவணைப்பு மற்றும் பாதுகாப்பு ஆகியன, அவளை வழிபடுவோருக்குக் கிடைக்குமாறு தேவியிடமிருந்து கதிர்வீச்சாய் அருள் வந்துக் கொண்டேயிருக்கின்றது.*

*பன்னீர் தெளித்து, வெண்கொற்றக் குடை பிடித்து, சாமரம் வீசி அவளுடைய பாதங்களில் சரணாகதி அடையும் பக்தர்களுக்கு அவள் ஆசி அளிக்கின்றாள்.*

# இந்து மதத்தின் வைணவக் கிளை என்றால் என்ன?

### ஸ்லோகம் 9

*இந்து மதத்தின் பழமைமிகும் கிளையாய் உள்ளது, வைணவம். விஷ்ணுவை மையமாய் கொண்டு, அவரையும் அவருடைய அவதாரங்களையும் - குறிப்பாய் ராமர் மற்றும் கிருஷ்ணர் - கடவுளர்களாய் போற்றுகிறது இது. தனக்குள் இருகூறுகள் கொண்டுள்ள வைணவம், பக்தி சார்ந்தது. வைணவ சாதுக்கள், கோயில்கள் மற்றும் வேத நூல்கள் பல கொண்டதாகும் வைணவம்.*

### விளக்கம்

*'எங்கும் நிறைந்தவர்' என பொருள்படுபவர் விஷ்ணு. விஷ்ணுவின் வழிபாடு வேதகால பழமை கொண்டது. இதன் பஞ்சராத்ர மற்றும் பாகவத கிளைகள், கி.மு.300-க்கும் முந்தைய காலங்களில் பிரபலமடைந்திருந்தது.*

*இன்றிருக்கும் வைணவத்தின் ஐந்து கிளைகள் கி.பி யின் மத்திம காலங்களில் உதித்தன. ராமானுஜர், மாத்வர், நிம்பார்க்கா, வல்லபா மற்றும் சைத்தன்யா ஆகிய வைணவப் பெரியோர்களால் நிறுவப்பட்டவை இவை.*

*சரணாகதி தத்துவத்தை அழுத்தமாய் போதிக்கின்றது வைணவம். இலக்கு சிதறாது, வைத்தகுறி பிறழாது, விஷ்ணு மற்றும் அவருடைய பத்துக்கும் மேற்பட்ட அவதாரங்களின் பாதாரவிந்தங்களில் சரண்புகுவதே வைணவத்தின் போதனை.*

*இதில் பக்தியின் சாதனமாக ஜபம் நிர்மாணிக்கப்பட்டுள்ளது.*

கீர்த்தனைகள் செய்து நெக்குருகிப் பாடியாடுதல் ஜபத்தின் வழியாக்கப்பட்டுள்ளது.

கோயில் வழிபாடுகளும், சடங்குகளும் விழாக்களும், கோலாகலமாக அனுசரிக்கப்படுகின்றன.

தத்துவரீதியாக பார்த்தால், மாத்வர் குறிப்பிட்ட கடவுள்-பக்தன் எனும் இருகூறு அணுகுமுறையிலிருந்து, ராமானுஜர் மேதா விலாசமாய் சொன்ன இரண்டும் ஒன்றே என்ற அணுகுமுறை வழியாய், வல்லபர் வழிநடத்திய பிட்சுக்கள் அணுகுமுறை வரை, விசாலமாய் விரிந்து கிடக்கின்றது வைணவமதம்.

கடவுளும் ஆன்மாவும் முடிவற்ற இருகூறுகள். முற்றிலும் வேறுபட்டவை. முன்னது பரமாத்மா. அடுத்தது ஜீவாத்மா. கடவுளின் அனுக்கிரகத்துடன் அவரை வணங்கி போற்றுவ தொன்றுதான் ஆன்மாவின் இலக்கு.

உலக இன்பங்களைத் துறக்கும்படியான சந்நியாச போதனை பொதுவாய் வைணவத்தில் காணப்படாவிட்டாலும், பக்தி செலுத்துதல் ஒன்றேதான் கடவுளை அடைய உயர்ந்த உன்னத வழி என்று பேசுவதால், இறுக்கமான துறவற அடிப்படை வைணவத்துக்கு உள்ளது.

இம்மதத்தின் முக்கிய புண்ணியநூல்களாக, வேதங்கள், வைணவ ஆகமங்கள், இதிகாசங்கள் மற்றும் புராணங்கள் அமைந்துள்ளன.

**பகவத் கீதை சொல்கின்றது:**

''என்னையே தியானித்துக் கொண்டு, உடையாத இதயத்துடன் என்னையே வணங்கிக் கொண்டிருப்பவர்களுக்கு, அவர்கள் அடையாததை நான் அளிக்கிறேன். அவர்களுக்குள்ளதை பாதுகாக்கிறேன்.'' ஓம் நமோ நாராயணாய.



*எல்லையற்ற சமுத்திரம், விஷ்ணு.  அதிலிருந்து வெளியாகின்றது உலகம்.*

*பல தலைகள் கொண்ட சேஷநாகம், வயதற்ற நிலைமையைச் சுட்டுகின்றது.*

*அதன் நடுவில் அவர் கடலலைகளில் நிற்கின்றார்.*

# ஸ்மார்த்தாக்கிளை எனும் வைணவ வகை என்றால் என்ன?

## ஸ்லோகம் 10

*பழமைமிகும் பிராமணக் கலாச்சாரத்தின் சீர்திருத்தப்பட்ட வகையாகும், ஸ்மார்த்தா வகை. ஒன்பதாம் நூற்றாண்டில் சங்கரரால் சீரமைக்கப்பட்ட இது ஓர் அத்வைத மதம். கடவுள் ஒருவரே எனும் வகை. கடவுளை ஆறு வடிவங்களில் வழிபடும் ஸ்மார்த்த மிதவாத வகை, தியானத்தைப் போற்றுவது. தத்துவங்களில் சீரியது. ஓம் நமசிவாய.*

## விளக்கம்

*சாஸ்திர சம்பிரதாயப்படி, தர்ம சாஸ்திரங்களிலும் புராணங் களிலும் இதிகாசங்களிலும் சொல்லியுள்ளவற்றை அப்படியே அடியொற்றி வாழ்பவர்களுக்கு ஸ்மார்த்தர்கள் என்று பெயர்.*

*வேதங்களைக் கற்றுக் கரைதேர்ந்தவர்களாகவும் ஆகமவிதிகளை வழுவாது கடைப்பிடிப்பவர்களாகவும் விளங்குவார்கள், இவர்கள்.*

*இன்றைய தேதியில் ஸ்மார்த்தர்களின் நம்பிக்கை ஆதிசங்கரர் தந்து சென்றுள்ள போதனைகளுடன் ஒத்த பொருள் உள்ளதாய் கருதப்படுகின்றது.*

*ஆதிசங்கரர் 'ஷண்மத ஸ்தாபனாச்சாரியார்' என்றாகின்றார். அதாவது ஆறு கிளை அமைப்பினை நிறுவியவர் என்று பொருள்.*

*இந்தியா முழுவதும் இடைவிடாது பிரயாணித்து தனது காலத்தில் பரவியிருந்த இந்துத்துவம் அனைத்தையும் ஒருங்கிணைத்து அத்வைத வேதாந்தத்தினை உருவாக்கினார் ஆதிசங்கரர்.*

*ஒருங்கிணைந்த அத்வைத முறையினைப் பிரபலமாக்க, பழமையாய் கடைப்பிடிக்கப்பட்டு வந்த ஐந்து தெய்வங்கள் வழிபாட்டினை முன்மொழிந்தார் ஆதிசங்கரர்.*

*கணபதி, சூரியன், விஷ்ணு, சிவன் மற்றும் சக்தி ஆகிய ஐந்து தெய்வங்களுடன் குமரப்பெருமானையும் அமைத்து ஆறாய் நிறைவேற்றினார்.*

*இந்த ஆறு கடவுளரிடமிருந்து தனக்கு உகந்த தெய்வத்தினை - இஷ்ட தெய்வத்தினை - பக்தன் தெரிந்தெடுத்துக் கொள்ளலாம்.*

*கடவுளர்கள் வகைப்படுத்தப்பட்ட போதிலும், ஒவ்வொரு கடவுளும் அந்த ஒரே நிர்குண பிரம்மத்தின் பிரதிபலிப்பேயாகும்.*

*நூற்றுக்கணக்கான மடங்களை நிறுவி நடத்தினார் சங்கரர். அவற்றை தஸநாமி அமைப்பு என்ற பெயரில் பத்தடுக்கு அமைப்பாய் ஆக்கினார். அது இப்போது ஐந்து மதத்தலைவர்கள் கொண்டதாய் உள்ளது.*

*உபநிடதங்கள், பிரம்ம சூத்திரங்கள் மற்றும் பகவத் கீதை ஆகியவற்றுக்கு புலமையான பாஷ்யங்கள் இயற்றினார்.*

**ஆதிசங்கரர் அறிவிக்கிறார்:**

*‘‘ஒரு சத்தியம்தான் உள்ளது. அது நம் அஞ்ஞானத்தால் பல பிரபஞ்சங்களாகவும், பல வடிவங்களாகவும், பல மாற்றங் களாகவும் தெரிகின்றது. எப்படி தங்கத்தைக் கொண்டு பல ஆபரணங்கள் செய்யப்பட்டாலும் அவற்றிலெல்லாம் தங்கம் தங்கமாகவே உள்ளதோ அப்படியே பிரம்மனும் அனைத்திலும் அப்படியேதான் இருக்கின்றது. அந்த ஒரே பிரம்மன்தான் நித்தியன் - சத்தியம்.’’ ஓம் நமசிவாய.*



*788 முதல் 820 வரை - வெறும் 32 வயதுதான் வாழ்ந்தார் ஆதிசங்கரர்.*

*ஆயினும் இந்து மதத்திற்கு பிரபலமான*
*ஒரு புது கோணத்தை - ஸ்மார்த்தா - என்று வழங்கினார் அவர்.*

*தனது படைப்புகளை ஓலைச்சுவடிகளாய் கையில் சுமந்து கொண்டு சந்நியாச*
*கோலத்தில் உட்கார்ந்திருக்கும் அவரைச் சுற்றி ஆறு தெய்வங்கள் உள்ளனர்:*

*சூரியன், சிவன், சக்தி, விஷ்ணு, முருகன், பிள்ளையார்.*

*இவர்கள் அறுவரையும் வழிபடும் முறையினை வகுத்தார்,*
*‘ஷண்மத ஸ்தாபகர்’ என்று புகழப்பட்டார்.*

இந்திரன் என்கிறார்கள். சந்திரன் என்கிறார்கள். அக்னி என்கிறார்கள். சொர்க்கத்திலிருந்து குதித்த தெய்வம் என்கிறார்கள். ஒரே பரம்பொருளாய் இருப்பதைத்தான் ஞானியர் இவ்வா றெல்லாம் வகைப்படுத்தி சொல்கிறார்கள். *ரிக் வேதம்.*

கடவுள் ஒருவனே. பிரம்மம் முடிவற்றது. துவக்கமற்றது. அனைத்தையும் படைத்தது. படைப்பது. பலவடிவினது. அண்ட சராசரத்தையும் போர்த்தியிருக்கும் ஒரே சத்தியம். கடவுளை அறியும்போது பக்தன் அனைத்து சம்சார விலங்குகளிலிருந்தும் அறுபட்டு விடுகின்றான். *கிருஷ்ண யஜுர் வேதம்.*

முதலில் உருவாக்கப்பட்ட வெளி, வானம். அண்ட சராசரக் கோளம்தான், முதல் வெளி. இவ்வெளியே தாய், தந்தை, மகன். முதலில் உருவான வான்வெளியே அனைத்து கடவுளர்களும். இதுவே பிறந்த அனைத்தும். இனிப் பிறக்கப் போகும் அனைத்தும். *ரிக் வேதம்.*

விஷ்ணுவின் புனிதமான சொர்க்கத்துக்குள் நான் போய் ஐக்கியமாகிவிட வேண்டும். அங்கு, பாண்டித்யர்களின் அருகாமையில், விஷ்ணுவின் பாதாரவிந்தங்களில், பேரானந்தம் எனும் தூய தேன் ஊற்றெடுத்துப் பிரவாகமாகும். *ரிக் வேதம்.*

நான்தான் அரசாளும் மகாராணி. நற்பொக்கிஷங்களின் ஒரேயிருப்பிடம். அனைத்தையும் ஆழமாய் அறிந்து தெளிந்தவள். அத்தகைய தெளிந்த அறிவு கொண்டவள். வணங்கத்தகுந்த முதலாமவள். தெய்வீக சக்தி, பற்பல இடங்களில் 'என்னை' பிரதிஷ்டை செய்துள்ளது. நான் பற்பல வீடுகளுக்குள் நுழைகிறேன்... எண்ணற்ற வடிவங்கள் எடுக்கிறேன். *ரிக் வேதம்.*

கடவுளைத் தெரிந்த ஒருவன், விடுதலை பெற்றவனாகின்றான். அவனது துயரங்களுக்கு ஒரு முடிவு ஏற்படுகின்றது. பிறப்பும் இறப்பும் அவனுக்கு இனி கிடையாது. உள்ளார்ந்த ஐக்கியத்தில் அவன் வென்று உடல் எனும் கூட்டினை விட்டு அவன் வெகுதூரம் போனபிறகு, மூன்றாவது உலகத்தினை - ஆன்மா அல்லது ஆவி உலகத்தினை அவன் கண்டுபிடித்து விடுகின்றான். அங்குதான் அனைத்து இயக்கங்களின் ஒரே சக்தி குடிகொண்டுள்ளது. இந்த

*பக்தன் மூன்றாம் உலகத்துள் நுழைந்து அந்த 'ஒன்றுடன்' ஒன்றாகி விட்டதால் இவனே அனைத்துக்குமான ஆதார சக்தியாகி விடுகின்றான். கிருஷ்ண யஜூர் வேதம்.*

*என்ன இருந்தாலும், அது எங்கு இருந்தாலும், ஒரே இறைசக்தியின் விசையால்தான் அது உள்ளது. சுக்ல யஜூர் வேதம்.*

*உலகமே சக்தியின் ஒரு விரிவாக்கம்தான் என்று அடையாளம் காண்பதில்தான் சக்தி வழிபாடு நிலைத்துள்ளது. தேவிகாலோத்தர ஆகமம்.*

*நீருக்குள் நீரையும், பாலுக்குள் பாலையும், எண்ணெய்க்குள் எண்ணெயையும் ஊற்றும்போது அவை ஒன்றாய் ஐக்கியமாகிப் போகின்றன. அப்படியேதான், ஆத்மனைப் பிரித்தறிந்த ஞானியர், பிரிக்க இயலாத ஆன்மாவுடன் ஐக்கியமாகி இருப்பர். தேவிகாலோத்தர ஆகமம்.*

*பரிசுத்தமானவன். நினைத்துப் பார்க்க முடியாத ஆனந்தத்தை மட்டுமே மழையெனப் பொழிந்து கொண்டேயிருக்கும் ஆனந்த மேகமவன். ஏதோ கோடானுகோடி ஆனந்த மேகங்கள் ஏகாந்தத்தைக் கொட்டித் தீர்த்ததைப் போல தன்னோடு பக்தி கொண்டு தொடரும் தொண்டர்களின் மனங்களையும் கண்களையும், பேரானந்தம் பொங்கி வழியுமளவுக்கு நிறைப்பவன். அசையா அமைதியின் உறைவிடம். பல பெயர்களால் அழைக்கப் படுபவன். பல மதங்களால் வரையறுக்கப்படுபவன். வார்த்தை களில் வர்ணிக்க இயலாத ஆன்மீக சந்தோஷத்தின் உருவகம். அவனே கடவுள். அவனை துதிப்போம். வழிபடுவோம். தாயுமானவர்.*

*ஆழங்காணமுடியாத ஞானக்கடல் எனும் கூடத்தில் அளவற்ற பேரானந்த நடனமாடிக் கொண்டிருக்கிறார், கருணைக் கடலான கடவுள். இந்த லோககுருவை நீலகண்டன் என்று களிக்கின்றது கலை! விஷ்ணுவின் வடிவம் என்றும் நாலுதலை கொண்ட பிரம்மனின் வடிவம் என்றும் போற்றிப் பரவசமடைகின்றன உலகங்கள்! இவரே வேதங்களின் சாரம், அவற்றின் படைப்பாளி. சமயங்கள் பலவானாலும் அவற்றை வழிநடத்திச் செல்லும் ஒரே*

*ஆசான். தன் மீது அசையாப் பற்றுக் கொண்டோரை அலுங்காது வழிநடத்திக் கரை சேர்த்து விடும் கருணைக்கடல். தாயுமானவர்.*

*அனைவருக்கும் ஒரே தலைவனான கடவுளுக்கு மணமணக்கும் சுகந்த மலர்களைச் சமர்ப்பித்து வழிபடுவோம். உங்களுடைய பாரம்பரியப் பரம்பரை தெய்வத்துக்கு உகந்த மரியாதை கொடுங்கள். ஒரே இருப்பாக இருந்தாலும் கணக்கிலடங்கா உருவங்களாய் அவதாரம் எடுக்கும் கடவுளுக்கு பக்தி செலுத்திட, பாகுபாடற்ற அர்ப்பணிப்பினை உடல் வீழ்வதற்குள் அளித்திடுங்கள். நற்சிந்தனை.*

*ஓ மனமே... நீ எதையெல்லாம் பார்க்கின்றாயோ அவையனைத்தையும் சிவனாகவே பார்! இதில் மதிமயங்கி விடாதே. வாக்குவாதம், சமாதானமின்மை போன்ற மனஎழுச்சிகளைக் கட்டுப்படுத்தி ஐம்புலன்களையும் அடக்கி ஆண்டுவிட்டவர்கள் சிவனின் ஆசிகளை வென்று சிவபதவியை அடைவர் என்பது சர்வநிஜம். உங்கள் மதம் வகுத்துத் தந்துள்ள சத்தியப் பாதையினை என்றுமே நீங்கள் வழுவ விடக்கூடாது. மாற்றம் காணாத, அமைதியான ஆழ்நிலையில் நீங்கள் சிவனைச் சிந்தித்து வாழ வேண்டும். எதை நீங்கள் பார்த்தாலும் அதனை சிவனாய் பாருங்கள். நற்சிந்தனை.*

# சைவ தர்மம்



## சைவ இந்துத்துவம்

*சிவ பாதை, ஒரு நிரூபிக்கப்பட்ட பாதை.*
*பக்தர்களை சிவபதவிக்கு உயர்த்துகிற பாதை.*
*கீர்த்தி பெற்ற ஆன்மாக்கள் பயணித்த ராஜபாதை.*
*அர்ப்பணிப்பான பக்தர்கள் இப்பாதையில் பிரயாணித்துத்தான் எங்கும் நிறை பரப்பிரம்மமாகவே ஆனார்கள்.*
*இப்பாதையை வேண்டுங்கள்.*
*இப்பாதையில் நுழையுங்கள்.*
*இப்பாதையை வெல்ல, இடைவிடாது முயற்சி செய்யுங்கள்.*

***-திருமந்திரம்***

# சைவ மத சாஸ்திரத்தின் இயல்பு என்ன?

## ஸ்லோகம் 11

*சைவமதம் ஸ்தாபிக்கின்றது: சிவன் என்றால் அன்பு. உள்ளும் புறமும் இருப்பவன். படைப்பாளியும் அவனே படைப்புகளும் அவனே. இந்த உலகம், நாம் பக்குவமடைந்து, பரிணாம வளர்ச்சியில் வளர்ந்தெழுந்து, நிறைவாய் ஜனனம் – மரணம் எனும் வட்டத்திலிருந்து நம்மை விடுவிக்கும் மோட்சம் எனும் ஸ்தானத்தை எட்டிப்பிடிக்க ஏற்படுத்தப்பட்டுள்ள இடம். ஓம்.*

## விளக்கம்

சைவம், ஒரு தனித்துவமான சமயம்.

இதில் இறைவன் வெளிப்படையாய் தெரியும் ஓர் அவதார புருஷனாகவும் இருக்கிறான். அரூபமான சூட்சுமமாகவும் ஆகிறான்.

இருமையற்ற ஒரே சத்தியமாகவும் வைக்கப்படுகிறான். இருமையுள்ளவனாகவும் காட்டப்படுகிறான்.

உள்ளே உறையும் ஆன்மாவே கடவுள் என போதிக்கப்படுகிறான். நம்மை சுற்றிலும் எங்கும் இருப்பவன் அவனே என்றும் போற்றப்படுகிறான்.

'அனைத்து ஜீவராசிகளிலும் இருப்பது ஒரே சத்தியம்தான்' என்ற பொருளில் கடவுள் எங்கும் நிறைந்துள்ளார் என்றும் அடித்து சொல்லவில்லை. பல ரூபங்களில் ஆண்டவனை வணங்கும் இருமை வழக்கத்தையும் ஸ்திரமாய் முன்வைக்கவில்லை. கடவுள் ஒருவரே எனும் ஒருமை வழக்கத்தையும் வற்புறுத்தவில்லை.

ஆனால் இவையனைத்தையும் அரவணைக்கிறது.

*சைவ மதத்தின் ஆணிவேராய், 'அத்வைத ஈஸ்வரவாதா' அமைகின்றது. அதாவது - கடவுள் ஒருவரே... அவர் அந்தந்த சமய கலாச்சாரங்களுக்கு உகந்தவாறு பல ரூபங்களில் உள்ளார் என்பதாகும்.*

*இதனை* Monistic Theism *என்கிறார்கள்.*

*சத்தியம் என்பது ஒன்றே எனும் ஒருமையை மொழிவது,* Monistic theism.

*உள்ளும் புறமும் நிறைந்துள்ள கடவுள் மற்றும் கடவுளர்களின் மீது நம்பிக்கையைக் கடைப்பிடிப்பது* theism.

*ஒரே கடவுள் எனும் நம்பிக்கையிலும், அந்த இருமையற்ற ஒரே சத்தியத்துடன் மனிதனை அடையாளம் காணுவதிலும் திளைக்கின்றது சைவம்.*

*கூடவே, 'கடவுளர்கள்' எனும் நம்பிக்கை சைவத்துக்கு உண்டு. பல அவதார ரூபங்களினாலான கடவுளர்களை சைவம் அனுமதித்துள்ளது.*

*ஆயினும், அன்பே உருவாய், ஒருவரின் இஷ்ட தெய்வமாய் விளங்குபவர், உள்ளுறை சிவன் என்ற நம்பிக்கையே சைவத்தின் ஆதாரம்.*

*பதி-பசு-பாசம் எனப்படும் கடவுள்-ஆன்மா-உலகம் ஆகியவற்றின் ஒருங்கிணைந்த 'ஒரே' தன்மையைச் சொல்லுகின்றது சைவம். இதனால் இருமை மற்றும் ஒருமை ஆகிய இருவகையான கடவுள் நம்பிக்கைகளையும் சைவம் வளைத்துக் கொண்டு விடுகின்றது. வேதாந்தம் மற்றும் சித்தாந்தம் ஆகிய இரண்டையும் அரவணைப்பாய் முன்னோக்கிச் செலுத்திவிடுகின்றது.*

**திருமந்திரம் சொல்கின்றது:**

*'தனிப்பட்ட நபர், ஒரே சத்தியம் மற்றும் அடிப்படை ஆன்மா' - இம்மூன்றையும் தங்களது சமயப் பாதைகளாகக் கொண்டு தியானம் செய்கின்றார்கள் சுத்த சைவர்கள். மூன்று வகுப்புகள்: கடவுள், ஆன்மா மற்றும் பந்தங்கள். ஆன்மாவைச் சூழ்ந்திருக்கும் அனைத்து விலங்குகளும் உடைக்கப்படும் போது கிடைக்கிறது, பரிசுத்த விடுதலை. ஓம் நமசிவாய.*



*இந்துக்களுக்கு இறைவன் என்பவன், உள்ளும், உள்கடந்த வெளி முழுதும் நிறைந்திருப்பவனும் ஆகிறான்.*

*பெரும்பாலான சந்தர்ப்பங்களில் சிவன் வடிவமற்ற சூட்சுமனாகவும், அவருடைய பேரண்ட சக்தியை வெளிப்படுத்துபவளாக ரூபமுள்ள சக்தியும் அனுசரிக்கப்படுகின்றார்கள்.*

*இருவரும் பாதிபாதியாய் இணையும் தெய்வீகமே அர்த்தநாரீஸ்வரர்.*

*சிவனின் வாகனமான காளையும் சக்தியின் வாகனமான சிம்மமும் உடனுறைய விளங்கும் திருக்கோலமிது.*

# பிற சமயங்களைச் சைவர்கள் எப்படி நோக்குகிறார்கள்?

## ஸ்லோகம் 12

*சமயங்களின் நம்பிக்கைகள் பல கிளைகள் கொண்டு விசால மானது, வேறுபட்டது. சமய நம்பிக்கைகளின் இவ்வகையான வேறுபாடு பலம் நிறைந்தது என்பதை அறிந்துள்ள சைவமதம், கடவுளை நம்பும் எவரையும் மனமுவந்து வரவேற்று உற்சாகப் படுத்துகின்றது. சத்தியம் ஒன்றே. அதனை அடையவுள்ள பாதைகள் பல. இவ்வுண்மையை மதிக்கின்றது சைவம். ஓம்.*

## விளக்கம்

மனிதனை மறுபடியும் கொண்டு போய் கடவுளுடன் இணைப்பதில்தான் அனைத்து சமயங்கள் மற்றும் மதங்களின் உள்ளார்ந்த இலக்கு நிலைத்துள்ளது. ஆகவே ஒருவருடைய நம்பிக்கை அல்லது இறைப்பணிகளுக்கு நடுவே மூக்கை நுழைப்பதில்லை என்று இயங்குகிறார்கள் சைவ இந்துக்கள்.

தனிப்பட்ட ஒரு பாதை இருப்பதான நம்பிக்கை சைவர்களுக்கு கிடையாது. பேரானந்தக் கடவுளை அடைய ஒருவழிப்பாதை இல்லை.

எல்லா வகையான மதநம்பிக்கைகளையும், ஆறுதலையும் மனசாந்தியையும் இறுதி விடுதலையையும் அடைவது அனைத்துக்குமான ஆதார சக்தியிடம்தான்... அந்த ஒரே சக்தி வடிவுதான் சிவன் என்று ஆழமாய் நம்புகிறார்கள் சைவர்கள்.

அதே சமயம் அனைத்து சமயங்களும் ஒரே மாதிரியானவை கிடையாது என்பதும் சைவர்களுக்கு தெரியும்.

ஒவ்வொரு மதத்திற்கும் நம்பிக்கைகள், இறை வழிபாட்டு முறைகள், இலக்குகள், அவற்றை எட்டுவதற்கான பாதைகள் ஆகிய தனித்துவம் செறிந்த வழிமுறைகள் உள்ளன.

ஒரு மதம் போதிக்கும் சித்தாந்தம் அடுத்ததொரு மதத்தின் போதனைகளோடு வழக்கமாய் முரண்பட்டே இருக்கும்.

இருந்தபோதிலும் சமயம் அல்லது மதம் சார்ந்த இறுக்கத்துக்கு இது வழி செய்துவிடக்கூடாது. சகிப்புத்தன்மைக்குக் குந்தகம் விளைவித்துவிடக் கூடாது.

அனைத்து வகையான சமய சம்பிரதாயங்களையும் அவற்றை அனுசரிக்கும் சகலவிதமான மக்களையும் மதிக்கின்றது சைவம்.

ஒரு நல்ல சமுதாயமும் நல்லதொரு ஸ்திரமான சமூக அமைப்பும், மதப்பற்றும் தெய்வ நம்பிக்கையும் கொண்ட மக்களால்தான் கட்டப்படுகின்றன என்பதை அறிந்தவர்கள் சைவர்கள்.

அனைத்து மதத்தினரும் நடத்தும் மதக்கூட்டங்கள், சபைக்கூட்டங்கள் போன்றவற்றை ஆதரித்து தோள் கொடுக்கும் சைவத் தலைவர்கள், அவற்றில் நேரடியாய் போய் பங்கெடுத்தும் கொள்கின்றார்கள்.

இத்தனை இருந்தாலும், தங்களது ஆன்மீக நம்பிக்கையை எந்தவிதமான பிறசக்திகளும் தாக்கிவிடாது காப்பாற்றி வரும் சைவர்கள், அவர்களுடைய வேதாந்த வழிமுறைகளை மட்டுமே கண்ணெனப் போற்றிக் கடைப்பிடிக்கின்றார்கள். தவிரவும் ஏனைய நவீன அல்லது பழமை வாய்ந்த வழிமுறைகள் எதுவாகினும் அதனுடன் மல்லுக்கு நிற்பதே கிடையாது.

**வேதங்கள் விளக்குகின்றன:**

‘‘நாம், நம்முடைய மதத்தவரோடு ஒத்தியங்குவோம். நமக்கு அறிமுகமற்ற நபர்களின் நம்பிக்கைகளுடனும் ஒத்துப் போவோம். நமக்கும், அந்நியர்களுக்கும் இடையே, இதயம் ஒப்பிய ஒற்றுமையை மலர்விப்போம்.’’ ஓம் நமசிவாய.



அனைத்து மதநம்பிக்கையும் கொண்டு இறைவனை நாடும் அனைவரையும் கவனித்துக் கொண்டிருக்கிறார் சிவன்.

சைவர்கள் தங்களது மதத்தினைத் தனித்துவம் மிக்கதாய் கருதினாலும், ஏனைய அனைத்து மதங்களின்பாலும் அவர்களுக்கு அன்பும் மதிப்பும் மரியாதையும் உண்டு.

# சமகாலத்திய மதங்களுடனும் சைவ மதத்தால் எப்படி நிலைத்து நிற்க முடிகின்றது?

## ஸ்லோகம் 13

*உள்ளார்ந்த சத்தியம் எக்காலத்திலும் மாறுவது கிடையாது. ஆனால் புறம் சார்ந்து கடைப்பிடிக்கப்படும் முறைகளும் அனுஷ்டானங்களும் புதிதாய் ஊறிக்கொண்டேதானிருக்கும். தன்னுடைய புராதனக் கொள்கைகளைப் பிறழாது கடைப்பிடிக்கும் அதே நேரத்தில், கலாச்சார-சமூக-தொழில்நுட்ப மாற்றங்களுக் கேற்ப தன்னை பொருத்திக் கொள்வதிலும் விழிப்புடன் இருக்கிறது சைவமதம்.*

## விளக்கம்

*சைவம் ஒரு வைதீக மதம். பண்டைய நம்பிக்கைகளைக் கைவிடாத 'மடியான' ஒரு மதமாயினும், அனைத்து சமயங் களுடனும் இணக்கமாய் போகவல்லது. காலவோட்டத்தில் அனைத்து வழிபாட்டு முறைகளும் தவிர்க்க இயலாத பங்களிப்புகளே என்று விளங்கிக்கொள்ளத்தக்கது.*

*கட்டுக்கோப்புகள் அதிகம் கொண்டதொரு கடினமான ஆன்மீகப் பாதையிது, அதேநேரத்தில் மிகவும் பொறுமையானது. சகிப்புத்தன்மை நிறைந்தது.*

*சைவ பக்தர்கள் பல யுகங்களாய் வாழ்ந்து வந்துள்ளார்கள். இவர்கள், உள்ளூர தெய்வ வழிபாட்டினை அர்ப்பணிப்பாய் நிகழ்த்தியபடி அழியா சைவமதத்தின் கோட்பாடுகளை இறுக்கமாய் பற்றியிருப்பார்கள்... அதே சமயம், அந்தந்தக் காலத்து பணிக்கலாச்சாரம், தொழில்நுட்பங்கள், சமூக மாற்றங்கள் போன்ற அனைத்திலும் வெற்றிகரமாக இயைந்தும் போய்விடுவார்கள்.*

*வெளியில் நடக்கும் வேலைகளோ அல்லது சேவைகளோ உள்ளார்ந்த ஆன்மத் தேடலை மாற்றவே செய்யாது.*

*திறமை வாய்ந்த உழவாளியோ, பேக்டரி பணியாளோ, கிராமத்து வியாபாரியோ, கம்ப்யூட்டர் ப்ரொக்ராமரோ... எத்தொழில் செய்யும் சைவராகினும் அவரை இம்மதம் காத்து விடும்.*

*மனிதனை, எங்கிருந்து வந்தானோ அதே ஆரம்பப்புள்ளிக்குக் கொண்டு போய் சேர்க்கத் தேவையான அனைத்து வசதிகளும் கொண்ட கல்விமுறையைக் கொண்டுள்ளது சைவமதம்.*

*தனது குடும்பம், ஆசிரியர், குல குரு, ஆன்மீக குருவான சத்குரு, தினசரி வழிபாட்டில் உபாசிக்கும் கடவுள் (அல்லது கடவுளர்கள்) ஆகியவற்றுடன் ஒரு சைவ பக்தன் கொண்டுள்ள தொடர்பும் உறவும், அவனுடைய சமகாலத்திலும் சரி அல்லது அவன் எதிர்கொள்ளும் எதிர்காலங்களிலும் சரி, மாற்றங்காண்பதே கிடையாது.*

*'எப்போதும் எப்படியிருந்ததோ, அப்படியேதான் இப்போதும் இருக்கிறது' எனும் தர்மமே, சைவ தர்மமாகின்றது. அதனால் என்றும் சமூகத்தோடு அதிராமல் ஒத்துப்போய்விடுகின்றான் ஒரு சைவபக்தன்.*

**வேதம் பறைசாற்றுகின்றது:**

*''சுயம்புவாய் ஒளிரும் ஜோதியே... உன் பேரானந்த ஒளியினை நானும் உள்வாங்கிக் கொள்ள ஏதுவாய், அதனை மறைத்தபடி என் முன்னாலிருக்கும் அறியாமை எனும் படலத்தை விரட்டு. புராணங்களின் ஜீவநாடியை எனக்கு விளக்கிக் காட்டு. வேதங்கள் சொல்லும் சத்தியம் எனக்குள் என்றுமே இருக்கட்டும். ஞானியரிடமிருந்து நான் கற்றுக்கொண்ட ஞானமனைத்தையும் இரவும் பகலும் நான் உணர்ந்தபடி இருக்க வேண்டும்.'' ஓம் நமசிவாய.*



*பல கோடி மக்களைக் கொண்ட ஸ்திரமான இந்திய நாடு,*
*உலகின் மிகப்பெரிய ஜனநாயக நாடாகும்.*

*பாரத நாட்டின் விவசாய, தொழில்நுட்ப, அரசியல் பலங்கள்*
*இங்கு சித்தரிக்கப்பட்டுள்ளன.*

*இவற்றுக்கெல்லாம் நடுவே ஓர் ஊர்வலம் செல்கின்றது -*
*ஆன்மீகமே அச்சாணியாய் உள்ளதால்.*

# சைவர்களுக்கான வாழ்க்கை முறை எத்தகையது?

## ஸ்லோகம் 14

*சைவ இந்துக்களுக்கு, வாழ்க்கை முழுதுமே புனிதமானது. சமயம் சார்ந்து ஒழுகுவதே முழு வாழ்வுமாகின்றது. ஆகவே, சைவக்கலை, ஒரு புனிதக்கலை. அதன் இசை, தெய்வீக இசை. சைவவழி வாழ்பவனின் தொழில், அவனது தினசரி ஜீவாதாரத்துக்கு மட்டுமல்ல... அது, மனிதனுக்கும் கடவுளுக்குமான ஒரு மகத்தான சேவை. ஓம்.*

## விளக்கம்

*அது ஆணோ அல்லது பெண்ணோ... யாராயினும், தனது சுய தேடலில் ஒவ்வொரு சைவ மதத்தவரும் தனித்துவமானவர்களே.*

*ஆயினும், அனைவரும் ஒரே விஷயத்தைத்தான் தேடி நிற்கின்றார்கள்: பாதுகாப்பு மற்றும் சந்தோஷம்; அன்பு செலுத்தப் பட்டு பாராட்டப்பட வேண்டும்; படைப்பாளியாகவும் உபயோக மாகவும் வாழ வேண்டும். இவ்வாறு ஆக்கபூர்வமாய் வாழ விரும்புகிறார்கள்.*

*சைவ மதம் விஸ்தாரமாய் நிர்மாணிக்கப்பட்டுள்ள ஒரு மதம் ஆகையால் மனிதனின் இத்தகைய அடிப்படைத் தேவைகளை யெல்லாம் அது தானாக பூர்த்தி செய்து தருகின்றது. தந்து, உலகம் என்றால் என்ன என்றும், அதில் நம்முடைய இருப்பு என்ன என்பதையும் விளங்கிக் கொள்ளச் செய்து விடுகின்றது.*

*ஆன்மீக வாழ்க்கையில் சிதையாது பிரயாணிக்க வேண்டு மென்றால், அதற்கு தரமான குணாதிசயங்களே அடிப்படை. அவை அமையத் தேவையான வழிகாட்டுதல்களை அனைத்து சைவர் களுக்கும் வெளிப்படையாய் தருகின்றது இம்மதம்.*

பொறுமை, சகிப்புத்தன்மை, விசாலமான நோக்கு, மனிதநேயம், அனைத்தையும் இறைவனின் பாதங்களில் அர்ப்பணித்து கடுமையாய் உழைப்பது, மற்றும் பக்தி ஆகியன அந்த அத்தியாவசிய குணாதிசயங்கள்.

இல்லறம் மற்றும் கோயில் ஆகியவற்றை மையமாய் கொண்டே சுழல்கின்றது சைவமதம்.

உலக இச்சைகளையெல்லாம் தன்மேல் படாமல் பார்த்துக் கொண்டு, செய்யும் கடமை எதிலும் பலனைக் கருதாது அவற்றை இறைவனுக்கு அர்ப்பணித்து விட்டு வாழும் சமய-ஆன்மீக வாழ்க்கையே, சைவ சமயத்தின் கரு. மற்றும் அதன் சக்தி.

சைவத்தில், குடும்ப வாழ்க்கை கட்டுக்கோப்பானதொரு பலமாகவும், பொக்கிஷமாகவும் அமைக்கப்பட்டுள்ளது.

கலைகளின் சுரங்கமாய் நிலைத்துள்ளது சைவம்.

கலை மற்றும் கட்டுமானங்களின் சொத்து. கலை, இயல், இசை, நாடகம் ஆகியவற்றின் ஆரம்பப்புள்ளி. தத்துவம் மற்றும் புலமை ஆகியவற்றில் மேதமை. இவ்வாறு திளைக்கின்றது சைவ சமயம்.

தினசரி பூஜைகளும் வழிபாடுகளும் சைவக் கோயில்களில் முறையாய் நடக்கின்றன.

தினசரி வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய தர்மநீதியான மற்றும் நியாயமான வழிகாட்டுதல்களை சைவப் புராணங்கள் அளிக்கின்றன.

ஆன்மீக அதிர்வுகளை சைவ மதத்தின் ஆன்மீக ஆர்வலர்களுக்குள் உண்டாக்கி வளர்க்க, இறையருள் பெற்ற சத்குருக்கள் உள்ளார்கள்.

இம்மூன்றும் - கோயில்கள், இதிகாச-புராணங்கள் மற்றும் சத்குருக்கள் - சைவ மதத்தினரின் நம்பிக்கையை உடைக்காது காத்துவரும் நிதர்சனத் தூண்கள்.

**வேதங்கள் அடித்துக் கூறுகின்றன:**

''ஓ, படித்த மனிதர்களே... எவை நமக்கு நன்மை பயக்குமோ அவற்றை மட்டுமே நாம் நமது காதுகளால் கேட்போம், எது நம் மனங்களில் சீலத்தை விதைக்குமோ அதனை மட்டுமே நாம் நமது கண்களால் பார்ப்போம். கடவுளைப் புகழ்ந்து பாடிக்கொண்டே, உடலையும் உள்ளத்தையும், வாழ்நாள் முழுமைக்கும் கடவுளுக் காகவே அர்ப்பணித்து விடுவோம்.'' ஓம் நமசிவாய.



*ஒவ்வோர் அனுபவத்திலும் இறைவனுடன் ஐக்கியமாகி இயங்குவதே,*
*முழுதாய் வாழ்ந்த வாழ்க்கை என்பதாகும்.*

*இங்கு ஒரு தம்பதியர் காட்டில் போகும்போது சிவ-சக்தியைத் தரிசிக்கின்றார்கள்.*

*இந்த ஒரு தரிசனம், இருவரையும், அவர்களது வாழ்க்கையின் அனைத்து*
*சறுக்கல்களிலும் வழிகாட்டி உதவும்.*

# சிவனுடைய திருநடனச் சின்னம் குறிப்பது எதை?

## ஸ்லோகம் 15

*சமயம், கலை மற்றும் அறிவியல் ஆகிய மூன்றும் ஒன்றாய் கலந்துவிட்டதொரு சின்னமே, சிவ நடராஜன். ஆக்கல், காத்தல், அழித்தல் எனும் முடிவற்ற ஆண்டவனின் திருநடனத்தில், நமது பிரபஞ்சம் பற்றிய ஆழ்ந்ததொரு விளக்கமே அடங்கியுள்ளது எனும் சத்தியம், அவனுடைய திருவருள் சித்திக்கும்போது விளங்கும். ஓம் நமசிவாய.*

## விளக்கம்

திருநடனத்தின் சக்ரவர்த்தி, நடராஜப் பெருமான். இவருக்கு நான்கு கைகள்.

மேலுள்ள வலக்கரம் உடுக்கையை ஏந்தியிருக்கும். இதிலிருந்து படைப்பு பெருகியோடிக் கொண்டேயுள்ளது.

காத்தலை எடுத்தியம்பும் சின்னமாய் கீழ் வலக்கரம் அபய ஹஸ்தம் தருகின்றது.

அழிக்கும் தொழிலை, தீ ஏந்தியிருக்கும் மேல் நோக்கிய இடக்கரம் விளக்குகின்றது. வடிவத்தை அழித்து விடும் தர்மம், இச்சின்னம்.

தன்னுள் மறைமுகமாய் கருணைக்கடலை உள்ளடக்கியுள்ள தன்மையை அடையாளமாக்குகின்றது, வலக்கால். இது, அபஸ்மாரபுருஷா எனும் உருவின்மீது நின்று கொண்டிருக்கும். தாற்காலிகமாக பூமியில் வாழ வந்திருக்கும் மந்த ஆன்மாவாகும் இது. குழப்பமும் மறதியும் நிறைந்ததொரு சுறுசுறுப்பற்ற உருவகம்.

*தூக்கிய நிலையிலிருக்கும் இடக்கால், இடர்களிலிருந்து விடுதலை தரும் கனிவையும் கருணையையும் காட்டுகின்றது. சம்சாரம் எனும் கட்டிலிருந்து முதிர்ந்து விட்ட ஆன்மாவைக் கட்ட விழ்த்துவிடும் கடவுளின் பேரானந்த இயல்பினைச் சுட்டுகின்றது.*

*கீழ்நோக்கியிருக்கும் இடது கை, இந்த இடது காலைத்தான் சுட்டிக்காட்டிக் கொண்டிருக்கின்றது. விடுதலைப் பேறினை அடைய, ஒவ்வொருவருக்கும் இருக்கும் ஒரே கருணைமிகும் சாதனம் சிவபெருமான்தான் என்பதைச் சொல்லாமல் சொல்லும் முத்திரை இது.*

*சுற்றிலும் படர்ந்துள்ள நெருப்பு வட்டம் அண்ட சராசரத்தினை - குறிப்பாக நமது பிரக்ஞையைக் குறிக்கின்றது.*

*அனைத்தையும் கபளீகரம் செய்வதாய் தோன்றும் இந்த திருவுருவே, 'மஹாகாலா' - அதாவது, 'காலம்'.*

*நடராஜரின் இடுப்பினைச் சுற்றியிருக்கும் நாகப்பாம்புதான், குண்டலினி சக்தி. ஆன்மாவை, சிற்றின்ப மாயையிலிருந்து அகற்றி அதனை பேரின்ப சத்தியத்துக்கு எழுப்ப, ஒவ்வொருவரது உடலிலும் செறிந்துள்ள பிரபஞ்ச சக்தி.*

*இவ்வாறாய் விளக்கப்படும் நடராஜரின் திருநடனம், வெறும் ஒரு அறிகுறியோ அல்லது அர்த்தமுள்ள சின்னங்களின் தொகுப்போ மட்டும் கிடையாது.*

*அணு நிலையில், அணுவின் அதிர்வு எனும் செயலாய், நம் ஒவ்வொருவருக்குள்ளும், இக்கணத்தில் இத்திருநடனம் நடந்து கொண்டிருக்கிறது.*

**ஆகமம் சொல்கின்றது:**

*''உலகத்தின் பிறப்பு, அதன் இருப்பு, பிறகு அதன் கலைப்பு, சூட்சும ரகசியமான ஆன்மா, மற்றும் அதன் விடுதலை ஆகிய ஐந்துமே நடராஜ திருநடனத்தின் செயல்கள்.'' ஓம் நமசிவாய.*



*புலித்தோல் உடுத்திய பினாகபாணி.*
*நீலநிற வானமே பின்னணியாய் ஆடும், உடுக்கை விரும்பி.*
*நடனம் எனும் ஒரே கலையில்தான், செய்பவனும் செய்யப்படுவதும் ஒன்றாய் பின்னிப்பிணைந்து, நீருக்குள் நீரென பிரிக்க முடியாமல் பரிமளிக்கின்றன.*

*நடராஜ நடனம் சக்திமிகும் திருநடனம்.*
*சிவபெருமானின் திருநடனம் சக்திமிகுந்தது, பலமாய் இயங்குவது - ஆயினும், அது தான் கொண்ட இலக்கிலிருந்து வழுவாது, சமநிலை தடுமாறிவிடாது நீளும் ஒரு சிவக்கலை.*

*அசைக்க முடியாத ஒரே இருப்பின், அசைந்தாடும் அழகு.*

சக்திமிகு ருத்ரனுக்கு நமது துதிப்பாடல்களை சமர்ப்பிப்போம். ஜடாமுடியுடன் சடையனாய் ஆடும் கடவுளர்களின் தலைவன், நமது ஆநிரைகளையும் நம்மையும் காப்பான். நமது கிராமத்தில் அனைத்தும் ஆரோக்கியமாயும் பசியின்றியும் வாழும். *ரிக் வேதம்.*

*சித்தம் முழுதும் ஆனந்தம் மட்டுமே நிறைந்த நிலையில் என்னை நிலைநிறுத்து. நல்லெண்ணமும் இணக்கமும் நிறைந்த மனப் போக்கினை அருள்வாயாக. அப்போதுதான், பசும்புல்லைக் கண்டதும் தன்னிலை மறந்து அதனுடன் உறவு கொண்டாடும் பசுக்களாய் எங்களால் உன்னுடன் மனமொப்பி நட்புறவாட இயலும்.* பேரானந்த சேதி இது. *ரிக் வேதம்.*

*கடவுள், ஒரு சுயம்புவான படைப்பாளி. அவர் படைக்கப்படா தவர். அவருக்கு எல்லாம் தெரியும். அவர் துல்லிய தூய்மையானவர். மகா சக்தி. முக்காலமும் அறிந்தவர். காலத்தை உருவாக்கியவர். ஆன்மாவின் எஜமானன் கடவுளே. இயற்கையையும் இயற்கையின் மூன்று நிலைகளையும் படைத்துள்ளவர். அவரிடமிருந்துதான், அவரின் கருணை மனத்தினால்தான், வாழ்க்கை எனும் சுழற்சியி லிருந்து விடுதலை எனும் இறப்பற்ற பேரானந்தம் சித்திக்கின்றது. அவர் அருள் பார்வை படும் நொடியில், காலவோட்டத்தில் சிக்கும் வாழ்க்கையிலிருந்து காலவோட்டங்கள் அற்ற இறைநிலை வாய்க்கின்றது. கிருஷ்ண யஜூர் வேதம்.*

*சிவன், அன்பின் கடவுள். அவரின் கருணை தயவில்தான் இந்த அனைத்துப் பிரபஞ்சங்களும் உள்ளன. ஆடவர்களின் தலைகளும் முகங்களும் அவருடைய பிம்பங்களே. அவரே அனைவரின் இதயங்களிலும் உள்ளார். கிருஷ்ண யஜூர் வேதம்.*

*நிஜத்தில் பார்க்கப்போனால், கடவுள்தான் இந்தப் பிரபஞ்சங் களாய், அண்ட சராசரமாய் இருக்கிறார். இருந்தது, இருப்பது, இருக்கப் போவது ஆகிய அனைத்தும் எப்போதும் இருப்பவையே. உணவின் தயவால் வாழும் அனைத்து உடல் வாழ்க்கையும் அவரே - சிவனே. மரணமற்ற ஆன்மாவும் அவரே. அவரது திருப்பாதங் களும் திருக்கரங்களும் எங்கும் உள்ளன. அவருக்கு தலைகளும் வாய்களும் எங்கும் இருக்கின்றன. அவர் அனைத்தையும் பார்க்கிறார். அவர் அனைத்தையும் கேட்கிறார். அவர் எதிலும் உள்ளார். ஆக, இருப்பது, அவரே. கிருஷ்ண யஜூர் வேதம்.*

*எண்ணற்ற வடிவங்களின் கடவுள் - சிவனே. அவரின் கருணையால்தான் அனைத்தும் இருக்கின்றன. அணுவிலும்*

*அணுவானவன். ஆயினும் பிரபஞ்சத்தையே படைப்பவன். அவரது மர்மமான படைப்புகள் அனைத்திலும் வாழ்ந்துக் கொண்டே யிருப்பவர். சிவன் எனும் கருணைக் கடவுளின் பார்வையில்தான் அழியாத பேரானந்தம் உள்ளது. கிருஷ்ண யஜுர் வேதம்.*

*அனைத்து ஆரம்பங்களின் பிறப்பு, இருப்பு மற்றும் இறப்பு ஆகிய மூன்றின் கரு - காரணகர்த்தா. தூய்மையானவர். அனைத்துக்கு மான ஆதார சக்தியானவர். எங்கும் நிறை பிரம்மம். சத்தியத்தின் உச்சம். சைவ வரலாற்றில் சிவன் இங்ஙனமாய் போற்றப்படு கின்றார். அஜித ஆகமம்.*

*நிகரற்றவர். வலிகளிலிருந்து விடுதலை கண்டவர். நுண்ணிய சாதுர்யத்தின் உச்சம். எங்கும் நுழைபவர், ஏகமும் நிறைந்தவர். எல்லையற்றவர். முடிவற்றவர். மாறாத சத்தியம். அழுகாத நிதர்சனம். முத்தான பொக்கிஷம். சிவனின் சாரம் இத்தகையது. அனைத்து இறைப்பாதைகளின் இறுதி சிகரம். ஸ்வயம்புவ ஆகமம்.*

*வெறும் காவியுடை தரித்த உருவங்கள் கிடையாது அவர்கள். வெளிப்பூச்சுக்கான வேடதாரிகள் அல்லர். ஏனையவர்களிட மிருந்து தான்தான் தனித்துவம் மிக்கவர் என்று காட்டிக் கொள்வதற்காக அல்ல. சடங்குகள் நடத்துவதற்கான சீருடையும் கிடையாது. அனைத்து பந்தங்களையும் அபிலாஷைகளையும் வேரறுத்து விட்டு, தூய கருணையாம் சிவனையே சார்ந்து நிற்பவர்கள் அவர்கள் - சைவர்கள். அவர்களால் மட்டுமே ஆன்மாவைப் பிசுக்காய் ஒட்டியிருக்கும் அகங்காரத்தை அடியோடு வெட்டி வீழ்த்தி, சங்கடங்கள் தரும் பந்த ஒட்டுதலை ஒரேயடியாய் அழிக்க முடியும். அத்தகையவர்கள், சைவர்கள். திருமந்திரம்.*

*'ஹரா' எனும் தூயபாதையை இப்போது நான் உணர்ந்து விட்டேன். கடந்த காலங்களில், குறுக்குப் பாதையையெல்லாம் கடைப்பிடித்து 'அவரை' அடைய நான் திரிந்தலைந்திருக்கிறேன். ஆனால் அந்தோ! ஏக்கத்துடன் அவருக்காக நான் அலைந்து கொண்டிருந்த அக்காலங்களிலும்கூட, எனக்கு வழிகாட்டியபடி, எனக்கு முன்னால் ஒரு கலங்கரை விளக்கம்போல 'அவர்' விண்முட்ட நின்றுகொண்டுதான் இருந்திருக்கின்றார். சிவன் எனும்*

*பாதை, ஒரு நிரூபிக்கப்பட்ட பாதை. இதனைக் கடைப்பிடித்த சைவர்களை இது ‘ஹரா’ எனும் பதவி நோக்கி அழைத்துச் சென்றிருக்கின்றது. ஆன்மாவினை உணர்ந்த ஜீவன்கள் பின்பற்றிய ராஜபாட்டை இது. தூய பக்தர்களை பிரபஞ்ச சக்திக்குள் கொண்டு போய் இறக்கி விட்டுள்ள இறைப்பாதை. இப்பாதையை வேண்டுங்கள், அவன் கிருபையால் நுழையுங்கள், தர்மம் பிறழாது கடைப்பிடித்து தக்க வைத்துக் கொள்ளுங்கள். அலையும் உங்கள் சிந்தனைகளைக் கடிவாளம் போட்டிழுத்து நிலைநிறுத்துங்கள். ஆடக்கூடாது அது... அலையக் கூடாது, அசையவும் கூடாது. புனித அட்சரமாம் ‘சி’ அட்சரத்தை ஓதியபடியிருங்கள். ‘ஹரா’ பாதையை விடாது தொடருங்கள். அடிப்படை ஜோதி பிரகாசிப்பதை நீங்கள் பார்ப்பீர்கள். திருமந்திரம்.*

*அவரது புருவத்தில் பொங்கும் அழகிய வில்லின் வளைவினை நீங்கள் தரிசித்தால்... கோவைக் கனியினைப் போன்ற அவருடைய இதழ்களில் குளுமையாய் உருவாகும் புன்னகையை நீங்கள் பார்த்தால்... சிக்குகள் விழுந்த ஜடாமுடியினையும், பவளத்தை யொத்த அவரது திருமேனியில் பூசப்பட்ட விபூதியையும் நீங்கள் கண்கொள்ளாமல் பார்த்தால்... இனிமையான அந்த தங்கப் பாதங்கள் திருநடனத்தில் தூக்கியிருப்பதையும் நீங்கள் தரிசித்தால்... அப்போது, இந்த பரந்து விரிந்த பூமியில் மீண்டும் வந்து மனிதனாய் பிறப்பதுகூட சிறந்ததாய் ஆகும். திருமுறை.*

*உடலைக் கோயிலாக்கி, சிந்தனை முழுவதையும் எப்போதும் ‘அவரது’ பாதங்களிலேயே வைத்து, தூய்மையான சத்தியத்தைக் கையில் கொண்டு, சிந்தனையின் ஜோதியினையே லிங்கமாக ஆக்கிக்கொண்டு, உருகும் அன்பினை உருகும் வெண்ணெயைப் போல ஓடவிட்டு, பாலும் கங்கை நீரும் கொண்டு தெளித்து நம்மையே தியாகமாக்கி அவரிடம் தந்து விடுவோம். திருமுறை.*

# ஈஸ்வர தேவதாச



## உபநிடதம் இரண்டு:

*கடவுளும் கடவுள்களும்*

# சிவா



## நம் தலைமைக் கடவுள்

*நெருப்பு அவரது தலை.*
*சூரிய சந்திரர்கள் அவருடைய நயனங்கள்.*
*அண்ட வெளியே காதுகள்.*
*அவர் வார்த்தைகள், வேதங்கள்.*
*காற்று அவர் சுவாசம், பிரபஞ்சம் அவர் நெஞ்சம்.*
*அவரது பாதங்களிலிருந்து விளைந்தது, இப்பூமி.*
*அனைவரின் உள்ளார்ந்த ஆன்மா, அவரே.*

***-அதர்வண வேதம், முண்டக உபநிடதம்***

# நம்முடைய கடவுள் சிவனின் இயல்பு என்ன?

## ஸ்லோகம் 16

*சிவபெருமானே அனைத்தும். அனைத்திலும் இருப்பவன் அவனே. இரண்டாவது அற்ற ஒரே இருப்பு. தலைமையானவன், மிக உயர்ந்தவன். ஒரே நித்திய சத்தியம். அவனே பதி, நம் கடவுள். அகம் சார்ந்தவன். அகத்தால் மட்டுமே உணரவல்லவன். ஆகவே மறைபொருளானவன். ஆழ்நிலையில் வசிப்பவன். ஐந்து சக்திகள் கொண்டவனவன். ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், வெளியிடுதல் ஆகியன அவை. ஓம்.*

## விளக்கம்

*சிவபெருமான், ஒரே அம்சம். ஒன்றுக்கு மேற்பட்டவை கிடையாது. ஆனாலும் அவரை நாம் மூன்று பரிசுத்தங்களாக அறிகிறோம். வரம்பற்ற பூரணமான ஒரே சுயம்பு - ஒரே சத்தியம்* (Absolute Reality). *தூய பிரக்ஞை* (Pure Consciousness). *மற்றும் ஆன்மாவின் அடிப்படை - மூலம்* (Primal Soul).

*ஒரே சத்தியம் என்ற அம்சத்தில் அவர் வெளிப்படையாய் தெரியாதவர். மறைபொருளாய், ஆழ்மனதில் ரகசியமானவர். மாற்றங்கள் அற்றவர். சுயம் - சுயம்பு. காலங்களும், வடிவங்களும், எல்லைகளும் அற்றவர்.*

*தூய பிரக்ஞை எனும் அம்சத்தில், வெளிப்படையாய் தெரிய ஆரம்பிக்கும் அடிப்படையாகிறார் சிவபெருமான். இது பார்க்க வேண்டிய ஒன்றல்ல... உணர வேண்டிய ஒன்று. எல்லாக் காலகட்டங்களிலும் மற்றும் அனைத்து பிரபஞ்சங்களிலும், எங்கெங்கிலும் நிறைந்திருக்கும் எல்லைகளற்ற அறிவு - எல்லையற்ற*

*சக்தியே, தூய பிரக்ஞை எனும் இவ்வுணர்வாம். அனைத்து வடிவங்களிலிருந்தும் பெருக்கெடுத்து ஓடும் தூய அன்பு மற்றும் ஜோதி என்றாகிறது இவ்வுணர்வு. ஸ்பரிஸங்கள் எல்லாமும் மாயை... இறைவனை உணரும் தூய பிரக்ஞை மட்டுமே சர்வம்.*

*அடிப்படை ஆன்மா எனும்போது, சிவபெருமான் ஐந்து வகைகளில் தோன்றுகிறார். படைக்கும் பிரம்மா, காக்கும் விஷ்ணு, அழிக்கும் ருத்ரன், மறைமுகமான மஹேஸ்வரன் மற்றும் திரைவிலகிப் பிரத்தியட்சமாகும் சதாசிவன்.*

*நம்முடைய மனதார்ந்த கடவுள், சிவபெருமான். மூவுலகங் களின் மூலம்.*

*நமக்கு தாய்-தந்தையாய் உள்ள சிவபெருமான் நம்மை போஷித்து வளர்க்கிறார், பாதுகாக்கிறார். நமக்கு நல்வழிகாட்டுகிறார்.*

*நாம் நமக்குள் தெய்வீக ஸ்தானத்தை அடையும் பரிணாம வளர்ச்சியில் இருக்கும்போது திரைமறைவிலிருக்கும் சத்தியம் என்பதனை அத்திரை விலக்கிக்காட்டும் சிவன், கடவுளின் எல்லையற்ற கருணையை நாம் முழுக்கவும் பெற்றுக் கொள்ளும் தகுதி பெற்று முதிரும்போது அந்த சத்தியத்தை நமக்கு தாரை வார்த்துத் தந்து விடுகின்றார்.*

*அனைத்தும் சிவனே. சிவன் அனைத்திலும் இருக்கிறார்.*

*நாம் அவர் என்ன என்று விளங்கிக் கொண்டிருக்கிறோமோ, அதையெல்லாம் வெகுவாய் கடந்து ஆழத்தில் உள்ள ஒரு மகோன்னதம்.*

*அவர் ஒரு புனித ரகசியம். தூய மறைபொருள். இரண்டறக் கலந்து விடுவதால் மட்டுமே விளங்கிக் கொள்ளத் தக்கவர்.*

**வேதங்கள் வர்ணிக்கின்றன:**

*''மூன்று குணங்களில் மரணத்தைக் குறிக்கும் குணம், தமஸ். இக்குணத்தால் வடிவான சிவன், ருத்ரன். பாதுகாக்கும் சக்தி எனும் ரஜஸ் குணமாய் வெளிப்படும்போது, அவரே பிரம்மா. தூய இருப்பு என்றாகும்போது சிவனே விஷ்ணு என்று அவதாரமா கின்றார்.'' ஓம் நமசிவாய.*



மணமுடித்த ரிஷிகள் ஒருகாலகட்டத்தில் ஒரு காட்டில் வாழ்ந்ததாய் பழங்கதைகள் சொல்கின்றன. ஒரு துறவியாய் அங்கு தோன்றினார் சிவபெருமான். மனைவிமார்கள் கொல்லப்பட்டனர்.

'அவரை' அழிக்க ஒரு புலியையும் யானையையும் தந்திரமாய் ஏற்பாடு செய்தனர் ரிஷிகள்.

ஆனால், ஆணவம் எனும் செருக்கினை முழுதும் வெற்றி கொண்டவன் என்பதனை அறிவிக்கும் விதமாய், அவற்றை தனது கச்சையாகவும் சால்வையாகவும் மாற்றிக் கொண்டு விட்டார் சிவன்.

# வெளிப்படாமல் ரகசியமாய் மறைந்துள்ள சிவனின் சுயம்தான் என்ன?

### ஸ்லோகம் 17

*சிவபெருமானின் வெளிப்படாத சத்தியத்தின் சுயம், பரசிவனாகும். இதுவே ஒரே இருப்பு. சத்திய இருப்பு. அவருடைய மற்ற இரு உருவகங்கள் வெளிப்படையானவை. அவற்றிலிருந்து வேறுபட்ட மறைபொருள் இது. அனைத்தின் முழுமை, பரசிவன். இந்த சர்வத்தில் இல்லாதது இல்லை. ஓம்.*

### விளக்கம்

*சுயம் - அகம் - ஆழ்மனத்து சத்தியம் - ஒரே இருப்பு: இதுவே பரசிவம்.*

*இதனை முழுவதுமாய் அறிந்தவராய் ஆகவும் விளங்கியவராய் ஆகவும், பரசிவத்தினை உணர்ந்தாக வேண்டும். உணர்ந்து அறியத்தக்கது இது.*

*பரசிவன் ஸ்தூலப் பொருள் அல்ல. ஆகவே இல்லாதது. ஆயினும் இருப்பதைப்போல உணர வைப்பது. அதாவது 'இருப்பு' என்பதே பரசிவம்தான். ஆக, இங்கிருப்பவை எல்லாமும் பரசிவம்தான்.*

*கடவுள் என்பதன் இறுதியான உண்மையாய் எங்கும்நிறை பரசிவம் இல்லாவிட்டால், இங்கு ஜீவன்கள் கிடையா... ஜீவவாழ்க்கை எனும் ஒரு அமைப்பு கிடையா.*

*இத்தனை தகுதி வாய்ந்த ரகசியம், பரசிவம். மறைபொருள் என்றும் மர்மமானது என்றும் ஆவது. இதயக்குகைக்குள்ளே சத்தியமாய் இருக்கும் நிதர்சனம். அக்குகைக்குள் போய் தரிசிக்க வேண்டிய கருணைக்கடல்.*

யோகிகளும், ரிஷிகளும், சந்நியாசிகளும் மகான்களும் காலங் காலமாய் அனுபவித்து, ரகசியமாயினும் சத்தியம் என்று கண்டு சொல்லியுள்ள பேரானந்த அனுபவம்.

பரசிவத்தினை தனக்குள்ளேயே கண்டுபிடிக்க ஆழ்மனத்தின் அடியாழம் வரை அப்பகுதியை மட்டுமே குறிவைத்து சிந்தித்தவாறு இறங்குகிறார் யோகி.

இது தியானம். சிரமமானது இது. ஆழ்மனம் நோக்கி இறங்கும் போது கட்டுக்கடங்காத சிந்தனைகள் இடைவரும். அவை, அந்த யோகி வரையறுத்து வைத்துள்ள உலக பதார்த்தங்களாய் இருக்கலாம்... அல்லது அவர் கடவுள் என்று விவரித்துள்ள உருவகமாய் இருக்கலாம்.

எதுவாகினும், ‘இது கிடையாது, அது கிடையாது’ என்று ஒதுக்கியவாறு யோகியின் தியானப் பிரயாணம், அவரது இலக்கான ஆழ்மனம் நோக்கி தொடரும்.

யோகியின் அடக்கப்பட்ட மனம், ஒடுக்கப்பட்ட மனம், இங்கும் அங்கும் என்று எங்கும் அலையாத அளவுக்கு வசியப்படுத்தப்பட்டு நிலைநிறுத்தப்பட்ட மனம், இப்போது சச்சிதானந்தத்தில் நிலைபெறும்.

சச்சிதானந்தம் - எங்கெங்கிலும் ஆனந்தம்.

அந்த யோகியே இப்போது எங்கும் இருப்பார். கருணை மயமாய் ஆகியிருக்கும் அவர், அதே ஆனந்த நிலைமையோடு, எந்த வடிவத்துக்குள்ளும் நுழைந்து வருவார்.

பிராணாயாமம் எனும் மூச்சுப் பயிற்சியால், மந்திர ஜபங்களால், தந்திர பயிற்சிகளால், அசைக்க முடியாத எஃகு போன்ற வைராக்கியத்தால், காலம், பிரபஞ்சம், வடிவம் என அனைத்தும் அடங்கிப் போக... நிர்விகல்ப ஸமாதி எனும் உச்சகட்ட நிலைக்குள் நிலைபெறுகின்றார் யோகி.

இந்நிலையிலிருந்தபடியே பரசிவத்துடன் நீரோடு நீர் போல ஐக்கியமாகி விடலாம்.

யோகியும் பரசிவமாகிப் போவார்.

*மனிதன், தெய்வமாகி விட்டாரல்லவா!*

## வேதங்கள் விளக்குகின்றன:

*“தகதகக்கும் சுயஜோதி, வடிமற்றது, எங்கிருந்தும் தோன்றாதது, தூய்மையானது. இதுவே எதிலும் வியாபித்திருக்கும் வஸ்து. உள்ளேயும் உள்ளது. புறத்தேயும் உள்ளது. இத்தகைய கடவுள், பரசிவன். ஆழ்நிலை அடியாழத்தையும் கடந்தவர். ஆகவே ஆழ்நிலையை அடைந்தாலும் கிடைக்காதவர். மறைபொருள். அண்ட சராசரத்தின் காரணம்.”* ஓம் நமசிவாய.



*சத்குரு எனும் ஒரே ஜகத்குருவின்பால் முழு பக்தியை*
*பதித்து விட்ட ஞான முத்திரையை ஒரு கை குறிக்கும்.*
*ஒளிமிகுந்த ஆசிகளைத் தன்னிடமிருந்து கருணையோடு எல்லா திக்குகளிலும் பரப்பும்.*
*மற்றவர்களால் விளங்கிக் கொள்ள முடியாதவன் இவன்.*
*துல்லிய தூய துறவி. உள்ளிருக்கும் கடவுளை உணர்ந்து விட்ட மகான்.*
*அவனுக்குள், காலநேரத்துக்குள் வரையறுக்க முடியாத, காரணமற்ற, வடிவமற்ற, அந்த*
*ஒரே சத்திய இறைவன், சிவலிங்கமாய் பழுத்திருக்கும்.*
*சிவனே, சிவனாய்.*

# சிவனின் தூய பிரக்ஞையாவது யாது?

## ஸ்லோகம் 18

*சிவனின் தூய பிரக்ஞை, பராசக்தி. ஒவ்வொரு ஜீவனின் உள்ளும் ஓடும் அடிப்படை ஓட்டம். நம் சாதாரண அறிவுக் கெட்டாத இருப்பு - சிவ இருப்பு - இது. வாழும் அனைத்து ஜீவராசிகளின் உயிர்ப்பும் அஸ்திவாரமும், தூய பிரக்ஞையேயாம். இது இன்றி எதனாலும் நீடித்து இருக்க முடியாது. ஓம்.*

## விளக்கம்

*பிரக்ஞை என்பது, உணர்வு. பசி, தூக்கம் ஆகியன போல். இவையெல்லாம் அஞ்ஞான மாயை சார்ந்த பிரக்ஞைகள். ஆனால் இதுவே பரிசுத்த ஆனந்தத்தை, ஒரே இருப்பினை, ஆன்ம அடியாழத்தின் சத்தியத்தை, அதாவது கடவுளை உணர்வதாய் ஆகும்போது, துல்லிய - அப்பழுக்கற்ற - தூய உணர்வாகின்றது.*

*அதாவது, தூய பிரக்ஞை எனப்படும்* Pure Consciousness.

*மாபெரும் சக்தியாய் அறியப்பட்டுள்ளதே, பராசக்தி. பல பெயர்களில் பராசக்தி அழைக்கப்படுகின்றது: அமைதி, பராசக்தியே. இதேபோல சாந்தமும் பராசக்திதான். அன்பு, ஜீவன், சக்தி எல்லாமுமே பராசக்தியே.*

*ஆக மொத்தத்தில் நாமறிந்துள்ள அனைத்தும் பராசக்திதான்.*

*பராசக்தி, சச்சிதானந்தா ஆகும். விழித்த நிலையிலேயே, தூக்கத்தில் கிடைக்கும் கருணைமிகும் பிரக்ஞையை அனுபவித்தல்!*

*ஜீவனின் ஆதி அசலான உந்து சக்தி. வேறுபாடு அற்றது. ஸ்தூலமான ஒரு பொருளாய் அல்லாத பேரானந்த உணர்வு. தன்னைத்தானே அறிந்து அடங்கி சாந்தத்தின் ஆழத்தில் கொலு கொண்டுள்ள அரூபம்.*

*தெய்வீக ஜோதியாய், அதன் சக்தியாய், இறை ஞானமாய் கதிர்வீசிக் கொண்டிருக்கின்றது தூய பிரக்ஞை.*

*பரசிவாவிலிருந்து எப்போதும் வந்து கொண்டேயிருக்கின்றது பராசக்தி. இறை பிரக்ஞையின் அல்லது எல்லையற்ற ஞானத்தின் வெளிப்பாடு - உரு.*

*தனது படைப்பின் அனைத்தையும், அவற்றின் அடியாழம் முதல் மேற்தளம் வரை, முழுதும் அறிந்துள்ளவர் சிவபெருமான்.*

*நகரும் மற்றும் நகரா உயர்திணை முதல் அஃறிணை வரை, அவரது உயிர்ப்பு நீக்கமற அனைத்திலும் பரவிக்கிடக்கின்றது.*

*மூவுலகிலும் உள்ள இவற்றில் ஏதேனும் ஒன்றிலிருந்தோ அல்லது அனைத்திலுமிருந்தோ பராசக்தியை நீக்கிவிட சிவபெருமான் துணிந்தால், அனைத்தும் தூள்தூளாகிப் போகும். பொடிப்பொடியாகி மறைந்தே போகும்.*

*அண்ட சராசரத்தை நிலைநிறுத்தி நீடிக்க வைத்துக் கொண்டிருப்பது, சிவனுடைய சக்தி வடிவமே ஆகும். இந்த கட்டுக்கடங்கா பிரபஞ்ச சக்திக்கு ஆரம்பமும் கிடையாது. முடிவும் கிடையாது.*

*சுருங்கச் சொன்னால், சிவனின் சூட்சுமமான இறை சிந்தனையின் ஸ்தூல இயக்கமே, சக்தி.*

*மறைபொருள் பரசிவன். அதன் வெளிப்படையான இயக்கம் பராசக்தி.*

**வேதங்கள் சொல்கின்றன:**

*‘‘அனைத்து படைப்புகளிலும் மறைந்திருக்கும் சிவபெருமானே, கடவுள். படைப்புகளின் உள்ளார்ந்த ஆன்மா அவரே. இந்த ஆன்மாவே வேறுபாடின்றி அனைத்து படைப்புகளிலும் உள்ளது. படைப்பு எனும் இயக்கத்தை கண்காணிப்பவர் சிவனே. அனைத்திலும் வாழ்ந்தபடி அனைத்தையும் கண்காணித்துக் கொண்டிருப்பவர். இயற்கையின் மூன்று நிலைகளையும் கடந்த தூய பிரக்ஞை, அவரே.’’ ஓம் நமசிவாய.*



*சச்சிதானந்தம் என்ற திருநாமத்தோடு சிவபெருமான் இயங்கும்போது படைப்புகள் அவரிடமிருந்து வெளிப்படுகின்றன. அவரிடமே பின்பு திரும்புகின்றன.*
*இந்த அண்ட சராசர நிஜம், இங்கு ஓவியமாய் தரப்பட்டுள்ளது.*

*ஜீவன் தரும் கங்கா நதி சிவபெருமானின் சிரசிலிருந்து ஊற்றெடுத்துக் கொண்டேயிருப்பதாகவும், அப்படைப்பு, தாமரை மலரினையொத்த படைப்புலகத்தை பிரக்ஞை மற்றும் கருணை ஆகியனவற்றால் நிரப்பிக் கொண்டேயிருப்பதாகவும் உருவகப்படுத்தப்பட்டுள்ளது.*

# ஆன்மாவின் இயல்பு என்ன?

## ஸ்லோகம் 19

*படைக்கப்படாத, சுயம்புவான அடிப்படை ஆன்மா, பரமேஸ்வரன் ஆவார். இவரே சிவ-சக்தி. ஐக்கியம். மகாதேவர்களையும் மூவுலகத்தினையும் படைத்து ஆளும் ஒரே நிர்வாகி. அவருடைய படைப்புகள் அனைத்திற்குள்ளும் நீக்கமற உறுதியாக வேறுபாடின்றி நிலைத்தபடி, அவற்றுக்குள்ளிருந்தே ஆண்டு கொண்டிருக்கிறார். வெளியிலிருந்து அல்ல. ஓம்.*

## விளக்கம்

பரமேஸ்வரன், அனைத்துக்கும் மேலான ஒரே கடவுள். ஒரே எஜமானன்.

அண்ட சராசரத்தின் தாய். இறைவன். இறைத் தன்மையானவன். விலைமதிப்பற்றவன்.

அனைத்து கடவுளர்களாலும், ஆன்மாவை உணர்ந்தவர்களாலும் வழிபடப்படுபவர்.

அளவு கடந்து பக்தி செலுத்தப்படும் தெய்வமாய் சிவ-சக்தி விளங்குவதால், அனைவருமே இத்தெய்வத்துடன் உள்ளார்ந்த அந்தரங்க அர்ப்பணிப்பினைச் செலுத்துகிறார்கள்.

அவரது கருணையின் விஸ்தாரம், எல்லையற்றது. அனைத்து சக்திகளின் ஆதாரம். சக்திகளுக்கெல்லாம் தலையாய சக்தி. ஆகவே பக்தர்கள் தங்களது அர்ப்பணிப்பான பக்தியால் கெஞ்சிக் கூத்தாடி, தர்மரீதியாய் எதைச் செய்யவும் துணியும் அளவுக்கு வெகுண்டு, அவரது கவனத்தை ஈர்த்துவிட அல்லாடுகின்றார்கள்.

அவரைப் பற்றிப் பேசாத வாய் கிடையாது. சிவ சிவ எனும் திருநாமம் உதடுகளின் நுனியில் எப்போதும் உறையும் அளவுக்கு

*முடிவில்லாமல் அவர் புகழ் பேசப்படுகின்றது. ஒலியின் நாயகனான சிவன் பெயரே, அனைத்து உதடுகளிலும்.*

*ஆதியும் அப்பழுக்கற்றதுமான பரமேஸ்வரன் எனும் இந்த மூன்றாவது திருவடிவத்தில், அடிப்படை ஆன்மாவாகவும் சைவர்களின் மனத்தாழத்து தெய்வமாகவும் விளங்குகிறார்.*

*கடவுளை ஆராதிக்க, அவரை விரும்ப, அவரிடம் உருகி நிற்க, அவரை விட்டகலாது வாழ, அவரைத் தெரிந்து கொள்ள வேண்டும். அவரைப் பற்றி தெரிந்து கொள்ள, கடவுள் உங்கள் மீது வைத்திருக்கும் எல்லையில்லா அன்பையும் கருணையையும் உணர வேண்டும்.*

*வார்த்தைகளால் மட்டுமல்ல... வேறெந்த உவமையாலும், எம்மொழியாலும் விவரிக்க முடியாத அளவுக்கு சமுத்திரத்தை யொத்த கருணையால் நிரம்பியவர், கடவுள்.*

*ஜொலிக்கும் அவரது பிரகாசமான ஜோதி ரூபத்தை ஞானப் பார்வையால் கண்டு பூரிக்க முடியும்.*

*நம்மைப் போன்ற அற்பமான துகள்களிலிருந்து நம்முடைய இந்த பிரபஞ்சம் போன்ற பேரண்டம் வரை கண்ணும் கருத்துமாய் காப்பவர்.*

*அவரது திருவுருவம் பால் வெள்ளை நிறத்து ஜோதியாகும். ஜ்வாலையாய் தகதகக்கும் செந்தலையர். ஆசிகள் வழங்கும், அவர்தம் கைகளும், கால்களும். நீண்ட கைகள். அப்பழுக்கற்ற திருமுகம். அன்பும் கனிவும் காட்டும் கண்கள். தியானப் புன்னகை. சிவபெருமானின் இத்தகையதோர் தெய்வீகத் திருவுருவத்தினைக் கண்ணாரக் கண்ட ஞானியர் பற்பலர்.*

**ஆகமங்கள் சொல்கின்றன:**

*‘‘சிருஷ்டி எனும் உற்பத்தி, ஸ்திதி எனும் பாதுகாப்பு, சம்ஹாரம் எனும் மரணம், திரோபாவா எனும் ரகசியம் மற்றும் அனுக்கிரஹம் எனும் ரகசியத் திரையை விலக்குதல் ஆகிய ஐந்து நிலைகளுக்கான காரணகர்த்தா பரமேஸ்வரன்.’’ ஓம் நமசிவாய.*



*அடிப்படை, ஆரம்ப ஆன்மா எனும் அமைப்பில், கடவுளுக்கு வடிவம் உண்டு.*

*கைகள், கால்கள், மற்றும் எல்லையற்ற மூளை ஆகியன உண்டு.*

*இந்தத் துல்லிய அவதாரமே பரமேஸ்வரன்.*

*அண்ட சராசரத்தைப் படைத்து ஆள்பவன்.*

*ஒரு கதையில், சிவபெருமான் நெருப்புத் தூணாக வர்ணிக்கப்படுகின்றார். அதன் அடி மற்றும் முடி ஆகியவற்றை பிரம்மா மற்றும் விஷ்ணு ஆகியோர் கண்டுபிடிக்க முயன்று அது முடியாமல் தோற்றதாய் சொல்கின்றது அக்கதை.*

# சிவபெருமானின் பாரம்பரிய வடிவங்கள் என்னென்ன?

### ஸ்லோகம் 20

*நாம் செலுத்தும் ஆழ்ந்த பக்தியின் காரணமாக, ஒரே சத்தியக் கடவுளான சிவபெருமானுக்கு பல வடிவங்களும் பல முத்திரைகளும் தரப்பட்டுள்ளன. இவற்றில் அடிப்படை மூலமாய் இருப்பது, சிவலிங்கம், நடராஜர், அர்த்தநாரீஸ்வரர், தக்ஷிணா மூர்த்தி, ஹரிஹரன், பைரவன் மற்றும் திரிசூலன். ஓம் நமசிவாய.*

### விளக்கம்

*ஒவ்வொரு வடிவமும், சிவனின் வடிவங்களே.*

*பாரம்பரிய வளர்ச்சி நமக்கு பற்பல புனித வடிவங்களை அளித்துள்ளன.*

*இறைமையைக் குறிக்க உருவான முதல் வடிவம், சிவலிங்கம்.*

*ஏனைய அனைத்துமே ஞானியரின் ஞானக் காட்சிகளின் தரிசனங்களிலிருந்து பிறகு உருவானவை.*

*சிவலிங்கத்தினை நாம் வழிபடும்போது சிவபெருமானை நாம் பரசிவனாக ஆழ்ந்து தியானிக்கிறோம்.*

*சிவலிங்கம், மிகவும் சுலபமானதொரு ஓவல் (நீள்வட்டம்) வடிவம். வார்த்தைகளற்று இயங்கும் கடவுளின் ஒரே சத்திய இருப்பினை, அமைதியாய் உரத்துப் பேசும் திருவடிவம்.*

*எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பரம்பொருளாய் பரமசிவனை தரம் உயர்த்தி, இந்தத் திருக்கோலத்துக்கு பராசக்தி அல்லது சச்சிதானந்தம் என்று நாம் பதவி தந்துள்ளோம்.*

*சக்தியை விட்டு எப்போதும் அகலாத வடிவமாய் சிவபெருமானை நாம் வழிபடும்போது அர்த்தநாரீஸ்வரர் என்று முடிசூட்டுகின்றோம். வலப்புறம் ஆண்மைமிகும் தோற்றமும் இடப்புறம் பெண்மையும் தாங்கி, எதிரெதிர் முனையங்கள் அனைத்தும் இந்த திருவுருவுக்குள் ஒற்றுமையாகும் என்று வலியுறுத்துகின்றார்.*

*அடிப்படை ஆன்மா என்று, அனைத்துள்ளும் உறையும் இயக்க விசையென்று, பரமேஸ்வரனை நாம் வடிவமைக்கின்றோம். இவரே நடராஜர். பிரபஞ்சத்தை நகர்த்தி இயக்கிக் கொண்டிருக்கும் இறை நடனக்கலைஞர். இவருடைய தெய்வீக நடன அசைவால் இயங்குகின்றது அண்ட சராசரம். இந்த இயக்கம் நின்று போகும், பரமேஸ்வரனின் திருநாட்டியம் ஓய்ந்தால்.*

*இப்படியாக சிவபெருமானை மூன்று புனிதத் திருவுருவங்களாய் நாம் வணங்குகின்றோம். இருந்தாலும், அவர் ஒருவர்தான் சத்தியம் என்றும், அவரேதான் இந்த ஒவ்வோர் அவதாரங்களிலும் இருக்கிறார் என்பதையும் நாம் அறிந்தேயிருக்கிறோம்.*

*சிவபெருமானே தக்ஷிணா மூர்த்தி - வார்த்தைகளின்றி அமைதியாய் ஞானம் புகட்டும் குரு.*

*பாதி சிவன் மற்றும் பாதி விஷ்ணுவாய் இருக்கும் ஹரிஹரனும் சிவனே.*

*அன்பு, ஞானம் மற்றும் இயக்கம் ஆகிய மூன்றையும் தனது மூன்று கூர்மைகளால் குறிக்கும் திரிசூலமும் அவரே.*

*இந்த ஆயுதத்தினை நுணுக்கமாயும் கலைநயத்துடனும் தடுமாற்றமின்றி விரைந்து இயக்கிக் கொண்டிருக்கும் பைரவரும், சாட்சாத் சிவனே.*

**திருமந்திரம் அடித்துச் சொல்கின்றது:**

*''எங்கும், புனிதம்தான். எங்கும், சிவசக்திதான். எங்கும் இருப்பது சிதம்பரம்தான். எங்கெங்கிலும் இடம்பெறும் அசைவுகள், தெய்வீகத் திருநடனம்தான்.'' ஓம் நமசிவாய.*



*நீலநிறத் தொண்டை கொண்ட நீலகண்டன் எனும் திருவுருவம், சிவனின் ஒரு வடிவமாகும். பாற்கடலைத் தேவர்களும் அசுரர்களும் கடைந்தபோது, ஒரு விஷம் வெளி வந்தது.*

*இதனால் எங்கெங்கும் மரணம் சம்பவித்தது.*

*மனிதகுலத்தினைக் காக்க, சிவன் அந்த விஷத்தினை பெற்று குடித்து விட்டார்.*

*இது அவரது தொண்டையை விஷத்தின் நீலநிறமாக்கி விடுகின்றது.*

*எண்ணற்ற வடிவங்களின் கடவுள் அவர். அவரது கருணையில் தான் அனைத்தும் வாழ்கின்றன. அணுவிலும் நுண்ணியவர். ஆயினும் அனைத்தின் படைப்பாளி. ஒருவராலும் விளங்கிக் கொள்ளயியலாத அவரது ரகசிய படைப்புகளில் எப்போதும் வாழ்ந்து கொண்டிருப்பவர். இக்கருணைக் கடவுளின் பார்வையின் ஆசியினால்தான், தீர்க்காயுசான சாந்நித்யம் எங்கும் நிலவி வருகின்றது. அனைத்தின் எஜமானன் இவர்தான். எல்லாவற்றின் இதயச்சுரங்கத்துள்ளும் ஒளிந்திருப்பவர். காலத்தின் கட்டாயத்தில் இயங்கும் உலகத்தினைக் கவனித்துக் கொண்டிருப்பவர். கடவுளர்களும் ஞானியர்களும் சிவபெருமானுடன் இரண்டறக் கலந்தவர்கள். இங்ஙனமானவரை ஒரு மனிதன் அறிந்து கொண்டு விட்டால், மரணம் எனும் விலங்கிலிருந்து அவன் அறுக்கப்பட்டு விடுதலை ஆகின்றான். கிருஷ்ண யஜுர் வேதம்.*

*அவருடைய அருகாமையில் கண்கள் கைதாகி விடுகின்றன. வார்த்தைகள் எழுவதில்லை. சிந்தனை ஸ்தம்பிக்கின்றது. எதுவும் நமக்கு 'அப்போது' தெரியாது. அவரை எப்படி வார்த்தைகளால் வர்ணிப்பது என்பதும் விளக்குவது என்பதும் நமக்கு விளங்காது. சத்தியம் எனும் பரசிவத்தை விளக்கிய நமது தூய மூதாதையர்களின் அனுபவத்திலிருந்து நாம் அறிவது இதைத்தான். ஸாம வேதம்.*

*இந்த ஆன்மா இருக்கிறது பாருங்கள், அதுதான் எல்லாவற்றுக்கும் ஒரே எஜமானன். அனைத்துக்குமான ஒரே ராஜா. சக்கர அச்சாணியிலிருந்து அதன் விளிம்பை இணைக்கும் பல கம்பிகள் எப்படிப் பொருத்தப்பட்டுள்ளனவோ அதேபோலவே இங்குள்ள அனைத்தும், அனைத்து கடவுளர்களும், அனைத்து உலகங்களும், பிரபஞ்சங்களும், அவற்றின் உயிர்ப்பும், ஆன்மாவுடன் பொருத்தப் பட்டுள்ளன. ஆகவே அனைத்தும் தெரியும், ஆன்மாவுக்கு. சுக்ல யஜுர் வேதம்.*

*அவன், அந்த நிஜ 'சுயம்', நான் கிடையாது, நான் கிடையாது. அவன் கிரகித்துக் கொள்ள முடியாதவன். விளங்கிக் கொள்ள இயலாதவன். அழிக்க முடியாதவன், ஏனென்றால் அவனை அழிக்க முடியாது. அவன் எதனையும் சாராதவன், ஏனென்றால் அவன்*

எதையும் கெட்டியாய் இறுக்கிப் பிடித்துக் கொள்வதில்லை. அவன் கட்டுக்குள் வைக்கப்படாதவன். அவன் துன்பப்படுவதில்லை. அவன் காயப்படுவதில்லை. *சுக்ல யஜுர் வேதம்.*

ருத்ரன். தியாகக் கடவுள். இளைப்பாறுதல் தரும் விருட்சம். அவனிடம் எங்களுக்கு ஆனந்தத்தையும் ஆயுளாரோக்கியத்தையும் கொடுக்குமாறு வேண்டுகின்றோம். கதிரவனைப் போலவே அவனும் எல்லைகளின்றி ஜொலிக்கின்றான். தங்கத்தைப் போல தகதகக்கின்றான். கடவுள்களிலேயே சிறந்தவனாய் அமைந்து, கருணைக் கடலாய் ஆனந்தம் தருகின்றான். *ரிக் வேதம்.*

சூரியனுக்குள் தெரிந்த 'தங்க மகன்', இதோ இப்போது தங்கத் தாடியும் தங்கக் கேசமும் கொண்டு தரிசனம் தருகின்றான். பட்டை தீட்டப்பட்ட ஆபரணமாய், அனைத்தையும்விட கணக்கிட முடியாத அளவுக்கு பொலிவுடன் தோன்றுகின்றான். விரல்நுனி வரை அவன் மினுமினுப்பு பொங்குகின்றது. தூய தாமரை போல அவனுடைய நயனங்கள் விளங்குகின்றன. அவன் பெயர், உயர்ந்தவன். அனைத்து பாவ-நாசங்களிலிருந்தும் விலக்கப் பட்டவன் அவன். தூயவன். இதனை உள்ளது உள்ளபடி யார் அறிகின்றார்களோ அவர்கள் எல்லா பாவங்களிலிருந்தும் விலகி விடுதலைப் பேறினை அடைந்து விடுகின்றார். *ஸாம வேதம்.*

சக்திகள் அனைத்தும் கொண்டு ஆக்கப்படும் இறைவனின் உடல், நம்முடைய உடலுடன் ஒப்பிடக் கூடிய ஒன்று அல்ல. அவ்வுடலின் ஈர்ப்பே, அதில் துளியும் இல்லாத ஆணவத்தினால் தான். தலை இத்யாதிகள் கொண்டு அமைக்கப்படும் சிவனாரின் திருவுருவம் ஐந்து மந்திரங்களைக் கொண்டு ஆக்கப்பட்டதாகும். நம்மைப்போல ஆணவம் கொண்டு அல்ல. ஈஸா, தத்புருஷா, அகோரா, வாமா மற்றும் அஜா ஆகிய அவரது ஐந்து குணங்களைக் குறிக்கும் மந்திரங்களால் ஆக்கப்பட்ட தெய்வீகம், சிவவுருவம். *மிருகேந்திர ஆகமம்.*

ஹரி, பிரம்மா மற்றும் ருத்ரன் ஆகிய கடவுளர்கள், சிவனே. பொருள் சார்ந்து இயங்கும் இவ்வுலகத்துக்கான விதையே அவர்தான். நம்முள்ளேயே அத்தனை அருகாமையில் இருந்தும் அண்ட முடியாத தூரத்தில் வசிக்கிறார் அவர். வயதற்ற

*தீர்க்காயுசைத் தரும் தெய்வீகக் கரும்புச்சாறு அவர். அவர் ஜீவனுக்கு மிக அருகாமையில் நின்று கொண்டிருக்கிறார். திருமந்திரம்.*

*காற்றுக்குள் உள்ள சலனமாய், கரும்புக்குள்ளான சர்க்கரையாய், பாலுக்குள் நிரவியுள்ள வெண்ணெயாய், பழத்தின் பிரிக்க முடியாத அதன் சாறாய், மலர்களுக்குள் உறையும் நறுமணமாய், விலக்க முடியா நீக்கமற்ற வஸ்துவாய் அனைத்திலும் உள்ளார் கடவுள். அவர் படைக்கிறார். அவர் காக்கின்றார். அவர் அழிக்கிறார். அவர் தடைகளையும் கஷ்டங்களையும் தருகிறார். இத்தனையும் செய்யும் அவரே - அனைத்திலும் ஊடுருவி நிறைந்துள்ள சிவனே - முக்தியையும் அறிவிக்கின்றார். திருமந்திரம்.*

*பிரகாசிக்கும் புதுத்தங்கத்தால் ஆக்கப்பட்ட தோடு ஒரு காதில் மின்னுகின்றது. சுருள்சுருளான சங்கினால் ஆக்கப்பட்ட ஆபரணம் மறுகாதில் ஊசலாடுகின்றது. பிரார்த்தனைகளின் நாயகமான அவர், வேதங்களின் இனிமையை ஒருபக்கம் ஓதுகின்றார். மறுபக்கம் அவர் மிருதுவாய் புன்னகைக்கின்றார். அவரது தலையின் ஒருபாதியில், மடிப்பு மடிப்பாய் அமைந்திருக்கும் அவருடைய கேசத்தை நறுமணம் கமழும் கொன்றை மலர்கள் அலங்கரித்துள்ளன. மறுபாதையில் பெண்களுக்கே உரித்தான சுருள்கேசம். அந்த ஒருபாதி அவரது இயல்பு... மறுபாதி அவளின் இயல்பு. இவையிரண்டும் சேர்ந்ததுதான் அவருடைய அழகின் சாறு. திருமுறை.*

*மடிப்புகளால் முடியப்பட்ட கொண்டையில் அடக்கப்பட்டுள்ள கங்கா நதி. முன்நெற்றியில் திகழும் சிவனுடைய ஞானக்கண்ணின் மினுமினுப்பு. புயல் காற்றாய் சுழன்றடிக்கும் அவரது சுவாசம். துல்லிய மாசுமருவற்ற வானத்தைப் போல துடிப்பிலிருக்கும் சிவனாரின் தூய திருவுருவம். பூமியின் அடிவரை நீளும் அந்தப் புனிதப் பாதங்கள். பீடத்து அஸ்திவாரமாய் திகழும் களங்கமற்ற சிவனாரின் இதயம். தாங்களாக உரக்க ஓதிக்கொண்டிருக்கும் நான்மறை வேதங்கள். வலக்கரம் அபயஹஸ்தம் தந்து புகலிடத்தையும் இடக்கரம் ஆசிகளையும் அள்ளி வழங்கிக் கொண்டிருக்கும். அவரது உடுக்கை ஓசையின் நாதம் காற்று முழுவதையும் நிரப்பி பேரானந்தத்தை பரப்பிக் கொண்டிருக்கும்.*

*இத்தகையதோர் தெய்வீக சூழலிலும் நிலையிலும் இடம்பெறும், சிவபெருமானின் திருநடனம். தாயுமானவர்.*

*சிவனுடைய திருப்பாதங்களிலிருந்து கசியும் அன்பு, பாவங்களையெல்லாம் துடைத்தெறிந்துவிடும். அவருடைய திருப்பாத கருணை, குழப்பமற்ற சித்தத்தெளிவினை உங்களுக்கு சித்திக்க வைக்கும். சிவபெருமானின் பாத தரிசனம், இதயத்தினை திருப்தியில் ஊறி அதில் நிரந்தரமாய் திளைக்கச் செய்யும். அத்திருப்பாதங்களின் கருணையே, நிஜமான பிரக்ஞை - உணர்வு. ஏனைய அனைத்து உணர்வுகளுமே, மாயை. நற்சிந்தனை.*

# கணேச - கார்த்திகேய



தர்மத்தின் கடவுளர்கள்

*அவருடைய அங்க அவயத்தில் அனைத்து கடவுளர்களும் அடங்கியுள்ளார்கள்.*
*முப்பத்து முக்கோடி தேவர்களும் அந்த தெய்வீக அங்கத்தில் இருக்கிறார்கள்.*
*இத்தகைய ஆதாரம் யாராயிருக்கும் என்று சொல்லுங்கள்?*

***-அதர்வண வேதம்.***

# சிவனைத் தவிர மற்ற கடவுளர்கள் இருக்கின்றார்களா?

## ஸ்லோகம் 21

*அனைத்துக்கும் மூலமான முதற்கடவுள் சிவபெருமான், மற்ற எல்லா கடவுளர்களையும் படைத்தவராகின்றார். குறிப்பிட்டதொரு சக்தியையும் அதற்காக இருக்க வேண்டிய நியமனத்தையும் ஒவ்வொரு கடவுளருக்கும் அவர் நிர்ணயித்துள்ளார். இத்தனை யிருந்தாலும் அவரே அனைத்து கடவுள்களிலும் பரவி நிரவி இருக்கின்றார். ஒவ்வொருவரும் தனித்தனியானவர்களே... ஆனால் தனியாக பிரிக்க முடியாதவர்கள். ஆழமான ஒரு கட்டத்தில் இப்படியெல்லாம் பலவகையாய் எதுவும் இருப்பது கிடையாது - அவர் ஒருவரைத் தவிர. ஓம்.*

## விளக்கம்

சிவபெருமான் மட்டுமே பிரதான மற்றும் மிகவுயர்ந்த ஒரே இருப்பு. கடவுளர்களுக்கெல்லாம் கடவுள்.

அவர் மட்டுமே எங்கும் பரவியிருக்கின்றார்.

அவரன்றி, அவரது அதிகாரமின்றி, ஓர் அணு அசையாது.

கணேச பெருமான், கார்த்திகேய முருகன், இந்திரன், அக்கினி மற்றும் இந்துமதத்தின் *330* கோடானு கோடி தேவர்களும், நம்மைப் போலவேதான் சிவபெருமானால் படைக்கப்பட்டவர்கள்.

எதற்காக? ஒரு குறிப்பிட்ட இலக்கினை முடிப்பதற்காகவும், அதன் நிறைவில் இறைவனுடன் இறைவனாய் ஐக்கியமாகும் பேரானந்தத்தை அனுபவிப்பதற்காகவும்.

கடவுளர்கள் என்பது, காலகாலமாய் விருத்தியடைந்து வரும் ஒரு பரிணாம வளர்ச்சியின் ஆன்மாக்களாகும்.

ஆகவே, இந்த ஆன்மாக்கள், மிகவும் முதியவை. முதிர்ந்தவை. சிவலோகத்தில் வாழும் உயர்ந்த மற்றும் அளவற்ற பேரானந்தங்கள்.

ஆன்மா என்பது ஆணும் கிடையாது. பெண்ணும் கிடையாது. அரூபம். ஆயினும் ஆண் கடவுள் என்றும் பெண் கடவுள் என்றும் வரையறுக்கத் தகுந்தவை.

தேவர்கள், கருணைக் கடவுளர்கள் ஆவர். ஜோதி ரூபங்கள். 'அந்தர்' என்பது அடியாழம். நம் மனத்தின் அடியாழத்தில் ஆன்மா குடிகொண்டுள்ளது. அதுவே தேவலோகம். சிவலோகம். இந்த அந்தர்லோகத்தின் உயர் ஸ்தானத்தில் தேவர்கள் எனும் திவ்ய ஜோதி திகழ்கின்றது.

அவர்கள் சிவலோகத்தில் இருந்துக்கொண்டே, ஒரு ஜீவன் தனது ஒவ்வொரு பிறப்பிலும் மேற்கொண்டு முதிர்ச்சியடைந்து முன்னேறி சிறப்பாய் இறைவனுடன் இரண்டறக் கலக்கத் தேவையான அனைத்து வழிகாட்டுதல்களையும் தந்து கொண்டிருப்பார்கள்.

மனதில் இருளடைந்த ராட்சதப் பிறப்புகளே, அசுரர்கள் ஆகின்றார்கள். அந்தர்லோகத்தின் கீழ்ஸ்தானமான நரகத்தில், தற்காலிகமாய் பிறக்கின்றார்கள் அசுரர்கள்.

தேவர்களும் சரி, அசுரர்களும் சரி, மீண்டும் மீண்டும் பிறப்பெடுக்கும் சக்கரத்தில் வழக்கமாய் ஆட்படுகின்றார்கள்.

சைவர்களாகிய நாம் சிவனையும் கடவுள்களையுமே பூஜிக்கின்றோம். நாம் தேவர்களை வழிபடுவது கிடையாது... அசுரர்களின் தயவினையும் நாடுவது கிடையாது.

முருகன், விநாயகன் உட்பட்ட அனைத்து பிற கடவுள்கள், கோடானு கோடி தேவர்கள், அசுரர்கள் என அனைவரும் வழிபடுவது சிவனையே.

**வேதங்கள் விளக்குகின்றன:**

''சிவபெருமானிடமிருந்தே பலவகைப்பட்ட கடவுள்கள் தோன்றியுள்ளார்கள். பால்வெளிகள், மனிதர்கள், ஆடுகள், பறவைகள், உள்ளிழுக்கும் மூச்சு, வெளிவிடும் மூச்சு, அரிசி, கோதுமை, நம்பிக்கை, சத்தியம், கற்பையொத்த தூய்மை, சட்டம் என எல்லாமும் பிறக்கின்றன.'' ஓம் நமசிவாய.



*பிரம்மா, இந்திரன், விஷ்ணு, தேவி, முருகன் மற்றும் பிற தேவர்கள் அனைவரும், சிவனை, அந்த ஒரே முதன்மைக் கடவுளை, அனைத்துக்கும் தலைவனாக விளங்கும் படைப்பாளியை, துதிபாடி வழிபடக் கூடியுள்ளார்கள்.*

*சிவனின் இருப்பினை அவரது கை மட்டும் இங்கு குறிக்கின்றது.*

*இந்திரனின் யானை, துர்க்கையின் சிங்கம்,*
*போன்ற வாகனங்கள் அனைத்தும் அருகில் காத்திருக்கின்றன.*

# கணேசரின் இயல்புகள் என்னென்ன?

## ஸ்லோகம் 22

*கலை மற்றும் அறிவியலின் நாயகனான கணேசர், யானை முகம் கொண்ட கடவுள். விக்கினங்களைத் தகர்த்தெறியும் தெய்வம். தடைகளை அகற்றி தர்மத்தைக் காப்பவர். எது சரியோ எது தர்மமோ அதனை மட்டுமே சரியென சொல்லி காக்கும் சக்தியே கணபதி. மூவுலகங்களிலும் சிவபெருமான் விதித்துள்ள கர்மங்களைக் காக்கும், அவருடைய திருவுருவ உவமை. ஓம்.*

## விளக்கம்

அனைத்து கடவுளர்களின் ஒரே சக்தி, சிவபெருமான்.

இவரே சொர்க்கத்தையும் பற்பல பூமிகளையும் படைத்தார்.

கணேசக் கடவுளையும் படைத்தார்.

சிவபெருமான் படைத்திட்ட சொர்க்கத்திலும் பூமிகளிலும் இடம்பெறும் கர்மங்கள் மற்றும் தர்மங்களில் காணப்படும் சிக்கல்களைக் களைவதற்காக பிள்ளையார் படைக்கப்பட்டார்.

கோள்கள் மற்றும் உலகங்களுக்கு இடையே சுமூகமான ஒட்டுறவு நிலைக்க வகைசெய்யும் ஓர் ஆளுநராக பணியாற்ற உருவானவரே கணேசர்.

அவரது ஞானம் எல்லையற்றது. அவரது தீர்ப்பு உடனடியானது.

நரகம் எனும் கடும் இக்கட்டிலிருந்து மிருதுவாய் விடுதலையடைய உதவுபவர்கள், கணேசர் மற்றும் அவருடைய கணங்களைத் தவிர வேறு ஒருவர் அல்ல.

பாவக்கணக்குகள் எல்லாம் கழிக்கப்பட்ட ஆன்மாவை தர்மப் பாதையில் மிகச்சரியாய் திருப்பி விட்டு, கண்ணும் கருத்துமாய்

வழிகாட்டி, ஆன்ம உயர் தட்டுகளுக்குக் கொண்டு போய் இறக்கி விட்டு ஞானம் புகட்டி, இறை ஐக்கியத்தை சித்திக்க வைக்கிறார் சித்தி விநாயகர்.

எல்லைகளற்ற ஞானக்கடல், கணபதி. அன்பு எனும் உணர்வின் திருஉருவகம். இனிமையான அனைத்திலும் கரைபுரளும் உற்சாகம். துதிப்பாடல்களில் உளம் மகிழும் அவதாரம்.

தன்னை வணங்குவதற்கு முன்னதாகவே வணங்கப்பட வேண்டிய என் தலைமகன் பிள்ளையார் என்று சிவபெருமானாலேயே அறிவிக்கப்பட்ட கடவுள்.

பிள்ளையார்தான், கர்மங்களின் கடவுள். ஆகவே எந்தக் காரியத்தை செய்யுமுன்னும் அது தடையின்றி நடந்தேற முதற்கண் வணங்கப்பட வேண்டிய கடவுள்.

அனைத்து மகாதேவர்களும், சிறு கடவுளர்களும், கடவுள் நம்பிக்கை உள்ள எவரும் என யாராகினும், முக்கியமான எந்தவொரு முனைப்பும் வெற்றியடைய வேண்டுமானால் தவறாமல் கணேசரை வழிபட்டு விட்டுத்தான் அந்த வேலையை ஆரம்பிக்க வேண்டும்.

இப்படி செய்யாதவர்கள், அவரவர்களே தடைகளை எதிர்கொள்ள வேண்டிய சூழ்நிலையில் வைக்கப்படுவார்கள்.

ஒருவர் இறுதியாய் அடையவல்ல இலக்கின் வடிவத்தை நிர்ணயிப்பது, கணேச வழிபாடே.

**திருமந்திரம் சொல்கின்றது:**

‘‘ஐங்கரன் அவர். தந்தங்கள் முன்னால் வளைந்து வரும் யானை முகம் கொண்டவர். மூன்றாம் பிறையின் வடிவு கொண்ட சிவ புதல்வன். ஞானக்கொழுந்து. நெஞ்சு முழுக்க ஞானவொளி ததும்ப அவருடைய பாதங்களில் நான் நமஸ்கரிக்கிறேன்.’’ ஓம் நமசிவாய.



*எடுத்த காரியம் (கர்மங்கள்) வெற்றி பெற அருளும் கடவுள்.*
*தடைகளை அகற்றி ஆசி வழங்கும் கடவுளாகின்றார் கணேசர்.*

*நாம் முதிர்ச்சியடைய உதவுகின்றன தடைகள்.*
*ஆகவே அவரேகூட முன்வந்து தன் கை சுருக்கினால்*
*நம்முடைய பாதையில் தடைகளை வைப்பதுண்டு.*

*உடைந்த தந்தம் தியாகத்தையும், தியாகங்களால் அடையவல்ல ஆன்மீகக் கனியினை*
*அவரது கையிலிருக்கும் மாங்கனியும் காட்டுகின்றன.*

*சிவந்த நிறத்தில் தோன்றும் விஜய கணபதி, வெற்றிகளை அருளும் திருவுருவம்.*

# விநாயகப் பெருமானின் பிரத்தியேகக் கடமைகள் என்னென்ன?

## ஸ்லோகம் 23

*விக்கினங்களின் கடவுளாய் உள்ளார் விநாயகர். அவரிடமுள்ள சுருக்கு மற்றும் தார்க்குச்சி ஆகியவவை அவரது இருவேறு மாபெரும் சக்திகளைக் குறிக்கின்றன. நமது வாழ்க்கையின் நிகழ்வுகளை பாதுகாப்பாய் நடத்த அவரால் முடியும் என்பதையும், அவற்றை ஊக்கப்படுத்தி முன்நோக்கி நகர்த்த வைக்கவும் அவரால் முடியும் என்பதையும் இவை குறிக்கின்றன. ஆகவே, எந்தவொரு காரியத்தையும் அல்லது வழிபாட்டையும் ஆரம்பிக்கும்முன் அவரது கருணையையும் சக்தியையும் நாம் எழுப்பி வேண்டுகின்றோம். ஓம்.*

## விளக்கம்

காலத்தின் கடவுள் கணபதி. ஞானத்தின் கடவுள் கணேசன்.

மூலாதார சக்கரம் நம்முடைய உயிர்க்குறியில் உள்ளது. அங்கு வல்லமையுடன் வீற்றிருக்கும் கடவுள். மேல் சக்கரம் மற்றும் கீழ் சக்கரம் ஆகிய இரண்டுக்கும் நடுவில் சமநிலையுடன் கொலு வீற்றிருப்பார்.

புலனின் ஆதிக்கத்தில் வாழும் ஜீவன்களை ஸ்திரமாய் சமநிலை தவறாமல் இருக்க உதவும் ஒரே தெய்வம்.

கடந்த காலத்து மற்றும் எதிர்காலத்து அண்டசராசரத்தை உருவாக்கிட இறைமை போட்டு வைத்துள்ள திட்டம், கட்டு மானத் தீர்வு போன்ற அனைத்தையும் கைகளில் தாங்கியுள்ளார் விநாயகர்.

*நன்மைகள் மட்டுமே கணேசப் பெருமானிடமிருந்து கிடைக்கும். யானை வடிவம் கொண்டு தன்னை ஏனைய கடவுளர்களிடமிருந்து வித்தியாசப்படுத்திக் கொள்கின்றார் இவர்.*

*தன்னை நோக்கி கடும்தவமிருக்கும் பக்தர்களின் துரதிர்ஷ்டங்களைக் களைந்து தருபவர்.*

*காலத்தின் முடிவுக்கு உட்பட்டு, நமக்குள்ளிருந்தே நம்மை நல்வழி நோக்கி நடத்திச் செல்பவர்.*

*முக்கியமான எக்காரியத்தையும் துவங்குமுன், வழியில் எதிர்ப்படும் அனைத்து தடைகளையும் களைந்து தரும்படி தாழ்ந்து யாசித்து அவரிடம் வேண்டிக் கொள்கிறோம். அவர் மனம் வைத்தால், தடைகள் தவிடுபொடியாகின்றன.*

*ஒழுங்கற்ற வாழ்க்கை முறையால் நாம் நம்மையே காயப்படுத்திக் கொள்வதிலிருந்தும், நம் தகுதிக்கு ஒவ்வாத வேண்டுதலால் அவதிப்படுவதிலிருந்தும், நன்றாய் சிந்தித்து முடிவெடுக்காமல் ஒரு காரியத்தை துவங்கிப் படும் அவஸ்தைகளிலிருந்தும், விக்கினங்களை அறுத்தெறியும் விநாயகப் பெருமான் நம்மைக் காப்பாற்றி அருள்கின்றார்.*

*அவரிடம் நாம் பிரார்த்தித்து ஒரு வேண்டுகோளை வைப்பதற்கு முன்னால், அந்த வேண்டுகோளுக்கு ஏற்ற முடிவு என அவர் எதனை எடுப்பாரோ அந்த முடிவையே நாம் நமது அத்தனை சக்திகளாலும் முயன்று அடைந்து விட வேண்டும் என்று எதிர்பார்க்கிறார் கணபதி.*

**ஆகமங்கள் அறிவிக்கின்றன:**

*‘‘சத்தியப் பாதையில் நடந்து தனக்கிடப்பட்ட கடமைகளைச் செய்து வரும் தேவர்கள், கடவுளின் கைகளில் இருக்கிறார்கள்.’’ ஓம் நமசிவாய.*



கையில் தயாராய் வைத்துள்ள வில்லிலிருந்து, தன்னுடைய சுருண்ட தும்பிக்கையால் அம்பெய்தி, தனது பக்தர்களைக் கொல்ல வரும் கருயானை அசுரனிடமிருந்து அவர்களைக் காக்கின்றார் கணேசர்.

அந்த கருயானையே விநாயகரின் மூஞ்சூறு வாகனமாகின்றது.

இக்கதை, பிள்ளையார் நம்மை எப்போதும் காக்கின்றார் என்பதை காட்டுகின்றது.

# கார்த்திகேயக் கடவுளின் இயல்பு என்ன?

## ஸ்லோகம் 24

*கார்த்திகேயனே முருகக்கடவுள். முதற்குரு. குண்டலினி யோகத்தின் தந்தை. சிவனின் சித்தத்திலிருந்து பிறந்தவர். இவருடைய ஓட்டமான சக்தி, ஆன்மீக அறிதலை தட்டியெழுப்பி, ஆன்மாவை உணர வைத்து, சிவபாதத்தை நோக்கிய பிரயாணத்தில் ஆன்மா விரைவாய் முதிர்ந்து வெற்றிபெற அதனை உந்துகின்றது. ஓம்.*

## விளக்கம்

புத்திக் கூர்மை என்பது கடல். இந்த அளவற்ற சிந்தனாசக்தியின் கடவுள், கார்த்திகேயன்.

சிந்தனையிலேயே கோள் விட்டு கோள் பறக்கும் தெய்வமாகின்றான் கார்த்திகேயன்.

இவனை தளைகளிலிருந்து உடனடி விடுதலை தரும் கடவுள் என்று தாராளமாய் சொல்லலாம். கஷ்டத்தில் பரிதவிக்கும் பக்தனின் கூப்பிட்ட குரலுக்கு ஓடிவருவான் கார்த்திகேயன்.

புத்தியின் ராஜா. ஞானத்தின் திறவுகோல். தெய்வீக சக்தியின் குழந்தை உருவகம். சமயத்தின் தத்துவப் பாதையில் நாம் சரியாய் பிரயாணிக்கத் தேவையான சக்தியை அள்ளித் தரும் தெய்வம்.

மணிப்பூர சக்கரம் நமது நாபியில் உள்ளது. அதில் இளவரசராய் வீற்றிருக்கிறான் கார்த்திகேயப் பெருமான். மனித குலத்துக்கு ஆசிகளை வழங்கும் இந்த செஞ்சிவப்பு சிவமகன், ஆழ்மனம் நோக்கி பிரயாணிக்க பயிற்சிகளாலும் யோகக்கலைகளாலும் நாம் முயற்சிகளில் இறங்கும்போது, துவளாமல் நாம் முன்னேற தோள் தருகிறான். கரை சேர்க்கின்றான்.

*யோகப் பாடங்கள் கார்த்திகேயனைத் தொழுத பிறகுதான் ஆரம்பிக்கப்படுகின்றன.*

*சரவணப் பொய்கை, ஓர் அமைதிக்கடல். சாந்தத்தின் இருப்பிடம். ஒடுங்கிய மனத்தின் ஒருநிலைப்பட்ட பிரதேசம். தியானத்தில் பூட்டப்பட்ட யோகியொருத்தனின் சித்தம், சரவணனைப் போல ஒருநிலைப்பட்டு சமாதியாகின்றது.*

*நம் ஒவ்வொருவருக்குள்ளும் இருக்கும் குண்டலினி சக்தி குமரக்கடவுளாலேயே இருப்பில் வைக்கப்படுகின்றது... கட்டுப்படுத்தப்படுகின்றது. ஆன்மாவை உணர்தலின் முதல்படி குண்டலினி சக்தியை எழுப்புவதுதான் ஆகையால், இதன் அதிபதியான கந்தக் கடவுள் அனைத்து சந்நியாசிகளின் செல்லக் கடவுளாய் விளங்குகின்றார்.*

*தென்னாட்டில் முருகப்பெருமான் என்று அழகின் வெளிப்பாடாய் கொண்டாடப்படும் கார்த்திகேயன், தேவர் படையின் தளபதியாவார். இதனை, நம்முள்ளேயே இருக்கும் தேவ குணங்களின் சிரத்தையான வழிகாட்டி என்று நாம் கொள்ள வேண்டும்.*

*சத்தியத்தை நிலைநாட்ட பயமின்றி போரிடும் வீரன். ஆகையால் இவன் துணை ஆன்மாவுக்கு என்றென்றும் வேண்டும்.*

**வேதங்கள் சொல்கின்றன:**

*''பாவங்கள் எல்லாம் கரைக்கப்பட்டுவிட்ட ஜீவனுக்கு பாவக்கடலைக் கடந்து விட்ட கரையை காட்டுகின்றான் கந்தகுமாரன். இதனை சித்திக்க வைக்கும் குமர வடிவத்தை, கந்தன் என்கின்றார்கள்.'' ஓம் நமசிவாய.*



ஆறுமுகமும், ஆறு ஆயுதங்களும் கொண்ட சிவனின் குமாரன், அறியாமை இருளையும் பாவ இருளையும் அகற்ற போரிடும் போர் வீரனாய் திகழ்வதால், பற்பல ஆயுதங்களைக் கையாள்பவனாய் விளங்குகின்றான்.

சைவ சமயத்தின் பெருமையை தகதக என்று பறைசாற்றும் மயில் இவன் வாகனம்.

# கார்த்திகேயனின் வேல் உணர்த்துவது எதை?

## ஸ்லோகம் 25

*கந்தன் கை வேலாயுதம், சாதக பாதக வேற்றுமைகளை பிரித்துணர்வதையும், உள்ளார்ந்த ஆன்மீக ஜோதியையும் குறிக்கும் ஸ்தூலப் பொருளாகும். அதன் குத்தும் இலை போன்ற அமைப்பு, அகலமாகவும் நீளமாகவும் கூர்மையாகவும் அமைந்திருக்கும். நமது அறிதல் அல்லது ஞானம், விசாலமானதாகவும் ஆழமானதாகவும் ஊடுருவி உட்செல்லத்தக்கதாகவும் இருக்க வேண்டும் என்பதையே ஞானக்கடவுளின் ஆயுதம் காட்டுகின்றது. ஓம் நமசிவாய.*

## விளக்கம்

குழப்பங்களை அகற்றித் தரும் திருஆயுதம், வேலாயுதம்.

வேலின் சக்தி சிறந்தது, உயர்ந்தது. சத்தியத்தை மட்டுமே கடைப் பிடிப்பதன் சக்தி அது. அசத்தியத்தை கைவிட்டுவிட்டு தர்ம வழியில் செல்லும் சிக்கலான பயணத்துக்கு சக்தி தரும் தெய்வீகமே வேல்.

புனித வேல், கார்த்திகேயன் எறியும்போது அது குறிக்கப்பட்ட இலக்கினை சரியாய் சென்றடைந்து பிறகு அதுவாகவே கந்தன் கைக்கு வந்து சேர்ந்து விடும்.

தர்மம் நம்முள் நிலைக்கும்போது அதற்கான பரிசினை அள்ளித்தரும் குணமுடைய புனித வேல், தர்ம கட்டுப்பாடுகளை நாம் தகர்க்கும்போது சீறியெழுந்து விடும். அப்போது இரக்கமின்றி ஒரு நாகப்பாம்பின் வீச்சோடு சீறிவந்து அதர்ம வழியில் நாம் எடுக்கும் ஒவ்வொரு முயற்சியையும் நாசப்படுத்திவிடும்.

ஆகவே, அறியாமை எனும் இருளிலிருந்து ஒரே சத்தியமான ஜோதி நோக்கி நம்மைத் திருப்பி விடும் ஆயுதமே, புனித வேல்.

ஆணவம், அகம்பாவம் ஆகிய கொல்லும் குணங்களிலிருந்து விடுவித்து நம்மை அடியவனாய் மாற்றி ஆட்கொள்ளும் தெய்வீகமே, புண்ணிய வேல்.

பாவக்கடலான நம்மை அந்த சாக்கடையிலிருந்து விலக்கி, தவவலிமை கூடும்போது பரிசுத்தனாக்கிவிடும் கருணையே கந்தவேல்.

குண்டலினி சக்தி, ஒரு நாகப்பாம்பின் சத்தியமே ஆகும். ஆகவே, அதன் இயல்போடு இயங்கும் முருகவேல், இறைமையான குண்டலினி சக்தியாகவே அமைந்துள்ளது.

தவங்கள், தியானங்கள், அர்ப்பணிப்பான பக்தி போன்ற உண்மையான ஆன்மீக வழிகளால் கந்தனுடைய கருணையை நாம் ஆர்வமாய் வேண்டி யாசிக்கும்போது, கருணைக்கடவுள் தன் கை வேலை வான்வீதியில் விட்டெறிவான்.

இவ்விண்வெளியே நம் சிந்தை.

சீறிப்பாயும் வேல், வான்வீதியின், அதாவது நம் சிந்தையின், இனிமையற்ற ஓசைகளையும், கண்கூச வைக்கும் வண்ணங்களையும், அழகற்ற வடிவங்களையும் அப்படியே அடக்கித் தந்துவிடும்.

நம் சிந்தையின் ஆரவாரங்கள் அனைத்தும் அப்போது அடங்கி விட, இதுநாள் வரை அதனை கவ்வியிருந்த இருள் மறையும்.

ஞானம் பிறக்கும்.

ஞான ஜோதியும், அதன் மெல்லிய இனிய இசையும், அழகு வண்ணமும், தாழ்திறக்கும்.

அரசர்களின் அரசன், கந்தகுமாரன்.

அவர்கள் கை செங்கோலின் சத்தியம், கந்தனே.

லௌகீக வடிவத்திலேயே அவர் தோற்றம் அமைந்திருந்தாலும், வழிகாட்டி வழிநடத்துவதும், அருள்வதும் குகனே.

ஒரு அரசரின் வெண்கொற்றக் குடையை கந்தக்கடவுளின் வேல் அலங்கரிக்கும்போது, அங்கு நீதி நிலைக்கின்றது. நாட்டு மக்களின் சிந்தைகளில் சத்தியமே தழைத்தோங்குகின்றது. மழை போதுமான அளவு கொட்ட பயிர்கள் செழிக்கின்றன. எல்லாம், மனம் உட்பட, நிறைகின்றன.

## திருமுறை சொல்கின்றது:

*''பயம் எனும் இருளில், முருகனின் ஆறுமுகம் மட்டுமே ஒளிர்ந்து தைரியமூட்டுகின்றது. கட்டுக்கடங்காச் சூழலில் அகப்பட்டு மூச்சுத் திணறும்போது, 'வேலுண்டு வினையில்லை' என்று அபயஹஸ்தம் தருவது அவர் கை வேல் மட்டுமே.''* ஓம் நமசிவாய.



*கந்தன் கை வேல், சக்திமிகும் பாதுகாப்பாகும்.*

*யோகக் கடவுளாய் விளங்கும் முருகன் தனது அதிகாரத்தை நிறைவேற்றவும், தேவர்கள் படையினை அதன் தளபதியாய் அவர் வழிநடத்தி சென்று வெல்லவும் உதவுகின்றது, சக்திதேவியே முருகனுக்கு அளித்திட்ட சக்திவேல்.*

*சைவ பக்தர்களுக்கு துயரங்களையும் இடையூறுகளையும் தந்து துன்புறுத்துகின்றான் ஓர் அரக்கன்... அவன் கொட்டத்தை அடக்க இடைபுகுகின்றது வேல்.*

கடவுளர்களின் ஆரம்பப்புள்ளியும் துவக்கமுமானவர். அனைவரின் தலைவர். ருத்ரன். தன்னையுணர்ந்த ஞானி. ஆதிகாலத்தில் ஆரம்பக்கருவினை விதைத்தவன். அவன், நமக்கு தூய சிந்தையை சித்திக்க வைக்கட்டும். *கிருஷ்ண யஜுர் வேதம்.*

சுயம்புவாக உதித்த தெய்வங்கள், மிகப்பெரியவர்கள். அனைத்துக்கும் அப்பாற்பட்டவர்கள். ஆறுதல் தரும் ஆதாரத்தின் முதுகெலும்பு தெய்வங்களே என்று நம்புகின்றார்கள் பக்தர்கள். *அதர்வண வேதம்.*

அந்த ஒரே சக்தியுடன், ஏனைய அனைத்து தெய்வங்களும், ஒரு மரத்தின் நடுத்தண்டுடன் ஏனைய கிளைகள் அனைத்தும் இருப்பதைப் போல ஒட்டிக் கொண்டிருக்கிறார்கள். தங்களது கரங்கள், பாதங்கள், கண்கள், செவிகள், வார்த்தைகள் என அனைத்தி னாலும் புகழ்மாலைகளை சூட்டிக் கொண்டேயிருக்கின்றார்கள். தங்களையே தியாகமாக்கி அந்த ஒரே மாசக்தியினை நிறுத்தாமல் பாடிக் கொண்டேயிருக்கின்றார்கள். சொல்லுங்கள் - அந்த தனிப்பெரும்கருணை யாராயிருக்க முடியும்? *அதர்வண வேதம்.*

‘‘அக்னி, வாயு, ஆதித்யா எனும் ப்ரஜாபதி (காலம்), ப்ராணன், உணவு, ப்ரம்மா, ருத்ரன், விஷ்ணு. இவர்களில் தியானத்தில் மூழ்கும் ஒருவர் ஒரு தெய்வத்தை சார்கிறார். மற்றவர், மற்றொரு தெய்வத்தை. இன்னொருவர் வேறொரு தெய்வத்தை. தயவுசெய்து சொல்லுங்கள்: இவர்களில் யார் அதிகம் போற்றப்படுகிறார்? யாரது?’’ பிறகு அவர் சொன்னார்: ‘‘இந்த அனைவருமே, ஒரே, உயர்ந்த, அழியாத, சத்திய சக்தியான பிரம்மத்திலிருந்து உதித்தவர்களே. ஆகவே ஒன்றுக்கு ஒன்று சமானம்.’’ *கிருஷ்ண யஜுர் வேதம்.*

தெய்வத்துக்குள் இயக்கம் கிடையாது... இயங்கும் உறுப்புகளும் கிடையாது. அவருக்கு இணையான அல்லது அவரை விடவும் உயர்ந்த சக்தியினை யாரும் கண்டிலர். அவரது ஒப்புயர்வற்ற சக்தி பற்பல வகைகளில் காணக்கிடைக்கின்றது. ஓயாது உழைப்பதும் பரந்த பார்வையும், அவரது உடன்பிறந்த இயற்கை குணங்கள். *கிருஷ்ண யஜுர் வேதம்.*

எத்தனை கொட்டிக்கொடுத்தாலும் உன்னை நான் இழக்க மாட்டேன். ஓ, இந்திரா, நீ எனக்கு என் தந்தையை விடவும் மேலானவன். உனக்கு இணையாய் என் சகோதரன்கூட எனக்கு அமையவில்லை. கணக்கு வைக்காமல் ஆசி வழங்குவதிலும் ஆனந்தம் தருவதிலும் நீயும் என் தாயும் சரிநிகர் சமமானவர்கள். *ரிக் வேதம்.*

அனைத்துக்கும் மூலாதாரமான சக்தியினை, தேவர் படையினரின் தளபதியை நாம் அறிந்து கொண்டு, அதன் மீது தியானிப்போம். கந்தப் பெருமானே நமக்கு ஞானோபதேசம் தந்து அவருடன் நம்மை ஐக்கியப்படுத்திக் கொள்ள உதவுவாராக. *கிருஷ்ண யஜுர் வேதம்.*

அவரையே சிந்தித்துக் கொண்டும் ஜபித்துக் கொண்டும் இருக்கும் இதயங்களில் அவர் தனது திருவடியினைக் காட்டுவார். முருகன் எனும் பெயரை ஓதுவோர் உள்ளங்களில் அவர் தோன்றுவார். அப்படி தோன்றி எதிலும் நீக்கமற இருப்பதும் அவரே என்று விளக்கிடுவார். *திருமுறை.*

சூரிய சந்திரர்களும் அக்கினியும், கண்கூச வைக்கும் ஞானப் பேரொளியைப் பரப்புவதில் ஒரே நிலைப்பாட்டில்தான் உள்ளார்கள். அவர்களுக்கும் பிரகாசம் ஊட்டுவது முருகனே. தனது அப்பழுக்கற்ற ஒளியால் உலகுக்கு வெளிச்சம் தந்து கொண்டிருப்பது முருகப் பெருமானே. *கதிர்காம புராணம்.*

யானை முகத்தோனை நீங்கள் வழிபட்டால், உங்கள் வாழ்க்கை எல்லைகளற்று விரியும். வெள்ளைத் தந்தத்து முகத்தோனை நீங்கள் மனமொப்பிப் பிரார்த்திக்கும்போது உங்கள் தாகங்களும் சந்தேகங்களும் விடுபட்டோடி விடும். ஆகவே பலாப்பழம், பணியாரம், இட்லி, வாழைப்பழம், மாங்கனி போன்றவற்றை நிவேதித்து அவரை வணங்குங்கள். இங்ஙனமெல்லாம் செய்து பூஜித்து பாவச்சுமையை இறக்கி விடுங்கள். ஔவையார்.

அவருக்கு ஒரு தும்பிக்கையும் நான்கு திருக்கரங்களும் உண்டு. அவற்றில் இரு கரங்கள் கயிறினையும் குத்தூசியையும் வைத்திருக்கும். மற்றவை பயத்தை விலக்கும் சின்னத்தையும்

*ஆசியை அள்ளியருளும் சின்னத்தையும் காட்டும். அவர் கொடியில் எலியொன்று இடம்பெறும். சிவப்பாயும், வயிறு புடைக்க குண்டாயும் இருக்கும் விநாயகப் பெருமானுக்கு புடைக்கும் முறம் போன்ற இரு பெரும் காதுகள் உண்டு. கணபதி உபநிடதம்.*

*உள்ளூர உருகி இறைமையை முழுதுமாய் அனுபவிக்க, முதற் குருவாய் அமைந்து அருளும் முருகா, குமரா, குகா! மாளா தேவர் களாலும், மாளும் மனிதர்களாலும் ஒருசேர அடிபணியப்படும் கந்தா, கார்த்திகேயா... அன்பு, ஒற்றுமை, ஞானம், ஊக்கம், சமநிலை, ஆன்மபலம், நேர்மை, மேன்மை ஆகிய எட்டு உயர்நிலைகளை நீ என்றப்பா எனக்கு அருள்வாய்? கந்தர் அநுபூதி.*

*சங்கரனின் புதல்வனான யானை தெய்வத்தை நான் மறவேன். அடங்கா வயிறு. காதில் ஆடும் தோடு. இந்திரனுக்கு தனது கருணையால் வரம் அளித்தவர். இந்திரனின் மந்திரமே விநாயகனாய் ஆனவர். நற்சிந்தனை.*

# அம்ருதாத்மா



உபநிடதம் மூன்று:

*அழியாத ஆன்மா*

# ஆத்மஸ்வரூபம்



## ஆன்மாவின் இயல்பு

*எல்லையில்லா பிரக்ஞை, இந்த அண்ட சராசரம். இதுவே கடவுள்.*
*இந்த எல்லையில்லா பிரக்ஞையே எல்லையுள்ள*
*சிறு பிரக்ஞையாய் உருவெடுத்து நாமென்றாகின்றது.*
*பகுத்தறிவு மற்றும் மாயை ஆகிய போர்வைகளால் ஆக்கப்பட்டது இது.*
*படைப்பின் ஆரம்பப்புள்ளியான ப்ராஜாபதியாகவும், நமக்குள் மறைந்திருக்கும் இந்த*
*அண்ட சராசர சக்தியான விஸ்வாவாகவும் இருப்பது, கடவுளே.*
*இது சத்தியம். ஆன்மாதான் பிரக்ஞை. இதுதான் உடம்புக்கு பிரக்ஞையைத் தருகின்றது.*
*தேரோட்டி, அவரே.*

***-கிருஷ்ண யஜுர் வேதம்.***

# நமது தனிப்பட்ட ஆன்மாவின் இயல்பு என்ன?

### ஸ்லோகம் 26

*நமது தனிப்பட்ட ஆன்மா, அழிவற்றது. சூட்சுமமான ஆன்மீக உடம்பு. ஜோதி ரூபம். உடல் மாற்றி உடல் எடுத்து மீண்டும் மீண்டும் பிறந்து கொண்டிருக்கவல்லது. நாம் பட்ட கர்மங்கள் அனைத்தும் கழுவப்படும் வரை இது நிகழும். பிறகு கடவுளுடன் ஐக்கியமாகிக் கலந்து விடும் தகுதி சித்திக்கும். தாமதியாது கலந்து விடும். ஓம்.*

### விளக்கம்

நம் ஆன்மா சிவபெருமானிடமிருந்து வெளிப்பட்ட வஸ்து.

நாம் செய்யும் உயர்ந்த தர்மநெறியினாலான அனைத்துக் காரியங்களுக்குமான ஆரம்பம்.

ஞானம், வைராக்கியம், கருணை, அன்பு போன்ற நம்முடைய உயர் உணர்வுகளின் பிறப்பிடம்.

ஆன்மா ஆணோ அல்லது பெண்ணோ கிடையாது. அது பால் அற்றது.

ஆன்மா என்றும் சாவது கிடையாது. ஆன்மாவை மூடியிருக்கும் - உடல், சுவாசம், சிந்தனை மற்றும் புத்தி - ஆகிய நான்கும் அவற்றின் தர்மப்படி மாற்றங்கொண்டு ஜென்மங்கள் எடுத்தாலும் கூட, அவற்றின் ஆன்மா அழிவது கிடையாது.

நம் உடம்பு, அன்னமய கோஷா ஆகும். வெளிப்படையாய் தெரியும் அமைப்பு. ஸ்தூல சரீரம்.

*இதற்கு சக்தி தந்து கொண்டிருக்கும் சுவாசக் கவசம், பிராணமய கோஷா என்றாகின்றது.*

*உடம்பினை பகுத்தறிவும் புத்திசாலித்தனமும் கொண்டு இயங்க வைக்கும் போர்வைக்கு மனோமய கோஷா என்று பெயர். இதுவே மனசு.*

*சிந்தனை சார்ந்த அல்லது ஆன்மீக கவசத்தை விஞ்ஞானமய கோஷா என்று விளிக்கின்றார்கள்.*

*இவற்றுக்கெல்லாம் உள்ளே இருப்பது, உள்ளுறை ஆன்மா. எப்போதும் உற்சாகமானது, கருணை நிரம்பியது. ஊக்கத்தை அள்ளியள்ளித் தந்து கொண்டிருக்கும் ஆனந்தமய கோஷா இது. என்றென்றும் ஆனந்தமே.*

*ஆன்மாவின் உயர் சக்தியாய், தெய்வீக சிந்தனையாய், இறைமையாய் பரிமளிப்பது, பராசக்தி - சிவபெருமானின் சித்தம்.*

*பரசிவனே ஆன்மாவின் உள்ளார்ந்த கரு. மையப்புள்ளி.*

*நாமெல்லாம், நாம் எடுத்து வந்திருக்கும் இந்த இவ்வுடம்போ அல்லது புத்தியோ அல்லது உணர்ச்சிகளோ கிடையாது.*

*நாம்தான் அழியா ஆன்மா, ஆத்மன்.*

*நாம் இங்கிருப்பதன் ஒட்டுமொத்த சாறு, ஆனந்தமய கோஷா ஆகும். வேறல்ல. பராசக்தி மற்றும் பரசிவமே இச்சாறு.*

**வேதங்கள் உணர்த்துகின்றன:**

*''ஆன்மா பிறக்கின்றது. அது தன்னைத்தானே ஓர் உடலுக்குள் புகுத்தி, கனவுகள், அபிலாஷைகள், உயிர்வாழத் தேவையான பதார்த்த ஆசைகள் ஆகியன கொண்டு மறைத்துக் கொள்கின்றது. பிறகு மீண்டும் இன்னொரு பிறப்பினை, இதற்கு முந்தைய ஜென்மத்தின் பலன்களின் அடிப்படையில் அது எடுக்கின்றது. இங்கு, ஆன்மாவின் தரமே அதன் அடுத்த பிறப்பினை நிர்ணயிக்கின்றது - பூமியிலா அல்லது விண்ணிலா? கனமான வாழ்வா அல்லது இலகுவான வாழ்வா? என்பதை.'' ஓம் நமசிவாய.*



*செம்மண்ணும் வெள்ளைநிறமும் கொண்டு வர்ணம் பூசப்பட்ட உயர்ந்த கோயிலின் சுவர்களும் அவற்றின் அகண்ட கதவுகளும் பின்னால் இருக்க, ஆன்மாவாகப்பட்டது உன்னத நிலையில் அமர்ந்திருக்கின்றது.*

*'சிவனுடன் இரண்டறக் கலந்திருப்பதே தனது உள்ளார்ந்த குணம் என்பது நானறிந்ததே' என்பதை விளக்கும் தொனியில், அதன் கைகள் கருணைமயமான முத்திரைகளைத் தாங்கியிருக்கும்.*

*அழியா நிலையும், கதிரொளியாய் வீசும் பேரானந்தமும் ஆன்ம சொரூபமாய் அங்கு திகழும்.*

# நமது ஆன்மா, எவ்விதம் சிவனிலிருந்து வேறுபட்டுள்ளது?

### ஸ்லோகம் 27

*நமது ஆன்மா, அடிப்படை சத்திய ஆன்மாவான சிவபெருமானுடைய ஆன்மாவின் பிரதிபலிப்பாகவும் அதனை அடியொற்றியுமே படைக்கப்பட்டது. ஆனால் அடிப்படை சிவ ஆன்மாவிலிருந்து நமது ஆன்மா ஒரு வகையில் வேறுபட்டுள்ளது. அது, முதிர்ச்சியின்மை. சிவன், ஒப்புயர்வற்ற சத்தியமாய், தூய துல்லியமாய் இருக்கும்போது, அப்படி ஆகும் ஒரு பரிணாம வளர்ச்சியில் இருக்கிறோம் நாம். ஓம்.*

### விளக்கம்

ஆன்மாவின் ரகசியங்களை நாம் அறிந்தாக வேண்டும். இதற்கு ஆன்மாவை சுமந்துள்ள நம்முடைய உடம்பு மற்றும் அதில் ஆன்மாவின் இருப்பு ஆகிய இருவேறு கூறுகளை நாம் பிரித்தறிய வேண்டும்.

ஆன்மாவினை சுமந்திருக்கும் உடம்பு என்று பார்க்கும்போது நாம் அனைவருமே தனித்தனியானவர்கள். தனித்தன்மையில் இருப்பவர்கள். ஒருவருக்கொருவர் மாறுபட்டவர்கள். சுயமாய் பிரகாசிக்கும் தனித்தனி ஜோதிகள். தனது பயணத்தில் தானாக முதிர்ந்து பரிணாம வளர்ச்சி காணும் ஒளி நிறைந்த ஜோதிகள்.

இந்த ஆன்ம உடம்பு, சிவனையொத்தது. ஆனால் சிவஜோதி எனும் ஆதி பிரகாசத்தைவிட, ஒளி குன்றியது.

மேற்கொண்டு பரிணாமம் தேவைப்படாமல் பரிசுத்த ஆன்மாவாக ஆகிவிட்ட இறைவனைப் போலல்லாமல், தூய துல்லியமாய் ஆக பரிணாம வளர்ச்சி பெற்றுக் கொண்டிருப்பவை, நமது ஆன்மாக்கள்.

*நம்மை ஒரு பெரிய விருட்சத்தின் விதையென உவமைப் படுத்திக் கொள்ளலாம். விதைக்குள் அதன் விருட்சமே மறைந்துள்ளது... ஆனால் சரியாக முதிர்ச்சி அடையாததால் அது இன்னமும் முளைக்கவில்லை, மரமாகவில்லை.*

*அனுபவங்கள் வாயிலாக மட்டுமே ஆன்ம உடல் முதிர்ச்சி காண்கின்றது. இதற்கு பல ஜென்மங்கள் பிடிக்கின்றன.*

*பக்குவப்பட்ட ஆன்மாவில் மாயத்திரை விலகி ஜோதி தெரிகின்றது. இங்ஙனமாய் சிவஜோதியைக் கண்டு அப்படியே அதனுடன் இரண்டறக் கலக்க ஆன்மாவுக்கு பல பிறப்புகள் அமைகின்றன.*

*உடலுக்குள் உறையும் ஆன்மாவுக்குள் நீக்கமற நிறைந்துள்ள சிவனை அப்படியே உள்ளது உள்ளபடி கண்டு பேரானந்தக் கடலில் மூழ்குவதே, முக்தி அடைந்துவிட்ட நிர்விகல்ப சமாதி ஆகும்.*

*இதுவே தன்னைத் தான் அறிதல் என்பது.*

*தன்னைத் தான் அறிந்து, உள்ளே கிடப்பது என்ன என்ற ஞானம் வந்தபோதும்கூட, உடலை ஆதாரமாய் கொண்ட ஆன்மா இவ்வுலகிலும் மற்றும் ஏனைய பிற உலகங்களிலும் தன் பரிணாம வளர்ச்சியை தொடர்ந்து கொண்டுதானிருக்கும்.*

*இந்த முதிர்ச்சி தேடும் பயணம், ஒரு சொட்டுத் தண்ணீர் கடலுடன் போய் கலப்பதைப்போல, நமது ஒரு சொட்டு ஆன்மத்துளி சிவனெனும் சமுத்திரத்துடன் இறுதியாய் கலக்கும்வரை விடாது தொடரும் ஓரியக்கமாம்.*

*ஆமாம்...எவ்வித விதிவிலக்கும்இல்லாது, ஒவ்வோர் ஆன்மாவின் இறுதிப்புள்ளியும் இதுவேயாகும்.*

**வேதங்கள் சொல்கின்றன:**

*‘‘கடலைக்குள் மறைந்துள்ள எண்ணெயைப் போல, வெண்ணெய்க்குள் அடங்கியுள்ள அதன் சாரத்தினைப் போல, நதிக்கரைகளுக்குள் புகுந்துள்ள நீரைப்போல, சிக்கிமுக்கிக் கற்களுக்குள் வாழும் நெருப்பைப் போல, ஒருவருக்குள்ளேயே உறைந்துள்ளது ஆத்மன் எனும் ஆன்மா. தூய்மையாய் சத்தியத்துடன் அந்த ஆன்மாவைத் தேடத் துவங்கும்போது அது தானாக வெளிப்பட்டு தென்படும்.’’ ஓம் நமசிவாய.*



*சிவ-சக்தி எனும் இறைமைக்கு முன்னால் மண்டியிடும் பக்தன்*
*தன்னையே அங்கு அர்ப்பணித்து விடுகின்றான்.*

*இதுவே தனது ஆணவத்தை, 'தான்' எனும்*
*அகந்தை மாயையை விட்டொழிக்கும் தூய தியாகம்.*

*இத்தகைய தூய தன்மையுடன் ஒன்றாய் இருக்க வேண்டும்,*
*படைத்து, காத்து, அழிக்கும் நம் தலைவனின் முன்னால் நாம் செலுத்தும் பக்தி.*

# நமது ஆன்மா, எவ்விதம் சிவனின் ஆன்மாவுடன் ஒத்துள்ளது?

## ஸ்லோகம் 28

*நம்முடைய ஆன்மா ஒரு சுயம்பு. அது இயற்கையிலேயே உருவானது. ததும்பும் அன்பு ஒன்றுதான் இதன் சாரம். ஆழத்தில் உள்ள சத்தியம் ஒன்றுதான் இதன் நிஜம். ஆகவே, இது என்றென்றும் இயைந்து ஐக்கியமாகியிருக்கும் சிவனின் ஆன்மாவை ஒத்ததேயாம். நம் ஆன்மாவின் அடியாழத்தில், இந்நொடியிலும், அந்த சத்தியத்தின், இறைமையின், அன்பின் சொரூபமாகத்தான் நாம் விளங்கிக் கொண்டிருக்கிறோம். ஓம்.*

## விளக்கம்

ஆன்ம உடலின் ஆழத்தில் நாம் பராசக்தியாகவே உள்ளோம். அந்த ஆனந்த சாந்தப்பகுதி, சச்சிதானந்தம் எனப்படும் ததும்பும் அன்பேயாம். இங்குதான் ஆழ்மனத்து சத்தியம் பரிபூரணமாய் பரிணமிக்கின்றது.

நம் இருப்பின் இந்த ஆன்ம அடியாழத்தில் வித்தியாசங்கள் கிடையாது. தனிப்பட்ட அடையாளங்கள் இல்லை.

இங்கு அனைத்தும் 'ஒன்றே.'

ஆக, இப்போதும் எப்போதும், நம் ஆன்மாவின் அடியாழத்தில் நாம் கடவுளின் அப்பழுக்கற்ற பிரதிபலிப்பாகவேதான் இருக்கிறோம்.

இப்படி இரண்டாகத் தெரியும் இறைமை, பரிணாம வளர்ச்சியில் முதிர்ந்து வளரும் ஆன்மாவின் நிலைப்பாடு அல்ல. ஆனால் இது, என்றென்றும் மாறா மற்றும் எவ்வித வளர்ச்சியோ குறைபாடோ கொள்ளாத, ஆன்மக் கருவேயாகும்.

*நிஜத்தில் பார்க்கப்போனால், பகுக்கவோ வகுக்கவோ முடியாத அளவுக்கு நமது ஆன்மா இறைமையுடன் ஏற்கெனவே ஐக்கியமாகி இரண்டறக் கலந்து இருக்கின்றது.*

*ஆனால் இதனை உணர, இப்படியாக அது உள்ளது என்பதை நாம் அறிந்தாக வேண்டியுள்ளது. அனுபவமே விளக்கும். இந்த இலக்கை நோக்கி இருப்பவர்களே நாம்.*

*நாம் ஆன்மாவாக ஆகுவதில்லை. நாம்தான் அது.*

*இந்த நர உடம்புக்கு உள்ளே, புயலென தாக்கிக் கொண்டிருக்கும் உணர்வுகளுக்கும் பகுத்தறிவு கொண்ட புத்திக்கும் மத்தியிலே, பராசக்தி மற்றும் பரசிவா ஆகிய சிவ-சக்தியின் பரிசுத்த துல்லியத்தை யொத்த தூய்மை, மிகுந்த அடியாழத்தில் உறைந்துள்ளது.*

*ஒன்றுபட்ட மற்றும் அப்படி ஒன்றாக ஆகாத - உருவாக்கிய இருப்பு மற்றும் உருவாக்காமல் அப்படியே தோன்றும் சுயம்பு - அப்படி ஒன்று இருப்பது மற்றும் அப்படியே நாம் ஆகிவிடுவது - போன்ற, முரண்பட்டது போல இருந்தாலும் அப்படி கிடையாத சத்தியத்தின் நிஜச்சாறினை, அற்புதமாய் நாம் பிரித்தறியும் அடியாழம் இது.*

*இங்கு எதிர்ப்பதங்களுக்கே இடம் கிடையாது. அனைத்தும் ஒன்றே.*

*ஆமாம்... நம் ஆன்மாவின் அடியாழத்தில், நாமும் சிவபெருமானும், ஒன்றே.*

**வேதங்கள் விளக்குகின்றன:**

*''ஒரேயொரு எஜமானன். அனைத்து படைப்புகளின் உள்ளார்ந்த ஆன்மா. தனது ஒரே இருப்பினை பல்லாயிரம் இருப்புகளாகக் கணக்கின்றி ஆக்குபவன். இப்படி ஆன கடவுளே தனது ஆன்மாவாயும் இருக்கிறான் என யார் ஒருவன் பிரித்தறிந்து விடுகின்றானோ, அவனுக்கு இறைமை எனும் பேரானந்தம் கிட்டி, அவனே இறைவனாகி விடுவான். இந்த ஸ்தானம் வேறு ஒருவருக்கும் கிட்டாது.'' ஓம் நமசிவாய.*



*ஆன்மீக இறைமை நமக்குள் தட்டியெழுப்பப்பட்டு விட்டால்,*
*தன்னை அனைத்திலும் அடையாளம் காணும் வரம் கிடைக்கும்.*

*நகரும் நகராத என அனைத்திலும் தன்னையே காண்பான்,*
*ஞானக்கண் திறக்கப்பட்டவன்.*

*தூய பக்தன் சச்சிதானந்தம் எனப்படும் இந்த பேரானந்தத்தை அனுபவிப்பான்.*

*கடவுளே அனைத்திலும் இருப்பவன் என்ற உண்மைக்கு, சத்தியத்தை உணர்ந்த*
*ஒரு மகானாய், அந்த பக்தன் காட்சி தருவான்.*

# சிவனைப் போலவே நாமும் ஏன் எல்லா இடத்திலும் நீக்கமற இல்லை?

### ஸ்லோகம் 29

*மாயை, ஆணவம் மற்றும் கர்மம் ஆகிய மூன்று விலங்குகளும் நம் பார்வைக்குத் திரை போட்டுள்ளன. இது பரமசிவனே செய்துள்ள காரியம். நம்மை நாமறிய, அறிவதனால் ஆன்மா முதிர்ச்சியடைந்து பக்குவம் பெற அவரே செய்துள்ளதோர் ஏற்பாடு. இறை பிரக்ஞை எனப்படும் ஆன்மாவின் அடியாழத்து சாந்தக் குடியிருப்பில், 'அனைத்தும் அறிந்த சிவபெருமான்' எனும் அவரது தகுதியையே நாமும் அடைந்து விடுகின்றோம். ஓம்.*

### விளக்கம்

வயதுக்கு வந்த பிறகு ஏற்படும் உணர்தல்கள் பிரத்தியேக மானவை. அவற்றை வயதுக்கு வராத சின்னஞ்சிறார்கள் உணரவோ அறியவோ முடியாது. எனவே உடலால் முதிர்ந்த பிறகு உள்ள வாழ்க்கை முறை பற்றித் தெரிந்துக் கொள்வதிலிருந்து குழந்தைகள் தள்ளியே வைக்கப்படுவார்கள்.

இத்தகைய கட்டுப்படுத்தப்பட்ட நிலையில்தான், ஆன்மா பற்றிய அறிதலும் நம்மிடையே அமைந்துள்ளது.

நமக்கு எது தேவையோ அதைப் பற்றி மாத்திரமே நாம் கற்றறிகிறோம். இவ்வாறாய் அனுபவப்பூர்வமாய் நாம் தெரிந்து கொள்வதை மட்டுமே நாம் விளங்கிக் கொள்கின்றோம். இது நம்முடைய அறிதலைக் குறுக்கி விடுகின்றது.

குறுகிய ஞானமும், அதனுடன் இணைந்து கொள்ளும் நம் ஒவ்வொருவருடைய அகங்கார ஆணவங்களும், உலகத்தையும்

அதில் நாம் இருக்கும் இருப்பினையும் வெறும் பொருள் சார்ந்த தளத்தில் மட்டுமே நின்று அணுக வைக்கின்றன.

ஆன்மா மூவகை விலங்குகளால் பூட்டப்பட்டுள்ளது. பாசவலை என்பது இச்சிறைக்கு பெயர்.

மாயை, கர்மம் மற்றும் ஆணவம் ஆகியவையே அந்த மூவிலங்குகள்.

மாயை எனும் உலக அமைப்பு மட்டும் இல்லாமல் ஆகிவிட்டால், ஆன்மா, அதன் பரிணாம வளர்ச்சியை அனுபவரீதியாக பெற்று முன்னேறி இறுதியாய் இறைமையை அடைய முடியாது.

காரண காரிய சட்டமே, கர்மா. ஒன்று செய்தால் அதற்கு மற்றொரு எதிர்வினை இருக்கும் எனும் Action - Reaction சட்டமிது.

மாயையை ஆளும் சட்டமே கர்மம்.

தான்தான் தனி என்று பிரித்து, மற்றவை தன்னை விடவும் இளக்காரமானவை என எண்ணத் தூண்டும் இருமையே ஆணவம். நம்முள் உறையும் சத்தியம் எனும் இறைமையை, ஒருமையை, திரையிட்டு மூடியிருக்கின்றது இது.

எனவே இதனை அறியாமை என்றே சொல்கின்றோம்.

இத்தகையதோர் அஞ்ஞான அமைப்பில், மாயைகளால் ஒட்டு மொத்தமாக சமைக்கப்பட்டிருக்கும் இவ்வுலகமே பாடசாலை. இதில் நாம் பண்ணும் கர்மங்கள் - பணிகள் - கடமைகள்தான், குரு. மாணவனின் அறியாமையாய் நம்முள் இருந்தபடி நம்மை ஆட்டிப்படைக்கும் கர்வமே மாணவன்.

நாம் செய்யும் காரியங்களாலேயே நாம் அடிபட்டு அனுபவப்படுகிறோம். இதனால் மனத்தளவில் நாம் மெல்லமெல்ல முதிர்ச்சி அடைகிறோம். மனிதம் எனும் நிலை தாண்டி இறைமை நோக்கி நீள்கிறோம்.

இங்ஙனமாய் நம் ஆன்மா எழுச்சி பெறவே மும்மலங்கள் எனப்படும் மாயை, கர்மா மற்றும் ஆணவம் ஆகியன சிவபெருமானால் உருவாக்கப்பட்டுள்ளன.

*இறை திருவிளையாடலால் விதிக்கப்பட்டிருக்கும் இத்தனை கட்டுப்பாடுகளுக்கு நடுவிலும், தனது இதயச் சுரங்கத்துள் உள்ள கடவுள் எனும் ஆழத்து சாரம் நோக்கி ஒரு பக்தன் தனது தியான வலிமையால் இறங்க நேரிடும்போது, தாற்காலிகமாக இறை பேரானந்தத்தை வரைவின்றி அனுபவிப்பான்.*

**திருமுறை விளக்குகின்றது:**

*''ஆன்மா, தனது 'சுயம்' எனும் தன்னுடைய நிஜ சத்தியத்தை முழுவதுமாய் அறிந்து கொள்ளும்போது, அது சிவபெருமானுடன் நீக்கமற ஐக்கியமாகிப் போகின்றது. மும்மலங்களும் சாம்பலாகிப் போகின்றன. பிறப்பு எனும் சக்கரம் அவருக்குத் தீர்ந்து போகின்றது. பிரகாசமான ஞானவொளி, நிரந்தரமாகின்றது.'' ஓம் நமசிவாய.*



எவ்வித மாசுகளும், மனதிலும் உடலிலும் ஒட்டாமல் காடுகளில் தனித்திருந்தபடி,
பக்தன் சிவலிங்கத்துக்கு பூஜைகள் செய்வான்.
சிவ-சக்தி எனும் ஒரே சக்தியினைத் தன்னுள் தட்டியெழுப்புவான்.

அப்போது சிவ-சக்தி தரிசனம் அவனது மனக்கண்களுக்கு கிட்டும்.

ஞானத்தின் ஆதிமூலமான சிவபெருமான், அபய மற்றும் வரத முத்திரைகளோடு வந்து,
மாயை, கர்மம் மற்றும் ஆணவம் ஆகிய மும்மலங்களையும்
விலக்கி அவனுக்கு விடுதலை அருள்வார்.

# மோட்சம் என்பதனை இந்துக்கள் எங்ஙனமாய் விளங்கிக் கொள்கின்றார்கள்?

## ஸ்லோகம் 30

*அனைத்து ஆன்மாக்களின் கடைசிப் புகலிடம், மோட்சம்தான். உடலெடுத்துப் பிறந்து கொண்டேயிருப்பதிலிருந்து விடுதலை. பிறகு, உள்ளார்ந்து இருக்கும் பால்வீதி மண்டலங்களான அந்தர் லோகம் மற்றும் சிவலோகம் ஆகியனவற்றில் நமது ஆன்மா வளர்ந்து பண்பட்டுக் கொண்டிருக்கும். இதன் இறுதியாக, ஓடும் நதி கடலோடு கலந்து விடுவதைப் போல, ஆன்மாவாகப்பட்டது சிவபெருமானுடன் ஐக்கியமாகிவிடும். ஓம்.*

## விளக்கம்

பூமி சார்ந்த அனைத்து கர்மங்களும் (கடமைகளும்) தீர்க்கப்பட்ட கணத்தில், மோட்சம் கைக்கிட்டும். அனைத்து தர்மங்களும் நிறைவேற்றப்பட்டு கடவுளை முழுதுமாய் ஓர் ஆன்மா உணர்ந்ததும், மோட்சம் சித்திக்கின்றது.

நான்கு வகையான ஜாதிகளை இந்து தர்மம் முன்வைக்கின்றது. பிராமணர், க்ஷத்ரியர், வைசியர் மற்றும் சூத்திரர். இவையடங்கிய அமைப்பு வர்ண தர்மம்.

பல ஜென்மங்கள் எடுத்து, தர்மரீதியாய் வர்ண சாஸ்திரத்தை நிறைவேற்றிவிட்டு, வாழ்க்கையின் மாறுபட்ட அனுபவங்கள் அனைத்தையும் அனுபவித்திருக்க வேண்டிய தேவை உள்ளது. இவ்வாறாய், மறுபடியும் வாழ்க்கை எனும் பிறப்பு சக்கரத்துக்குள் இழுக்கப்பட்டு விடாத அளவுக்கு அனுபவங்களால் மட்டுமே ஓர் ஆன்மா முதிர்ந்து கனியும்போதுதான், அதற்குப் பிறவாவரம் லயிக்கின்றது.

அனைத்து ஆன்மாக்களும் மோட்சம் அடைய வேண்டும் என்ற நியதியோடுதான் படைக்கப்பட்டுள்ளன.

ஆன்மாக்கள் ஒவ்வொன்றும் இறுதியில் சேரப்போவ தென்னவோ மோட்சத்தில்தான்.

மற்றொரு முடிவு ஆன்மாவுக்கு கிடையாது.

ஆனால் அது இவ்வாழ்க்கையிலேயே கிட்டிவிட வேண்டும் என்பதல்ல.

இது இந்துக்களுக்கு தெரியும். ஆகவே இதுதான் இறுதியான தொரு பிறவி என்று அவர்கள் விசனமடைய மாட்டார்கள்.

தேடிப் போராடி கடைசியாய் தனக்குள்ளேயே இருக்கும் இறை சத்தியத்தை பிடித்து விட்டாலும்கூட, வாழ்க்கையின் இன்னபிற இலக்குகளை முடிக்க செய்ய வேண்டியவை இன்னும் நிறைய இருக்கின்றன என்பது இந்துக்களுக்கு தெரியும்.

இந்த இலக்குகளுக்கு புருஷார்த்த லட்சணம் என்று பெயர்.

தர்மம் எனும் அறம் தவறாத வாழ்க்கை; முற்பொருள் சேர்க்க வேண்டிய அர்த்தா எனும் இலக்கு மற்றும் சந்தோஷங்களைத் தரும் காமம்.

பற்பல ஜென்மங்கள் எடுத்துச் செம்மையடைந்த முதிர்ந்த ஆன்மாக்கள், தர்மம், அர்த்தா, மற்றும் காமங்களை அனுபவித்ததன் பேரில் அதற்கு ஏற்பட்டுள்ள அனுபவரீதியான முதிர்ச்சியின் காரணமாக, மிக இளவயதிலேயே சந்நியாசியாகக் கூடிய தகுதியில் இருக்கும்.

உலகையே வெறுத்திருக்கும் அந்த ஆன்மா மீண்டும் பிறக்கும்போது, பரமசிவனைத் தேடும் இலக்குடன் சிறுவயதிலேயே சந்நியாசத்துக்குள் நுழையலாம்.

ஒவ்வோர் இந்துவும் தனது வாழ்க்கையின் இறுதிக்கட்டங்களில் பிறவா நிலைக்கான விட்டுவிடுதலையைத் தேடியே நிற்கின்றான்.

ஒவ்வோர் ஆன்மாவின் பரிணாம வளர்ச்சியின் இறுதியில், விஷ்வக்ராஸா எனப்படும் சிவபெருமானுக்குள் முழுவதும் இழுக்கப்பட்டு விடும் ஸ்தானம் கிடைத்து விடுகின்றது.

## வேதங்கள் சொல்கின்றன:

*''உடல் மரணமடைவதற்குள் இங்கு ஒருவனால் சிவனைத் தனக்குள்ளேயே உணர முடிந்து விட்டால், உலகம் எனும் சிறைக்குள் அவனுக்கு இடப்பட்டிருக்கும் விலங்கிலிருந்து அவன் விடுவிக்கப்பட்டு விடுவான்.'' ஓம் நமசிவாய.*



*சுந்தரர், தீவிர சிவபக்தர்.*

*தனது உடலை உதிர்த்துவிட்டு இயற்கை எய்த அவருக்கு நேரம் வந்தபோது, வெள்ளை யானை ஒன்று பூமிக்கு இறங்கி வந்து அவரை சிவபெருமானின் திருப்பாதங்களுக்கு கூட்டிச் சென்றது.*

*பூமி சார்ந்த அனைத்து கர்மங்களையும் முடித்து விட்ட ஆன்மாக்கள் அந்தர்லோகத்துக்கும் சிவலோகத்துக்கும் போய் மேற்கொண்டு முதிர்ந்து கொண்டிருக்கும்.*

பாலுக்குள் எங்கெங்கும் பரவிக்கிடக்கும் வெண்ணெயைப் போல நீக்கமற பரவியுள்ளது ஆத்மன் எனும் ஆன்மா. இதுதான் ஞானம். தன்னலம் கருதா துறவின் சாரம். மிகவுயர்ந்த இலக்கான 'இறைமையை அடைவது' எனும் பாடத்தினைப் புகட்டிக் கொண்டிருக்கும் பிரம்மன். ஆன்மாவின் சத்தியத்துடன் இரண்டறக் கலந்துவிட்ட ஒருவன், பிரம்மம் என்பதன் நிஜச்சாற்றினைக் கிரகித்தவனாகின்றான். கடவுள் என்பவர் யார் என்று அப்போது கைவிளக்காய் விளங்கும். சுயம்பு, பிறவாதவர், அசையாத வஜ்ஜிர ஸ்திரமானவர், அனைத்து அபிலாஷைகளிலிருந்தும் விடுபட்டவர், அவர்தான் கடவுள் என்பது தீர்க்கமாகும். சுயம் எனும் ஆன்மா பிறப்பதில்லை. அது இறப்பதில்லை. ஒன்றுமற்ற சூனியத்திலிருந்து ஊற்றாய் பீறிடும் ஆன்மா, இறுதியில் ஒன்றுமற்ற சூனியத்திலேயே அடங்குகின்றது. சுயம்பு, நிரந்தரமானது, மாறாதது, ஆதியானது, உடல் அழியும் போதும் அழியாதது, அதுவே ஆன்மா. *கிருஷ்ண யஜுர் வேதம்.*

ஆவி என்று ஒன்று உள்ளது. தூய்மையானது அது. மூப்பு, இறப்பு ஆகியனவற்றை கடந்தது. பசி, தாகம், துயரம் போன்ற உணர்வுகளையும் அது கடந்தது. மனிதனுக்குள் உள்ள ஆவியான இதுவே ஆத்மன், ஆன்மா. இந்த ஆவியைத்தான் நாம் தேடிப்பிடித்துப் புரிந்து கொள்ள வேண்டும். மனிதன் அவனுடைய சொந்த ஆன்மாவை அடையாளம் காண வேண்டும். தனது ஆன்மாவைக் கண்டுபிடித்துப் புரிந்துகொண்டு விட்ட ஒருவன் அனைத்து உலகங்களையும் கண்டவனாகின்றான். தனது அனைத்து தாகங்களையும் தணித்தவனாகின்றான். அடுத்த ஆளின் கண்களைப் பார்க்கும் போது அதில் நீங்கள் என்ன காண்கின்றீர் களோ அதுதான் ஆன்மா. அழியாதது, பயங்களைக் கடந்தது. இதுவே பிரம்மன். *சாம வேதம்.*

இப்போது ஆத்மன் குறித்த ஒரு பாடம்: ஆத்மன் கீழே உள்ளது, மேலே உள்ளது, பின்னால் உள்ளது, முன்னால் உள்ளது, வடக்கே உள்ளது, தெற்கே உள்ளது. சொல்லப்போனால் இருக்கும் அத்தனையும் ஆன்மாதான். இதனைக் கண்டு, உணர்ந்து, பிரதிபலிப்பவனுக்கு, ஆன்மாவின் நித்திய ஆனந்தம் கிட்டும். ஆன்மாவுடன் அவன் ஐக்கியமாகி விடுவான். ஆன்மாவிடம் அவன்

அளவளாவுவான். ஆன்மாவின் பெருங்கருணையாகவே அவன் ஆகிப்போவான். அவனுக்கு விடுதலை கிடைத்து விடுகின்றது. அனைத்துலகங்களுக்கும் போய் வரும் சுதந்திரம் அளிக்கப்படுகின்றது. *சாம வேதம்.*

நுணுக்கமான ஐந்து ஆதாரப் பொருட்கள் இருக்கின்றன. *தன்மந்த்ரா* என்பவை அவை. நெருக்கமானதும் பெரியதுமான ஐந்து வேறு பொருட்கள் உள்ளன. மஹாபுடாஸ் என்பவை அவை. இவற்றின் இணைப்பே மனிதவுடல். மனித ஆன்மா உடலை ஆள்கின்றது. ஆனால் புனிதமான அழியாத ஆத்மன் எனும் ஆன்மாவோ தாமரையிலை நீர்த்துளியைப்போல அப்பழுக்கற்றது. மனித ஆன்மா இயற்கையின் கைப்பிள்ளையாய் அமைந்திருப் பதால் குழப்பத்துக்குள்ளாகின்றது. இக்குழப்பத்தினால்தான், ஆத்மன் எனும் இறைமை உள்ளேயிருப்பதை அறிய முடியாமலே போகின்றது. ஆத்ம சக்திதான் நாம் இயங்கவே இங்கு சக்தி தந்து கொண்டிருக்கின்றது எனும் இறை நிஜமும் மூளைக்கு எட்டாமலே ஆகின்றது. *கிருஷ்ண யஜூர் வேதம்.*

ஜோதியில் இருப்பவன், ஆயினும் அந்த ஜோதியிலிருந்து வேறானவன், அவன் யாரென்று ஜோதிக்கே தெரியாது, அவன் உடலே ஜோதி மயம், உள்ளிருந்தபடியே ஜோதியைக் கட்டுப் படுத்துபவன், ஜோதியே அறியாத அவன் - அவன்தான் உன்னுள்ளிருக்கும் ஆன்மா. *சுக்ல யஜூர் வேதம்.*

மாயை, ஆணவம் மற்றும் நாம் செய்யும் காரியங்களால் வந்து சேர்வது ஆகியனவே மும்மலங்கள். *சுப்ரபேத ஆகமம்.*

தூய பிரக்ஞை என்பதே இறைவன். ஞானம் எனும் வடிவு இது. இது எங்கும் எப்போதும் உள்ளது. ஆன்மாவிலும். தளைகளை அறுத்தெறிந்த நிலையில் அண்டசராசரமென ஆன்மா உள்ளதால், இறைமை ஆன்மாவிலும் உள்ளது. *ம்ருகேந்திர ஆகமம்.*

சிவனாகவே ஒருவன் ஆகிவிட்ட நிலைமை சித்திக்கும்போது, சூரியக் கதிர்களுக்கு முன்னால் நிலவின் கதிர்கள் காணாமல் போய்விடுவதைப்போல, அவர்தம் மும்மலங்களும் அவிக்கப்பட்டு விடும். *திருமந்திரம்.*

*ஒருவருடைய ஜீவன், அதன் பாவ-புண்ணியங்களில் சமநிலையை எய்தியபோது, ஒரு குரு வடிவத்தில் இறை கருணை அவரை நாடி வரும். அனைத்து பந்தங்களையும் அந்த குரு அகற்றுவார். சொர்க்கத்தின் தண்மையை நிழலாய் தரவல்ல ஞானத்தை அவர் மீட்டுக் கொடுப்பார். ஜீவன், அப்போது சுயநலமற்றதாய் பரிமளிக்கும். மும்மலங்களும் தீர்ந்து போயிருக்கும். அவரே, சிவனாய். திருமந்திரம்.*

*இறைவனின் ஆரம்பகட்டத்து திருவிளையாடலில் ஜீவன்கள் படைக்கப்படுகின்றன. அவற்றுள் மும்மலங்களும் உட் செலுத்தப்படுகின்றன. இம்மலங்களைத் துறக்கும் கட்டத்தில் தன்னைத்தானே அறியும் ஜீவன்கள், அவற்றின் தலைமைக் கடவுளின் பாதாரவிந்தங்களை நாடி நிற்கின்றன. இங்ஙனமாய், மேற்கொண்டு பிறப்பற்ற சிவனாகவே அவை ஆகின்றன. திருமந்திரம்.*

*ஒரு தங்க வியாபாரி, தங்கத்திலிருந்து பற்பல ஆபரணங்களை உருவாக்குகின்றான். அவ்வாறே, மாபெரும் தங்க வியாபாரியான கடவுள், பிரபஞ்சம் எனும் ஒரே தங்கத்திலிருந்து பற்பல ஆன்மாக்களை வடிவமைக்கின்றான். நற்சிந்தனை.*

*ஆன்மா, இறைத்தன்மை கொண்டது. மாபெரும் ஞானியர்கள் அனுபவரீதியாய் அடைந்துள்ள தீர்வு இது. இவ்வுண்மை உங்களுடைய சிந்தனைக்குள் நன்கு பதியட்டும். நற்சிந்தனை.*

# சம்சாரா:



## கர்மமும் மீண்டும் பிறத்தலும்

*அவனது நடவடிக்கைகளால் முழுக்க அவன் பழுத்தாலும்கூட, சுழலுக்குள் அகப்பட்டுக் கொண்டதொரு புழுவினைப் போல அவன் ஓய்வு பெற்றானில்லை.*

*பற்பல பிறப்புகளினால் பாவங்கள் அனைத்தும் களையப்பட்ட பிறகு, அதன் இறுதியில் தான், விட்டு விடுதலை அடைந்து விட வேண்டும் எனும் ஆன்ம விடுதலை தாகம் ஒரு மனிதனுக்கு எடுக்கின்றது.*

***-சுக்ல யஜுர் வேதம்.***

# கர்மம் என்பதனை இந்துக்கள் எப்படிப் புரிந்துக் கொண்டுள்ளார்கள்?

## ஸ்லோகம் 31

*கர்மா என்பதன் நேரடி அர்த்தம் 'செயல்' அல்லது 'காரியம்' என்றாகின்றது. விளக்க வேண்டுமாயின், 'ஒரு காரியம் நடந்தால் அதற்கொரு காரணம் உண்டு' எனும் பிரபஞ்ச சட்டதிட்டமே, கர்மம். அனைத்து வாழ்க்கைகளையும் நிர்வகிக்கும் 'ஒரு வினைக்கு எதிர்வினை ஒன்றிருக்கும்' எனும் Action - Reaction சட்டமிது. ஒரு பொருளுக்கு புவிஈர்ப்பு எப்படிப் பொதுவானதோ அப்படியே கர்மா என்பது நமது சிந்தனையின் இயல்பான நியதியாகும். கர்மம் செய்யாது வாழயியலாது. ஓம்.*

## விளக்கம்

*மனிதன் சுயமாக இயங்க அவனுக்குப் பகுத்தறிவு தரப்பட்டுள்ளது. இதனால், அவனுடைய பாவ புண்ணியங்களை சேர்த்துக் கொள்வது அவனேதான். எனவே கர்மா என்பது விதி என்றாகாது.*

*நன்மையை நாம் விதைத்தால் நன்மையைத்தான் அறுவடை செய்வோம் என்றும், தீமையை விதைக்குங்கால் அறுவடையிலும் துயரங்களே கிடைக்கும் என்றும் அறுதியிட்டு சொல்கின்றன வேதங்கள்.*

*இந்த ஜென்மத்திலும் கடந்த ஜென்மங்களிலும் நாம் செய்துள்ள 'செயல்களின்' ஒட்டுமொத்த தன்மையை குறிக்கின்றது கர்மா. அவற்றால் தொடர் அறுபடாமல் ஒன்றன் பின் ஒன்றாக விளைந்துள்ள எதிர்வினைகளையும் கர்மா என்பது சுட்டிக்காட்டுகின்றது.*

*இவையனைத்தும் சேர்ந்து நிர்ணயிக்கின்றன, நம்முடைய எதிர்காலத்தை.*

*நமது அனுபவங்கள், மற்றும் அவற்றின் அடிப்படையில் நாம் எப்படி மேற்கொண்டு நடந்து கொள்கிறோம், ஆகிய இரண்டுக்கும் நடுவில் நடக்கும் நாடகமே, நமக்கு பாதகமாகவோ அல்லது உற்சாகமூட்டும் சாதகமாகவோ கர்மாவை ஆக்குகின்றது.*

*நாம் செய்யும் கர்மத்தின் பரிசே, நாம் அனுபவிப்பது.*

*கர்மத்தின் வெற்றி, அக்கர்மத்தினை நாம் எத்தனை புத்திசாலித் தனமாய் செய்திருக்கிறோம் என்பதனையும் அதற்கு கிடைத்துள்ள எதிர்வினையையும் பொறுத்தது.*

*அனைத்து கர்மங்களுக்குமான கூலிகளும் உடனுக்குடன் கிடைத்து விடுவதில்லை. சில கர்மச் சுமைகள் அடுக்கடுக்காய் கூடிக்கொண்டே போய் எதிர்பாராத ஒரு சமயத்தில் இந்த ஜென்மத்திலோ அல்லது அடுத்த ஜென்மங்களிலோ கிடைக்கும்.*

*பலவகைப்பட்ட கர்மங்கள் உள்ளன: தனிநபர் சம்பந்தப் பட்டது. அல்லது குடும்பம், சமுதாயம், நாடு, உலகம், அண்ட சராசரம் சம்பந்தப் பட்டது. இப்படி பலப்பல.*

*பழங்காலத்திய ரிஷிகள், தனிமனித சம்பந்தப்பட்ட கர்மாக்கள் மூன்று வகையானது என்று பிரகடனப்படுத்தினார்கள்.*

இவற்றில் முதலாவது, *சண்சிதா.* இன்னும் தீர்க்கப்படாமல் இருக்கும் முன்பு செய்த கர்மங்கள்.

இரண்டாவது, *பிராரப்தா.* இந்த ஜென்மத்தில் கழிக்கப்பட வேண்டிய சண்சிதாவின் பகுதிகள்.

*நிறைவாக கிரியாமானா. தற்சமயம் நாம் உருவாக்கிக் கொண்டிருக்கும் கர்மங்கள்.*

**வேதங்கள் ஸ்தாபிக்கின்றன:**

*''இங்கு, ஒரு மனிதன் ஆசைகளுடன் வாழ்வதே நியதி என்கிறார்கள். அவன் ஆசையைப் பொறுத்தே அவனுடைய நோக்கம் தீர்மானமாகின்றது. அவன் கொள்ளும் நோக்கத்தால் அவன் செய்யும் காரியம் அமைகின்றது. அந்த கர்மத்துக்கேற்ற அறுவடையை அவன் அடைவான்.'' ஓம் நமசிவாய.*



*அறுவடை நாள் அருகிலிருக்கும்போது,*
*விவசாயி வேண்டுமென்றே சூதாடப் போய் உட்கார்ந்து கொள்கின்றான்.*
*சூதாட்டம் என்பது அவனது குடும்பத்துக்கே*
*ஆபத்தானது என்பது அவனுக்கும் நன்றாகவே தெரியும்.*
*செய்யும் நல்லது அல்லது கெட்டது ஆகிய இரு கர்மாக்களுக்கும் அவனேதான்*
*பொறுப்பு என்பது தெரிந்தும் அவன் சூதாட உட்கார்ந்திருக்கிறான்.*
*விவசாயி செய்யும் இவ்வினைகளையும் இவை தரவல்ல எதிர்வினைகளையும்*
*மவுனமாய் கவனித்துக் கொண்டிருக்கிறார் சிவபெருமான்.*

# நல்ல கர்மம் - கெட்ட கர்மம் என்று உள்ளனவா?

### ஸ்லோகம் 32

*மிகவுயரிய தளத்தில், உயர்ந்த ஞானத்தில் நின்று நோக்குங்கால், நல்லது கெட்டது என்று கர்மங்களில் வகைகள் கிடையாது. அனைத்து அனுபவங்களுமே ஆன்மீக வழியில் முன்னேற வாய்ப்புகளை ஏற்படுத்துகின்றன. சுயநலமற்ற செயல்கள், நம்மை தரம் உயர்த்தும் ஆக்கபூர்வமான சூழ்நிலைகளை உருவாக்கும். சுயநலத்துடன் இயங்கும்போது, அப்படிப்பட்ட செயல்கள் குழப்பங்களையும் எதிர்மறையான மனநிலையையுமே உருவாக்கித் தரும். ஓம்.*

### விளக்கம்

கர்மம் - அதாவது செயல் என்பதில் நல்லது என்றும் கெட்டது என்றும் இல்லை.

ஆனால், நாம் பேசும் வார்த்தைகள், நமது சிந்தனை, செய்யும் செயல் ஆகியனவற்றின் போக்கினை அடக்கியாளும் ஒரு நடுநிலைமையான கொள்கை உள்ளது.

எல்லாவிதமான அனுபவங்களும், நாம் மென்மேலும் முன்னேற உதவுகின்றன.

நல்லவையும் அன்பும் நிறைந்த செயல்கள், மற்றவர்களிடமிருந்து அத்தகையை அன்பை சம்பாதித்துத் தருகின்றன.

கீழ்த்தரமான சுயநலமிக்க காரியங்கள், வலியையும் துயரங் களையுமே நமக்குப் பெற்றுத் தருகின்றன.

கருணைமயமான காரியங்கள், புண்ணியம் எனும் இனிமையான கனியைப் பெற்றுத் தரும்.

கனிவற்ற மூர்க்கமான காரியங்கள், பாவம் எனும் அழுகிய கனியை நம் கையில் போடும்.

*ஒரு வாழ்க்கையை கடந்தபிறகு இன்னொரு மறுவாழ்க்கை என்று ஜென்ம ஜென்மமாக நாம் வலியையும் சந்தோஷத்தையும் அனுபவிப்பதாலேயே, ஆன்ம அளவில் முதிர்ச்சி அடைகின்றோம்.*

*இப்பிரயாணத்தில் நாம் பண்ணும் தர்மரீதியினாலான காரியங்கள் பயணத்தை சுகமாக்கித் தந்து உதவுகின்றன. அதர்மம் நிறைந்த காரியங்களோ நமது ஜென்மப்பிரயாணத்தில் பலவகைத் தடைகளை உண்டுபண்ணி சீரழித்து விடுகின்றன.*

*இறை சட்டம் உள்ளது. அது: நாம் வாழ்க்கையில் அனுபவிக்கும் கர்மாக்கள், இந்நொடியில் நமக்கு என்ன கிடைக்க வேண்டுமோ அவையே ஆகும். அவற்றை சந்திக்க நமக்கு வலு இருக்கும். ஆகவே எதுவும் நேர்ந்துவிடாது.*

*மிகக்கடுமையான கர்மவினையை அனுபவிக்க நேரும்போதும் கூட, அதனை உளமார ஏற்றுக்கொண்டு அனுபவித்துக் கடந்து விடும்போது, அதுவே, ஆன்மீக மொட்டுக்கள் நமக்குள் மளமள வென்று மலர உதவும் சிறப்பான கிரியா ஊக்கியாக அமைந்து விடும்.*

*கடும் சோதனைகளும் கர்மவினைகளும், அவற்றை இறைவனின் திருநாமத்தை உச்சரித்தபடி அனுபவித்து விடுவதும், இறைமையை நம்முள் சீக்கிரத்தில் மலர வைக்கும் அனுகூலங்களாகும்.*

*தினசரி இறைவனை உபாசகம் பண்ணுவதும், நல்ல ஜீவன்களாகப் பார்த்து நட்பு கொள்வதும், புண்ணியத் தலங்களுக்கு யாத்திரைகள் சென்று வருவதும், மற்றவர்களின் தேவைகளுக்கு உதவுவதும் - நம்முள் இறை சக்தியை தூண்டிவிடும். புனிதமான எண்ணங் களிலேயே சிந்தனையைப் பதித்து, பாவ கர்மாக்களை மறுபடியும் உருவாக்கிக் கொள்ளாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.*

**வேதங்கள் விளக்குகின்றன:**

*“ஒருவனுடைய செயல்களைப் பொறுத்தே அவன் உருவாகின்றான். பாண்டித்தியம் மிக்க புண்ணியவானாக ஒருத்தன் ஆக்கப்படுகிறா னென்றால் அப்படிப்பட்ட நல்மகனாக அவன் வாழ்ந்ததனால்தான் என்று அர்த்தம். ஒருத்தன் மோசமான வாழ்க்கை வாழ்கிறா னென்றால், அப்படிப்பட்ட மோசமான கர்மாவை அவன் செய்திருக்கிறான் என்றே அர்த்தம்.’’ ஓம் நமசிவாய.*



*கர்மவினையின் சட்டம் நடுநிலைமையானது. சமநிலை கொண்டது.*
*நம் கையில் இருக்கும் விஷயத்தை*
*எப்படிப் பயன்படுத்துகிறோம் என்பதற்கு ஒப்பானது அது.*

*ஒருத்தி, தனது இருப்பிலிருக்கும் உணவினைப்*
*பசியோடிருக்கும் காகங்களுக்கு அளிக்கிறாள்.*

*ஒருத்தனோ, பசியால் அழும் பிச்சைக்காரனைப் பார்த்து, தானும் அழுவதுபோல காட்டிக்*
*கொண்டு தனது உணவினைப் பதுக்கிக் கொள்கிறான்.*

*இன்னொருத்தன், உணவினை திருடி சிறைக்குப் போகிறான்.*
*அவரவர் தர்ம நினைப்பின்படியே கர்மமும் அதுதரும் வினையும் போகின்றன.*

# மறுபிறப்பு எனும் இயக்கம் என்ன?

## ஸ்லோகம் 33

*மறுபிறப்பு - புனர்ஜென்மம் - என்பது, பிறப்பு, இறப்பு, பிறகு மீண்டும் பிறத்தல் எனும் ஓர் இயற்கை இயக்கமாகும். மரணத்தின் போது நம்முடைய உடலை நாம் உதிர்த்து விடுகின்றோம். பிறகு ரகசியமான சூட்சும உலகங்களில் வாழ்ந்துவிட்டு மீண்டும் பிறக்கிறோம். ஓம்.*

## விளக்கம்

இந்துமதத்தில், மறு பிறப்பு என்பது பற்பல கோடி ஆண்டுகளாக இருந்துவரும் ஒரு சிறப்பான ஆறுதலாகும்.

மரண பயத்தினை இது அகற்றுகின்றது. ஒருவன் ஏன் பண்டிதனாய் பிறக்கிறான் என்பதற்கும் மற்றொருவன் ஏன் முட்டாளாய் பிறக்கிறான் என்பதற்கும் விளக்கம் தருகின்றது இது.

இப்போது பிறப்பெடுத்து வாழ்ந்து கொண்டிருக்கும் உடம்பு கிடையாது நாம்.

நாம், அழியாத, அழிக்க முடியாத, என்றென்றும் நிலைத்திருக்கும் ஆன்மா.

சம்சாரம் எனும் கடலுக்குள் மூழ்கி, அனுபவித்து, இறுதியாய் முக்தியடைய பற்பல ஜென்மங்களாய் பற்பல உடல்களை இந்த ஆன்மா எடுக்கின்றது. சம்சார சாகரத்தில்தான் ஆன்மாவுக்கு அனுபவ முதிர்ச்சி சாத்தியம்.

மரணத்துக்குப் பிறகு நம் கண்களுக்கு தெரியாத உலகங்களில் நாம் வாழ்க்கையைத் தொடருகிறோம். பூமியில் வசிக்கும்போது செய்த செயல்களின் கர்மங்களுக்கு ஏற்ப சந்தோஷத்தையோ அல்லது துக்கத்தையோ நாம் அறுவடை செய்வோம்.

இன்னோர் உடலெடுத்து பிறக்கும் நேரம் வரும்போது, ஆன்மா புதுவுடலில் ஜனிக்கும்.

சில கர்மவினைகள் மனித உடலெடுத்துத்தான் கழிக்கப்பட வேண்டும் என்றிருப்பதால், ஆன்மாவின் முதிர்ச்சிக்காக மறுபடியும் நாம் பிறப்பெடுக்க வேண்டியதாகின்றது.

உயர் உலகங்களில் வாழ்ந்த பிறகு மற்றொரு கருவுக்குள் நம் ஆன்மா மறுபிறவி எடுக்கின்றது.

இதன் விளைவாக, பழைய மனோமய கோஸா தோலுரிக்கப் பட்டுவிட, புதிதாய் ஒன்று உருவாக்கப்படுகின்றது.

சென்ற பிறவியில் செயல்படுத்தப்பட்ட காரியங்களுக்கு ஏற்ப, மறுபிறவியின் இயல்பும் நிலைப்பாடுகளும் அமைகின்றன.

கர்மவினைகள் அனைத்தும் கழிக்கப்பட்ட பிறகு மறுபிறப்பு ஓய்கின்றது. கடவுள் என்பவர் உணரப்படுகிறார். மோட்சம் வழங்கப்படுகின்றது.

**வேதங்கள் சொல்கின்றன:**

‘‘மரணத்துக்குப் பிறகு, தான் செய்த கர்மங்களைத் தனக்குள் தக்க வைத்துக் கொண்டு வேற்றுலகங்களுக்குப் போகின்றது ஆன்மா. அங்கெல்லாம் தனது அறுவடை முடிந்தபிறகு, காரியங்கள் செய்யும் பூமிக்கே அது மீண்டும் திரும்புகின்றது. இவ்வாறாக தாகம் தணியாத ஆன்மாக்கள் மீண்டும் மீண்டும் மறுபிறப்புக்குள் தள்ளப்படுகின்றன.’’ ஓம் நமசிவாய.



*ஆன்மா, உள்ளார்ந்த பல உலகங்களுக்குப் பிரயாணிக்கின்றது. இந்துக்களுக்கு, மரணம் என்பது, ஆன்மா மேன்மையடையக் கிடைக்கும் ஓர் அனுபவம்.*

*தேவர்கள், பிரார்த்தனைகள் ஓதியும் மலர் சொரிந்தும் வரவேற்கும் ஓர் அனுபவம்.*

*இவ்வுலகங்களில் வாழ்க்கை தீரும்போது ஆன்மா மீண்டும் பூமியில் பிறக்கின்றது.*

*இங்ஙனமாய் இடம்பெறும் மறுபிறப்பு இறுதியாகும்போது, அந்த ஆன்மா இறைவனுடன் ஒன்றுக்குள் ஒன்றாகி, சிவலிங்கத்துடன் ஐக்கியமாகி விடுகின்றது.*

# மரணிப்பது மற்றும் மரணம் ஆகியனவற்றை நாம் எப்படிப் பார்க்க வேண்டும்?

### ஸ்லோகம் 34

*நம் ஆன்மா எப்போதும் அழிவது கிடையாது. வெறும் இவ்வுடல் மட்டுமே அழிகின்றது. நாம் மரணத்தை கண்டு அஞ்ச வேண்டாம். அது நேர வேண்டும் என்று எண்ணவும் வேண்டாம். ஆனால் மரணத்தை, நம்மை மேல்தூக்கி விடப்போகும் ஓர் அனுபவமாய் கொள்ள வேண்டும். நம்மை துல்லியமாக்கிக் கொண்டு இறைவனுடன் இறைவனாய் கரைந்து விட இடம்பெறும் பிரயாணப்பாதையில், வாழ்க்கை, மரணம் மற்றும் மறுபிறவி ஆகியன அங்கங்கள். ஓம்.*

### விளக்கம்

இந்துக்கள் மரணத்தை *மஹாப்ரஸ்தான* என்கின்றார்கள். *'ஒரு சிறந்த பிரயாணம்.'*

எடுத்திருக்கும் இந்த வாழ்க்கையின் பாடங்கள் முழுதும் கற்றுக் கொள்ளப்பட்டு விட்ட பிறகு, செய்யும் காரியங்கள் மிகவும் வீரியமான ஒரு கட்டத்தை எட்டும்போது, அக்கடுமையிலிருந்து விலகிட, உடலை விட்டு ஆன்மா புறப்படுகின்றது.

அப்போது, அந்த ஆன்மா தானிருந்த உடலினை ஆக்கியிருந்த அனைத்தையும், இப்பூமிக்கே விட்டுவிடுகின்றது.

நம்முடையவை என நாம் நினைத்துக் கொண்டிருக்கும் அறிதல், மனோசக்தி, நினைவுகள், புத்திசாலித்தனம் ஆகியன, ஆன்மாவில் அப்படியே தொடருகின்றன.

மரணம் என்பது மிகவும் இயற்கையான ஒரு சம்பவம். இதைக் கண்டு அஞ்சத் தேவையில்லை.

*நடக்கும்போது ஒரு கதவினைக் கடக்க நேர்ந்தால், அந்த அறையிலிருந்து அடுத்த அறைக்குள் நுழைவது எத்தனை துரிதமானதோ, அவ்வாறு மனித உடலிலிருந்து பிரபஞ்ச தேசங் களுக்குள் உடனடியாய் நிகழும் ஒரு மாற்றமே மரணமாகும்.*

*இதை அறிந்து கொள்ளும்போது மரணத்தைக்கூட ஓர் ஆன்மீக வாய்ப்பாகத்தான் (சாதனா) நாம் அணுகுகிறோம்.*

*சம்சாரக் கடலின் சுழலில் அகப்பட்டுக் கொண்டுள்ளதால், அனைத்துப் பிடிப்புகளையும் விட்டுவிட்டு பற்றற்று ஆகிவிடும் மனோநிலை நமக்குக் கிடைப்பதில்லை. கடவுளோடு ஒன்றாகி விடவேண்டும் என்று அவசரஅவசரமாய் வேண்டி அலைவதாலும், அது உடனடியாய் சித்திக்காத காரணத்தாலும் நமக்கு அமைதி கிடைப்பதில்லை.*

*இப்படிப்பட்ட சிக்கலிலிருந்து கழன்று, பற்றற்ற ஏகாந்தத்தை மரணம் தருவதால், அதனை இந்துக்கள் ஓர் ஆன்மீக அனுக்கிரக மாகவே காண்கிறார்கள்.*

*மனித உடலை உதிர்க்கும் தருணத்தில், புண்ணியாத்மா ஒருவருடைய அருகாமை அமைந்து விட்டால், மரணமெய்திப் பறக்கும் அந்த ஆன்மாவுக்கு, ஆயிரத்து எட்டு முறை புனித ஷேத்திரங்களுக்கு சென்று வந்த புண்ணியம் கிடைக்கின்றது.*

**வேதங்கள் விளக்குகின்றன:**

*''புல்லின் நுனிக்கு வந்துவிட்ட ஒரு புழு எப்படித் தானாகவே மற்றொரு நுனியைப் பிடித்துக் கொண்டு தனது பிரயாணத்தைத் தொடர்கின்றதோ, அதேபோலவே, ஆன்மாவாகப்பட்டது இவ்வுடலை விட்டுவிட்டு, மறுவுடலுக்குள் ஏறுகின்றது.'' ஓம் நமசிவாய.*



*மரணத் தறுவாயில் தனது குடும்பத்தாரால் அவர் கவனிக்கப்படுகின்றார்.*
*நிவாரணம் தர அவசரமாய் நெருங்குவதற்குள்,*
*காலம் கடந்து விடுகின்றது... அவர் மரணமடைந்து விடுகின்றார்.*
*அவரது குடும்பத்தார் ஒருவருக்கொருவர் ஆறுதல் தந்து கொள்கின்றார்கள்.*

*ஆன்மாவுக்கு அழிவே இல்லை என்ற போதனையினால்,*
*பிறகு நேர்ந்த மரணத்தையும் அவர்கள் ஏற்றுக் கொள்கின்றார்கள்.*

# மரணத்துக்கு ஒரு மனிதன் தன்னை எப்படி சிறப்பாய் தயார்படுத்திக் கொள்ள முடியும்?

**ஸ்லோகம் 35**

*ஓர் உடல் விட்டு மறுஉடலுக்குப் போக வேண்டியது தவிர்க்க இயலாத நியதி என்ற அறிதல் உள்ளதால், இந்துக்களாகிய நாம் கடமைகளை முடித்து விடுகிறோம். பிறகு ஜபம், வழிபாடு, பாண்டித்திய புத்தகங்கள், தியானம் போன்றவற்றில் தஞ்சம் புகுந்து, உள்ளுறையும் கடவுளை உணர்ந்துவிட வேண்டும் என்று தேடுகிறோம். அது கிடைக்குங்கால் சந்தோஷமாய் உலக வாழ்க்கையை அவிழ்க்கிறோம். ஓம்.*

**விளக்கம்**

இறப்பதற்கு முன்னால் எப்பாடுபட்டாவது தங்களது கடமைகளை நிறைவேற்றி விடுகிறார்கள் இந்துக்கள்.

பரிகாரங்களை முடிக்கிறார்கள். தனக்குள்ளோ அல்லது கூட இருப்பவர்களிடமோ நிலவும் கருத்து வேற்றுமைகளைக் களைந்து விடுகிறார்கள்.

இத்தனையும் மீறி நிறைவேற்றப்படாமல் விடப்படும் கர்மாக்கள், எதிர்வரும் ஜென்மங்களுக்குள் நுழைகின்றது என்பது இந்து விதி.

இக்கடமைகள் ஆற்றப்பட்ட பிறகு, கடவுள் பக்கமாய் நாம் திரும்புகிறோம். தியானங்கள், சரணாகதி மற்றும் புனித நூல்களைப் படிப்பது போன்றவற்றால் இதனை செயல்படுத்துகிறோம்.

மரணம்தான் சாஸ்வதம் என்பது நம் மதம் போதித்து நாமறிந்ததே. ஆகையால், மருந்து மாத்திரைகள் சாப்பிட்டு வாழ்வதையோ, செயற்கை முறை மருத்துவ உதவியால் ஆயுளை

*நீட்டிப்பதையோ அல்லது தற்கொலையில் ஈடுபடுவதையோ நாம் செய்வது கிடையாது.*

*அதிலும் தற்கொலை கூடவே கூடாது. இது கர்மவினைகளைத் தள்ளிப் போடுகின்றதே ஒழிய தவிர்க்காது. எந்த இடத்தில் நாம் நமது உயிரை மாய்த்துக் கொண்டு கர்மாக்களை நிறுத்தினோமோ அந்த இடம் வரை மீண்டும் வருவதற்காக பல ஜென்மங்கள் எடுக்க வேண்டிய போதாத நிலை ஏற்படும்.*

*வியாதி முற்றிப் போன கடுமையான நிலை ஏற்படும்போது, ப்ராயோபவேஷா எனும் கட்டத்தில் நுழைய மதம் அனுமதி தருகின்றது. தானாக முன்வந்து, உண்ணா நோன்பிருந்து, மதம் சார்ந்து இறப்பது.*

*மரணக்காலத்தில் மருத்துவமனையிலேயே கிடக்க வேண்டி வந்தால், நமது அன்புக்குரியவர்களோடு இருந்து இறப்பதற்காக இந்துக்கள் வீட்டுக்கு வந்து விடுவார்கள்.*

*மரணத்தறுவாயின் கடைசி மணித்துளிகளின் போது, அருகிலிருக்கும் உறவினர்கள் பிரார்த்தனையில் கவனம் பதித்திருக்க, நம்முடைய மந்திர ஜபத்தின் மீதே முழு கவனத்தையும் நாம் வைக்கிறோம்.*

*மரணம் நிகழும்போது கபால சக்கரத்தின் வாயிலாக உடலை அவிழ்த்து விட்டு பறக்கும் நம் ஆன்மா, தூய வெள்ளை ஜோதியுடன் கலந்து விடும்.*

**வேதங்கள் அறுதியிடுகின்றன:**

*‘‘வயோதிகத்தாலோ அல்லது நோய்வாய்ப்படுவதினாலோ உடல் விழும்போது, தனது தண்டிலிருந்து பட்டும்படாமல் தன்னை விடுவித்துக் கொண்டு கீழே விழும் ஒரு மாங்கனியைப்போல, தனது அங்கங்களை உதிர்த்து விட்டு வீழ்கின்றது ஆன்மா.’’ ஓம் நமசிவாய.*



*தூங்குவதைப் போன்றது மரணம்... அத்தூக்கத்திலிருந்து எழுந்திருப்பதைப் போன்றது மறுபிறப்பு, என்கின்றது திருக்குறள்.*

*வாழ்விலிருந்து சாவுக்கு தயாராகி விட்ட இந்து, ருத்திராட்ச மாலையுடனும் நெற்றி முழுவதுமான விபூதியுடனும் துணிந்து விடுகின்றான்.*

*தனது உடலை உதிர்த்து விட்டு அவன் மரணிக்கும்போது, சிவசிந்தனையிலேயே விடுபடுகின்றான்.*

அபிலாஷைகள் அற்றவர். அழியாதவர். தனக்குள் தான் அடங்கியவர். கருணை சொரூபமானவர். எவ்வகையிலும் குறைவற்றவர். இத்தகையவர்தான், வயதாகாமல் இளமை நிறைந்து நிலவும் ஆத்மாவைக் கண்டவர். இவர், மரணத்தைக் கண்டு அஞ்சுவது கிடையாது. *அதர்வண வேதம்.*

என்ன நடந்தாலும், அதிலிருந்து கற்றுத் தெளியாதவர், எப்போதும் களங்கமாய் நடந்து கொள்பவர், பேதை ஆவார். வாழ்க்கையின் இலக்கான இறைமையை அடைவது என்பதனை என்றும் இவர் அடையார். இதனால் மீண்டும் மீண்டும் பிறப்பெய்துவார். அனுபவ பாடங்களிலிருந்து தெளிந்த ஞானம் பெற்று தூய்மையான வாழ்க்கையை வாழ்பவர், ஞானியாவார். வாழ்க்கை இலக்கினை எட்டிப்பிடித்து விடும் இவர், மேற்கொண்டு பிறப்பதில்லை. *கிருஷ்ண யஜுர் வேதம்.*

அழியக்கூடிய என் சுவாசமே, நீ போய் அழியா ஒரே சுவாசத்துடன் கல. பிறகு இவ்வுடல் சாம்பலாய் முடியட்டும். என் நினைவில் கடந்த காலத்துக் கர்மவினைகள் மட்டும் நீடிக்கும். *சுக்ல யஜுர் வேதம்.*

கடினமான பொதிகளை வண்டியில் சுமக்கும் மாடு அவ்வண்டியை மூச்சிரைக்க உறுமியபடி இழுத்துப் போவதைப் போல, ஆவியினைச் சுமந்திருக்கும் இந்த உடம்பு, இறப்பவன் கடைசி மூச்சினை சிரமப்பட்டு விடும்போது, பூதவுடலை இழுத்து முனகியபடி ஒய்கிறது. எப்படி ஓர் அரசன் இறக்கும்போது அதிகாரிகளும், அமைச்சர்களும், குறுநில மன்னர்கள் பலரும் அவரை வந்து சூழ்ந்து நிற்கின்றார்களோ, அதேபோல, கடைசி மூச்சினை விட்டு மடியும்போது, அவ்வாழ்க்கையின் சக்திகள் அனைத்தும் ஓடி வந்து அவனை சூழ்ந்து நிற்கும். தலை வழியாகவோ, கை வழியாகவோ, கண் வழியாகவோ, அல்லது உடலின் எப்பாகம் வழியாகவோ ஆவி விலகும்போது, அந்த வாழ்க்கை முடிவுக்கு வருகின்றது. அப்போது ஆன்மாவுடன் வெளியேறிப் போகும் அவ்வாழ்க்கையில், அது சேர்த்து வைத்திருந்த அனைத்து சக்திகளும் கூடவே வெளியேறுகின்றன. இந்த பிரயாணமே கர்மவினை. முந்தைய ஜென்மத்து கணக்குகளும் இப்போதுகூட சேர்ந்து

கொள்ளும். இக்கட்டத்தில், பழைய நகையை வாங்கிக் கொள்ளும் ஒரு தங்கநகை வியாபாரி எப்படி அதனை புதுப்பொலிவுடனும் மெருகேற்றியும் புதிதான ஆபரணமாய் ஆக்குகின்றானோ, அதேபோல, இவ்வுடலை உதிர்த்து விட்டுப் போகும் ஆன்மா, புதிதும் மெருகேறியதுமான மற்றோர் உடலுக்குள் புகுகின்றது. சொர்க்கத்தில் வசிக்கும் அதன் மூதாதையர்களைப் போலவோ, அல்லது விண் ஜீவன் ஒன்றினைப் போலவோ, அல்லது ஜோதி ரூபமான கடவுளரின் ஜாடையிலோ, அல்லது பிரம்மமாகவோ, அல்லது தேவர்களைப் போலவோ அது மெருகேறித் தோற்றங் கொள்கின்றது. *சுக்ல யஜுர் வேதம்.*

ஓ, மனிதனே... இவ்வுடல் அழியக்கூடியது. மரணத்துக்கு சொந்தமானது உடல். ஆனால் இதுதான், அழிவற்ற, மரணமற்ற ஆன்மா வசிப்பதற்கான தளம். ஆன்மா இழந்து உடல் வீழும்போது அதற்கு துக்கமும் இல்லை, ஆனந்தமும் இல்லை. *ஸாம வேதம்.*

அழிவற்ற ஆனந்தத்தை தரும்படி நான் கடவுளைப் பிரார்த்திக் கிறேன். பிறவா நிலைமை வேண்டும் என்று நான் அவனை வேண்டுகின்றேன். அப்படியே நான் பிறக்க வேண்டும் என்பது அவன் தீர்ப்பானால், அப்பிறப்பில் அவனை மறவா நிலைமையை வேண்டுகிறேன். அவன் புகழ் பாடியபடி பாதாரவிந்தங்களில் விழுந்தே கிடைக்கும் ஆனந்த நிலைமையையும் வேண்டுகிறேன். *திருமுறை.*

மாயையால் ஆக்கிரமிக்கப்பட்டுள்ள அஞ்ஞானிகளான நாம் செய்யும் கர்மங்கள் நல்லவைகளாக இருந்தாலும்கூட, ஞான மெய்தி இறைவனை பார்ப்பதற்கான பிரயாணத்துக்கு அவையும் ஒரு தடைதான். கர்மங்கள் கரைய வேண்டும். கடவுள் அனுபவம் அப்போதுதான் அனுக்கிரகமாகும். இதற்கு கர்மவினை எனும் கனி முழுவதுமாக உட்கொள்ளப்பட்டு சுவைக்கப்பட்டு விட வேண்டும். இதைத்தான் கர்மவினை தீர்ந்தது என்கிறோம். இதற்கு தேவை, பற்பல ஜென்மங்கள். *மிருகேந்திர ஆகமம்.*

வேதங்களைக் கரைத்துக் குடித்துக் கரையேறியவன், மனித வாழ்க்கை நிரந்தரமானதல்ல என்பதைக் கற்றுத் தெளிகின்றான்.

ஆகவே, உண்ணா நோன்பிருந்து உடலை உதிர்த்துவிடத் துணிகின்றான். கடவுளையும் முனிகளையும் வணங்கி மரியாதை செலுத்தும் அத்தகைய சித்தன், என்றென்றும் ஆனந்தக் களமாய் விளங்கும் பிரம்மமான சொர்க்கத்துக்கு நேரடியாய் செல்கின்றான். *மஹாபாரதம்.*

பாம்பு எப்படி தனது தோலினை உரித்து விட்டு நகர்கின்றதோ, தனது இறகினை ஒரு பறவை எப்படி உதிர்த்து விட்டு மேற் கொண்டு பறக்கின்றதோ, கனவில் இடம்பெற்றவற்றை மறந்து விட்டு எப்படி ஒரு ஜீவன் விழித்தெழுகின்றதோ, அதேபோலவே தான் ஒருடலிலிருந்து மறுஉடலுக்கு ஜீவன் இடம்பெயர்கின்றது. இறைவனின் சித்தம் செலுத்தும் உடலைச் சேருமந்த ஜீவன், அங்கு நல்ல மற்றும் கெட்ட கர்மங்களை மேற்கொண்டு வாழ்கின்றது. *திருமந்திரம்.*

விதைகளை முளைக்க வைக்கிறார்கள், அவற்றிலிருந்து தாவரங்களை உருவாக்குகிறார்கள். அவற்றின் பலனையும் பலவகைகளில் அடைகிறார்கள். ஆனால், ஆன்மாவால் வளர்ச்சி அடையாத இத்தகையவர்கள், தங்களது சொந்த வாழ்க்கையே துரிதமாய் மறைந்துவிடத் தக்கது எனும் ஞானத்தை அறிய மறந்து போகின்றார்கள். கர்மவினைகளின் சிக்கல்கள் எதையுமே அறியாத இவர்கள், பரிதாபமாய் எரியும் நெருப்பினால் விழுங்கப்பட்டு விடுகின்றார்கள். *திருமந்திரம்.*

தப்பு செய்யும் ஒருவனுக்கே அவன் செய்யும் தப்புக்கள் அனைத்தும் மீண்டும் வந்து சேர்கின்றன. முற்பகல் தவறு செய்தால், அதன் பலன் அப்படியே தவறாது பிற்பகலில் அவனை வந்தடைகின்றது. *திருக்குறள்.*

என் வாழ்க்கையின் சாரமாய், கையில் அப்பழுக்கற்ற அக்னியை ஏந்தியவனாய், தூய தங்கத்தின் சாறாய், அனைத்து ஆன்மாக் களிலும் பரவியிருப்பவனுமாய் விளங்குபவனை, இவ்வாறாகவே அப்பூவுலகில் வாழ்ந்தபடி எவனொருவன் பிரார்த்திக்கின்றானோ, அவனுக்கு எதிர்வரும் பிறப்புக்கள் அனைத்தும் தீர்ந்து போகும். *நற்சிந்தனை.*

# சன்மார்க்கா



## மனித விடுதலை அடைவதற்கான பாதை

*நல்லது மற்றும் கெட்டது ஆகிய இரு கடன்களும் மீதியின்றி கரைக்கப்பட்ட பிறகு, சேர்த்து வைக்கப்பட்டிருந்த கர்மவினைகள் அனைத்தும் அதன் அடிவேர் வரை அறுக்கப்பட்ட பிறகு, பிரம்மத்தை உணர இருந்த தடைகள் அனைத்தும் அகற்றப்பட்டு விடுகின்றன.*

*உள்ளங்கை நெல்லிக்கனியைப் போல, ஆன்மாவுடனான தொடர்பு உடனடியாய் அமைந்து விடுகின்றது. இவ்வாறு பிரம்மம் எனும் ஆன்மாவினை வாழ்க்கையிலேயே அறிந்து விடும் ஒருவனுக்கு, பிறப்பு எனும் சுற்றிலிருந்து முழு விடுதலை தரப்படுகின்றது.*

***-சுக்ல யஜுர் வேதம்.***

# பாதையின் நான்கு நிலைகள் என்னென்ன?

### ஸ்லோகம் 36

*விடுதலை அடைந்து மனிதப் பிறப்பினை வெல்வதற்கான பாதைகள், இயற்கையாகவே நான்காய் வகுக்கப்பட்டுள்ளன. சரியா, தன்னலம் கருதாத சேவை. கிரியா, பூஜைகளில் ஈடுபடும் கடவுள் உபாசனை. யோகா, குருவின் கண்காணிப்பில் இடம்பெறும் தியானம். ஞானம், தெளிவடைந்த ஆன்மாவின் சத்திய ஜோதி.*

### விளக்கம்

சரியா, கிரியா, யோகா மற்றும் ஞானம் ஆகியன ஆன்மாவின் பரிணாம வளர்ச்சியில் வரிசைக்கிரமமாய் வருகின்ற படிக்கட்டு களாகும்.

முட்டையிலிருந்து புழுவாகி பிறகு பட்டாம்பூச்சியென உருவெடுத்துப் பறக்கும் வண்ணத்துப் பூச்சியின் அடுத்தடுத்த நிலைகளைப் போன்ற இயற்கையான கட்டங்கள் இவை.

தனது இறுதி இலக்கான இறைவனுடன் ஐக்கியமாதல் எனும் பேரின்ப நிலையினை அடைய, ஒவ்வோர் ஆன்மாவும் பற்பல ஜென்மங்கள் எடுத்துக் கட்டாயமாய் கடக்க வேண்டிய நான்கு பாதைகள்.

இவை நான்கும் ஆன்மீக நிலைகள். ஓர் ஆன்மா இவற்றுக்குள் நுழைவதற்கு முன்னால், கீழான நிலைகளில் கிடந்து தத்தளிக்க வேண்டியுள்ளது. இப்பகுதிக்கு ஆணவ மார்க்கம் என்பது பெயர். தான் மட்டுமே எல்லாம் என்று மமதை நிறைந்த நிலைப்பாடு.

ஆன்மா இவ்வாறாய் இருக்கும்போது பயம், பொறாமை, பழிவாங்கும் வெறி, குழப்பம், சுயகட்டுப்பாட்டினை இழந்த

ஆட்டம், தீய எண்ணங்கள் போன்ற கீழ்த்தரமான அதர்ம குணங்களாலேயே அது செலுத்தப்படும்.

இங்கு ஏற்படும் அனுபவங்களின் காரணத்தால் பிறகு சரியாவில் ஆன்மா விழித்தெழுகின்றது. இதுவே கர்ம யோகம். பிறருக்கு சுயநலம் கருதாது உழைக்கும் தயாள குணம்.

சரியா கட்டத்தில் முழுமுதிர்ச்சி கிடைக்கும்போதுதான் ஆன்மாவுக்கு கிரியாவுக்குள் நுழைய அனுமதி கிடைக்கின்றது. இங்கு முழு அர்ப்பணிப்பு தானாய் கனியும். பக்தியில் மனம் திளைக்கும். பக்தி யோகா என்பதே இது.

ஒவ்வொன்றும் பரீட்சை. தேறும்போது, அடுத்த கட்டம் சித்திக்கின்றது. கிரியாவில் தேர்ச்சி பெறும்போது குண்டலினி யோகாவாக ஆன்மா பூரித்துப் பூக்கின்றது.

பக்தியும் தியானமும் யோகாவும் தீவிரமாய் தொடரப்படும் போது, அந்த ஆன்மாவுக்கு கடவுள் எனும் உணர்தலும் அறிதலும் புரிதலும் இயற்கையாய் கிடைக்கின்றன.

ஜோதி ரூப மகாசக்தியைக் காணும் மகாயோகமிது. ஆன்மா கடந்து வந்த பாதைகளின் இறுதிக்கட்டம்.

இந்த நான்கு பாதைகளும் தனித்தனியானவை கிடையாது. ஒன்றை விட்டு மற்றதில் மாறிவிடும்படியான அனுமதிகளும் இங்கு கிடையாது. இவை நான்கும், ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு படிப்படியாக மற்றும் தொடர்ச்சியாக நீளும் ஒரே பாதையே - இதுவே, சன்மார்க்கப் பாதை.

**திருமந்திரம் சொல்கின்றது:**

''உயிர்ப்பின் உயிராகவே அமையும் மகோன்னத நிலையே ஞானம். உயிர்ப்பின் ஜோதியினை உணர்ந்து அவ்வொளியை உயர்த்திப் பிடித்து பாராட்டுவது யோகம். பிரார்த்தனைகளால் உயிர்ப்பினை உண்டாக்குவதே, வழிபாடு. பூஜித்தபடி பேரானந்தத்தைக் கொண்டாடுவது, சரியா.'' ஓம் நமசிவாய.



*ஆன்மாவின் மூன்று கட்டப் பாதைகள் இங்கு காட்டப்பட்டுள்ளன - இவை அனைத்தும் நான்காம் உச்சகட்டப் பாதையான ஞானத்துக்கு இட்டுச் செல்கின்றன.*

*சரியா நிலையில், தனது ஆபரணங்களை கடவுளுக்கு கொடுக்கிறாள் ஒரு பெண்மணி.*

*கிரியா கட்டத்தில், புனித நூல்களைப் படித்தறிய ஒரு சிறுவன் ஆசிகளைப் பெறுகின்றான்.*

*ஒரு குருவின் மேற்பார்வையில் இடம்பெறும் இடைவிடாத இறை சாதனையே, ஞானம் பழகும் உயர்கட்டம்.*

# சரியா பாதையின் இயல்பு என்ன?

## ஸ்லோகம் 37

*பிறர் நலம் மட்டுமே கருதி செய்யப்படும் மத சேவையே சரியா. சாஸ்திரம் கூறும் நெறிமுறையில் தர்மரீதியாய் கலாச்சாரம் காத்து வாழ்ந்து, தன்னைத்தானே சுத்திகரித்துக் கொள்ளும் பாடமிது. பிறவி சுபாவத்தால் உள்ளார்ந்து எழும் அடிப்படை குணாதிசயங்களை வெற்றி கொள்ளும் கட்டமிது. ஓம்.*

## விளக்கம்

*சரியா* என்றால் 'நடந்து கொள்ளும் விதம்' என்பதே நேரடியான பொருள்.

சமயம் சார்ந்த பிரயாணத்தின் முதல் கட்டமிது. ஏனைய மூன்று உயர் கட்டங்களுக்கு வழி போடுவதும்கூட.

இதற்கு *'தாஸ மார்க்கம்'* என்றும் மறுபெயருண்டு. 'சேவை மனப்பான்மை நிறைந்த பாதை' என்பது இதன் அர்த்தம். ஏனெனில், இங்கு, தனது எஜமானனுடன் தொழிலாளி ஒருவன் கொள்ளும் உறவினை தன்னுடைய எஜமானனான கடவுளிடத்தே கொள்கின்றது ஆன்மா.

*சரியா* முறையில் வாழ உயர்ந்த கட்டுப்பாடுகள் இருக்கின்றன.

தாழ்மையான முறையில் செய்யப்படும் சேவை, கோயில்களுக்கு சென்று வருவது, குடும்பத்துக்கும் சமூகத்துக்குமான கடமைகளைத் தவறாது செய்வது, புண்ணியாத்மாக்களுக்கு மரியாதை செய்வது, பெரியவர்களை மதிப்பது, செய்த பாவங்களுக்காக பிராயச் சித்தங்களை செய்து முடிப்பது, மற்றும் சரியான வகையில் வாழ இந்துக்களுக்கு நியமிக்கப்பட்டுள்ள பத்து நியமனங்களான *யமஸ்*

நியமனங்களை சரியாய் கடைபிடித்து நிறைவேற்றுவது ஆகியன அக்கட்டுப்பாடுகள்.

கட்டுக்கோப்பான சமூகத்தில் வசிக்கும் ஒருவன், அவனுக்குப் பிடித்தாலும் சரி பிடிக்கா விட்டாலும் சரி, *சரியாவைக்* கடைபிடிக்கின்றான்.

இளைய மூர்க்கத்தனமான ஆன்மாக்கள் முதிர்ந்திருக்காது. அவை, மேற்கூறிய கட்டுப்பாடுகளைக் காட்டுத்தனமாய் எதிர்க்கும், மறுக்கும். ஆனால் முதிர்ச்சியடைந்த ஆன்மாக்கள், சுலபமாகவும் இயற்கையாகவும் மேற்கூறிய நியதிகளைத் தீர்த்து வைக்கும்.

சரியான முறையில் தர்மரீதியாக நடந்து கொள்வதும், தியாக உணர்வோடு செய்யும் உபகாரங்களும், என்றும் வீண் போனதில்லை.

*சரியா* அல்லது கர்ம யோகத்தின் அடிப்படையே, எவ்விதமான பிரதி உபகாரமும் எதிர்பார்க்காமல் செய்யப்படும் சமய சேவையே ஆகும். இதற்கு, ஆன்மாவை மூடியிருக்கும் கர்வத்தை விலக்கி அதனை பக்தி சொரூபமாக ஆக்கிவிடும் மந்திர சக்தியுண்டு.

**திருமந்திரம் தரும் விளக்கம்:**

''சின்னச்சின்ன கோயில் திருப்பணிகளான விளக்கேற்றுவது, மலர்கள் பறித்துப் போய் தருவது, ஆர்வமாய் கோயில் தளங்களை மெழுகித் தருவது, இறைபுகழை அங்கு பாடுவது, மணியோசையை எழுப்புவது, அபிஷேகத்துக்கான தண்ணீரை எடுத்து வந்து தருவது போன்றவை, நல்மார்க்கத்துக்கான அங்கங்களாய் விளங்குகின்றன.'' ஓம் நமசிவாய.



*பூஜைக்கு உகந்த பொருட்களனைத்தையும் கிணற்றடிக்கு கொண்டு வரும் ஓர் இளையவன், எலுமிச்சம்பழம் மற்றும் நீர் கொண்டு அவற்றை துலக்கி பொலிவூட்டுகின்றான்.*

*விளக்குகள், ஊதுவத்தி கூடைகள் போன்றவற்றை அவன் பளபளப்பாக்குகின்றான்.*

*இளைஞனின் சுயநலமற்ற இந்த சிறு சேவையை மகாசக்தியர் மவுனமாக கணக்கில் வைத்துக் கொள்கின்றனர்.*

# கிரியா பாதையின் இயல்பு என்ன?

### ஸ்லோகம் 38

*கிரியா என்பது தினசரி ஆனந்தமாய் செய்யப்படும் வழிபாடாகும். உள்ளும் வெளியுமாய், வீடு மற்றும் கோயில் ஆகிய தலங்களில் நடத்தப்படும் பூஜைகள், ஜபங்கள், பிரார்த்தனைகள், விரதங்கள், புனித நூல்களைப் படிப்பது போன்றவை இதில் அடங்கும். இதனால், கடவுள் மற்றும் கடவுளர்கள் பற்றிய நம்முடைய அறிதல்களும் அவர்தம் மீதான அன்பும் விசாலமடையும். ஓம்.*

### விளக்கம்

கிரியா பாதையில் பிரயாணிக்கும்போது, பக்தி யோகத்தின் மூலம் ஆழ்ந்த மற்றும் உண்மையான பக்தியை எதிர்பார்க்கின்றது இந்து மதம்.

தான் எனும் புத்திசாலித்தனம் இங்கு மிருதுவாக்கப்படுகின்றது. அன்பு, மொட்டவிழ்கின்றது.

*சரியாவில்,* சாதனா எனப்படும் இறைப் பணிகள் முழுதும் வெளிப்புறம் சார்ந்தே அமைந்திருக்கும். ஆன்மீகப் பாதையின் முன்னேற்றத்தின் இரண்டாம் படியான *கிரியாவில்,* அது உள்ளார்ந்தும் இடம்பெறும்.

*கிரியா* என்றால், செயல் அல்லது சடங்கு என்று அர்த்தமாகின்றது.

உடல் மற்றும் புத்தி சார்ந்த தூண்டுதல்களுக்குள் வீண் பிடிவாதமாய் வீழ்ந்து கிடந்த ஆன்மாவினை, இறைவன் எனும் உணர்தலை நோக்கித் தூண்டி விடும் பாதையாகும் இது.

கடவுளின் அனுக்கிரகத்தால் ஓர் ஆன்மாவுக்கு கிரியா நிலை சித்திக்கும்போது, இறைமை பொதிந்து கிடக்கும் விக்கிரகத்தை

வெறும் கல்லாய் அது பார்க்காது... மாறாக, கடவுள் நிஜமாய் வாழும் ஓர் உயிர்ப்பாய் பார்க்கும்.

அப்போது சடங்குகளையும் பூஜைகளையும் நாம் செய்தாக வேண்டும் எனும் நிர்ப்பந்தத்துக்காக பண்ண மாட்டோம்... அவற்றை 'நாம் செய்ய வேண்டும்' எனும் பக்தி உந்துதலால் மனப்பூர்வமாய் நடத்துவோம்.

கோயிலில் ஏற்படும் இறை அதிர்வுகள், ஆன்மாவின் இத்தனை காலத் தேடலுக்குக் கிடைத்த விடை என்று உணர்வோம்... ஆகவே மெய்யுருகி அங்கு ஈர்க்கப்படுவோம் நாம்.

ஆனந்தமாய் பாடுவோம்.

வேதங்களும் ஆகமங்களும் கூறும் இறைமையை நாம் உள்ளார்ந்து வாங்கிக் கொள்வோம்.

புனித யாத்திரைகள் மேற்கொண்டு ஆன்மாவைப் பரிசுத்த மாக்குவோம்.

வாழ்க்கை முறைக்கு கூறப்பட்டுள்ள பத்து தர்ம நியமனங்களை விட்டு விடாமல் சத்தியமாய் கடைப்பிடிப்போம்.

ஆன்மா முதிரும்போது, கிரியா பாதை இறைவனால் அருளப்படும். இக்காலகட்டத்தில் இறைவனுடனான உறவு ஒரு மகனுக்கும் பெற்றவர்களுக்குமான உறவுபோல மின்னும். இதனாலேயே இப்பாதைக்கு சத்புருஷ மார்க்கம் என்றொரு பெயரும் விளங்குகின்றது.

**திருமந்திரம் இட்டுள்ள கட்டளை:**

''பூஜை, பக்தி நூல்களைப் படிப்பது, மந்திரங்களை ஓதுவது, ஜபம் செய்வது, உண்மையில் ஒழுகுவது, பொறாமைகளை அறவே ஒழித்து விடுவது, அன்னதானம் செய்வது - இவை மற்றும் இவற்றைப் போன்ற சுயநலம் கருதாத அனைத்தும், ஒப்புயர்வற்ற சத்புருஷ மார்க்கத்தை வடிவமைக்கின்றன.'' ஓம் நமசிவாய.



*இந்தியாவில், ஒவ்வொரு காலை வேளையிலும் பெண்கள் வீட்டு வாசலை சுத்தம் செய்து விட்டு புனித சின்னமாம் கோலத்தினை இடுவார்கள்.*

*குடும்பத்துக்கு சௌபாக்கியத்தைக் கொண்டு வர இது செய்யப்படுகின்றது.*

*நீரூற்றி, துளசி செடியினை வணங்கிய பிறகு, அரிசி மாவு கொண்டு கோலமிடுகிறாள் இப்பெண்மணி.*

## யோகப் பாதையின் இயல்பு என்ன?

### ஸ்லோகம் 39

*யோகா என்பது, கடவுளுடன் ஐக்கியமாக்கிவைக்க வல்லதோர் உள்ளார்ந்த வழிபாடு. பரசிவத்தினை ஆன்மாவில் உணர வழிகாட்டும் குருவாகின்றார் சத்குரு. அத்தகைய சத்குரு ஒருவரின் வழிகாட்டுதலின் பேரில் தினசரி மேற்கொள்ளப்படும் தியானம், பற்றற்ற நிலைப்பாடு மற்றும் துறவற ஒழுக்கம் ஆகியன யோகாவின் அம்சங்களாகின்றன. ஓம்.*

### விளக்கம்

யோகா என்றால் ஐக்கியம், ஒன்றாகிவிடுதல்.

தனக்குள்ளேயே இறைமையுடன் ஐக்கியமாகி நிலைபெறும் ஓர் இயக்கமே யோகா ஆகும்.

சரியா மற்றும் கிரியா ஆகிய இரண்டு வழிமுறைகளையும் பிழைகளற்று துல்லியமாக்கிக் கொள்வதினால் கைகூடுவதாகும், யோகா.

இந்நிலையில் நம்முடைய ஆத்ம தோழர்போல கடவுள் ஆகிவிடுவதால் யோக மார்க்கத்திற்கு சகா மார்க்கா என்றும் ஒரு பெயர் உண்டு.

உள்ளார்ந்த ஆன்மாவில் கடவுளை அறியும், இறைவனை உணரும், உணர்ந்து இரண்டறக் கலந்து விடும் ஒரு பேரின்ப நிலைமை, இரண்டு நிலைகளினால் அடையப்படுகின்றது. யோக நிலைகளில் சாந்தமாய் அமர்ந்து விடும் ஆசனா எனப்படும் உட்காரும் நிலைகளினாலும், மூச்சினைக் கட்டுப்படுத்தும் பிராணாயாமம் எனும் நிலையினாலும் அடையப்படுகின்றது.

*யோகவழியில் முன்னேற பிரத்யாஹார எனப்படும் புலனடக்கம் அவசியம். சத்குருவின் வழிகாட்டுதல் இதனை இலகுவாய் அடைய உதவும்.*

*இது, தாரணா எனப்படும் மனதினை ஒருநிலைப்படுத்துதலில் கவனமாய் நிலைத்துவிடும் ஆதாயத்தினை கைகூட வைக்கும்.*

*மனம் நிலைப்படுதலே தியானத்தின் நுழைவு. மதம் பிடித்த மனத்தினை கட்டிவிட்டால் மட்டுமே தியானம் வசப்படும்.*

*இவை சித்திக்க வருடங்கள் பிடிக்கும். கட்டுப்பாட்டுடன் மேற் கூறிய யோக வழிமுறைகளில் நம்பிக்கையுடன் முன்னேறும்போது 'ஞானத் தெளிதல்' எனும் குண்டலினி அக்னி, உடலிலுள்ள உயர் சக்கர மையங்களை நோக்கி ஏறும்.*

*குண்டலினி அக்னியின் எழுச்சி, முந்தைய கர்மவினைகளையும் இப்போது நாமிருக்கும் அறியாமை எனும் இருளையும் ஒருசேர எரித்துப் பொசுக்கி விடும்.*

*ஆக தியானம் இறுதியில், புலன் உணர்வுகள் அனைத்தையும் கட்டுப்படுத்தி மூளையின் சக்தியை மட்டும் பிரதானமாய் விஸ்வரூப மெடுக்க வைக்கும் ஸர்விகல்ப சமாதி எனும் நிலைக்கு கொண்டு போய் சேர்க்கும். ஆழ்நிலையில் சச்சிதானந்தத்தை முழுதும் உணரும் நிலைமையிது.*

*இது, பிறகு, முற்றும் முடிவுமான பரசிவ நிலைமைக்கு - நிர்விகல்ப சமாதி நிலைக்கு - அமைதியாய் அழைத்துப் போய் விடும்.*

*நீண்ட நெடிய பாதையாகவும் வருடங்கள் பல தேவைப்படும் பிரயாணமாகவும் இவை உள்ளன. இவற்றில் தடுமாறி வழுவி விடாது நேராய் பிரயாணித்து வெற்றி பெற நிச்சயமாய் ஒரு சத்குருவின் வழிகாட்டுதல் அவசியமாகின்றது.*

*கிரியா நிலைமையில் துல்லியமாய் தேறியிருக்கும் ஒரு ஆன்மீக நபரால் செய்யப்படும் யோகப் பயிற்சிகளை, அக்னியாய் கொழுந்து விட்டு எழும்பும் அவருடைய குண்டலினி சக்தியின் மூலமாக*

*அவரை இறைவர்கள் கைநீட்டி வரவேற்று பெற்றுக் கொள்கின்றார்கள்.*

**யோகியை வேதங்கள் பாராட்டி பேசுகின்றன:**

*''நேர்மையான பிரயாசைகளின் வாயிலாக புலன்களின் செயல்களை தணிக்கை செய்தபடியிருங்கள். சுவாசத்தினைக் கட்டுப்படுத்துவதினால், உயிர் ஸ்தான வேலைப்பாடுகளை சீர்செய்யுங்கள். தேரோட்டி தனது குதிரையின் தறிகெட்டோடும் வேகத்தினைக் கட்டுப்படுத்திக் கொண்டேயிருப்பதைப் போல, இறைவனை அடைந்து விட வேண்டும் என்று முன்னேறும் ஒரு நிஜமான ஆன்மீக அன்பர் தனது சிந்தனையின் வேகத்தைக் கட்டுக்குள் வைத்துக் கொள்கின்றார்.'' ஓம் நமசிவாய.*



*உள்ளார்ந்த தளங்களிலிருந்து சிவபெருமான் உற்று நோக்கிக்கொண்டிருக்க, அவரது டமருகம் எனும் உடுக்கை பற்பல படைப்புகளின் நாத அலைகளை இடைவிடாது வெளியிட்டுக் கொண்டிருக்க, மகரிஷி நந்திநாதர், தனது வலக்கையை வரமருளும் அபய முத்திரையாய் மலர வைத்து, அவருடைய எட்டு சீடர்களின் யோக தாகத்தினைத் தணித்துக் கொண்டிருக்கின்றார்.*

# ஞானப் பாதையின் இயல்பு என்ன?

## ஸ்லோகம் 40

*ஞானம் பெற்று கசடுகளெல்லாம் நீங்கி சித்தம் தெளிவடைந்து விட்ட ஒரு ஞானியிடமிருந்து கதிர்வீச்சாய் வெளிவந்து கொண்டிருக்கும் தெய்வீக ஜோதி பிரகாசத்துக்கு ஞானம் என்று பொருள். ஞானியின் ஆன்மா முதிர்ந்திருக்கும். கனிந்த மனமது. பூமியின் கர்மக்கடன்களைக் கழித்தபடி வாழ்ந்து கொண்டிருந் தாலும்கூட, சிவம் எனும் பூரணத்துக்குள் மூழ்கியிருக்கும் அது, கடவுளை அறிந்து உணர்ந்துவிட்ட புண்ணியாத்மாவாகும். யோக தவத்தினால் கையில் விழும் கனி, ஞானம். ஓம்.*

## விளக்கம்

இளைய ஆன்மாவின் ஞானம் பெறாத புத்தி, திடமானது. வலையைப் போன்று நன்கு பின்னப்பட்டது.

சிந்திக்கும் திராணி பெற்றுவிடும் விடலைப்பருவத்து மூளை, சிக்கலானது. உலகத்தினை பருவகாலத்து மூளை எப்படிப் பார்க்கின்றதோ அதுதான் நிதர்சனம் என்று நம்பி விடும் பருவமிது.

நமது வழக்கமான பகுத்தறிவு புத்தியினைத் தாண்டியது, தெய்வீகம் அடங்கிய புத்தி.

மர்மமான அறைக்குள் மறைந்திருக்கும் ஆன்மாவின் தெய்வீகப் பகுதியில், தெய்வீக புத்தி உள்ளது. இது, *கிரியா* பயிற்சியால் நன்கு பட்டை தீட்டப்பட்ட பிறகு, சிவனின் இரண்டு பரிசுத்தங்களான சச்சிதானந்தம் மற்றும் பரசிவம் ஆகிய இரண்டினையும் கண்டுவிடப் பரிதவிக்கும்.

யோகப் பயிற்சியின் பலனாக, ஆன்மாவின் தெய்வீகப் பகுதிக்குள் வெடித்துக் கொண்டு நுழைந்து விடுகின்றார் சித்தர்.

இங்கு கருணையின் முழுலயத்தினையும் அவர் அனுபவிக்கின்றார். மாய மலங்கள் எரிக்கப்பட்டுவிட, அனைத்தையும் அறிந்து விடுகின்றார் அவர். அவருக்கு, கடவுளைப் போல, எல்லாமும் தெரியும். அப்பழுக்கற்ற சாந்தத்துக்குள் உறைகின்றார்.

இது யோக ஞானம். சச்சிதானந்த பிரதேசம்.

இது தகர்த்தெறியப்பட்டு, யோகி உயர எழுந்து பறக்கும்போது பரசிவத்துக்குள் பிரவேசிக்கின்றார்.

யோகியென்றிருந்த அவர், இங்கு ஞானியாய் உருவாகின்றார்.

இந்த வார்த்தைகளற்ற நிர்விகல்ப சமாதிக்குள் நுழைந்து பிறகு நினைவுலகுக்குள் திரும்பும் ஒவ்வொரு தருணத்திலும் மென் மேலும் தெளிந்த ஞானமடைந்தவராய் அவர் வெளிவருகின்றார்.

அவர் விட்டு விடுதலையடைந்தவர். தெளிந்தவர். எல்லாம் அறிந்தவர். ஜீவன் முக்தி என்பவர் இவர்.

கைவல்ய எனப்படும் அப்பழுக்கற்ற சுதந்திரம் என்பதன் சின்னம்.

சத்திய ஜோதியின் பிரகாசத்தால் நிரப்பப்பட்டவர்.

அன்பின் ஆறாய் பிரவாகமெடுத்துக் கொண்டிருப்பவர்.

வெறுமனே தத்துவரீதியான பக்கங்களைப் படித்துக் கொண்டிருப்பதினால் மட்டுமே ஒருவரால் ஞானியாகிவிட முடியாது.

புத்தி சார்ந்த பகுதிகளையெல்லாம் கடந்து உள்ளுணர்வு சார்ந்த ஆன்மாவின் கைகளில் இருக்கின்றது, ஞானம் எனும் பிரதேசம்.

**வேதங்கள் கூறுகின்றன:**

ஆன்மா என்றால் என்ன என்பதனை, சீர்படுத்தப்பட்ட புண்ணிய ஆன்மாக்களான ரிஷிகள் கண்டுணர்ந்த பிறகு, திருப்தியாகி விடுகின்றார்கள். ஆசைகள் அனைத்தும் துறந்து, அனைத்தும் உணர்ந்துவிட்ட தங்களுடைய 'அறிதலினால்' நிம்மதி எய்தி விடுகின்றார்கள். தெளிந்து விட்ட இந்த நல்லவர்கள், எங்கெங்கிலும் பரவியுள்ள ஒரே சக்தியினை அடைந்து விட்ட கட்டத்தில் - அக்கடவுளுக்குள்ளேயே நுழைந்து விடுகின்றார்கள்.'' ஓம் நமசிவாய.



*பரிசுத்தத்தன்மை, பயிற்சி மற்றும் உள்ளுணர்தல் ஆகியவற்றால்*
*ஞானம் எனும் உயர்நிலை தெய்வீகம் சித்திக்கின்றது.*

*மர ஆசனத்தில் உட்கார்ந்திருக்கும் இளந்துறவி ஆன்மீக வெற்றியினை அடைந்துவிட்ட*
*விதமாய் கையில் மோதக இனிப்பினை வைத்திருக்கின்றார்.*

*குருதட்சிணையுடன் வரும் சீடருக்கு இந்தக் கொழுக்கட்டையினை*
*அளித்து சீடராக்கிக் கொள்வார்.*

*எவ்வளவு தூரத்திலிருந்தாலும் தங்களுக்கு கடவுளின் கருணை கிட்டிவிட வேண்டும் என்று பக்தர்கள் வேண்டுகின்றார்கள். ஞான ஒளியினை அடைந்து அதனை அப்படியே உள்ளக் கோயிலில் வைத்துக்கொள்கின்றார்கள். நமது சிவபெருமானின் கருணை வைபவமானது. முழு ஜோதி. ஒவ்வொரு இருதயத்திலும் வைத்துப் போற்றத்தக்கது. ரிக் வேதம்.*

*புண்ணியாத்மாவாக மலர்ந்தவர்களுக்கு, முழு விடுதலை அடைந்துவிட உள்ள ஒரே வைராக்கியமான பாதை, 'நான் பிரம்மன்' என்பதேயாம். பந்தத்தளைகள் மற்றும் இவை இல்லாத விட்டு விடுதலை பிரதேசம் ஆகிய இரு நிலைமைகளுக்கு கொண்டு செல்லும் சட்டங்கள்: என்னுடையது என்கிறதோர் எண்ணமும், என்னுடையது என்ற எண்ணமே இல்லாததொரு நிலைமையுமே ஆகும். யஜுர் வேதம்.*

*அவர் தனித்து இருப்பார், ஆனால் அப்படி அவர் தனித்து இருக்கவில்லை. அவர் உடலோடு உலாவுவார், ஆனால் அவர் அப்படியோர் உடலில் மட்டும் வசிக்கவில்லை. அவருடைய உள்ளார்ந்த ஆன்மா இப்போது எங்கும் எதிலும் பரவிய ஒன்றாகிவிட்டது. தனது இதயத்தைச் சுத்திகரித்துக் கொண்டு சிந்தையில் தெள்ளத் தெளிவினை அடைந்து விட்ட யோகி, அனைத்திலும் இருப்பது நானே என்பதை கண்ணாரக் காண்கின்றார். இதுவே வரங்களிலெல்லாம் தலையாய வரம். சுக்ல யஜுர் வேதம்.*

*ஓம் எனும் தாரக மந்திரத்துடன் தன்னுடைய சுவாசத்தை ஒரு யோகி இணைத்து விடுவதே - அல்லது, பல வடிவங்களாக இருக்கும் அந்த ஒரே சக்தியுடன் தன்னை இணைத்துக் கொண்டு விடுவதே - யோகம் என்பதாகும். சுவாசம், புத்தி மற்றும் புலன்கள் ஆகிய அனைத்தும் ஒரே ஆன்மாவுடன் இணைந்து விடுவதும் அப்போது அனைத்தும் துறக்கப்படுவதுமே, யோகம் என்றாகின்றது. கிருஷ்ண யஜுர் வேதம்.*

*புலன் சார்ந்த ஐந்து அறிதல்களையும், அதன்கூட புத்தி மற்றும் புத்திசாலித்தனம் ஆகியனவற்றையும் சேர்த்துக் கழுவிவிடுவதையே, உயர்ந்தபட்ச ஞானம் என்கின்றார்கள். கிருஷ்ண யஜுர் வேதம்.*

ஞானம் அடைவதற்கான பாதைக்குள் செலுத்துவதை, ஒரு குருவினால் மட்டுமே செய்துதர முடியும். ஞானம் என்கிற இலக்குக்குண்டான தீர்வுகள், குருவின் உதவிகள் இல்லாமல் செய்யப்படும் எந்தவொரு பிரயத்தனத்தினாலும் கிட்டாது. குரு, தனது மாணாக்கர்களுக்கு போதிக்கின்றார். மாணவனுக்கு கருணை என்பதன் ஒரு ஸ்தூலப்பொருளாய் ஆகின்றார் குரு. அவனுடைய கவுரவம் குருவாலேயே விரிவடைகின்றது. இதனால் தனது குருவின்மீது மட்டற்ற அபிப்பிராயத்தை அவருடைய மாணவன் வைத்திருக்க வேண்டும். இங்கு குரு என்பவர் சாட்சாத் அந்த சிவபெருமானேதான். சிவபெருமான்தான் குரு என்று அழைக்கப்படுகின்றார். குருவோ அல்லது சிவபெருமானோ, இருவருமே வித்யா என்று ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளார்கள். *சந்திரஞான சைவ ஆகமம்.*

யோகிகள், யோக வழியில் ஞானஒளியினை அடைந்துவிட எடுக்கப்படும் முயற்சிகள் எட்டுப்படிகளாய் முன்னேறுகின்றது என்பதை தெரிந்து கொள்ள வேண்டும். அவை: *நியமனம், ஆசனம், பிராணாயாமம், ப்ரத்யாஹரா, தாரணா, தியானா மற்றும் ஸமாதி. சுப்ரபாத ஆகமம்.*

தன்னுடைய திறமைகளால் மட்டுமே ஒருவனால் மோட்சத்தை அடைந்து விட முடியாது. கர்மவினைகளை வெட்டிச் சாய்க்கும் சிவபெருமானின் கருணை இல்லாமல், மோட்சம் எனும் உயர் ஸ்தானத்தை எட்டவே இயலாது. *பௌஷ்கார ஆகமம்.*

அவர் மட்டுமே அனைத்தும் கற்றவர். அவர் மட்டுமே அதிர்ஷ்ட சாலி, வெல்பவர். அவர் சிந்தை மட்டுந்தான் காற்றினைப்போல அலைபாயாமல் ஸ்திரமாய் நின்ற ஒன்று. இதுதான் விடுதலை அடைவதற்கான வழி. இதுதான் மிக உயர்ந்த வெற்றி, ஞானம், தெளிவு. ஞானம் தேடி அல்லாடிய அனைவருக்கும் கிடைக்கும் விடை, இதுதான். *தேவிகாலோத்தர ஆகமம்.*

இந்த மாய உலகத்தின் இறைவனுக்கு, நம்முடைய அத்தனை நினைப்புகளும் நன்கு தெரியும். ஆனால் நாம்தான் அவரை நினைப்பதே இல்லை. ‘எனக்கு கடவுள் கருணையே காட்டு வதில்லை’ என்று சிலர் முனகுகின்றார்கள். ஆனால் தன்னைத்

*தேடும் ஆன்மாக்களை ஆண்டவன் தேடுகின்றார். அவர்கள் ஆன்மாக்களை கடைத்தேற்ற ஓடிவருகின்றார். 'அவர்களுக்கு மட்டும் சிவபெருமானின் கருணைக் கடாட்சம் எப்படி கிடைத்தது?' - நீங்கள் கேட்கின்றீர்கள். வாழ்க்கை எனும் போர்க்களத்தில் அவர்களுடைய பயந்தலறிய சிந்தை அல்லாடிக் கொண்டிருந்தது. இதிலும் அவர்கள் ஞானப்பாதையில் தங்களை பயிற்சியில் ஈடுபடுத்திக் கொண்டார்கள். இதன் விளைவாக இருளை அகற்றினார்கள். ஆண்டவனை நம்பி, அவருடைய தாமரை மலர்ப்பாதங்களைப் பற்றி பக்தி செலுத்தினார்கள். திருமந்திரம்.*

*கடவுளைப் பார்க்க, அன்பால் உருகி அவருக்கு பக்தி செய்ய, அவர் மீது தியானிக்க, அவரைத் தொட்டுவிட, அவரை போற்றித் துதிபாட, அவரது தாமரைப் பாதங்களை தங்களது தலைமேல் தூக்கி வைத்து அகமகிழ, விட்டு விடுதலை எனும் ஆன்ம சுதந்திரத்தை அள்ளித்தரவல்ல சன்மார்க்கப் பாதையில் பிரயாணிக்க வேண்டும். திருமந்திரம்.*

*சுயகட்டுப்பாடு, கடவுளர்களில் ஒருவராய் கொண்டுபோய் வைக்கும். அது இல்லாத நிலைமை, இருளில் தள்ளிவிடும். திருக்குறள்.*

# திரிலோகம்



## மூவுலகங்கள்

*மனிதனின் ஆவி உலவ வேண்டிய இரண்டு இடங்கள் உள்ளன.*
*இவ்வுலகம் மற்றும் இதுதாண்டிய உலகம்.*
*மூன்றாவது உலவுமிடமும் இருக்கின்றது. உறக்கம் மற்றும் கனவு எனும் நிலம் அது.*
*இந்த எல்லைக்கோட்டில் நின்று கொள்ளும்போது மனிதனுடைய ஆவியால்*
*இவ்வுலகம் மற்றும் இதனைத் தாண்டி வெகு தூரத்திலிருக்கும் உலகம் ஆகிய*
*இரண்டிலும் சஞ்சரிக்க முடியும்.*
*இந்த எல்லைக்கோட்டில் இருக்கும்போது இவ்வுலகம் உண்டாக்கும் துயரங்கள்*
*அனைத்தையும் தனக்குப் பின்னால் தள்ளி விடுகின்றான் மனிதன்...*
*அவனுக்கு முன்னால், தள்ளியிருக்கும் உலகத்து*
*ஆனந்தம் ஒன்றை மட்டுமே அப்போது அவன் பார்க்கின்றான்.*

***-சுக்ல யஜுர் வேதம், பிருஹதாரண்யக உபநிடதம்.***

# இப்பிரபஞ்சம் எங்கிருந்து வந்தது?

## ஸ்லோகம் 41

*தலைமைக் கடவுளான சிவபெருமான் இவ்வுலகத்தையும் இதிலுள்ள அனைத்தையும் படைத்துள்ளார். நாம் ஸ்தூலமாய் பார்க்கும் இவ்வுலகம் மற்றும் நம்மால் பார்க்க முடியாத சூட்சும ஆன்மீக உலகம் ஆகிய இரண்டிலும் உள்ள ஒவ்வோர் அணுவையும், அவரே நொடிக்கு நொடி படைத்து இருப்பில் வைக்கின்றார். அனைத்தும் அவருள்ளேயே. அவரே ஒவ்வொன்றிலும் நிறைந்துள்ளார். ஓம்.*

## விளக்கம்

*சிவபெருமான், நம்மையெல்லாம் படைத்தார்.*

*பூமியை அவர் படைத்தார். இதன் நகரும் மற்றும் நகரா அனைத்தையும் அவரே படைத்தார்.*

*காலம் என்பதனையும் புவியீர்ப்பு என்பதனையும் அவரே படைத்திட்டார். எல்லையில்லா அண்டம், அவற்றின் எண்ணிலடங்கா நட்சத்திரங்கள், அவராலேயே படைக்கப்பட்டன.*

*இரவு-பகல், சந்தோஷம்-துக்கம், அன்பு-வெறுப்பு, பிறப்பு-இறப்பு ஆகியனவும் சிவபெருமானால் படைக்கப்பட்டன.*

*மிக நுண்ணியவை, புற்கள் முதல் இவ்வுலகம் மற்றும் இதர உலகங்கள் என எல்லாவற்றையும் அவர் படைத்தார்.*

*மூவுலகங்கள் இருக்கின்றன: காரணத்துக்காக படைக்கப்பட்ட பூலோகம், அந்தர்லோகம் மற்றும் சிவலோகம்.*

*அனைத்துக்கும் காரணகர்த்தாவாக அனைத்தையும் படைத்த வராக விளங்கும் சிவபெருமான், படைக்கப்படாதவர். அவர் சுயம்பு.*

*அனைத்துக்கும் ஒரே தந்தையெனும்போது மஹாதேவன் என ஆகும் சிவபெருமானே அனைத்து ஆன்மாக்கள் மற்றும் அனைத்து வடிவங்கள் என்று உருவெடுக்கின்றார். நெருப்பிலிருந்து ஒளி சிதறுவதைப்போல, கடலிலிருந்து அலைகள் உருவாவதைப்போல, தன்னுள்ளிருந்து அனைத்தையும் படைக்கின்றார் அவர்.*

*இந்த ஓயாத இயக்கத்தினை முப்பத்து ஆறு தத்துவங்களின் மலர்ச்சி என்கிறார்கள் ரிஷிகள்.*

*இது, சிவதத்துவத்திலிருந்து, படிப்படியாய் ஐந்து ஆதாரப் பொருட்கள் கொண்டதாய் உருவெடுப்பது.*

*இங்கு, ஒரு தனிப்பட்ட பொருளை உருவாக்குவது கிடையாது படைப்பு. சிவபெருமானே அப்பொருளாய் வெளிப்படுவதாகும் இது.*

*சிவபெருமான் படைப்புகளை உருவாக்குகின்றார். பிறகு அவற்றை அவரே அவ்வடிவத்தில் காத்து வைக்கின்றார். பின்னர் தனக்குள்ளேயே அவற்றை இழுத்துக் கொண்டு விடுகின்றார்.*

**வேதங்கள் சாறு தருகின்றன:**

*‘‘சிலந்தி வலையைப் பின்னி பிறகு அதனை அதுவே இழுத்துக் கொண்டு விடுவதைப் போல, பூமியில் மூலிகைகள் அப்படியே முளைப்பதைப் போல, மனித உடலிலும் தலையிலும் முடிக் கற்றைகள் முளைப்பதைப் போல, அழிவற்ற கடவுள், பிரபஞ்சத்தில் எழும்பிக் கொண்டிருக்கின்றார்.’’ ஓம் நமசிவாய.*



*நிலையற்ற பால்வீதிகள், அண்ட சராசரம், காலம், வடிவங்கள் மற்றும் படைப்புகள் அனைத்துமே, அழிவற்ற மஹாதேவனிடமிருந்து வெளியாகிக் கொண்டேயிருக்கின்றன.*

*சிவனிலிருந்து அவரே வெளிப்பட்டுக் கொண்டிருப்பதுதான் படைப்பு.*
*இறைமையின் பிரதிபலிப்பு, விஸ்தரிப்பு.*
*சிவபெருமானின் வாக்கிலிருந்து - அவரது திருவாயிலிருந்து - இவை நிறுத்தமற்று உருவாகிக்கொண்டேயிருக்கின்றன என்பது கருத்து.*

# பொருள் சார்ந்த இவ்வுலகத்தின் இயல்பு என்ன?

## ஸ்லோகம் 42

*இவ்வுலகம் அல்லது பூலோகம், பொருள் சார்ந்த ஓரிடம். இங்கு, நடக்கும் அனைத்தும் ஐந்து புலன்களால் அறிந்து கொள்ளப்படு கின்றன. உலகங்களிலேயே மிகவும் மட்டுப்படுத்தப்பட்ட உலகம் இதுதான். துளியும் நிலையற்றது. அபாரமாய் மாற்றங்களுக்கு உட்பட்டு மாறிக்கொண்டேயிருப்பது. ஓம்.*

## விளக்கம்

*பொருள் சார்ந்த உலகத்தில்தான் நாம் அனைத்து அனுபவங் களையும் அடைகின்றோம். மனித உடம்பெடுத்து, கர்மாக்களை உற்பத்தி பண்ணிக்கொண்டு, வாழ்க்கையின் அபிலாஷைகளையும் கடமைகளையும் நிறைவேற்றிக் கொண்டிருக்கும் பிரதேசம் இது.*

*பூலோகத்தில்தான் பிரக்ஞை எனப்படும் ஞானம் மட்டுப் படுத்தப்பட்டதாய் இருக்கின்றது. இரண்டு உலகங்கள் இன்னும் உள்ளன என்ற அறிதல் இங்கு நினைவு கொள்ளப்படுவதே இல்லை.*

*அடிப்படை பொருட்களால் ஆக்கப்பட்டுள்ள வெளிப்பூச்சு இது.*

*முடிவற்ற பற்பல வகைகளை தன்னுள் அடக்கிக் கொண்டிருப் பதிலும், புதிது புதிதாய் பிரமிக்க வைக்கும் மாற்றங்களை அள்ளித் தந்து கொண்டிருப்பதிலும், குறிப்பிடும்படியான இடமாகும் இப்பூலோகம்.*

*அடிப்படை இயல்புகள் மொட்டவிழும் இடம் இது - பிரக்ருதி - என்கின்றார்கள், ஆன்மீகவாதிகள். சமுத்திர அலைகளின்மீது இருக்கும் நீர்க்குமிழிகள் போன்றது பூலோகம் என ஒப்பிடுகின்றார்கள்.*

*இங்கு நீர்க்குமிழிகள் போன்ற படைப்புகள் எழுகின்றன, வாழ்கின்றன, பிறகு எங்கிருந்து வந்ததோ அங்கேயே போய் நிலைக்கின்றன.*

*பொருள் சார்ந்த இந்த அவயவ உலகம் நம் மனித இன வளர்ச்சிக்குத் தேவையாகின்றது. ஆயினும், சதா மாற்றங்களுக்கு உட்பட்டு, அழிந்து கொண்டிருக்கும் ஓர் இயக்கத்தின் வடிவம், பூலோகம்.*

*இதனால்தான் இதன்மீது அளவுக்கதிகமாய் பற்று ஏற்பட்டுவிடா வண்ணம் நாம் பார்த்துக் கொள்ள வேண்டியுள்ளது.*

*இது தானாய் உருவாகிக் கொண்டேயிருப்பது.*

*புலன் சார்ந்தது. புனிதமானதும்கூட.*

*பாறைகள், வானவில்கள், வாயு, திரவம், தீங்குகளும் கொண்டது. அனைத்தும் அதனதன் இடங்களில் வைக்கப்பட்டுள்ளன.*

**வேதங்கள் அறுதியிட்டுச் சொல்கின்றன:**

*“அனைத்தும் அறிந்தவர். காலத்தை நிர்ணயிப்பவர். ஞானங்களின் கர்த்தா. ‘அவரே’ பிரபஞ்சத்தினை சூழ்ந்துள்ளார். அவரது கட்டுப் பாட்டில் இருந்தபடி, இங்கு படைப்புகள் தானாய் விரிகின்றன. அப்படைப்புதான் பூமி, காற்று, அக்னி, நீர் மற்றும் ஆகாசம் அடங்கியது என்று கருதப்படுவது.” ஓம் நமசிவாய.*



*இதோ, இம்மனிதர்களுக்கு, பலமும் நிஜமும் ஆனது*
*யானை என்று எப்படித் தோன்றுகின்றதோ, அப்படியேதான்,*
*அனைத்து மக்களுக்கும் இவ்வுலகம் புலப்படுகின்றது.*

*ஐந்தறிவுக்கு உட்பட்டு பார்க்கும்போது,*
*பூமி படைப்புகளின் உன்னதமானதாய்தான் இது தோன்றும்.*

*இங்ஙனமாய் ஒவ்வொரு படைப்புகளின் வசீகரத்தையும் பார்க்கும்போது,*
*அதனுள் உறையும் உலகங்கள் தெரியாமல், வியக்கத்தான் வைக்கும்.*

# சூட்சும உலகத்தின் இயல்பு என்ன?

## ஸ்லோகம் 43

*சூட்சும உலகம், அல்லது அந்தர்லோகம், புத்தி-உணர்ச்சி கொண்ட பிரதேசம். தூங்கும்போதும் கனவில் இருக்கும்போதும் இதனுள் முழுக்கவும் குடியிருக்கும் நாம், சிந்தனை மற்றும் உணர்வுகளால் இதனை இயக்குகிறோம். இது, இங்கு பூலோகத்திலேயே இருக்கும் நட்சத்திர மண்டலம். ஓம்.*

## விளக்கம்

*விண்ணுலகம், அது உள்ளது உள்ளபடி அப்படியே இங்கு பூவுலகத்திலும் பிரதியெடுக்கப்பட்டு இருக்கின்றது. இருந்தாலும் அதன் அதிர்வுகள் மிகவும் இறுகியவை, கடுமையானவை.*

*உயர் தளமான அந்தர்லோகத்திலிருக்கும் உயிர்கள், தொழில் நுட்பம், கலை மற்றும் கலாச்சாரம் போன்றவற்றில் நல்ல பயிற்சிக்கு உட்படுத்தப்பட்டு, பூலோகத்தின் நிலைமையை மேற்கொண்டு விருத்தி பண்ணுவதற்காக இங்கு அனுப்பப்படுகின்றன.*

*அந்தர்லோகம் எனும் இந்த மேம்படுத்தப்பட்ட கைகளில்தான் புதுப்புது கண்டுபிடிப்புகளெல்லாம் எழுகின்றன. புது இனங்கள் உருவாக்கப்படுகின்றன. எண்ணங்கள் மொட்டவிழ்கின்றன. எதிர்காலங்கள் தீர்க்கதரிசனமாய் காணப்படுகின்றன. சுற்றுச்சூழல் சமநிலையாக்கப்படுகின்றது. அறிவியலாளர்கள் பயிற்றுவிக்கப்படு கின்றனர். கலைஞர்கள், நுண்கலையில் புலமையாக்கப்படு கின்றனர்.*

*நாம் நம்முடைய ஒவ்வொரு சிந்தனை மற்றும் உணர்வுகளால், நாமறியாமலேயே, இந்த சூட்சும தளத்தில்தான் இயங்கிக் கொண்டிருக்கின்றோம்.*

*நாம், இந்த சூட்சும உலகத்தில், தூங்கும்போதோ அல்லது மரணத்துக்குப் பிறகோ, மரணித்து விட்டவர்களையும் தூங்கிக் கொண்டிருப்பவர்களையும் சந்திக்கின்றோம்.*

*நம் அறிதலை முன்நோக்கி எடுத்து செல்ல ஏதுவாக, இந்த உள்ளார்ந்த தளத்தில் இயங்கும் பள்ளிக்கூடங்களில் நாம் கற்கின்றோம்.*

*அந்தர்லோகம், அனைத்து பிரக்ஞைகளுக்குள்ளும் வியாபித்துள்ளது. பாடலா சக்கரம் எனும் நரகச்சக்கரம் உள்ளங்கால்களில் உள்ளது. இதில் தொடங்கி, அன்பின் சொர்க்க ஊற்றாய் தொண்டைக்குழிக் குள்ளிருக்கும் விஷுத்த சக்கரம் வரை, அனைத்து பிரக்ஞை களுக்குள்ளும் நிரவியிருக்கின்றது அந்தர்லோகம்.*

**வேதங்கள் நினைவுகூர்கின்றன:**

*''நிஜத்தில், இப்போது, மூவுலகங்கள் உள்ளன: மனிதர்களின் உலகம், தந்தையரின் உலகம், கடவுளர்களின் உலகம். கடவுளர் களின் உலகம்தான், உள்ள அனைத்து உலகங்களிலெல்லாம் தலைசிறந்தது.'' ஓம் நமசிவாய.*



*கனவின் வீரியத்தால் துணுக்குற்ற ஒருவன், படுக்கையில் எழுந்து உட்கார்ந்துக் கொள்ள, அந்த விழிப்பு நிலையிலும் கனவு தொடர்வதைக் காண்கின்றான்.*

*அவனிருப்பது தற்போது விண்ணுலகம்.*
*சிவபெருமான் கையில் தங்க நாணயங்களடங்கிய*
*பையினை வைத்துக் கொண்டு அவற்றை அவன்மீது பொழிகின்றார்.*

*இக்கனவு, ஆன்மீக செழிப்பைத் தருமா அல்லது சொத்துக்களைக் குவிக்குமா?*

# உயர் சொர்க்க உலகத்தின் இயல்பு என்ன?

## ஸ்லோகம் 44

*உயர் சொர்க்க உலகமே, சிவலோகம். சூட்சும உலகத்தின் உயிர்களின் மையக்கருவில் ஆழ்ந்து அதிர்ந்து கொண்டிருக்கின்றது இது. சிவலோகம், கடவுளர்களும் நன்கு முதிர்ந்து பரிணாம வளர்ச்சி கண்ட ஆன்மாக்களும் உறையும் 'உயர் பிரக்ஞை தளம்.' கோயில்களை வழிபடுவதன் வாயிலாகவும் யோகா பயிற்சிகளில் உளம்சார்ந்து தேறுவதன் வாயிலாகவும் அடையக்கூடியது. ஓம்.*

## விளக்கம்

*ஜோதிரூபமாய் பிரகாசித்தபடி இருக்கும் ஆசீர்வதிக்கப் பட்டதோர் உலகமாகும், சிவலோகம். சொர்க்கபுரிகளிலேயே மிக உயர்ந்தது. அனைத்து புராண-இதிகாச நூல்களிலும் வியந்து போற்றப்பட்டுள்ள லோகம்.*

*சிவலோகமே, பிரபஞ்ச இருப்பின் அஸ்திவாரம். ஒளி படைத்த ஞானப்பார்வையின் ஆதி. கருத்துக்களின் முனைப்புப் புள்ளி. படைப்பின் அச்சாணி.*

*சிவலோகம், சிவபெருமானின் ஆட்சி.*

*மஹாதேவர்களும், புண்ணியாத்மாவாக உயர்ந்தெழுந்த ஆன்மாக்களும், அவரவர்கள் அடைந்திட்ட ஜோதியின் கதிர் வீச்சில் பிரகாசிக்கும் இடம். பத்து லட்சத்தின் 100 அடுக்கு போட்டால் வரும் அளவுக்கு ஒளித்துகள்கள் கொண்டு பிரகாசிக்கும் கதிர்வீச்சு உடல்களாகும் இவை.*

*மனித உடலெடுத்து வந்துள்ள ஆன்மாக்களுக்கும் இது ஒன்றும் அதிக தூரத்தில் இல்லை. உள்ளங்கைகளிலேயே உள்ளது இந்த சொர்க்கம், மனிதனுக்குள்ளேயே.*

*இந்த லோகம், என்றும் இருப்பது. சிந்தையை ஒளியூட்டும் துல்லியமான வெண்ணிற ஜோதியாக எப்போதும் கிடைக்கத்தக்கது.*

*தொண்டை மற்றும் கபால சக்கரங்களான விஷுத்தா, ஆக்ஞா, மற்றும் ஸஹஸ்ரார ஆகிய சக்கரங்களால் அடையத்தக்கது.*

*கோயிலில் போய் ஆத்மார்த்தமாக பிரார்த்திப்பதாலும் யோகப்பயிற்சிகளில் ஈடுபடுவதாலும் இது சாத்தியமாகும்.*

*உயர் சொர்க்க லோகத்தின் கரங்களில்தான், தனது முழுதும் மலர்ந்த நிலைமையின் பேரானந்தத்தை உணர்ந்தபடி, ஒரு முதிர்ந்த ஆன்மா உறைந்திருக்கின்றது. இங்கிருக்கும்போது, உடலின் பலம் பொருந்திய புலன் ஈர்ப்புகள் ஒன்றும் செய்வது கிடையாது. அல்லது, கனவுலகத்து புத்திசாலித்தனங்களும் ஆட்கொள்வது கிடையாது.*

*அனைத்து ஆன்மாக்களுக்கும் இயற்கையாய் கிடைக்கின்ற ஓர் அடைக்கலமே, சிவலோகம்.*

**வேதங்கள் குரல் தருகின்றன:**

*‘‘தங்கள் இஷ்டப்படி இயங்கும் சுதந்திரம் மிக்க சிவலோகத்தில், சொர்க்கத்துக்கெல்லாம் முதன்மை சொர்க்கமான சிவலோகத்தில், ஜோதி ரூபமாய் ஞானம் மட்டுமே நிறைந்து ததும்பும் அந்த அன்புபுரியில், என்னை அழியாததோர் இருப்பாய் ஆக்கிவிடு.’’ ஓம் நமசிவாய.*



ஆழ்நிலையில், இறைமையால் மட்டுமே நிரப்பப்பட்ட லோகம், இங்கு நாகத்தால் வட்டம் போடப்பட்டு காட்டப்பட்டுள்ளது. இது நாகராஜா - சிவன்.

அழிவற்ற குண்டலினி என்பதன் குறியீடாக நாகம் காட்டப்படுகின்றது.

குண்டலினியின் ஏற்றமே யோகத்தை சித்திக்க வைத்து சிவலோகத்துடன் இணைப்பை ஏற்படுத்துகின்றது.

# பிரபஞ்சம், முடிவுள்ளதா? இது நிஜமானதா?

## ஸ்லோகம் 45

*மஹா பிரளயத்தன்று அண்ட சராசரம் முடிகின்றது. காலமும், வடிவங்களும், பிரதேசங்களும் சிவனுக்குள் கரையும் நாளது. சுழற்சியில் வரும் அடுத்த யுகத்தின்போது மட்டுமே இவையனைத்தும் மீண்டும் படைக்கத்தக்கவை. என்றென்றும் மாறாத ஒரே சத்திய நிஜத்திலிருந்து வேறுபடுத்திக் காட்டுவதற்காக, இதனை நாம், அதற்கு ஒப்பானதொரு நிஜம் என்கிறோம். ஓம்.*

## விளக்கம்

பிரபஞ்சம் மட்டுமல்ல... இருக்கும் அனைத்துமே, மாயா. மாயை. சிவபெருமானின் மாயாஜால வித்தை.

கடவுள் மட்டுமே இங்கு ஒரே சத்திய நிஜமாக இருக்கும்போது, அவரால் உருவான உலகம் அதற்கு ஒப்பானதோர் - சார்ந்ததோர் நிஜமாய் உள்ளது.

அதனை சார்ந்த நிஜம் என்று சொல்லும்போது, பிரபஞ்சம் என்பது ஒரு கற்பனை என்றோ அல்லது அப்படியொன்று கிடையாது என்றோ ஆகாது... இது மாற்றத்துக்கு உட்பட்ட, நிரந்தரமற்ற ஒன்று என்றே அர்த்தமாகும்.

பிரபஞ்சம் என்பதே ஒரு மாயை என்றோ ஏமாற்று வேலை என்றோ சொல்வது தவறாகும். ஏனென்றால், சாதாரண பிரக்ஞை நிலையிலிருந்து பார்க்கும்போது பிரபஞ்சம் முழுதும் ஒரு நிஜமே... நம்மை கடவுள் நோக்கி அழைத்துப் போக இதன் இருப்பு அவசியமாகின்றது.

வருடம் முழுமைக்கும் பருவகாலங்கள் தவறாமல் வந்து போவதைப்போல, பிரபஞ்சமும் பிறக்கின்றது, பரிணாம

*வளர்ச்சிகளைக் காண்கின்றது, கரைகின்றது. இது ஒரு சுழற்சியில் நடக்கின்றது.*

*இச்சுழற்சி, விளங்கிக்கொள்ளவோ, அறிந்து கொள்ளவோ முடியாத அளவுக்கு அளவற்றது. பிரபஞ்சம் கரைந்து போகும் நாளான பிரளயத்தன்று இது காணாமல் போய் விடுகின்றது.*

*அனைத்து மூவுலகங்களும், காலம், அண்டம் உட்பட அனைத்தும் சிவபெருமானுக்குள்ளேயே கரைகின்றன.*

*இதுதான் அவருடைய பெருங்கருணை. தனிப்பெரும் கருணை.*

*தங்களது 'நான்' எனும் அகந்தையான அடையாளத்தை ஆன்மா இழக்கும்போது அது அப்பழுக்கற்றதொரு முழுமையான ஆன்மாவாகி விடுகின்றது. அப்போது அது சிவபெருமானிடமே ஐக்கியமாகி விடுகின்றது.*

*அப்போது சிவபெருமான் மட்டுமே, தனது மூன்று திருநாமங்களில் தங்குகின்றார் - மீண்டும் அவர் படைப்பியக்கத்தை உருவாக்கும் வரை.*

**வேதங்கள் கூறுகின்றன:**

*''சத்தியமாய், கடவுள் என்பவர் ஒருவரே. இரண்டாவதாய் ஒன்று இருக்க முடியாது. அவரது சக்திகளால் அவர் மட்டுமே இவ்வுலகங்களை நிர்வகிக்கின்றார். அனைத்தையும் பார்த்தபடி அவர் நிற்கின்றார். அந்த நல்மேய்ப்பன், உலகங்கள் அனைத்தையும் கொண்டு வந்து நிறுத்திய பிறகு, நேரம் வரும்போது அவையனைத் தையும் தன்னுடனேயே இழுத்துக் கொள்கின்றார்.'' ஓம் நமசிவாய.*



*படைப்பு, இருப்பு மற்றும் அழிப்பு எனும் முடிவற்ற சுழற்சியில் உள்ளது உலகம்.*

*இங்கு, பிரபஞ்ச அழிவினை முன்னின்று நடத்துகின்றார் சிவபெருமான்.*

*அனைத்து காலம், வடிவம் மற்றும் பிரபஞ்சங்களையும் தனக்குள் எடுத்துக் கொண்டு விடுகின்றார் - அடுத்த மாபெரும் படைப்புச் சுழற்சியைத் துவங்கும் வரை.*

சிலந்தி வலையிலிருந்து நூலிழை வருவதைப்போல, நெருப்பிலிருந்து பொறிகள் தானாய் கிளம்புவதைப்போல, மனித ஆவி எனும் ஆன்மாவிலிருந்து வாழ்வாதாரத்துக்கான அனைத்து சக்திகளும் வருகின்றன. அனைத்து கடவுளர்கள், அனைத்து உலகங்கள், அனைத்து ஜீவன்களும் ஆன்மாவிலிருந்தே வருகின்றன. சத்தியத்தின் உண்மையைத் தரும் சூட்சுமமான உபநிடதங்களை விளங்கிக் கொண்டால், ஆன்மாவை விளங்கிக் கொண்டதாய் ஆகும். *சுக்ல யஜூர் வேதம்.*

சொர்க்க லோகத்தில் கிலி என்பதன் சுவடே இருக்காது. நீங்களோ, மரணமோ அங்கு கிடையாது. வயோதிகத்தைப் பற்றிய பயவுணர்வுகள் அங்கு எழாது. தாகமும் பசியும் அடங்கியிருக்கும். துயரம் கடந்திருக்கும். சொர்க்க லோகத்தில் ஒரு மனிதன் ஆனந்தத்தை அனுபவிப்பான். *கிருஷ்ண யஜூர் வேதம்.*

உலகங்களைப் பிரித்திருக்கும் எல்லைக்கோடாகவும் பாலமாகவும் இருப்பது இந்த ஆன்மாதான். இப்பாலத்தினை பகல்-இரவுகள் கடப்பதில்லை. வயோதிகமோ, மரணமோ, துயரமோ, நல்லது-கெட்டது போன்றவையோ, இந்த பாலத்தினைக் கடப்பது கிடையாது. எல்லா பாவங்களும் இப்பாலத்தை நெருங்க முடியாமல் திரும்பி விடும். இதுதான் பிரம்மம் ஆயிற்றே, ஆகவே பாவங்களிலிருந்து கழுவப்பட்டது இது. ஆக இப்பாலத்தினைக் கடந்ததும் குருடன் பார்க்கின்றான், காயப்பட்டவன் காயம் ஆறுகின்றான், அல்லல்படுபவன் அந்த அல்லலிலிருந்து விடுவிக்கப் படுகின்றான். எனவே, இப்பாலத்தினைக் கடந்து விட்டவனுக்கு, இரவும் பகலாகின்றது - பிரம்மன் எனும் சத்தியவுலகம் எப்போதும் ஒளியூட்டப்பட்ட ஒன்று. ஆனால் பிரம்மம் எனும் உலகம், தூய்மையான வாழ்க்கையைக் கடைப்பிடித்தபடி தேடுவோருக்கு மட்டுமே. இவர்களுக்கு அனைத்துலகங்களிலும் விடுதலை உண்டு. *கிருஷ்ண யஜூர் வேதம்.*

அழியாமல் இருக்கும் ஒரு மரம், இப்பிரபஞ்சம். அதன் வேர்கள் காற்றிலிருக்கும். கிளைகள் கீழே பரவியிருக்கும். இம்மரத்தின் தூய வேர்களே பிரம்மம். அழியாதது. இதில்தான் மூவுலகங்களும்

தங்களின் ஜீவனை அடக்கி உள்ளன. இதனை யாரும் கடக்க முடியாது, ஏனென்றால், இதேதான் நாமும். *மிருகேந்திர ஆகமம்.*

இங்கிருக்கும் பார்க்கத்தக்க மற்றும் பார்க்க முடியாத அனைத்தும், நகரும் மற்ற நகராத எல்லாமும், 'என்னுள்ளேயே' பரவியுள்ளன. சக்தியிலிருந்து பூமிவரை உள்ள அனைத்து உலகங்களும் என்னுள் உள்ளன. அகத்திலோ புறத்திலோ - கேட்கப்படும் அல்லது பார்க்கப்படும் அனைத்தும் என்னுள்ளேயே உள்ளன. *சர்வஞானோத்தார ஆகமம்.*

ஆண்டவனின் ரகசியப் பார்வையே, அவருடைய சக்தியே, அவரது வெண்ணிற ஜோதி பிரகாசத்தை பல வண்ண படைப்புகளாக உருமாற்றுகின்றது. அவரிடமிருந்தே அனைத்தும் வருகின்றன... அவரிடமே அனைத்தும் திரும்புகின்றன. அத்தகைய மாபலம் பொருந்திய ஆண்டவன், ஞானம் என்கிற தூய பார்வையை நமக்கருளட்டும். அவரே சூரியன், சந்திரன் மற்றும் நட்சத்திரங்கள். அவரே அக்னி, நீர்நிலைகள் மற்றும் காற்று. அவரே, அனைத்தையும் படைக்கும் பிரம்மா. ப்ரஜாபதி. அந்தப் பையன் அவர்தான். அந்தப் பணியாளும் அவரே. அந்த ஆணும் அவர்தான். அப்பெண்மணியும் அவரே. எண்ணற்ற, கணக்கிலடங்கா வடிவங்களில் இருப்பதெல்லாம் அவரே. அந்த நீலப் பறவையும் அவரே. பச்சைப் பறவையும் அவர்தான். மின்னலைத் தன்னுள் மறைத்துள்ள மேகங்கள் அவரே. பருவங்களும் சமுத்திரங்களும் அவரே. ஆரம்பத்துக்கெல்லாம் முன்னவர். அவரிடமிருந்தே உலகங்கள் துவங்குகின்றன. *கிருஷ்ண யஜுர் வேதம்.*

கண்ணுக்குத் தெரியாத சூட்சும சரீரம், கண்ணுக்குத் தெரியும் இந்த ஸ்தூல சரீரத்தின் வாயிலாக உருக்கொள்கின்றது. இவ்வாறான அனைத்து உடல்களும், கடவுளின் பாதங்களைப் போய் சேரும் நாளில் காணாமல் போகின்றன. *திருமந்திரம்.*

மனிதன் இருப்பில் இருக்கக்கூடிய உலகத்தை ஆண்டவன் படைத்தார். அவரது மேன்மையை நான் எப்படிப் பாடுவது? மேரு மலையைப்போல அவர் அளப்பரியவர். மூவுலகங்களிலும் அவரே விரவியிருக்கின்றார். அவரே சைவவழியின் நான்கு பாதைகளும் ஆவார். சுத்த சைவப் பாதையில் நடப்போரின் இதயங்கள் அழிவற்ற

*பரப்பிரம்மத்தில் நிலைக்கும். மாயை எனும் மலவுலகத்தைக் கடந்து விடுவார்கள். தெளிவு மட்டுமே அங்கிருக்கும். நிஜம், பொய், போன்ற அனைத்தும் அங்கு கரைந்திருக்கும். திருமந்திரம்.*

*நகரும் மற்றும் நகரா அனைத்து பிரபஞ்சங்களும் சிவபெருமானின் உடலே. நகரும் மற்றும் நகரா அனைத்து உலகங்களும் அவருடைய திருவிளையாடல்களே. நகரும் மற்றும் நகரா அனைத்து அண்ட சராசரங்களும் அவரே. நகரும் மற்றும் நகரா அனைத்து அண்ட சராசரங்களும், விந்தைகள். நற்சிந்தனை.*

*ஓ, ஆழ்நிலைப் பொருளே... சொர்க்கத்திலும் பூமியிலும் ஒருசேர இருப்பவரே! எப்போதும் ஜோதி ஒளியுடன் பிரகாசிப்பவரே! சிவலோகத்தின் சக்கரவர்த்தியே உன்னை தவிர வேறு கதி கிடையாது எனக்கு. திருமுறை.*

*ஒருநாள்கூட இருக்காத வஸ்துக்களைப் பார்த்து அவை எப்போதும் நிரந்தரமாக இருப்பவை என்பதைப்போல அவற்றின் மீது கொள்ளும் ஆசையைப் போன்ற அடிமுட்டாள்தனம் வேறு கிடையாது. திருக்குறள்.*

# சர்வபத்ரா



## நற்பண்புகள்

*சித்தத்தில் தெளிவு கண்டவன், ஞானம் அடைந்து தனது நிஜ சுயத்தினை அடையாளம் கண்டவன், தனது புலனுணர்வுகளில் தூய்மையை அடைந்தவன். இவன் அனைத்திலும் இத்தகைய உதாரகுணங்களையே காண்கின்றான்.*

**-சர்வஞானோத்தார ஆகமம்.**

# ஆன்மாக்களும் உலகமும் அடிப்படையில் சீலமானதுதானா?

## ஸ்லோகம் 46

*அனைத்து ஜீவராசிகளின் உள்ளார்ந்த மற்றும் உண்மையான இயல்பு, அவற்றின் ஆன்மாவே ஆகும் - இது நற்பண்புகளின் உறைவிடம். உலகமும்கூட கடவுளின் தங்குதடையற்ற ஒரு படைப்பே. அனைத்தும் துல்லியமான சமச்சீர் நிலைமையில் இருக்கின்றன. மாற்றங்கள் இருக்கின்றன. அவை, துன்மார்க்க தீங்காய் தென்படலாம். ஆனால் உள்ளார்ந்த ஆன்மப்பகுதியில் தீமையே கிடையாது. ஓம்.*

## விளக்கம்

அன்பினைப் பிரதிபலிக்கும் ஆன்மா, கடவுளின் குழந்தை. கடவுளை ஒத்த பிரதிபிம்பமாக முதிர்வதற்காக பரிணாம வளர்ச்சிக்கு உட்பட்டிருக்கின்றது ஆன்மா.

கருணை, இரக்கம், தயாள குணங்கள், அரவணைப்பு போன்றவை ஆன்மாவின் பிரிக்க இயலாத, அதன் உள்ளார்ந்த, இறைமையுடன் பரிமளிக்கும் உதார குணங்களாகும்.

தெளிவும், மாசுபடாத ஞானமும், சுதந்திரமும், சந்தோஷமும், ஆனந்தமும் ஆன்மாவின் உள்ளார்ந்த குணாதிசயங்கள்.

Super Consiousness என்பது நம் ஆன்மாவுக்குள்ளே ஆழ்நிலையில் உள்ள இறை பிரக்ஞை. இது, ஆன்மா என்பது அல்லாது வேறல்ல. பரிசுத்தம், தெளிந்த ஞானம் போன்ற சுத்திகரிக்கப்பட்ட தகுதிகளெல்லாம் காணக்கிடைக்கும் இறை பிரக்ஞைதான், நற்பண்புகளின் இல்லமாய் இருக்கும் ஆன்மா என்பதை நம்மால் நம்ப முடிகிறதா?

*கடவுள் எங்கெங்கிலும் பரவியிருக்கும்போது, இங்கு தீமைகளுக்கு எப்படி இடம் இருந்து விடப்போகின்றது?*

*தனது பரிணாம வளர்ச்சி காலம் நெடுகிலும், எப்போதும் சச்சிதானந்த நிலையிலேயே, ஆனந்தமயமாய் இருக்கும் தன்னுடைய குணத்தின்படி கடவுளுடன் ஒன்றோடு ஒன்றாய் விடாமல் கலந்தே இருக்கின்றது ஆன்மா.*

*எனில், தீமை, வேதனை மற்றும் வருத்தம் போன்ற எண்ணங்களெல்லாம் எங்கிருந்து வருகின்றன?*

*ஆன்மாவின் கைப்பொம்மைகளான ஆணவம், கர்மம் மற்றும் மாயை ஆகியவையே, வருத்தம் என்று ஒன்று இருப்பதாய் தோற்றுவிக்கும் கானல்நீர் நிலைமைக்கான மூலகாரணங்களாகும்.*

*மாயை எனும் விளையாட்டு மைதானத்தில், கர்மவினைகளின் பலனாக, அவற்றுக்கு தகுந்தபடி ஆணவத்தின் விதம்விதமான பொம்மைகளுடன் ஒரு குழந்தையை போல விளையாடுகிறோம் நாம். இதில் காயப்பட்டு சத்தற்றுப்போகும் நாம், அப்போது நம் மனம் நாடும் ஆண்டவனை நோக்கி ஆறுதலுக்காகவும் தேறுதலுக்காகவும் ஓடுகின்றோம்.*

*அங்கு ஆன்மீக முதிர்ச்சி நோக்கி நாம் விடுவிக்கப்படுகின்றோம்.*

### வேதங்கள் குறிப்பாய் சொல்கின்றன:

*‘‘உலகம் முழுவதுக்குமான ஒரே கண்போல திகழும் சூரியன் புற அழுக்குகளால் எப்படி மாசுபடுவதில்லையோ, அதேபோல, அனைத்திலும் இருக்கும் அந்த ஒரே ஆன்மாவானது, உலகம் தரும் துயரங்களால் மாசுபடுவது கிடையாது. இதிலிருந்து விலகியே இருக்கும்.’’ ஓம் நமசிவாய.*



*அனைத்து ஆன்மாக்களும் அவற்றின் ஆழத்தில் ஆனந்தமானவை.*
*இங்கு பக்தர்கள் சிவபெருமானை வேண்டுகின்றார்கள்.*

*அவற்றில் சில பழையவை, முதிர்ந்தவை, அடக்கமானவை, தொழத்தக்கவை.*
*இளைய ஆன்மாக்கள் சில தற்பெருமை கொண்டவை, அழித்து விடுபவை.*

*வாழ்க்கை அனுபவம் அனைத்து ஆன்மாக்களையும் ஒரே ஆன்மீக*
*இறுதிக்குத்தான் கொண்டு போகின்றன என்பதனை அறிந்திருக்கும்*
*சிவபெருமான் அனைத்தையும் ஒப்புக்கொண்டு அன்பு காட்டுகின்றார்.*

# எதற்காக சில ஆன்மாக்கள் தீமையாக நடந்து கொள்கின்றன?

### ஸ்லோகம் 47

*ஆன்மாவின் அடிப்படைக் குணத்துடனான தொடர்பினை இழந்து விட்டு, புத்தியின் ஆதிக்கத்தில் புற உலகத்துடன் மட்டும் பிணைந்து வாழும் மக்கள் தீங்குகளை இழைத்துக் கொண்டு வாழ்கின்றார்கள். அறியாமையில் இருக்கும் ஒருவன் தீமை என்று காணும் ஒன்றையே, சித்தம் தெளிவடைந்தவர் கீழ்த்தரமான ஒருத்தன் செய்யும் முதிர்ச்சியற்ற காரியம் என்று காண்கின்றார். ஓம்.*

### விளக்கம்

*துன்மார்க்கமான கெட்ட காரியங்கள் பெரும்பாலும் ஆண்டவனுக்கு எதிரான செயல்களாக பார்க்கப்படுகின்றன.*

*ஆனால் அனைத்து விசைகளும், கடுமையாய் தாக்கும் அதர்மப்பாதை உட்பட, அனைத்தும் ஆண்டவனின் விசைகளே என்பது இந்துவுக்கு தெரியும்.*

*மனிதனுக்கு எதிராய் மனிதனாலேயே இழைக்கப்படும் கொடுமைகளையும் அவை தரும் வலிகளையும் பார்க்கும்போதும் அனுபவிக்கும்போதும், இதனை ஒப்புக்கொள்வது சில சமயங்களில் இயலாத ஒன்றாய் ஆகிவிடுகின்றது.*

*ஆழ்ந்து நோக்கினால், நாம் எதனைத் தீமை என்று முத்திரை குத்துகின்றோமோ அதுவேகூட நமது வாழ்க்கைக்கு தேவையான தொரு காரணத்தை சூட்சுமமாக வைத்திருப்பதை பார்க்க முடியும்.*

*ஆம், கெட்ட காரியங்கள் நடக்கத்தான் செய்கின்றன.*

ஆயினும் தெளிந்த நோக்குள்ள ஒருவன் இதற்காக கடவுளை வைய மாட்டான். இதெல்லாம் நாம் நமக்கே உருவாக்கிக் கொண்ட கர்மங்களின் கை மேல் பலன் என்று அறிந்தவன் அவன்.

தாங்கிக் கொள்வது கஷ்டந்தான்... ஆனால் ஒருத்தருடைய ஆன்மீக முதிர்ச்சிக்கு இன்றியமையாதவை இவை.

நாம் காயப்படும்போதும் வீழ்த்தப்படும்போதும், என்றோ நாமே உருவாக்கிக் கொண்டுள்ள கர்மவினையின் பலன்தான் இது என்பதை நாம் உணர்கின்றோம்.

நம் கர்மவினையை நாம் கழிக்க, நம்மைக் காயப்படுத்துபவன் ஒரு கருவி... இச்சுழற்சியில் அவனுக்கென்ற காலம் வரும்போது அவன் காயப்பட்டு இதற்குண்டான கர்மவினையைக் கழிப்பான்.

நம்மைக் காயப்படுத்தும் ஒவ்வொருவரும், அவர்களுக் குள்ளேயே பரிபூரண தெய்வமாய் எப்போதும் வீற்றிருக்கும் 'இறை பிரக்ஞை' எனப்படும் அழியா ஆன்மாவுடன் தொடர்பேற்படுத்திக் கொள்ளவில்லை என்றே அர்த்தம்.

**வேதங்கள் மிகச்சரியாய் போற்றுகின்றன:**

''ஸ்திரமற்று, குழப்பமாய், கிலியும் பயமும் பொங்க, முழுக்க முழுக்க ஆசைகளுடன் நிச்சயமற்று, வரிசையாய் துரத்தும் இத்தகைய அலைபாயும் எண்ணங்களால் முற்றுகையிடப் பட்டவன், அகந்தையால் தலைக்கனம் அடைகின்றான். 'இது என்னுடையது' என்றும் 'அது என்னுடையது' என்றும் நினைக்கும் போது ஒருத்தன் தன்னை தனக்குள்ளேயே கட்டிக்கொண்டு விடுகின்றான் - பொறியில் சிக்கிக்கொள்ளும் பறவையைப் போல.'' ஓம் நமசிவாய.



*ஒரு கொள்ளைக்காரன் அப்பாவி மக்களைக் கொன்று*
*அவர்தம் கிராமங்களையெல்லாம் சூறையாடி விடுகின்றான்.*

*பலர் அவனை வெறுத்து பொல்லாதவன் என்று சொல்வார்கள்.*
*அவன் செய்பவை இழிவானவையே ஆயினும் அவன் இழிவானவன் கிடையாது.*

*அவனுடைய கொடூர அனுபவங்கள் அவனை முதிர்ச்சியடைய செய்யும்.*

*இதன் விளைவாக, பற்பல பிறப்புகள் கடந்த பிறகு*
*அவனும் தர்மப்பாதையை அடைந்து அதன்வழி நடப்பான்.*

# நன்மை மற்றும் தீமை ஆகியனவற்றின் காரணகர்த்தா எது?

### ஸ்லோகம் 48

*நன்மை மற்றும் தீமையை இவ்வுலகத்தில் பார்ப்பதற்குப் பதிலாக, உடலெடுத்து வந்திருக்கும் ஆன்மாவின் இயல்பினை ஒன்றுக்கொன்று தொடர்புடைய மூன்று பாகங்களாய் நாம் விளங்கிக் கொள்கின்றோம்: புறம் மற்றும் புலன் சார்ந்த உணர்வுகள், புத்தி சார்ந்த கூர்மை, மற்றும் ஆன்மீகம் உறையும் இறை பிரக்ஞை. ஓம்.*

### விளக்கம்

தீமைகளுக்கு ஆரம்பப்புள்ளி கிடையாது. அறியாமையின் வெளிப்பாடே அது.

இருந்தாலும் அதர்மத்தை கண்டு அஞ்சுவது நல்லதே.

வெளிப்புறம் சார்ந்த அதாவது புலன் சார்ந்த இயல்பு முதன்மையாகும்போது கோபம், பயம், பொறாமை, வெறுப்பு, புறஞ்சொல்லுதல் ஆகியவற்றால் பீடிக்கப்படுகிறோம்.

மேதமை முதன்மையாகி நிற்கும் காலத்தில், முரட்டுத்தனமான புத்திசாலித்தனம் முன்வருகின்றது.

இறை பிரக்ஞை முதன்மையாகி முன்தோன்றும்போது, வடிகட்டி சுத்திகரிக்கப்பட்ட தரமான குணங்கள் பிறக்கின்றன. கருணை, உள்ளார்ந்த பார்வை, மனிதாபிமானம், மேலும் இதுபோல பல.

இளம் ஆத்மாக்களின் மிருக குணங்கள் பலம் பொருந்தியவை. இப்படிப்பட்ட பலமான விலங்கின உணர்வுகளைக் கட்டுப்படுத்த வல்ல புத்திகூர்மை இன்னும் இந்த ஆன்மாக்களில் உதித்திருக்காது.

*புத்திக்கூர்மை புலப்பட்டு தெளிவுகள் மொட்டுவிடும்போது, சட்சட்டென்று எழும் மிருக குணங்கள் அடங்கும்.*

*இப்போது ஆன்மா திறந்து, நன்கு வளர்ந்துள்ள புத்தி செழிப்பினைப் படரும்போது, இத்தனை நாட்களாக இருந்த புத்தியின் கட்டுப்பாடுகள் தளரும். அதன் சிறைக்கதவுகள் திறக்கும். ஆகாசத்துடன் பிணையும்படி புத்தியின் அறிதல் விசாலமாகிவிடும்.*

*மற்றவர்களில் வஞ்சகத்தன்மையினை நாம் இனி எதிர் கொண்டால், நாம் அரவணைத்தே நிற்போம்... ஏனென்றால், நிஜத்தில் வஞ்சகம் என்றொன்று கிடையாது.*

**வேதங்கள் சொல்கின்றன:**

*''புத்திதான் சொந்த-பந்தம் போன்ற வாழ்க்கை தளைகளுக்கான ஆதாரம். அதுவேதான் இவற்றிலிருந்தெல்லாம் விட்டு விடுதலை அடைவதற்கான ஆதாரமும். இவ்வுலகத்தில் கட்டுண்டு கிடப்பது, தளை. கைவிலங்கு. இவ்விலங்கறுத்து விடுதலை பெற்று விடுவது, ஞானம்.'' ஓம் நமசிவாய.*



*ஒரு கொலைகாரன் கொல்வதற்காக கிராமத்துக்குள் நுழைகின்றான். அங்கு அவனையே தோற்கடித்து விடும் ஒருவனை எதிர்கொள்கின்றான் அவன்.*

*ஆகவே ஒரு மனிதன் நல்லவன் என்றும் இன்னொருவன் தீயவன் என்றும் முத்திரை குத்துவது அறியாமையாகும். ஓர் ஆன்மீகவாதி அனைவரையுமே முதிர்ந்து கொண்டிருக்கும் ஆன்மாக்களாகத்தான் பார்க்கின்றார்.*

*இவர்களில் ஒருசிலர் தாளவொண்ணா இழிவான வஞ்சனை பொருந்தியவர்களாக இருக்கிறார்கள். சிலர் ஆன்மீக தகுதிகள் பொருந்திய மலர்ந்த ஆன்மாக்களாக மணம் தருகின்றார்கள்.*

# கருணை மயமான இறைவன் எப்படி தீயசக்திகளை அனுமதிக்கலாகும்?

## ஸ்லோகம் 49

*மொத்தத்தில் பார்க்கப்போனால், நல்லது என்றும் தீயது என்றும் எதுவும் கிடையாது. நல்லதிலிருந்து வித்தியாசப்படுத்திப் பார்க்க வேண்டியதொரு சக்தியாய் இறைவனார் தீயதைப் படைக்க வில்லை. ஆன்மாக்களுக்கு அன்பு எனும் தர்மத்தை அவர் அளித்துள்ளார். கூடவே, அந்த ஆன்மா கற்றுத் தேர்வதற்காக, மிக நுண்ணிய நல்ல உணர்வுகள் முதல் குரூரமான அனுபவங்கள் வரையிலான வகைகளையும் முன்வைத்துள்ளார். ஓம்.*

## விளக்கம்

*ஆன்ம அனுபவம் அடைந்துவிட்ட தெளிவின் உச்சத்தில் நின்று பார்க்கும்போது, அனைத்திலும் இணக்கத்தை மட்டுமே பார்க்கின்றார், ஒரு ஞானி.*

*சாமானியரான நாம் ஒரு பெரிய மலையுச்சியில் ஏறி நிற்கும்போது, பொங்கி ஆடும் கடலினைப் பார்க்கின்றோம். செங்குத்தாய் கீழே இறங்கும் பள்ளத்தாக்குகளைப் பார்க்கின்றோம். இரண்டுமே அப்போது நமக்கு அழகானவைகளாகவே படுகின்றன.*

*இப்படித்தான் ஞானியர் அனைத்திலும் ஓர் இசைவினை - ஒட்டுறவாடும் லயத்தினைக் காண்கின்றார்கள்.*

*ஆழ்நிலைத் தியானத்தில் வெற்றி கண்டு அந்த ஞானத்தின் வாயிலாக பிரபஞ்சத்தினை அக்கு வேறு ஆணி வேறாய் நாம் பார்க்கும்போது, இங்கு, எந்த ஒரு வஸ்துவும் தப்பான ஓரிடத்திலோ அல்லது தவறாகவோ வைக்கப்படவில்லை என்பதனை நாமறிவோம்.*

*இந்தத் தெளிதல், தப்பு-சரி, நல்லது-கெட்டது என்று மனித அஞ்ஞானம் போட்டு வைத்திருக்கும் ஒரு தவறான எண்ணத்திலிருந்து மனிதனை விடுவிக்கும்.*

*நம்முடைய கருணைமிகும் கடவுள், ஒரு துல்லியமான சமச்சீர் தட்டில் வைத்து அனைத்தையும் படைத்திருக்கின்றார்.*

*நல்லதோ கெட்டதோ, கருணையோ காயமோ, நாம் அனுபவிக்கும் அது எதுவாகினும், கடந்த காலங்களில் நாமே செய்த செயல்களின் அறுவடையேயாகும்.*

*இந்த அனுபவங்கள், நம்முடைய ஆன்மப்பாதைக்கு ஒளியூட்டும் ஆண்டவனின் அமைப்பு.*

*தீமை என்றும் துயரம் என்றும் இங்குள்ள அனைத்துமே, நம் ஆன்மாவினை மேலும் வலுவாக்கி, ஆன்மீகப் பாதையில் அது ஸ்திரமாய் மேற்கொண்டு பயணித்து வளர்ச்சி பெற, இறைவனார் உருவாக்கியதே ஆகும்.*

*நிஜத்தில் தீமை என்று ஒன்று கிடையாது. ஆகையால் நாம் அனைவருமே ஆதரவாய் வாழ்வோமாக.*

**வேதங்கள் போற்றுகின்றன:**

*‘‘தனது கர்மக்கடன்களைக் கழிப்பதற்காக ஒருவன் சிறந்த கரு அல்லது அசுரக் கருவுக்குள் நுழைகின்றான். அதற்கேற்றாற்போல அவனுடைய செயல்களும் கீழ்நோக்கியோ அல்லது மேல் நோக்கியோ அமைகின்றன. இவ்விரு எதிர் ஜோடிகள் தரும் அனுபவங்களைக் கடப்பதற்காக அவன் இங்குமங்குமாய் அல்லாடி வாழ்கின்றான்.’’ ஓம் நமசிவாய.*



*சிவபெருமானின் கருணையைச் சம்பாதிப்பதற்காக, யோகியைப்போல ஜடாமுடியினை வளர்த்துக் கொண்டு நோன்பிருக்கின்றார் ஒரு தவசி.*

*சிவ ரகசியம் விளங்காமல் இந்தத் தவசி செய்யும் தவம், சக்திக்கு புதிராய் ஆகின்றது.*

*சிவனுக்கு அனைத்தும் தெரியும். ஆயினும், நமக்கு முழுச் சுதந்திரம் தந்து, நாமே உருவாக்கிக் கொள்ளும் அனுபவங்களால் நம்முடைய ஆன்மா பரிணாம வளர்ச்சி கண்டு முதிர, வழிகாட்டி நிற்கின்றார் அவர்.*

# உலகத்தோடு சம்பந்தப்பட்டு வாழ்வதை ஒருவர் தவிர்க்க வேண்டுமா?

## ஸ்லோகம் 50

*கருணைமயமான கடவுள் அள்ளியள்ளிக் கொடுத்துள்ள பிரதேசம் இவ்வுலகம். இதில் கட்டாயமாய் நாம் வாழ்ந்தாக வேண்டும் என்பதே இதனைப் படைத்துள்ள அவருடைய அவா. கர்மவினைகளைக் கழுவிக்கொண்டு தர்ம வழியில் நடக்க என்று உருவாக்கப்பட்டது இது. இவ்வுலகத்தினை வெறுப்பதோ அல்லது இதனைக் கண்டு பயப்படுவதோ ஆகாது. வாழ்க்கை, ஆனந்த மயமாய் வாழ்வதற்காகவே உள்ளது. ஓம் நமசிவாய.*

## விளக்கம்

*நாம் சென்றடைய வேண்டிய இறுதி இடம் வடிவமைக்கப்படும் இடம், உலகம்.*

*நம் ஆசைகள் இங்கு தீர்க்கப்படுகின்றன. நம் ஆன்மா இங்கே முதிர்ச்சியடைகின்றது.*

*உலகத்தில், அறியாமையிலிருந்து தெளிந்த ஞானமாய் நாம் வளர்கின்றோம். இருளிலிருந்து ஒளி படைத்தவராய் ஆகின்றோம். மரணம் எனும் அனுபவத்திலிருந்து விடுபட்டு மரணமற்ற தீர்க்காயுசாய் எழுகின்றோம்.*

*இந்த முழு உலகமே ஒரு ஆஸ்ரமம்தான். இதில் ஒவ்வொருவரும் படிப்பினை கற்றபடி முதிர்ந்து கொண்டிருக்கின்றோம்.*

*கடவுளின் படைப்புத்தான் இவ்வுலகம். இதனை நாம் நேசிக்க வேண்டும்.*

*இவ்வுலகத்தினை வெறுத்து ஒதுக்கி அஞ்சுபவர்கள் அனைத்தி னுள்ளும் உறைந்துள்ள நல்ல சாரத்தினை விளங்கிக் கொள்ள மாட்டார்கள்.*

உலகம் என்பது ஒரு பிரகாசமான பிரதேசம். இதனைக் கண்டு பயப்படுவதாகாது.

சிவபெருமான் அள்ளித் தந்துள்ள மனோஹரமான அன்பளிப்பு, உலகம்.

கர்ம வினைகளைக் கழித்துக் கொண்டிருப்பவை, இருண்ட இளைய ஆன்மாக்கள். ஜோதிரூபமாய் மலர்ந்து தர்மத்தினை விடாது கடைப்பிடிக்கும் புண்ணியாத்மாக்கள், முதிர்ந்தவை.

சிவபெருமான் தனது பிள்ளைகளான இளைய ஆன்மாக்களும் முதிய ஆன்மாக்களும் ஒன்றோடொன்று உறவு கொண்டு திருவிளையாடல் ஆடப் படைத்துள்ளதே பூமி.

இவ்வாறாய் இளைய ஆன்மாக்கள் வளர்கின்றன. அனைத்தும் அறிந்து தெளிந்ததால் ஞானமடைந்து அமைதியாய் வழிகாட்டு கின்றன, முதிர்ந்தவை.

உலகத்தைக் கண்டு அஞ்சக்கூடாது என்று சொல்வதினால், ஏதோ இந்த உலகத்தின் அனைத்திலும் அப்படியே புதைந்து பிணைந்து வாழ் என்று நமக்கு அனுமதி தந்துவிட்டதாய் ஆகாது. அப்படிக் கிடையாது இதற்கு அர்த்தம்.

இதற்கு மாறாக, இங்கிருந்தபடியே பற்றற்று இரு என்பதே இதற்கு அர்த்தம்.

தாமரையிலை மேல் இருந்தாலும் அதில் படாது ஆடும் நீர்த்துளியைப்போல, உலகில் இருந்தபடியே அதன் எதிலும் பட்டுக்கொள்ளாமல் இரு என்றே எல்லாமும் போதிக்கின்றன.

மழையில் நடந்தாலும் உடல் நினையாத நிலை அது.

**வேதங்கள் எச்சரிக்கின்றன:**

‘‘உலகத்தை இறைவனின் ஒரு கருணையான படைப்பு என்ற அளவில் மட்டும் பிடித்துக் கொள். பூமியில் வாழும் மற்றும் நகரும் அனைத்தையும் இப்படியே பார். நிலையற்ற அனைத்தும் அவன் படைப்பே என்ற அளவில் விட்டுவிட்டு, அழிவில்லாத இறைமையை சிந்தித்தே ஆனந்தம் அடை. அடுத்தவனின் சொத்துக்களின்மீது உன் கவனத்தை ஒருபோதும் பதிக்காதே.’’ ஓம் நமசிவாய.



*பலர் உலகத்தினை தவிர்க்கப் பார்க்கின்றார்கள்.*
*இதனைத் துயரங்கள் நிறைந்த ஒரு பகுதியாகவும்,*
*எதுவும் இங்கு சரியில்லை என்று கருதியும் உலகத்தினை மறுதலிக்கின்றார்கள்.*

*இதோ இங்குள்ளதைபோல அனைத்தும் இணக்கமாய் இருக்கும் உதார*
*பகுதியாக பூமி இல்லாவிட்டாலும், காலம் மற்றும் காரணம் ஆகியவற்றை*
*கருத்தில் வைத்து உலகத்தினை முழுதுமாய் நோக்கினால்,*
*இது ஒரு வள்ளல். அஞ்ச வேண்டிய ஒன்று கிடையாது.*

காலுக்கடியில் மண்ணுக்குள் தங்கச் சொத்துக்கள் புதைத்து வைக்கப்பட்டிருக்கின்றன என்பதை அறியாமல் இப்படியும் அப்படியுமாக அதே பாதையில் மீண்டும் மீண்டும் அலைந்தாலும் இறுதிவரை அதனை கண்டே பிடிக்க முடியாமல் ஆகிவிடும். அதைப் போல, பிரம்மம் எனும் இறை நகரத்திலேயே நாம் நொடிதோறும் வாழ்ந்து வந்தாலும், மாயையெனும் திரைச் சீலையின் பின்னால் 'அவன்' மறைந்திருப்பதால், இதனை நாம் உள்ளது உள்ளபடி அடையாளம் காண மாட்டோம். *ஸாம வேதம்.*

எவனொருவனுக்கு நாம் பார்க்கும் அனைத்து படைப்புகளையும் நெய்துள்ள நூல் எது என்பது தெரியுமோ, அதே நூலின் ஆதிநூல் யாது என்பதும் தெரியுமோ, அவனுக்கு முதலும் இறுதியுமான அந்த பிரம்மம் தெரியும். *அதர்வண வேதம்.*

சரியான பாதையில் எங்களை வழிநடத்து, ஓ, கடவுளே. ஆண்டவா... நாங்கள் செய்யும் அனைத்தும் உங்களுக்கு தெரியும். எங்களிடமிருக்கும் பாவக்கறைகளை நீ நீக்கிவிடு. அப்போது, உங்களுக்கு, நாங்கள் எங்களுடைய பிரார்த்தனைகளைக் காணிக்கையாக்குவோம். *சுக்ல யஜுர் வேதம்.*

புத்தியின் பாவக்கறைகளே, தூரச் செல்லுங்கள்! நீ எதற்காக முறையற்ற ஆலோசனைகளை சொல்லித் தருகின்றாய்? இவ்விடத்திலிருந்து நீ வெளியேறு! எனக்கு நீ வேண்டாம்! மரங்களிருக்கும் அடர்ந்த காட்டுக்கு நீ ஓடி விடு! என் சிந்தை இங்கே என்னுடைய வீடு மற்றும் கால்நடைகளுடன் தொடர்ந்து இருக்கும். *அதர்வண வேதம்.*

வாழ்க்கையின் விளங்கிக் கொள்ள முடியாத ரகசிய சூழலிலும் தனது ஆன்மாவினை அடையாளம் கண்டு, தன்னுள்ளிருக்கும் ஞானஜோதியில் எவனொருவன் விழித்தெழுந்து விட்டானோ, அவனே படைப்பாளி. ஆவி எனும் ஆன்ம உலகம் அவன் கைகளில். அவனே உலகமாகி விட்டதால். நாம் இந்த வாழ்க்கையில் இருக்கும்போதே விடுதலை எனப்படும் ஞானப் பெருங்கடலைக் கண்டுவிட முடியும். அப்படி நம்மால் தெளிவு பெற முடியாமல் போய்விட்டால், அறியாமை எனும் இருள்தான் எத்தனை ஆழமானதாய் இருக்க வேண்டும்? ஞானஒளியை எவர்

*காணுகின்றாரோ அவர் அழிவற்ற ஜீவனாகவே உருமாறி விடுகின்றார். அறியாமையில் இருப்பவர்கள் துக்கத்தில் வீழ்கின்றார். பல கிடையாது - இருப்பது 'ஒரேயொருவர்தான்' எனும் சத்திய நிஜம், புத்தியால் காணப்பட வேண்டும். ஒன்றே சத்தியம் என இறைவனைக் காணாமல் பலவற்றை நாடிநாடி ஓடிக்கொண்டிருப்பவன், மரணம் மாற்றி மரணம் என அலைகின்றான். இதனை அறிந்துக் கொண்டு, பரப்பிரம்மத்தைத் தேடும் ஒருவன் முதலில் தெளிவு பெறட்டும். பல வார்த்தைகளில் அவன் விழ வேண்டாம்... பல அணுகுமுறைகள் எளப்போதும் குழப்பத்தை உண்டாக்கி அசதியேற்படுத்தி விடும். சுக்ல யஜுர் வேதம்.*

*மலைவளைவுகளில் ஓடும் தண்ணீர் அங்கெல்லாம் தனது சக்தியினை வீணாக்கிக் கொண்டே பாய்வதைப்போல், ஒவ்வொன்றையும் தனித்தனி வஸ்துக்களாய் பார்க்கும் ஒருவன் அங்கெல்லாம் தனது சக்தியினை வீணாக்கிக் கொண்டே போகின்றான். ஆனால் நன்னீரில் ஊற்றப்படும் நன்னீர் அப்படியே அதனுடன் ஐக்கியமாகி பிரிக்க முடியாததாய் ஆகிவிடுவதைப் போல், ஞானத்தெளிவடைந்து தெய்வத்துடன் ஒன்றிணைந்து விட்டோரின் ஆன்மாவும் தெய்வீகமாகவே ஆகி விடுகின்றது. கிருஷ்ண யஜுர் வேதம்.*

*ஆன்மா எனும் நிஜ சுயத்தினை அறிந்து, இனிய மலரில் கொண்டாடும் தேனீயைப்போல உள்ளார்ந்த இந்த இறை தளத்தினைப் பேரானந்தமயமாய் கொண்டாடும் ஞானி, பயத்தினைக் கடந்து போய் விடுகின்றார். கடந்த காலம் மற்றும் எதிர்காலம் ஆகியனவற்றை உள்ளடக்கியுள்ள கடவுளை அவர் பேரானந்தத்தில் கொண்டாடுகின்றார். சத்தியமாய், இதுதான், 'அது.' கிருஷ்ண யஜுர் வேதம்.*

*குழப்பம், அறியாமை, ஏமாற்றம், கனவு, உறக்கம், விழிப்பு போன்ற அனைத்திலிருந்தும் முதலில் திரும்புங்கள். வெறும் இந்த உடலிலிருந்து, நுணுக்கமான நமது சுவாசத்திலிருந்து, நம் சிந்தனையிலிருந்து, ஈகோ எனும் நம் அகங்காரத்திலிருந்து, வெகுவாய் வேறுபட்டவர் அனைத்துக்குமான தலைவரான*

*ஆண்டவன். பிரக்ஞை எனும் ஆன்மாவுடன் ஆழ்ந்து தியானியுங்கள். அதனுடன் ஒன்றோடு ஒன்றாகி விடுங்கள். தேவிகாலோத்தார ஆகமம்.*

*ஓ, மானிடர்களே! அனைத்துக்கும் காரணமான சிவபெருமானை நோக்கித் தியானிக்கவும் பிரார்த்திக்கவும் பயிலுங்கள். சூரியக்கதிர்கள் எழுந்ததும் மறையும் பனித்துளிகளைப்போல உங்களுடைய அனைத்துப் பாவக்கறைகளும் கரைந்து காணாமல் போய்விடும். திருமுறை.*

*நல்லொழுக்கங்கள் இல்லாமல், பாவம் செய்ததற்காக வருந்தவும் செய்யாமல், அன்பும் ஆதரவும் இன்றி, சருகு இலையைப்போல சுழற்றியடிக்கப்பட்டு வீழ்ந்தேன் நான். 'அவன்' - சிவபெருமான் எனக்கு அன்பினை காட்டினார். பாதையைக் காட்டினார். பேரானந்த உலகத்திற்கான வழியைக் காட்டினார். மீண்டும் திரும்பத் தேவையில்லாத தர்மப்பாதையை வகுத்துப் போதித்தார். திருமுறை.*

*சந்தோஷம் மற்றும் துக்கம் - இரண்டுமே மாயைதான். அன்பிலிருந்து என்றென்றும் வகுத்தெடுக்கப்படாத ஆன்மாதான், ஞானம் என்பதன் ஒரே வடிவம். ஆகவே, இந்த இருமை உணர்வுகள் உன்னை என்றும் தீண்டாது. கானல் நீர் பூமியைக் கழுவுமா? கருணைமயமாய், ஆனந்தத்தின் இருப்பிடமாய், சத்தியத்தின் பாதாரவிந்தங்களாய், அனைத்தும் அறிந்துள்ள குருவிடம் உன்னுடைய இதயம் கசிந்துருகி வளரட்டும். நற்சிந்தனை.*

*ஓ மனிதா! சற்று பொறுமையாய் நின்று கவனி! நீ யார் என்பதை நீ விளங்கிக் கொள்வாய். கவலைப்பட ஏற்றதல்லாத விஷயங்களுக்காக நீ கவலைப்படாதே. சந்தோஷமும் துக்கமும் உலகத்தினுடையவை. நீ ஒரு இறை வஸ்து. எதுவும் உன்னை பாதிக்காது. எழுந்திரு! விழித்திரு! சிவத்தியானம் எனும் சாவி கொண்டு சொர்க்கத்தின் கதவினைத் திற. திறந்து பார்! ரகசியமாய் இருந்த அனைத்தும் உனக்கு விளங்கும். நற்சிந்தனை.*

# பாப-துக்ஹே



## பாவமும் துயரங்களும்

*என் மூதாதையர்கள் செய்த பாவச்சுமைகளிலிருந்தும் நாங்களே செய்துள்ள பாவங்களிலிருந்தும் எங்களுக்கு விடுதலை தாருங்கள்.*

*ஒரு குற்றத்திலிருந்து திருடனுக்கு விடுதலை தந்து விடுவதைபோல, கட்டப்பட்ட கயிற்றிலிருந்து ஒரு கன்றுக்குட்டிக்கு விடுதலை தரப்படுவதைப்போல, உன்னுடைய சேவகனான எனக்கும் விடுதலையைத் தா.*

***-ரிக் வேதம்.***

# இவ்வுலகத்தில் வேதனைகள் ஏன் உள்ளன?

## ஸ்லோகம் 51

*இருமைதான் உலகின் இயல்பு. இதன் இயற்கை சுபாவம். ஒவ்வொரு அம்சமும் அதற்குண்டான இருமைக் குணத்தோடுதான் இங்கு உள்ளன: சந்தோஷம்-துக்கம், நல்லது-கெட்டது, அன்பு-வெறுப்பு. இவற்றை அனுபவித்து எழுவதன் வாயிலாக நாம் பரிணாம வளர்ச்சி கொள்கின்றோம். நிறைவாக, இவ்வகையான அனைத்து இருமைகளையும் கடந்த சத்திய ஜோதியை நாடுகின்றோம். ஓம்.*

## விளக்கம்

இவ்வுலகத்தில், துக்கம், வேதனை போன்றவை இருப்பதற்கும் கூட ஒரு தெய்வ காரணம் உள்ளது.

துயரங்களுக்குள்ளாவதை முழுவதுமாய் தவிர்த்துவிட முடியாது.

இது மானுட வாழ்க்கையின் ஓர் இயற்கையான நியதி. ஆன்மாவின் ஆன்மீக வளர்ச்சிக்கு அத்தியாவசியமான ஓர் அடிப்படைத் தேவை.

இதனை சித்தத்தில் ஏற்றி உணர்ந்து கொள்ளும் ஒருவன், எவ்வழியில் கேடு வந்தாலும் அதனை அவன் தாங்கிக் கொள்வான். புயலோ, பூகம்பமோ, வெள்ளமோ, பஞ்சமோ, போரால் மூளும் வறுமைக் கொடுமைகளோ, வியாதியோ, அல்லது சொல்லொணாத் துயரமோ - அது எதுவாகினும்.

ஒரு கணப்பிலிருக்கும் கடுமையான தீ எப்படி தங்கத்தைப் புடம்போட்டு உருவாக்குகின்றதோ, அங்ஙனமே துயரங்களும்

வேதனைகளும் ஓர் ஆன்மாவினை ஜொலிக்க வைக்க நேரும் இயற்கை காரணங்களாகும்.

ஆயினும், சத்தியமான ஆனந்தமும் விடுதலையும் இவ்வுலகத்தில் அடைய முடியாதவை எனும் முக்கியமான உணர்தலை வேதனைகள் நமக்குப் புகட்டுகின்றன.

பூமி சார்ந்த உலகியல் சந்தோஷங்கள் கடைசியில் துக்கத்தில் கொண்டு போய் சேர்ப்பவை. உலகில் கிடைக்கும் தற்காலிக சுதந்திரங்கள் மற்றொரு தளையில் நம்மைக் கொண்டு போய் செருகுபவை.

இதனை உணர்ந்து கொண்ட ஒருவன், துக்கம் என்றால் என்ன என்பதை உள்ளது உள்ளபடி அறிய வைக்கவல்ல ஒரு சத்குருவினை தேடிப்போய் அடைகின்றான்.

தன்னை நாடி வரும் அந்த முதிராத ஆன்மாவினைக் கடுமையான தவம், இடைவிடாத ஆன்மீகப் பயிற்சிகள் (சாதனா) போன்ற வற்றில் ஈடுபடுத்தி, இருமை எனும் சுழற்சிக்குள் அகப்பட்டுக் கொள்ளுவதிலிருந்து விடுபட்டு சத்திய விடுதலையை உண்டு பண்ணித் தருகின்றார் சத்குரு.

**ஆகமங்கள் விளக்குகின்றன:**

‘‘குளிர் அல்லது வெப்பம் தோன்றுவது, புதிது அல்லது பாழானது என்று தெரிவது, அதிர்ஷ்டம் அல்லது துரதிர்ஷ்டம் என அனுபவ மாவது, அன்பு அல்லது வெறுப்பு என அனுபவிப்பது, சுறுசுறுப்பு அல்லது சோம்பேறித்தனம் என அமைவது, பணக்காரன் அல்லது ஏழை என வாழ்வது, ஞானி அல்லது அஞ்ஞானி என்று வாழ்வது, இவையெல்லாமே கடவுள்தான். ஆண்டவனைத் தவிர இவை யெல்லாம் வேறொன்று கிடையாது.’’ ஓம் நமசிவாய.



*இது, கவுதம புத்தரின் வாழ்க்கையையே*
*தலைகீழாய் புரட்டிப் போட்டதொரு முக்கியமான திருப்பம்.*

*நோய், வயோதிகம், மரணம் மற்றும் வேதனை ஆகியவற்றை தனது*
*வாழ்நாளிலேயே முதன்முறையாய் புத்தர் பார்த்த தருணமிது.*

*மனவிடுதலைக்கான ஆணிவேரே துக்கம்தான் என்று புத்தமதம் பார்க்கின்றது.*

*ஆனால், துயரத்தை, ஆண்டவனின் தெய்வத் திருவுளம்*
*காரணத்தோடு தந்துள்ள ஒன்றாய் பார்க்கின்றது இந்து மதம்.*

# பாவம் என்பது என்ன? இதற்கு நாம் எப்படிப் பரிகாரம் காண்பது?

**ஸ்லோகம் 52**

*தெய்வீக வழிகாட்டுதலை வேண்டுமென்றே அத்துமீறி கடப்பதே பாவமாகும். பாவம் என்று ஒன்று கிடையாது. ஆன்மாவை ஒட்டுமொத்தமாய் அழித்து விடவல்ல பாவம் என்றும் ஒன்று கிடையாது. கடும் ஆன்மீகப் பயிற்சிகள், வழிபாடுகள், எளிமையான மனோவாழ்க்கை போன்றவற்றால் பாவங்களுக்குப் பிராயச்சித்தம் கண்டுவிட முடியும். ஓம்.*

**விளக்கம்**

அஞ்ஞானிகள் எதனை பாவம் என்று சொல்லி கதறுகின்றார் களோ, அதையே ஞானிகள் அறியாமை என்று குறிப்பிட்டு ஆறுகின்றார்கள்.

மானுடத்தின் நிஜசொரூபம் வெறும் பாவங்களால் கறைப்பட்டு விடுவது கிடையாது.

தர்ம வழியினை வேண்டுமென்றே அகம்பாவத்தால் கடப்பது, ஒரு கீழ்த்தரமான புத்தி. இத்துடன் சம்பந்தப்பட்டதே பாவம்.

ஆயினும், இப்படிச் செய்வது பாவமாகச் சொல்லப்படுவதால், இதனை தவிர்க்க வேண்டியதே தர்மம். இல்லையென்றால் அதர்ம வழியில் நாம் செய்யும் ஒவ்வொன்றும் நமக்கே துன்பமாய் திரும்பி வந்து சேரும். இதுவே கர்மச் சக்கரம்.

பாவங்கள், தீர்க்கப்பட வல்லவை. பாவங்கள் தரும் விளைவுகளை தீவிர விரதங்கள், பிராயச்சித்தங்கள், கடும் தவம் போன்றவற்றால் கரைத்து விட முடியும்.

*கொட்டிக்கிடக்கும் தர்மச் செயல்களையெல்லாம் செய்து கர்மக்கடனைத் தீர்த்து விடலாம்.*

*ஆன்மாவின் உண்மையான தெய்வீக அலைவரிசையோடு இணைந்து ஒத்திராமல் இருக்கும் இளைய ஆன்மாக்கள், பாவங்கள் நோக்கி சுலபமாய் சாய்ந்து விடவல்லவையாகும்.*

*முதிர்ந்த அனுபவ ஆன்மாக்கள், தர்மப் பாதையை விட்டு அகலுவது கிடையாது.*

*புத்தி தன் தெய்வீக நிலையிழந்து உணர்ச்சி வயப்படும்போது உருவாகும் கொடூரக் கேடுகளே பாவங்கள்.*

*பாவ வயப்படும்போது நாம் நம்முடைய அருமையான சக்தியை எடுத்து உணர்ச்சிகளுக்கு சாதகமாய் போகும்படி வீணாய் தாரை வார்த்து தந்து விடுகின்றோம்.*

*காழ்ப்பும், கீழ்த்தரமான எண்ணங்களும், வெறுப்பும், கிலேசமும் கொண்டு, வருடக்கணக்காய் நாம் இயங்கும்போது, இதனால் திரிபடைந்து போவது நாம்தானே ஒழிய வேறு ஒருத்தர் கிடையாது.*

*இவ்வகையாய் போகும் அனுபவங்களால் ஆன்மா மெல்ல மெல்ல முதிர்ந்து கண் விழிக்கும்போது, சுமந்து கொண்டிருக்கும் பாவச்சுமைகளையும் செய்த தவறுகளையும் அது உணர ஆரம்பிக் கின்றது. இவற்றிலிருந்து விடுபட பரிகாரங்களை நாடுகின்றது.*

*விரதங்களும் யாகங்களும் நடத்தப்படுகின்றன. அப்போது சமுதாயத்திலிருந்து விலகி தனியாகிவிடத் துடிக்கின்றது ஆன்மா... இறைவனின் கருணைமயமான பாதாரவிந்தங்களுக்காக நாடி நிற்கின்றது.*

**வேதங்கள் சொல்கின்றன:**

*''என்னை கட்டியிருக்கும் கயிற்றினை அவிழ்த்து சுதந்திரம் தருவதைப்போல என்னை நான் செய்த பாவங்களிலிருந்து விடுபடுத்திக் கொடு. 'சத்தியம்' மற்றும் 'சரி' எனும் உன்னுடைய ஆற்றின் ஊற்றுக்களில் திளைத்தபடி என் வாழ்க்கை பேரானந்தத்தில் நிற்கட்டும்.'' ஓம் நமசிவாய.*



*வருத்தம் ஏற்படுத்தும்படி தாங்கள் செய்த பாவங்களுக்கு விரதங்கள் மற்றும் தவங்களால் பிராயச்சித்தங்கள் தேடிக்கொள்கின்றார்கள் இந்துக்கள்.*

*காட்டுக்குள் தஞ்சம் புகும் ஒரு பெண்மணி கடும் யோகங்களில் ஈடுபடுகின்றாள்.*

*கமண்டலத்தருகே உள்ள தண்டம் இதனை உணர்த்துகின்றது.*

*இவள் தனக்குத்தானே மூட்டிக் கொண்டுள்ள பாவத்தீ அணைய, மணிக்கணக்காய் ஒற்றைக்காலில் நின்று கடும் தவம் இயற்றி இறைவனை வேண்டுகின்றாள்.*

# நரகம் என்பது உண்மையில் இருக்கின்றதா? சாத்தான் என்பதும் உள்ளதா?

## ஸ்லோகம் 53

*இறைவனால் உருவாக்கப்பட்ட நரகம் என்று ஒன்று கிடையாது. அதேபோல சாத்தான் என்றும் ஒன்று கிடையாது. இருந்தாலும் நரகத்தையொத்த புத்திகள் இருக்கின்றன. எப்போதும் தப்பாகவே நினைத்து நடந்துகொள்ளும் தாளவொண்ணா ராட்சஸ பிறப்புகளும் உள்ளன. உள்ளேயிருந்து கடுமையான விசைகளை மேலெழுப்பும் கொடுமையான ஆட்கள் இவர்கள். ஓம்.*

## விளக்கம்

விண்ணுலகமே நம்முள் ஏழு சக்கரங்களாக நிலைத்துள்ளது.

இவற்றில் மூலாதாரம் என்பது, பிறப்பிக்கும் பகுதியில் உள்ள சக்கரம்.

இதுவே ஆரம்ப சக்கரம். இங்கிருந்து கபாலம் எனும் மோட்சம் வரை ஏழு சக்கரங்கள் உள்ளன.

மூலாதாரத்துக்கும் கீழே அமைந்துள்ளது நரகம்.

அக்னியும் உஷ்ணமும் கொடுங்கோலாட்சி புரியும் இடமிது.

இங்கு கோபம், பொறாமை, வாக்குவாதம், புத்தி தடுமாற்றம், போர் சிந்தனைகள் போன்றவை புத்தியைப் பீடித்து வதைக்கும்.

நரக வேதனைகள் நம்முடைய சிந்தனையின் தாக்கத்தால் நாமே ஏற்படுத்திக் கொள்பவையாகும்.

நம்முடைய சிந்தனைகள், செயல்கள், உணர்ச்சிகர வெடிப்புகள் ஆகியவை, ஏதோ பேய்கள் என்று ஒன்றிருப்பதாகவும் அவற்றின்

துர்சக்தியே இப்படி ஆட்டுவிப்பதாகவும் நம்மை நினைக்க வைக்கின்றன.

நரகம், இறைவன் ஆக்கியது கிடையாது.

மனிதனைத் தூண்டுவித்து இறை சக்தியை தடுக்கும் சாத்தான்களும் கிடையாது.

நரக குணம் கொண்ட படைப்புகளுக்கு அசுரர்கள் என்று பெயர். இப்படிப்பட்டவர்கள் இருக்கிறார்கள். ஏமாற்றம், தோல்வி, ஒதுக்கப்பட்ட நிலைமை போன்ற சுழல்களில் அகப்பட்டுள்ள முதிர்ச்சியடையாத ஆன்மாக்களே அசுரர்களாய் நடந்து கொள்கின்றார்கள்.

நரகப் பிரதேசங்களில் நாம் போய் வீழ்ந்து அல்லல்பட வேண்டும் என்று ஒன்றும் கிடையாது. சிந்தனைகளில் மாசுமரு இருக்கும் போதுதான் அது தரும் தாக்கங்கள் நரக வேதனையை உண்டு பண்ணுகின்றன.

இவற்றைத் தவிர்த்தலே நரகத்தைத் தவிர்ப்பதாகும்.

தீர்க்கப்படாத வெறுப்புணர்வு, பச்சாதாபம், ஆத்திரம், பயம், சிதறடிக்கப்பட்ட சிந்தனைகள் போன்ற சிந்தனைப் போக்கினால், பலரும் பரிதவித்துக் கொண்டிருக்கும் நரகம் எனும் ஊரை நாமும் வந்தடைகின்றோம்.

**வேதங்கள் சொல்கின்றன:**

‘‘சரியாய் சொல்ல வேண்டுமென்றால், நரகம் என்பது சூரியன் காணாததொரு பகுதி. பேயாடும் இடம். பார்வையற்ற கண்களைப் போன்றதோர் இருட்டு. இப்படிப்பட்ட நரகத்தினை, தனது சொந்த ஆன்மாவுக்கே எதிரியாய் இருந்து வாழ்ந்த அனைவரும், தங்களது மரணத்துக்குப் பின்னால் போய் அடைகின்றார்கள்.’’ ஓம் நமசிவாய.



கடவுளுக்கு எதிராய் சாத்தானோ அல்லது துர்சக்தியோ
கிடையாது என்பதை இந்துக்கள் ஏற்றுக் கொள்கின்றார்கள்.

எனவே இறைவனால் ஆக்கப்பட்ட நரகம் கிடையாது என்றும் ஒப்புக் கொள்கின்றார்கள்.

ஆயினும், இருண்ட, துயரம் மிகுந்த பகுதி உள்ளது. இது நரகலோகம்.
இங்கு தங்களது செய்கைகளுக்காக ஆன்மாக்கள் தாற்காலிகமாகப் பாடுபடுகின்றன.

## பாவச்செயல்களின் விளைவுகள் யாவை?

**ஸ்லோகம் 54**

*நாம் சிந்திப்பதிலும், பேசுவதிலும், நடந்து கொள்வதிலும் நற்பண்புகளும் நல்லொழுக்கமும் இருக்க வேண்டும். இப்படி அமையாதபோது பாவ கர்மங்களை நமக்கு நாமே ஏற்படுத்திக் கொண்டு, நாமும் துன்பப்படுகின்றோம். நம்மைச் சூழ்ந்துள் ளோருக்கும் துன்பம் ஏற்படுத்துகின்றோம். உள்ளார்ந்த ஆன்ம வழிகாட்டுதல் இல்லாமல் புலனுணர்வினால் நாம் உடனடியாய் உணர்ச்சிவயப்படும்போது, துக்கப்பட நேர்கின்றது. ஓம்.*

**விளக்கம்**

*நல்ல பண்புகளைக் கடைப்பிடித்து ஒழுகும்போதும், ஆன்மாவின் குரலான நம்முடைய மனசாட்சிபடி நடந்து கொள்ளும்போதும், நாம் சந்தோஷம் அடைகின்றோம். ஸ்திரமாய் நிற்கின்றோம்.*

*நம்முடைய ஆன்மாவின் குரலே* Super Conscious *புத்தி எனப்படும் இறை சிந்தை. இதற்கு நற்பண்புகளை அடையாளம் காணத் தெரியும். அவற்றை ஈர்க்கவும் தெரியும்.*

*இதிலிருந்தே சுத்திகரிக்கப்பட்ட பண்பாடும் நீண்ட நெடுநாட்கள் நீடிக்கவல்ல பாரம்பரியமும் உதிக்கின்றன.*

*தவறான நடவடிக்கைகளும் வஞ்சனையான போக்கும் நம்மை கடவுளிடமிருந்து தள்ளி வைத்து விடுகின்றன.*

*இது, சந்தேகம் எனப்படும் இருட்டுக்குள் நம்மை ஆழ்த்தி விடுகின்றது. ஆதரவற்ற நிலைமையிலும் சுயபச்சாதாபக் கொடுமையிலும் நம்மை மூழ்கடித்து விடுகின்றது.*

*இவ்வகையான கெட்ட குணாதிசயங்களால் நாம் கடவுளிட மிருந்து தள்ளப்படும்போது, அசுரர்களால் சூழப்பட்டு விடுகின்றோம்.*

*நமக்கு நாமே பகையாகிப் போவது மட்டுமல்லாது, நமது குடும்பத்தாரிடமும் ஒத்துப் போக முடியாமல் ஆகி, வேறெங்கோ துணையை தேட வேண்டிய துர்லப நிலையை உண்டாக்கிக் கொள்கின்றோம்.*

*அப்படி அமையும் நட்பும், சரியான சிந்தனையற்றவர்களுடைய நட்பாய் அமையும். சுயகட்டுப்பாடு அற்ற, பொறாமையும் வஞ்சனையும் சூழ்ந்ததோர் அசுர நட்பே இக்கட்டத்தில் சாத்தியமாகிப் போகின்றது.*

*இச்சூழலில் நற்பண்புகளைக் கடைப்பிடிக்க முடியாது ஆகையால் நாம் சுமக்க வேண்டி புதிதான பாவச்சுமைகளும் கூடிவிடுகின்றன.*

*ஒருகாலத்தில் அற்புதமாய் நாம் வாழ்ந்த ஆன்மீக வாழ்க்கையை வாழ முடியாத அளவுக்கு பாவப்படலம் நம் கண்களை மறைத்து விடுகின்றது.*

*தர்ம வழியிலிருந்து தடம்புரண்டு தப்பாய் நடந்து கொண்ட வர்கள், விரதங்களும் யாகங்களும் மனப்பூர்வமாய் இருந்து, கடவுள் மற்றும் கடவுளர்களின் பாதங்களில் சரண் புகுவதே, அவர்கள் ஏற்றிக் கொண்டுள்ள பாவச்சுமைகளிலிருந்து அவர்களுக்கு விலக்கினை உண்டுபண்ணித் தரும்.*

*இங்கு அதிர்ஷ்டவசமாக நம்முடைய கடவுள்கள் கருணை மயமானவர்களாகவும் பக்தர்களை அன்பாய் அரவணைப்பவர் களாகவும் இருக்கிறார்கள்.*

**ஆதி வேதங்கள் தரும் சாரம்:**

*‘‘புத்திக்கு இரு பக்கங்கள் உண்டு என சொல்வதுண்டு. ஒன்று தூய்மையானது. மற்றொன்று அசுத்தமானது. ஆசைகளுடன் சேரும்போது புத்தி அசுத்தமாகின்றது. ஆசைகளிலிருந்து முழுதும் விடுபட்டு விட்ட பிறகு அது பரிசுத்தமாகின்றது.’’ ஓம் நமசிவாய.*



*தான் செய்த பாவங்களுக்காக ஒருவன் தன்னைத்தானே குத்திக் கொள்ளத் தலைப்படும்போது, இப்படிப்பட்ட காரியங்களை செய்யக்கூடாது என்று மிருதுவாய் தடுத்தாள்கின்றார் சிவபெருமான்.*

*அதர்மமாய் நடந்து கொள்வதினால் துயரங்களை நமக்கு நாமே உண்டுபண்ணிக் கொள்கின்றோம். இதற்காக தவங்கள் இயற்றும்போது அவற்றிலிருந்து விடுபடுகின்றோம்.*

# தப்பான காரியங்களைச் செய்வோரைக் கடவுள் தண்டிப்பதுண்டா?

## ஸ்லோகம் 55

*ஆண்டவன், அப்பழுக்கற்ற நல்லவர், அன்பானவர், சத்திய மானவர். பழிதீர்க்கும் பாங்கோ அல்லது கொடூர மனப்போக்கோ அவருக்கு கிடையவே கிடையாது. அவர் தப்பான செயல்கள் செய்வோரைத் தண்டிப்பதோ, விமர்சிப்பதோ கிடையாது. பொறாமை, பழிவாங்கும் போக்கு, ஆணவம் இவையெல்லாம் சந்தர்ப்ப சூழ்நிலைகளுக்கு ஏற்ப மனிதன் கொள்ளும் இயல்புகள்... இவை ஆண்டவனுடைய இயல்புகளே அல்ல. ஓம்.*

**விளக்கம்**

கடவுளுக்காக எக்கட்டத்திலும் நாம் பயப்பட வேண்டிய தேவையே இல்லை.

அவருடைய வலக்கரத்தில் அபய முத்திரை உள்ளது. ‘என்றும் அஞ்சாதே’ என்பதே இது.

இடக்கரமோ, நெருங்கி வருவோரை ஈர்க்கும் இயல்பினதாக அமைந்துள்ளது.

நாம் ஆண்டவனுடைய புனிதமான இருப்பினை அறியாமலே வாழ்ந்து வந்தாலும், அவர் நம்முடனேயேதான் இருக்கின்றார். எப்போதும்.

அவர் படைப்புத்தான் அவர்.

அவர் படைப்புகள் அனைத்தும் அவருடைய நீட்டிப்புக்களே.

அவர், அவரது படைப்புகளிலிருந்து ஒருபோதும் விலகியது கிடையாது. பிரிந்தது கிடையாது.

*நாம் தப்பாகவும் அதர்மமாகவும் நடந்து கொள்ளும்போது நமக்கு நாமே கர்மவினைகளை உருவாக்கிக் கொள்கின்றோம். இதனைக் கழிக்க நாம் துயரப்பட்டு வாழ வேண்டிய நீதிக்கட்டாயம் விளைந்து விடுகின்றது. இது, கர்ம சட்டம்.*

*கர்மவினைகளினால் உண்டாகும் துயரங்கள் மிகவும் வலி கொண்டதாய் அமையலாம். ஆனால் அவை நாமே நம்முடைய செயல்களினால் உருவாக்கிக் கொண்டவை.*

*ஆண்டவன் நம்மை ஒருபோதும் தண்டிப்பது கிடையாது - நாம் அவரை நினையாது வாழ்ந்தாலும்கூட.*

*கடவுளைத் தொழுவதின் மூலமும் கடவுளை இடைவிடாது தியானிப்பதன் மூலமும்தான் நாமே உருவாக்கிக் கொண்டுள்ள வலிகளும் துன்பங்களும் தணிகின்றன... பின் மறைகின்றன.*

*கடவுள், அனைவருக்குமாய் உள்ளார். ஆத்திகர்கள் மற்றும் நாத்திகர்கள் ஆகிய அனைவருக்கும் ஒருசேர இருக்கின்றார் கடவுள்.*

*வஞ்சனை பொருந்தி இயங்கியவர்களைக் கடவுள் தண்டிக்கவும் மாட்டார். தர்மநீதியில் நடந்து கொண்டவர்களை ஆண்டவன் ரட்சிக்கவும் மாட்டார்.*

*ஆனால் அனைத்து ஆன்மாக்களுக்குமே 'விடுதலை' எனும் பெரும் பேறினை அவர் அருள்கின்றார்.*

**ஆகமங்கள் சொல்கின்றன:**

*''ஆன்மா அப்படியே மெல்ல மெல்ல இறங்கி ஒருநிலையில் அப்படியே நின்று போகும்போது, அறியாமை மற்றும் துர்சக்திகளில் அதன் பங்களிப்புகள் மறைகின்றன. அப்போது உலகங்களின் தோழனான ஆண்டவன், அந்த ஆன்மாவுக்குள்ள கட்டுக்கடங்கா ஞானத்தையும் இயக்கத்தையும் அந்த ஆன்மாவுக்கு காட்டுகின்றான்.'' ஓம்.*



*ஒரு பணியைச் செய்து கொண்டிருந்தபோது சரியாய் இயங்காத ஒரு பணியாளை ராஜா அடித்ததாக துவங்கும் ஒரு பழங்கதை உண்டு.*

*அடிபட்டது, மாறுவேடத்தில் இருந்த சிவபெருமான்.*

*விழுந்த அந்த அடியை அங்கிருந்த ஒவ்வொருத்தராலும் உணர முடிந்தது. ராஜா உட்பட. கடவுள் ஒரு போதும் நம்மை தண்டிப்பது கிடையாது.*

*நாம்தான் அவரே. ஆகவே, அப்படி அவர் செய்தால் அது அவரை அவரே தண்டித்துக் கொள்வதாகும்.*

*ஒரு மனிதன் அனைத்து ஜீவன்களும் அவனுடைய ஆன்மாவுடன் இரண்டறக் கலந்துள்ளதை உணர்ந்த பிறகு, இந்த ஒருங்கிணைப்பினை அவன் தவறாது அனுபவிக்கும்போது, அவனை துன்பமோ துக்கமோ எப்படி தீண்டும்? சுக்ல யஜுர் வேதம்.*

*சூரியனைப் போல தாராளமாய் வழங்கிக் கொண்டிருக்கும் அந்த ஒரே வள்ளலை, ஆனந்தத்தை தருபவரை, அன்பானவரை, இரக்கமானவரை, அனைவராலும் இன்முகத்துடன் வேண்டப் படுபவரை நான் புகழ்ந்து பாடுகின்றேன். அவரை வணங்குபவரின்மீது அவர் சக்தியினைப் பொழிகின்றார். அக்னி தேவனான அவர் நம்முடைய துயரங்களை எரித்து விடட்டும். சாஸ்வதமான அனைத்து சம்பத்துக்களையும் ராஜபலத்தையும் அவர் நமக்கு தரட்டும். ரிக் வேதம்.*

*இறைமை எனும் ஆனந்த சாந்தத்தில் உறைந்திருக்கும் ஆண்டவனை நோக்கி நான் அடைக்கலம் நாடி போகின்றேன். சுந்தரமும் துல்லியமுமான அவரிடம் நாம் அமைதியை அடைய முடியும். மரணமற்ற தெய்வீகத்துக்கு நம்மை இட்டுச் செல்லும் பாலமவர். கீழ்த்தரமான இந்த பாவ வாழ்க்கையின் கறைகளை எரித்து விடவல்ல நெருப்பு அவரே. கிருஷ்ண யஜுர் வேதம்.*

*படைத்தவனை, ஆண்டவனை, பிரம்மத்தின் காரணகர்த்தாவை, தங்கநிற ஜ்வாலையாய் பார்த்து விடும் ஒரு ஞானி, அனைத்தும் அறிந்தவராகி விடுகின்றார். நல்லது கெட்டது எனும் இருமை அவரிடமிருந்து உதறப்பட்டு விடுகின்றது. மும்மலக் கறைகளி லிருந்து விடுதலை அடைந்து விடுகின்றார். ஆண்டவன் எனும் பெருந்தலைவனுடனான சமநிலையை அவர் எட்டி விடுகின்றார். அதர்வண வேதம்.*

*நல்லதோ கெட்டதோ... அது என்ன நடவடிக்கையாயினும் அதனை கலக்கமற்ற அமைதியான புத்தியால் மட்டுமே வெல்ல முடியும். நமது அகங்காரம் எனும் (மாய)சுயம் சாந்தப்படுத்தப் பட்டு விட்டால், ஆன்மாவுள் உறையும் சத்திய சுயமான இறைவனுடன் அடங்கி விடுகிறோம். அப்போது அழியா சாந்தத்தினை எட்டிப்பிடித்து விடுகின்றோம். இங்கு பொருட்களின் மீது இப்போது விடாப்பிடியாய் பிடித்திருக்கும் பிடிப்பினை,*

*அப்போது அடையாளம் கண்டுகொண்டு விட்ட ஆன்மாவின்மீது பதித்து அதனை கெட்டியாய் பிடித்துக் கொண்டு விட்டால், யார்தான் இந்த உலகயியல் சார்ந்த நிலையற்ற பற்றுதலிலிருந்து விடுதலை அடைந்து விட மாட்டார்? கிருஷ்ண யஜூர் வேதம்.*

*அசுத்தங்களும் மாசுக்களும் களைந்து அகற்றப்பட்டு விட்ட ஓர் ஆன்மா, அப்போது அடையும் ஆனந்தத்தினை வார்த்தைகளிட்டு விவரிக்கவே முடியாது. ஆத்மன் எனப்படும் தனது சொந்த ஆவியுடன் கலந்து விட்ட இறைமைப் பிணைப்பு அது. இந்த ஆனந்தத்தை உணரும் ஆன்மாக்களுக்கு மட்டுமே தெரியும், ஈடு இணையற்ற இந்த ஆனந்தம் என்ன என்பது. கிருஷ்ண யஜூர் வேதம்.*

*சிகிச்சையின் சில நடைமுறைகளினால் தனது நோயாளிக்கு ஒரு மருத்துவர் வலிகளை உண்டுபண்ணினாலும், அந்த மருத்துவர்தான் நோயாளி படும் துன்பத்துக்கு காரணம் என்று ஆக மாட்டார். ஏனென்றால் நிறைவாய் அந்த நோயாளி எதை நாடி வந்தானோ அந்த நிரந்தர நன்மையை அவர்தான் விளைவித்து தருவார். மிருகேந்திர ஆகமம்.*

*விழித்திருந்த நிலையிலோ அல்லது தூங்கும்போதோ, தெரிந்தோ தெரியாமலோ, எந்த நிலையில் நாம் பாவங்களை இழைத்திருந் தாலும், அப்படிப்பட்ட அசுரத்தனமான காரியத்தால் நம்மை ஒட்டியிருக்கும் பாவச்சுமையை அக்னி அவிக்கட்டும். ரிக் வேதம்.*

*பிரச்சினைகள், விவாதங்கள், உலகயியலுடனான ஒட்டுற வாடல்கள் போன்றவை தவிர்க்கப்பட வேண்டும். அது நல்லதா யிருந்தாலும் கெட்டதாயிருந்தாலும், சமய விவாதங்கள்கூட தவிர்க்கப்பட வேண்டும். பொறாமை, தூஷனை, பற்றுதல், காழ்ப்பு, காதல், கோபம், பயம், துக்கம் போன்ற அனைத்து உணர்வுகளும் ஆரம்பத்தில் கொஞ்சம் கொஞ்சமாக நம்முள்ளிருந்து மறைய வேண்டும். விரைவில் முழுவதுமாய் போய்விட வேண்டும். தேவிகாலோத்தர ஆகமம்.*

*எரியும் நெருப்பு அதனுள் இடப்படும் எரிபொருளைக்கூட சாம்பலாக்கி விடுவதைப் போல, ஞானம் எனும் இறை அக்னி நம் அனைத்து கர்மச்செயல்களையும் எரித்து விடும். பகவத் கீதை.*

*சத்தான மனையாள், உண்மையான பக்தன் மற்றும் சீரிய ஞானி - இவர்களை உலுக்கும்படியான அதிர்ச்சிகளை யார் தந்தாலும் அவர்களுடைய வாழ்வும் உடைமைகளும் ஒரு வருடத்துக்குள் அழிந்துவிடும். திருமந்திரம்.*

*ஓ, கடவுளே... இந்த ஐம்புலன்களும் என் உடம்பினை தனது கட்டுக்குள் எடுத்துக் கொண்டு விட்டன. உன் திருப்பாதங் களிலிருந்து என்னை வெகுதூரம் தூக்கிச் சென்று விட்டன. நான் என் இதயத்தில் குழப்பத்தில் இருக்கிறேன். மத்திடைப்பட்ட தயிர் போல தத்தளிக்கின்றேன். ஞானத்தை எனக்கு நீ தந்தருள்வாயாக. திருமுறை.*

*கணப்புக்குள் இருக்கும் தீவிரமான அக்னி அதனுள் போடப்பட்ட தங்கத்தை ஜொலிக்கும்படி மாற்றி விடுவதை போல, கடுமையான துயரங்கள் ஆன்மாவை ஞான ஜோதியாக்கி ஜொலிக்க வைக்கும். திருக்குறள்.*

*எங்கு சென்றாலும் தன் நிழல் விடாது தொடர்வதை போல, பாவச்செயல்கள் செய்தோரை அழிவு விடாது தொடரும். திருக்குறள்.*

*பல வேர்களை சேகரிக்கும் மருத்துவன் அவற்றையெல்லாம் ஒன்றாக்கி ஒரு சிறு மருந்துக் குப்பி செய்து வியாதியை குணமாக்குகின்றான். இதேபோல, மாபெரும், அனைத்தும் அறிந்த 'ஒரே மருத்துவன்', உடல், அவற்றின் பயன்பாடுகள், உலகம், அதில் ஏற்படும் அனுபவங்கள் என்று அனைத்தையும் ஆன்மாவுக்கு தந்து அதன் வியாதியை தெளிவிக்கின்றான். தெளிவு, ஞான உதயமாகி, ஆன்மாவுக்கு விடுதலை என சொஸ்தத்தைத் தருகின்றது. நற்சிந்தனை.*

# தர்மம்



உபநிடதம் ஐந்து:

*முறையாய் வாழ்வது*

# சதுர் தர்மாஹ்ற



நான்கு தர்மங்கள்

*உண்மையைப் பேசும் மனிதனைப் பார்த்தால் அவன்தான் தர்மவான் என்கின்றார்கள். தர்மவானைப் பார்த்தால் அவன்தான் சத்தியம் எனும் உண்மையின் திருவுரு என்கின்றார்கள். ஆக, இவ்விரண்டும் ஒன்றே.*

***-சுக்ல யஜுர் வேதம்***

# தர்மம் என்றால் என்ன?
# அதன் வடிவங்கள் யாவை?

**ஸ்லோகம் 56**

*ஜீவன்களுக்கான சட்டம், தர்மம். இயற்கையாய் இலக்கினை அடைய ஓர் ஒழுங்குடன் உருவாக்கப்பட்டுள்ள இறை விதி. தர்மம், நான்கு பிரதான வகைகளை கொண்டது. நாம் வாழும்போதே நான்கு நிலைகளில் கடைப்பிடிக்க வேண்டிய இறைவனது சட்டதிட்டங்கள் இவை. அவையாவன: பிரபஞ்ச தர்மம், மானுட தர்மம், சமூக தர்மம் மற்றும் தனிமனித தர்மம். ஓம்.*

**விளக்கம்**

கடவுள் பிரபஞ்சத்தைப் படைத்தபோது, அதனை அவர் ஓர் ஒழுங்கான முறையில் உருவாக்கினார். 'படைப்புகளை நிர்வகிக்கக் கூடிய சட்டங்கள்' என்ற இறைப் பேறினால் இது இயன்றது.

இப்பேறுதான், கடவுளின் 'இறை விதி.' இதுவே தர்மம்.

நம் வாழ்வின் ஒவ்வொரு கட்டங்களிலும் இது பரவியுள்ளது.

நிலைதடுமாறாது இயங்கும் பால்வீதிகள் முதல், சமயங்கள் வகுத்துள்ள சட்டதிட்டங்கள் வரை, படைப்பு ரகசியத்தின் ஒழுங்கான கட்டமைப்புடன் நம்மையும் ஒத்திருக்குமாறு கட்டி வைத்துள்ள இறை விதியாகும் இது.

நாம் தர்மத்தால்தான் காக்கப்படுகிறோம்.

தர்மமே, சூழ்ந்த மற்றும் சிக்கலான இந்தப் பிரபஞ்சத்தில், நமக்கான இடத்தில் நம்மை வெகுசரியாக அமர்த்தியுள்ளது.

ஒவ்வோர் இனத்துக்கும், ஒவ்வொரு ஜீவனுக்கும், ஒவ்வொரு மானுடத்துக்கும், அதற்கான தர்மம் உள்ளது. ஜீவதர்மமிது.

*நாம் தர்மத்தைக் கடைப்பிடித்து அதன் வழி நடக்கும்போது, இப்பிரபஞ்சத்தையே வழிநடத்தும் சத்தியத்துடன் நாம் சந்தேகமறக் கலந்து நிற்கின்றோம். இதனால், நாம் இயற்கையாய் இறைவனின் மிக அருகாமைக்குள் போய் விடுகின்றோம். சத்தியம்தானே கடவுள்.*

*அதர்ம வழிகள் எதுவாகினும் அது இறைவன் வகுத்துள்ள இறை விதிக்கு எதிரானதே.*

*இயற்கை முழுவதிலும் தர்மம் இருக்கின்றது. ஜீவதர்மத்தினை ஆழ்ந்து சிந்தித்தால் இது விளங்கிவிடும். இது நமது கலாச்சாரம் மற்றும் பாரம்பரியத்தில் பிரதிபலிக்கின்றது.*

*தர்மம், தெய்வ பக்திக்கு ஒப்பானது. மதம் சார்ந்து கட்டமைக்கப் பட்டுள்ளது. தர்ம வழி வாழ்வது புண்ணிய பயிற்சியாகும். இது நமது கடமை. கட்டுப்பாடு.*

*தர்மவழி, நம்மை அஞ்ஞானத்திலிருந்து கட்டவிழ்த்து விடுதலையைத் தரவல்ல வழியாகும்.*

*பிரபஞ்ச தர்மம், ரிதா என்று அழைக்கப்படுகின்றது.*

*சமூக தர்மம், வர்ண தர்மம் என்றும் மானுட தர்மம் ஆஸ்ரம தர்மம் என்றும் சொல்லப்படுகின்றன.*

*நமது தனிமனித தர்மம், ஸ்வதர்மம்.*

*காலங்கடந்து வாழும் இந்த நான்கு அப்பழுக்கற்ற தர்மங்களின் ஒரே பிம்பமாய் விளங்கும் நம் இந்துத்துவம், சனாதன தர்மம் என்றாகின்றது.*

**வேதங்கள் புகழ்கின்றன:**

*‘‘தர்மத்தைவிட உயர்ந்த வேறொன்று கிடையாது. தர்மம் என்று எது ஆகின்றதோ அதுவேதான் சத்தியமும்.’’ ஓம் நமசிவாய.*



*தர்மத்தின் ராஜா, தெளிவுடனும், மனசாட்சியுடனும்,*
*உண்மையுடனும், உயர்ந்த பாதையில் நடக்க வேண்டும்.*

*இங்கிருக்கும் புனித சக்ரவர்த்தி, தனது மந்திரிகளின் ஆலோசனையின் பேரில் வழிநடத்தப்படுவதைப்போல தர்ம ராஜாவுக்கு, தர்மத்தை வழிநடத்தும் சக்தி இல்லாமல் ஆகிவிட்டாலோ அல்லது தவறான வகையில் அவர் நடந்து கொண்டு விட்டாலோ, இங்கே தர்மமே ஆட்டங்கண்டுவிடும்.*

# பிரபஞ்ச தர்மம் உணர்த்துவது என்ன?

## ஸ்லோகம் 57

*வேதங்களில் ரிதா என்று அறியப்படும் பிரபஞ்ச தர்மம், பிரபஞ்சமெங்கும் நடந்து கொண்டிருக்கும் இறைவனின் தர்ம ஆட்சியாகும். இது எல்லையற்ற ஞானம். இயற்கை ஞானம். பிரபஞ்சம் முழுவதையும் வடிவமைத்து அதனைத் தளராமல் வழிநடத்திக் கொண்டிருக்கும் விசை. ஓம்.*

## விளக்கம்

பால்வீதிகளில் நகரும் நட்சத்திர மண்டலங்கள் முதல் நுண்ணிய அணு வரை, எதுவும் அவன் அனுமதியின்றி நகராது.

இங்ஙனமாய் இயற்கையைத் தனது கட்டுப்பாட்டுக்குள் வைத்து ஒழுங்குபடுத்தி நடத்திக் கொண்டிருக்கும் இறைவனுடைய கொள்கை மற்றும் இதற்கான ஆண்டவனின் சட்டம் ஆகியன வற்றின் அடிப்படை சாரம், ரிதா ஆகும்.

ரிதாதான் பாதை. வழி.

இறைமை எனும் இறுதி இலக்கும் இதுவே. இறுதி இலக்குக்கான பாதையும் இதுவே.

இயற்கையின் பிரிக்க முடியாத ஒரு பகுதிதான் நாம் என்பதையும், இயற்கையைவிட உயர்ந்தவர் நாம் அல்ல… அதனை கட்டுக்குள் வைக்கும் அதிகாரமும் நமக்கு கிடையாது என்பதையும் உணர்ந்து, பிரபஞ்ச தர்மத்துடன் நாம் இயைந்து நின்றால், நாம் கடவுளின் அலைவரிசையுடன் ஒத்ததிர ஆரம்பித்து விட்டோம் என்றே அர்த்தம்.

அனைத்து இந்துக்களுக்கும் நாம் இந்த கோளுக்கு வந்திருக்கும் ஒரு விருந்தாளியே என்பது நன்றாகவே தெரியும். இயற்கையுடன்

நமக்கிருக்கும் கடமைகளுக்காக இங்கே வந்திருக்கும் நாம் அது முடிந்ததும் அதே இயற்கையுடன் போய் விடுவோம் என்பது இந்துக்களின் தர்மம்.

இதற்காக, நாம் எடுக்கும் இந்த ஸ்தூல உடம்பு இயற்கையால் கொடுக்கப்படுகின்றது. பிறகு அதனிடமே திரும்பிப் போய் விடுகின்றது.

எண்ணிலடங்கா பற்பல வஸ்துக்களைக் கொண்டு ஈடிணையற்ற வகையில் அற்புதமான ஒழுங்குடன் படைக்கப்பட்டிருக்கின்றது, இயற்கை.

ஒரு தேங்காய் எப்போதும் தென்னை மரத்தைத்தான் தருகின்றது.

ஒரு தாமரை உருவாக்குவது, தாமரை தாவரத்தையே.

ரோஜாச் செடியிலிருந்து விளைவிக்கப்படுவது ரோஜாச் செடித்தான்.

வேறு ஒரு உயிரினத்தை உற்பத்தி பண்ணிவிட முடியாது.

சஞ்சலமற்ற மாறா இயக்கமாய் எப்படியுள்ளது, இயற்கை! இருந் தாலும், எண்ணிக்கையில் அடங்காத எத்தனையெத்தனை விதங்கள்!

பிரபஞ்சங்களெங்கும் அதன் படைப்புகள் கொத்துக்கொத்தாய் இருந்து கொண்டேயிருந்தாலும், ஒன்றைப் போல மற்றொன்று அமையாத நேர்த்தி!

ஆம்... தான் இயற்கையின் ஒரு விள்ளல்தான் என்பது இந்துவுக்கு நன்றாய் தெரியும்.

அண்ட சராசரம் முழுவதையும் தடம்புரளாது வைத்திருக்கும் ‘பிரபஞ்ச தர்மம்’ எனும் அந்த ஒரே விசையுடன் தன் வாழ்க்கையை அப்படியே ஐக்கியமாக்கிக் கொள்வதுதான் அவனுடைய தேடலாய் அமைகின்றது.

**வேதங்கள் ஓதுகின்றன:**

‘‘பூமி, சத்தியத்தால் நிலைத்துள்ளது. சொர்க்கம், சூரியனால் நிலைத்துள்ளது. ரிதா எனும் இறை விதியினால் பால்வீதிகள் நிலைத்துள்ளன. தெய்வ கருணையின் உச்சம், சொர்க்கத்தில் பேரானந்தமாய் கொட்டிக் கிடக்கும்.’’



*இங்கு வானத்தில், அழகான ஒரு சக்கர ரதத்தில்
சந்திரரும் சூரியரும் ஒன்றாய் உலாவருகின்றார்கள்.*

*இவர்கள் மட்டுமல்ல... மாபெரும் விண்வெளி வஸ்துக்களான கோள்கள்,
நட்சத்திரங்கள், கோடிகோடியான பால்வீதிகள், அவற்றின் நுணுக்கமான
அணுக்கட்டமைப்புகள் என எல்லாமும், ரிதா எனப்படும்
பிரபஞ்ச தர்மத்தினை அடியொற்றியே இயங்குகின்றன.*

# சமூக தர்மத்தின் இயல்பு என்ன?

## ஸ்லோகம் 58

*சமூக தர்மம், அல்லது வர்ண தர்மம், பணி, கடமைகள் மற்றும் பொறுப்புகள் ஆகியனவற்றை உள்ளடக்கியது. ஒரு குடிமகனாய், சமூகத்துக்கும் குடும்பத்துக்கும் நாம் ஆற்றி முடிக்க வேண்டிய கடமைகளைக் கொண்டது இது. சமயம் மற்றும் அறம் சார்ந்த சட்டதிட்டங்கள், இந்த தர்மத்தின் முக்கிய அங்கங்களாகும். ஓம்.*

## விளக்கம்

ஒவ்வொரு மனித சமூகமும் அதனுள் உள்ள பலதரப்பட்ட பிரிவுகளின் ஒருங்கிணைப்புகளை வரிசைப்படுத்தித் தருகின்றது.

பாண்டித்தியம் பெற்ற, பக்தி நிறைந்த ஆன்மாக்களுக்கு பிராமணர்கள் என்று பெயர்.

சட்டங்களை இயற்றி அதனை செயல்படுத்துவோருக்கு, க்ஷத்ரியர்கள் என்று பெயர்.

வங்கிகள் அமைத்து செயல்படுத்தி வியாபாரங்களுக்கு வழிவகுப்போர், வைசியர்கள் என்றாகின்றார்கள்.

பணியாட்கள் மற்றும் வேலையாட்கள், சூத்திரர்கள் என்று வருகின்றார்கள்.

இந்த நாலு வகைகள் அல்லது வர்ணங்களைத் தவிர, பல நூறு ஜாதிகள் நுழைகின்றன.

இந்து மதத்தில், ஒருத்தர் பண்ண வேண்டிய தொழில் மற்றும் அவனது சமூகம் ஆகிய இரண்டையும் நிர்ணயிக்கும் வகுப்புகளும் ஜாதிகளும், வழிவழி வரும் வழிகாட்டுதலில் அமைகின்றன.

*ஆயினும், பிறப்பு சார்ந்து அமையும் இப்பிரிவினைகள், தனது கல்வி அல்லது திறமை ஆகியவற்றை அடிப்படையாய் கொண்டு ஒருவர் மாற்றிக் கொள்ள எண்ணினால், அது இயலும்.*

*நம் நாட்டுக்காகவும், நம் சமூகம் சார்ந்த பொறுப்புகளுக் காகவும், நமது குடும்பம் மற்றும் நண்பர்களுடனான கடமைகளுக் காகவும், மிகவும் முக்கியமாய் கருதிக் கடைப்பிடிக்கப்படுகின்றது, சமூக தர்மம்.*

*கடமைகளை நிறைவேற்ற வகுக்கப்பட்டுள்ள வழிகாட்டுதல் களைக் கடைப்பிடிப்பது, நீதி மற்றும் சமயம் சார்ந்து ஒழுகுதல் போன்ற அணுகுமுறைகளால் கடவுளின் இந்த தர்மவிதி தினசரி வாழ்க்கையில் நடைமுறையாகின்றது.*

*சரியாய் கடைப்பிடிக்கப்படும் வர்ண தர்மத்தால், ஒருத்தருடைய தனிப்பட்ட மற்றும் குடும்ப முன்னேற்றம் விஸ்தாரமடைகின்றது. கலாச்சாரம் நொடித்துப் போகாமல் இது பார்த்துக் கொள்கின்றது.*

**வேதங்கள் சொல்கின்றன:**

*‘‘அது யாராக இருந்தாலும் பரவாயில்லை... ஒரு மானுடன் பிறந்து விட்டால், கூடவே கடவுளர்களுக்கும், மூதாதையர் களுக்கும், முன்னோர்களுக்கும், சக மனிதர்களுக்கும் அவன் பட்டுள்ள கடனும் பிறந்து விடுகின்றது.’’ ஓம் நமசிவாய.*



*நமது நாடு, சமூகம் மற்றும் தொழில் சார்ந்த பொறுப்புக்களை உள்ளடக்கியதாய் அமைந்துள்ளது சமூக தர்மம்.*

*நாட்டு மக்கள் ஒவ்வொருவரும் அவர்களால் ஆன தானியம், பொருட்கள் மற்றும் செல்வங்களை அரண்மனைக்குக் கொண்டு வந்து தரும்படி அமைந்துள்ள இந்த ஆட்சியில், அவற்றையெல்லாம் கடுமையான காலங்களில் பொது மக்களுக்கு பிரித்தளித்து மகிழ்வார் அரசர்.*

# மானுட தர்மத்தின் இயல்பு என்ன?

## ஸ்லோகம் 59

*பூமி சார்ந்த வாழ்க்கையில், மாணவன், கிரஹஸ்தன், முதியவர் மற்றும் ஆன்மீக அனுபவஸ்தர் ஆகிய நான்கு அனுபவங்களால், நமது நடவடிக்கைகளும் சிந்தனைகளும் உணர்வுகளும் உடலும் பண்பட்டு முதிர்ச்சியடைய உள்ள இறை விதியே, மானுட தர்மம் அல்லது ஆஸ்ரம தர்மம்.*

## விளக்கம்

இங்கு பூமி வாழ்க்கையில் நமக்கு நான்கு வகை ஆஸ்ரமங்கள் உள்ளன. அவை: தூய்மை, சம்பத்து, சந்தோஷம், பிறகு விடுதலை. இவற்றில் படாதபாடுபட்டு ஆன்மா முதிர்ச்சியடைய வேண்டியுள்ளது.

நம்முடைய முதல் 24 வருடங்கள் இடைவிடாது கற்க வேண்டிய காலமாகின்றது.

12 வயதில் நாம் முறைப்படி பிரம்மச்சரிய ஆஸ்ரமத்துக்குள் நுழைகின்றோம். இங்கு, பிற்காலத்தில் உதவவல்ல கலைகளையும் கல்வியையும் முறைப்படி கற்றுத் தேர்கின்றோம்.

24 வயது முதல் 48 வயது வரை கிரஹஸ்த ஆஸ்ரமம் புகுந்து வாழ்கின்றோம்.

குடும்பத்தை மேம்படுத்தவும், நம் பணி சார்ந்து செல்வங் களையும் சாதுர்யத்தையும் வளர்க்கவும், சமூகத்துக்கு சேவைகள் செய்து மற்றபிற மூன்று ஆஸ்ரமங்களைத் தழைத்தோங்க வைக்கவும், கிரஹஸ்த ஆஸ்ரமத்தில் கணவன் மனைவியாய் வாழ்ந்தபடி நாம் உழைக்கின்றோம்.

*48 வயது முதல் 72 வயது வரை, வானப்ரஸ்த ஆஸ்ரம வாழ்க்கையை இந்துக்கள் வாழ்கின்றார்கள்.*

*இதில், பொது வாழ்க்கையிலிருந்து மெதுவாய் விலகிக்கொண்டு, இளைய சமுதாயத்துக்கு அறிவுரைகளும் வழிகாட்டுதல்களும் தந்துகொண்டு வாழ்கிறோம்.*

*72 வயதுக்கு மேல், உடலின் அவயங்கள் எல்லாம் ஓயத் துவங்கும் போது, புனித வேத நூல்கள் பக்கமாய் நாம் திரும்புகின்றோம். வழிபாடுகளும் யோகமுமே இங்கு பிரதானமாகின்றன.*

*முறைப்படி காவியுடை சந்நியாசம் பெற்றவர்களிடமிருந்து மாறுபட்டதாயினும், இது, சந்நியாச ஆஸ்ரமமே.*

*ஆக, மானுட தர்மம், ஒரு மனிதன் இயற்கையாய் உணர்ந்து, முதிர்ந்து, உலகியலிலிருந்து விலகிவிட அமைந்துள்ள இறைவன் வகுத்த விதியாகும்.*

**வேதங்கள் சொல்கின்றன:**

*''ஒவ்வொரு நிலையிலும் கடமைகளைச் சரியாய் செய்து விடுவதே, இங்கு சட்டம்! இதனை கடைப்பிடிக்கும்போது ஒருத்தன் மேல்நோக்கி இயற்கையாய் எழுகின்றான். செய்யாதவன், வீழ்கின்றான்.'' ஓம் நமசிவாய.*



பிரம்மச்சரிய ஆசிரமத்தில் இருக்கும் இரண்டு பெண்கள் நெய்யவும், மாவரைக்கவும், கூடைகள் பின்னவும் கற்கின்றார்கள்.

தாயும் தகப்பனாரும் கிரஹஸ்த ஆஸிரமத்தில் இருந்துகொண்டு பிள்ளைகளை முன்னேற்றுகின்றார்கள்.

இவர்கள், வேதப்படி நடக்கும் இந்துக்கள்.

# தனிமனித தர்மத்தின் இயல்பு என்ன?

**ஸ்லோகம் 60**

*நம் தனிப்பட்ட வாழ்க்கையின் தூய்மையான முறைகளே தனிமனித தர்மம் அல்லது ஸ்வதர்மம் ஆகும். நம்மீது ரிதா, ஆஸ்ரமா மற்றும் வர்ண தர்மங்கள் ஒன்றாய் சேர்ந்து உண்டாக்கும் தாக்கங்களை தனிமனித தர்மம் குறிப்பதால், இது, நாம் சேர்த்து வைத்துள்ள கர்மவினைகளின் பலனே ஆகும். ஓம் நமசிவாய.*

**விளக்கம்**

ஒவ்வொரு தனிமனிதனுக்கும் அவனுக்கென்று தனிப்பட்ட 'தர்மம்' உண்டு.

இது இரண்டு காரணங்களால் முடிவாகின்றன. ஒன்று கர்மவினை. முன்ஜென்மங்களின் நல்ல மற்றும் கெட்ட செயல்களால் உருவாவது இது.

மற்றது, இவ்வாழ்க்கையின் இதர மூன்று தர்மங்கள்: பிரபஞ்ச, சமூக மற்றும் மானுட தர்மங்கள்.

ஸ்வதர்மா என்பது, 'நாம் நமக்கே உருவாக்கிக் கொண்ட விதி' ஆகும்.

இது, நம்முடைய பின்னணி, அனுபவங்கள், போக்கு, ஜாதகத்தால் நிர்ணயிக்கப்படும் அபிலாஷைகள் ஆகியவற்றால் வடிவமைக்கப்படுகின்றது. இவையெல்லாம்தான், நம்முடைய தோற்றப்பொலிவு, பணி, தொடர்புகள் என அனைத்தையும் நிர்ணயிக்கின்றன.

நமது தனிமனித தர்மம் - அதாவது, தர்மவழி போகும் நம்முடைய வாழ்க்கையின் போக்கு - என்ன என்பதைக்

கண்டுபிடித்து அதனை விளங்கிக்கொள்ள உள்ள ஒரே திறவுகோல், விநாயகப் பெருமானின் வழிபாடாகும்.

நினைவாற்றல், காலம் மற்றும் தெளிவு ஆகியவற்றின் கடவுள். நம் முந்தைய ஜென்மங்கள் அனைத்தையும் அறிந்தவர். அதன்படி நம்முடைய துல்லியமான பாதை எது என்பதை விளக்கி, கசடுகளை விலக்கி, நல்வழியை காட்ட வல்லவர்.

இந்த நல்வழி, குரு வாயிலாகவோ அல்லது மூத்தவர்கள் மூலமாகவோ அல்லது ஆன்மாவின் குரலை அமைதியாய் கேட்பதன் வாயிலாகவோ கிடைக்கும். நமக்கு மட்டுமே சொந்தமான இப்பாதையை பின்பற்றும்போதுதான், நம்முள்ளும் இந்த உலகத்துடனும் நாம் அமைதியாய் இருக்க முடியும்.

ஒரு விதை படிப்படியாக அதற்கான தர்மத்தை ஓர் ஒழுங்குடன் நிறைவேற்றிக் கொண்டு எப்படி ஒரு மரமாய் இயற்கையாய் வளர்ந்து நிறைவடைகின்றதோ, அதே போன்றதுதான் தர்மத்தை தனிமனிதன் கடைப்பிடித்து வாழ்வதும்.

**ஒரு வேத பிரார்த்தனை சொல்கின்றது:**

''யானைக்குள் இருக்கும் அந்த ஜோதி, ஒரு ராஜாவுக்குள்ளும் மனிதனுக்குள்ளும் இருக்கும் அந்த ஒளி, அல்லது தண்ணீருக்குள் உள்ள அந்த காந்தம், இதனால் ஆக்கப்பட்ட புனிதமே இறைமை. இந்த இறைமையாலே உருவானார்கள் இறைவர்கள். அதே பூரண ஜோதியாய் என்னையும் ஆக்கு.'' ஓம் நமசிவாய.



*பெரிய மரச்சக்கரங்கள் பொருத்தப்பட்ட ஒரு பெரிய கோயில் தேரில், சிவ-சக்தி மூர்த்தங்கள் மற்றும் அவர்களை பாதுகாக்கும் சிங்கங்களுடன், சுமந்து செல்லப்படுகின்றான் ஒரு மானுடன்.*

*இதேபோல, ஒவ்வொரு தனிமனிதனும் செய்த கர்மங்களை, அவற்றின் வினைகளே, அவனை அவனது வாழ்நாள் முழுமைக்கும் ஓட்டிச் செல்கின்றன.*

*இங்கு இவன் இவனது உள்ளார்ந்த ஆன்மக்குரலைக் கேட்டுக்கொண்டு அது காட்டும் அப்பழுக்கற்ற சத்திய வழியில் நடக்கின்றான்.*

*நாம் அனைவரும் வெவ்வேறு சிந்தனைகளையும் திட்டங்களையும் கொண்டு, வேறுபட்ட இலக்குகளுடன் வாழ்கிறோம். உடைந்த மரச்சாமான் ஏதாவது நம் வேலைக்கு வந்து உதவாதா என்று பார்க்கிறான் தச்சன். இப்படி, நோயாளிக்காக மருத்துவரும், கூட்டங்களுக்காக பாதிரியார்களும் என்று பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். ரிக் வேதம்.*

*சொர்க்கத்தின் புதல்வி, உடல் முழுதும் ஜொலிக்கும் ஜோதிக் கிரணங்கள் கொண்டு கிழக்கில் பிறக்கின்றாள். ரிதா தர்மத்தின் பாதையினை அவள் ஒருபோதும் பிறழாமல் கடைபிடிக்கின்றாள். நன்றாய் இத்தர்மத்தினை விளங்கிக் கொண்டு, பிரதேசம் பிரதேசமாக, காலங்களையும் மாற்றிக் கொள்ளாது தன் ஒளிக் கதிர்களை அவள் இடைவிடாது தந்து கொண்டிருக்கிறாள். இதுவே இயற்கை. வேத தர்மம். ரிக் வேதம்.*

*கைகள் ஒரே மாதிரியே இருக்கின்றன. ஆனால் அவற்றின் வேலைகளில் அவை வேறுபடுகின்றன. இதேபோலவே ஒரே தாய் வயிற்றின் இரு கன்றுகளாயினும் ஒவ்வொன்றும் மாறுபட்ட பால்கறவைகள் தரும். ரிக் வேதம்.*

*சொத்துக்கள் மற்றும் சம்பத்துக்கள் பற்றி ஒருவன் நினைக்கத் தான் வேண்டும். ஆனால் அவற்றை முறையை அடையவே அவன் முயல வேண்டும். தனக்குத்தானே ஆலோசித்து நேர்மையான கண்ணிய சக்தியை அவன் அடைந்து முயற்சிக்க வேண்டும். ரிக் வேதம்.*

*தனது குரு சொல்லித் தந்த வேதங்களையெல்லாம் முழுக்கவும் கற்றறிந்து, அவரிடம் என்றென்றும் பக்தியும் மரியாதையுமாய் வாழ்ந்து, பிரம்மன் எனும் குருகுல மாணவனாய் இருந்து தெளிந்து எழுபவனே 'ஆஸ்ரமின்' என்றாகின்றான். தனக்கு இணையான உயர்ந்த மனைவியை அக்னிக்கு முன்னால் கைப்பிடித்த பிறகு இரவையும் பகலையும் தியாகம் செய்து குடும்பம் வளர்த்து, பிறகு சொத்துக்களை தனது பிள்ளைகளுக்கு அழகாய் பிரித்தளித்து விட்டு, அனைத்து இன்பங்களிலிருந்தும் தன்னை மனதார இழுத்துக் கொண்ட பிறகே, தூய பிரதேசமாய் காட்டுக்குள் திரிய தன்னை*

ஒருவன் அர்ப்பணிக்க வேண்டும். இவ்வாறு இருப்பவன் காற்று நீர் அக்னி என எதில் வாழ்ந்தாலும் பற்றுதலற்று கண்ணீர் சிந்தாமல் வாழ்வான். *அதர்வண வேதம்.*

அந்த ஒரே புருஷனை வெட்டியபோது 'அவன்' எத்தனை பாகங்களாக உருமாறினான்? அவன் வாய் என்னானது? அவன் கரங்களும் தொடைகளும், பாதங்களும் என்னாயின? அவனது திருவாய் பிராமணன் அப்போது என்னானது? கைகளிலிருந்து ராஜண்யா எனும் பிரிவும் தொடைகளிலிருந்து வைஷ்யா எனும் பிரிவும் பிறக்க, சூத்திரர்கள் அவரது திருப்பாதங்களிலிருந்து உதித்தார்கள். *ரிக் வேதம்.*

லௌகீக வாழ்க்கைக்குள் நுழைக்கப்படாத நூறு சின்னவர்கள் ஒரு பிரம்மச்சாரிக்கு இணையாவார்கள். நூறு பிரம்மச்சாரிகள் ஒரு கிரஹஸ்தனுக்கு இணையாவார்கள். நூறு கிரஹஸ்தர்கள் ஒரு வானப்ரஸ்தருக்கு இணையாகின்றார்கள். ஒரு நூறு வானப்ரஸ்தரர்கள் ஒரு சந்நியாசிக்கு சமமாகின்றார்கள். *அதர்வண வேதம்.*

பிராமணர்கள், க்ஷத்ரியர்கள், வைசியர்கள் மற்றும் சூத்திரர்களின் பணிகள், அவரவர்களின் பிறப்பினை ஒட்டி வெவ்வேறாய் உள்ளன. சாந்தம், ஒத்துப்போதல், தவவாழ்க்கை, தூய்மை, அன்பு, தவறினை மறப்பது, நேர்கொண்ட பார்வை, தெளிவு, நம்பிக்கைகளைக் கடைப்பிடிப்பது போன்றவை பிராமணர்களின் பணிகள். க்ஷத்ரியர்களின் பணிகள்: ராஜா போன்ற சிந்தனை, உள்ளார்ந்த அக்னிக்குஞ்சு, திட்டமிடல், அடிப்படை பொருட்களை மீட்டுதல், போரில் வீரம், தளராத தளபதி குணம். வைசியர்களுக்கு வியாபாரம், விவசாயம், கால்நடை பராமரிப்பு ஆகியன பணிகளாக விடப்பட்டுள்ளன. சேவைகள் செய்வது சூத்திரர்களின் பொறுப்பாய் தரப்பட்டுள்ளது. ஒவ்வொரு குலமும் தத்தமது பணிகளை திறம்பட செய்யும்போது தொழிலில் அவர்கள் முழு ஆனந்தமடைகின்றார்கள். *பகவத் கீதை.*

கடவுளிடமிருந்தே அனைத்தும் வருகின்றன. அவரே அனைத்திலும் இருக்கின்றார். ஆகவே தொழிலே தெய்வம் என்று

*கருதி ஒருவன் பணியாற்றும்போது அவன் முழுமையடை கின்றான். மற்றவருடைய பணி சீரியதாய் இருந்து தன்னுடைய பணி சிறியதாய் இருந்தபோதும் அதனை அடக்கமாய் செய்து திருப்திகரமாய் முடிக்கும்போது ஆனந்தம் மனத்தில் நிறைகின்றது. பணியை தர்மரீதியில் முழுமனத்துடன் செய்து சரியாய் முடிக்கும் போது அவனுக்கு ஆண்டவன் பரிபூரணமாய் அருள்கின்றான். அவனை எந்தப் பாவமும் தீண்டாது. பகவத் கீதை.*

*பரதத்துவம் எனும் அனைத்துமான இறைசக்தியின்மீது தனது கவனம் மையம் கொண்ட ஒருவன்... தர்ம நம்பிக்கைகளின்மீது பிறழாத நம்பிக்கை கொண்ட ஒருவன்... இவன் சத்விக் என்று ஆகின்றான். பிறப்பு எனும் வட்டத்திலிருந்து விடுபடும் அவன் நேரடியாய் தர்ம வழியில் சிரமமின்றி நடந்து விடுகின்றான். இவனே நிச்சயமாய் சிறந்த பக்தன். சத்தியமானவன். திருமந்திரம்.*

*அன்பையும் தர்மத்தையும் அகற்றி வைத்துவிட்டு வளரலாம் என்று நினைப்பவன், அவனுக்கு சொந்தமான அனைத்தும் முகந்தெரியாத ஒருவனால் திடீரென்று களவாடப்படுவதை காணலாம். கொடுப்பதில்தான் இன்பம் என்றும் அதுவே கடமை என்றும் உணர்ந்தவன், வாழ்வான். மற்ற அனைவருமே பிரேதங்களுக்கு ஒப்பாய் கொள்ளத்தக்கவர். திருக்குறள்.*

*லௌகீக வாழ்க்கையில் ஸ்திரமாய் இருந்து, அந்தப் புயலிலும் தன்னை சுயமாய் கட்டுப்படுத்தி வென்றவன், மலையைவிட உறுதியானவன். தர்மவழி என்பது உயர்குடும்பங்களின் பிறப்புரிமை. அது இல்லாத எவரும் கீழானோர். திருக்குறள்.*

# சதாசாரஹ்



## நற்குணங்கள்

*வஞ்சக குணங்களிலிருந்து திருந்தி திரும்பாதவன்,*
*நிம்மதியற்று அலைபவன், மனதினை ஒருநிலைப்படுத்த முயலாதவன்,*
*சிந்தையில் தெளிவும் நிலைப்பும் இல்லாமல் திண்டாடுபவன் -*
*இவனால், சித்தத் தெளிவினால் மட்டுமே அடையவல்ல ஆத்மாவை உணர முடியாது.*

***-கிருஷ்ண யஜுர் வேதம்***

# நற்குணம் என்பதன் பொருள் என்ன?

### ஸ்லோகம் 61

*சரியான சிந்தனை, சரியான பேச்சு மற்றும் சரியான செயல் ஆகியன நற்குணங்கள் என்றாகின்றன. ஆன்மாவின் அடிப்படைக் குணமான தூய்மையைப் பிரதிபலித்தபடி, இறை விதிக்கு கட்டுப்பட்டு ஸ்திரமாய் செய்யப்படுவதாகும் இது. மலையேற ஸ்திரமான கயிறு உதவுவதைப்போல இருக்க வேண்டும் இது வாழ்க்கையில். ஓம்.*

### விளக்கம்

*நற்குணம் என்பதே சதாசராஹ்.*

தினசரி வாழ்க்கையில் நமது நடவடிக்கையை முடிவு செய்கின்றது இது.

நம்முடன் இருக்கும் சகமனிதருடன், அவரை புண்படுத்தாமல் விமர்சிக்காமல், அவரை கைதூக்கிவிடும் ஒரு வஸ்துவாய் நாம் இயங்க வேண்டும்.

வெறுப்பாகவும், ஈனத்தனமாகவும் நடந்து கொள்ளாமல், அன்பாயும் கருணை மிகுந்தவராயும் நாம் நடக்க வேண்டும்.

ஆன்மாவின் அழகான லலித குணங்களான சுயகட்டுப்பாடு, தாராள மனப்பான்மை மற்றும் நேர்மை ஆகியவற்றை நாம் வெளிப்படுத்தியபடி வாழ வேண்டும்.

மற்றவர்களுக்கு ஒரு நல்லுதாரணமாகவும், கூடியிருப்போருக்கு சந்தோஷத்தை தருபவராகவும் அமைய வேண்டும் நமது இருப்பு. ஒதுக்கப்பட வேண்டிய ஒரு நபராய் மற்றவர்கள் பார்க்கும்படி நம்மிருப்பு அமைந்து விடக்கூடாது. ஆன்மீக வாழ்க்கை வாழ்வதன்

ஒட்டுமொத்த பலனாகின்றது நல்லொழுக்கம். இது, நல்லோர் சேர்க்கையால் அமைகின்றது.

அடிப்படை சமாச்சாரங்களிலிருந்து மனமும் சிந்தையும் விடுவிக்கப்பட்ட பிறகு, ஆசைகள் நறுக்கப்பட்ட பிறகு, அதிகப் படியாய் வைத்துக் கொள்வது தவிர்க்கப்பட்ட பிறகு, தர்மம் என்பதன் முகவரி நம்முள் விரிகின்றது. அது அப்படியே கடைப் பிடிக்கப்படுகின்றது. அப்போது நற்குணங்கள் தானாய் பூக்கின்றன.

இந்துக்கள் மனிதநேயத்தினைப் போஷிக்கின்றார்கள். முரட்டுத் தனமான செயல்களுக்கு கதவினை அடைத்து விடுகின்றார்கள்.

மற்றவர்களுக்கு உதவ வாய்ப்பினைத் தேடுகின்றார்கள்.

ஒருபோதும் தடங்கலாய் இருக்க மாட்டார்கள்.

மற்றவர்களிடம் நல்லதையே கண்டு குற்றங்களை மறந்து விடுவார்கள்.

நமக்கு நாமே நற்குணங்களுடன் நடந்து கொண்டு அவற்றை கூட இருக்கும் மனிதர்களிடமும் காட்டி வாழ்வதைப் போன்றதொரு சிறந்த பக்தி மார்க்கம் வேறு இருக்க முடியாது.

**வேதங்கள் சொல்கின்றன:**

‘‘சத்தியத்தை எத்தருணத்திலும் ஒதுக்கும்படி ஆகிவிட வேண்டாம். தர்மத்தை எக்காலகட்டத்திலும் ஒதுக்கி விட வேண்டாம். பிறர் நலனை புறக்கணிக்கும்படியாய் என்றுமே நடந்து கொள்ள வேண்டாம். முன்னேற்றத்துக்கு எந்தக் கணத்திலும் தடைக்கல்லாய் நின்றுவிட வேண்டாம். கற்பதிலும் அவற்றை போதிப்பதிலும் சுணக்கம் வந்து விடவே வேண்டாம். கடவுளுக்கும் மூதாதையர்களுக்கும் செய்ய வேண்டிய கடமைகளில் முடக்கம் தந்துவிட வேண்டாம்.’’ ஓம் நமசிவாய.



*இளந்துறவி, இறைக் குடையின் கீழ் அமர்ந்து கொண்டு கையிலிருக்கும் தாளத்தில் இசையை தப்பாது இசைத்தபடி சிவபெருமானின் புகழ் பாடுகின்றார்.*

*தூய்மையும் நற்குணமும் முழுவதுமாய் பெற்றிருக்கும் ஒரு பெண்மணி,*
*புனித ஆடவர் மற்றும் பெண்டிருக்கு பாரம்பரிய வழக்கப்படி*
*கனிகளை வழங்கும் முறைப்படி, புதுப்பழங்களை அளிக்க*
*அவரருகில் மிகவும் மரியாதையாய் உட்காருகின்றாள்.*

# நற்குணங்களின் நான்கு திறவுகோல்கள் யாவை?

## ஸ்லோகம் 62

*கற்பைப் போன்ற தூய்மை, பக்தி, மனிதநேயம் மற்றும் ஈகை ஆகியனவே நற்குணங்களுக்கான நான்கு திறவுகோல்கள். இவற்றில் கலப்படமற்ற தூய்மை, வேகமாய் உள்ளூர வேண்டிய அடிப்படை குணம். அனைவருக்கும் எது அரவணைப்பாய் அமையவல்லதோ அதை மட்டுமே நினைப்பதாலும், பேசுவதாலும், செய்வதாலும் நாம் தூய்மையை வளர்த்து அறுவடை செய்கிறோம். ஓம்.*

## விளக்கம்

களங்கமற்ற தூய்மை ஆன்மாவின் இயல்பாகும். ஆன்மாவின் அசல் குணமாகும்.

கோபம் மற்றும் எதிர்த்து நிற்கும் வாக்குவாதப் போக்கு ஆகியனவற்றிலிருந்து நாமே நம்மை விடுவித்துக் கொண்டு வாழ்வதன் மூலமும், சுத்தமும் ஆரோக்கியமும் கொண்ட உடல் நலனைப் பேணுவதன் மூலமும், நம்முடைய கற்பினை திருமணம் வரை கட்டிக்காப்பதன் மூலமும், நம்மால் தூய்மையினை செழிப்பாய் வளர்த்துக் கொள்ள முடியும்.

நல்ல தோழர்களாய் தேடிப் பிடிப்பதிலும் ஒழுக்கமான வாழ்க்கையைக் கடைப்பிடிப்பதிலும் உள்ளது, நம்முள்ளான தூய்மையின் வளர்ச்சி.

பக்தி என்பது, கடவுள், கடவுளர்கள் மற்றும் குருவின் மீதான அன்பு என்றாகின்றது. நமது குடும்ப அங்கத்தினர்கள் மற்றும் நண்பர்களிடம் நாம் காட்டும் அர்ப்பணிப்பும் பக்தி வழியேயாகும்.

*விசுவாசமாயும் நம்பிக்கைக்குப் பாத்திரமானவராகவும் நடந்து கொள்வதன் மூலமாக நாம் நமக்குள் பக்தியை வளர்க்கின்றோம். வழிபாடுகள் மற்றும் தன்னலமற்ற இடையறா சேவை ஆகியன பக்தியை செழிப்பாய் நம்முள் வளர்த்துவிட உதவும் வழிமுறைகள்.*

*அடுத்து வருவது மனிதநேயம். மிருதுவான அணுகுமுறை, அடக்கம், நாணயம், பெரியோரிடத்தில் பயபக்தி, படாடோபமற்ற போக்கு ஆகியன மனிதநேயமாகின்றன.*

*வாழ்க்கையில் நடப்பவற்றிலிருந்து அனுபவங்களை மட்டும் உறிஞ்சிக்கொண்டு அவற்றுக்காக எவ்வித எதிர்வினைகளையும் நாம் காட்டாமல் இருப்பதினாலும், எங்கெங்கிலும் ஆண்டவனை மட்டுமே காணும் அணுகுமுறையாலும், நமக்குள் மனித நேயத்தினை நாம் வளர்த்துக் கொள்கின்றோம்.*

*எந்த சூழ்நிலையிலும் பொறுமையைக் காட்டுவதனாலும், சூழ்ந்திருக்கும் மக்களுடன் சகிப்புத்தன்மையாய் இருப்பதினாலும், மனிதநேயம் நம்முள் வளர்கின்றது.*

*நம்முடன்கூட இருக்கும் மானுடர்களின் மீது காட்டப்படும் கட்டுப் பாடுகளற்ற அன்பும் கரிசனமுமே ஈகை என்றமைகின்றது.*

*எதிர்பார்ப்புகள் ஏதுமின்றிக் காட்டப்படும் கருணையே ஈகை. மற்றவரின் சுகதுக்கங்களை எப்போதும் மறுக்காமல் பகிர்ந்து கொள்வதில் உள்ளது ஈகைக் குணத்தின் சாரம்.*

*பசியிலிருப்போர்க்கு தானம் செய்வது, நோயாளிகளுக்கு உதவுவது, வீடற்றவர்களுக்கு உதவிக்கரம் நீட்டுவது, முதியோருக்கும் துரதிர்ஷ்டசாலிகளுக்கும் இரங்குவது ஆகியன, தானாய் நம்முள் ஈகைத்திறனை மேம்படுத்தும்.*

**வேதங்கள் விளக்குகின்றன:**

*‘‘எரியும் மலையில் புள்ளினங்களும் மான் கூட்டங்களும் தங்காது. அதைப்போல, கடவுளை அடையாளம் கண்டு கொண்டு விட்டவர்களிடம் பாவங்கள் புகலிடம் காணாது.’’ ஓம் நமசிவாய.*



*தென்னிந்திய சைவ ஆஸ்ரமங்களில், தன்னருகில் பூஜைக்குத் தேவையான சாமான்களுடன் சத்குரு உட்கார்ந்திருப்பார்.*

*அவரது பாதங்களைக் குனிந்து தொட்டு பக்தியுடன் நமஸ்கரிப்பார், பக்தர்.*

*சுயமரியாதை தவிர்த்த பக்தரின் இந்த நடவடிக்கை, நற்குணங்களின் நான்கு திறவுகோல்களான தூய்மை, பக்தி, மனிதநேயம் மற்றும் ஈகை ஆகிய அனைத்தையும் பிரதிபலிக்கும்.*

# யாரிடமிருந்த நற்குணம் கற்கப்படுகின்றது?

### ஸ்லோகம் 63

*நற்குணத்தினைப் பொறுத்தவரை இதற்கான முதல் ஆசான் நம்முடைய மனசாட்சிதான். எது சரி எது தவறு என்று உறுதிபட தெரிந்து கொள்ள நாம் தெய்வத்தின் துணையையோ அல்லது சத்குரு மற்றும் ஸ்வாமிகளின் துணையையோ நாடலாம். நம் மூத்தவர்கள், புனித நூல்கள், குடும்பத்தார், நம்பிக்கையான நண்பர்கள் ஆகியோரையும் நற்குணங்கள் பற்றி அறிய நாடலாம். ஓம்.*

### விளக்கம்

*தெய்வ விதிகளைத் தவிர்க்க முடியாது.*

*நமக்கு மேலானதாய் இருந்து அவை நம்மை ஆளவில்லை. நம்முள் ஒன்றாய் நம் இயல்பாகவே இறை விதிகள் கட்டப் பட்டுள்ளன.*

*தப்பான காரியங்களால் உருவாக்கிக் கொண்ட கர்மவினை களை மரணத்தால்கூட அழித்துவிட முடியாது.*

*நமக்கு நாமே உருவாக்கிக் கொண்டுவிட்ட பயங்கரமான கர்மவினைகளை நல்ல காரியங்களால் மட்டுமே தீர்த்துத் தர முடியும்.*

*ஆகவே நல்ல பண்புகள் என்னென்ன என்பதை கற்று அல்லது கேட்டறிந்து அவற்றின்படி ஒழுக வேண்டியது நமக்கு அத்தியாவசியமாகின்றது.*

*நற்பண்புகளை நமக்குப் புகட்ட, நல்ல மனிதர்களே மிகவும் பொருத்தமான ஆசான்கள் ஆவர். எனவே நமக்கு இது சம்பந்தமாய்*

உதவியோ அல்லது அறிவுரையோ தேவைப்படும்போது உடனடியாய் நல்ல உள்ளங்களை நாம் நாடிவிட வேண்டும்.

தெளிந்த இவர்களிடம் பேசுங்கள். தானாய் நல்லதொரு தீர்ப்பு வழிவந்து உதவும்.

புனித நூல்களைத் தினசரி கற்க வேண்டும். கற்று, அவை சொல்லும் நற்போதனைகளின் வழி நடக்க வேண்டும்.

எக்கணத்திலும் நமது மனச்சாட்சியில் உரக்க ஒலித்துக் கொண்டேயிருக்கும் ஆன்மாவின் குரல், ஒரு நம்பத்தகுந்த வழிகாட்டியாகும்.

கர்மம் மற்றும் கர்மவினை எனும் நுணுக்கமான செயல் பாட்டினை நாம் சரியாய் கிரகித்துக் கொண்டு விட்டோமேயானால், நல்ல பாதையில் நாம் தெளிவுடன் பயணிக்கலாம்.

நற்குணம் அல்லது நற்பண்பு என்பது, இந்து சட்டப்படி கடமையாக்கப்பட்டுள்ள ஐந்து கடமைகளில் கொடுக்கப் பட்டுள்ளது. சத்தான வாழ்க்கை (தர்மம்), வழிபாடு (உபாசனை), புண்ணிய தினங்கள் (உற்சவம்), புண்ணிய யாத்திரைகள் (தீர்த்த யாத்திரை) மற்றும் புனிதச் சடங்குகள் (சம்ஸ்காரங்கள்).

**இந்த வழிகாட்டுதலை வேதமே தருகின்றது:**

''நற்பண்பு பற்றி ஏதாவது ஐயங்கள் நேரிடின், உயர்ந்த ஆன்மாக்கள் காட்டியுள்ள வழிகாட்டுதல்களை கடைப் பிடியுங்கள். நேர்மையாய் வழிகாட்டும் திறன் கொண்டவர்கள், இவர்களே.'' ஓம் நமசிவாய.



ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த சம்பந்தர், சிவபெருமான் மீது பல துதிகள் தந்துள்ளார். இங்கு, அவரை நாடி வந்துள்ள கணவன் மனைவிக்கு அவர் அவற்றை பாடுகின்றார்.

புனித ஆடவர் மற்றும் பெண்டிர் ஆகியோர் தரும் தெளிவினைக் கடைப்பிடித்து இந்துக்கள் தெளிவான பாதையை அறிந்து, அதன்வழி நடக்கின்றார்கள்.

# பத்து அற்புதமான கட்டுப்பாடுகள் என்னென்ன?

## ஸ்லோகம் 64

*இந்துமதத்தின் கடைப்பிடிக்க வேண்டிய தர்மரீதியான கட்டுப்பாடுகள், பத்து எளிய கட்டளைகளில் தரப்பட்டுள்ளன. யமஸ் என்பது இதற்கான பெயர். நமது உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தி அவற்றை உபயோகமாய் மாற்றிக் கொள்ள நாம் எப்படி நடக்க வேண்டும் என்பதையும், இப்படியாய் நம் ஆன்மாவுக்கே உரிய தூய்மையான தகுதிகளை எவ்வாறு மேம்படுத்திக் கொள்வது என்பதையும் யமஸ் போதிக்கின்றது.*

## விளக்கம்

எல்லா வகையான சிந்தனைகள் மற்றும் நடத்தைகளுக்கு புனித வழியினை அளிக்கும் கட்டளைகளே யமஸ் மற்றும் நியமனம்.

இவை அறிவுரைகளாகவும் எளிய வழிகாட்டுதல்களாகவும் விளங்குகின்றன. ஒரு சிறந்த *சரியாவாய்* வாழ தரப்பட்டுள்ள பத்து கட்டுப்பாடுகள்:

1) மனம், வாக்கு, செயல் ஆகிய எவ்வகையிலும் மற்றவர்களுக்கு காயம் ஏற்படுத்தாத *அகிம்சை.*

2) பொய் சொல்வதிலிருந்தும் கொடுத்த வாக்கிலிருந்து வழுவி விடுவதிலிருந்தும் அகற்றும், *சத்தியம்.*

3) திருட்டு, பேராசை, கடன் வாங்குவது போன்றவற்றை அகற்றும் *அஸ்டேய.*

4) ஆசைகளை கட்டுப்படுத்தி திருமணத்துக்கு முன் தவறிழைக்காத வகையில் சிறந்த தனிநபராய் வாழ, இறைவனை நாடிய வாழ்க்கை முறையான *பிரம்மச்சரியம்.*

5) மக்களுடன் சகிப்புத்தன்மையுடனும் சூழ்நிலை காரணமாக பொறுமையிழக்காமல் இருப்பதையும் ஊர்ஜிதப்படுத்தும், *க்ஷமா.*

6) பயம், ஸ்திரமற்ற தன்மை, அடிக்கடி மாறும் முடிவெடுக்க முடியாத நிலைமை போன்றவற்றை வெல்ல வேண்டிய, *த்ருதி.*

7) கொடூர சிந்தனைகளை வென்று, அனைத்து ஜீவராசிகள் மீதும் கருணையுடன் இருக்கவல்ல, *தயா.*

8) ஏமாற்றுதலையும் தப்பான வழியில் செல்வதையும் துறந்து நேர்மை வழி நிற்கும் *ஆர்ஜவா.*

9) வயிறு முட்ட சாப்பிடாமலும், மாமிசங்களைத் தொடாமலும் இருக்க வைக்கும் *மிட்டாஹார.*

10) மனம், வாக்கு மற்றும் காயம் ஆகிய மூன்றிலும் பொய்மையை அகற்றி சத்தியத் தூய்மையை பரப்புதலான, *ஷாவ்ச்சா.*

**வேதங்கள் சொல்கின்றன:**

***‘‘குரூரமும், தப்பான நினைப்புகளும், வஞ்சகங்களும் இல்லாதோரிடம் கறையற்ற பிரம்மம் நிலைக்கின்றது.’’***



*பௌர்ணமியன்று குளத்தருகே உட்கார்ந்திருக்கும் ஒரு காரிகை இவள். ஒரு ஜோடி காதல் பறவைகள் பாடிக்கொண்டு கனிகளைச் சுவைக்கின்றன.*

*இப்போது தேவையானது சுயகட்டுப்பாடு என்பதனை அறிந்துள்ள இவள், தனது ஆன்மா தரும் வழிகாட்டுதலை நாடுகின்றாள்.*

*மனம், வாக்கு, செயல் ஆகிய மூன்றின் கட்டுப்பாடுகளை கூறும் யமஸ்ஸின் அறிவுரைகள் தெரிந்தவள் இவள்.*

# பத்து அற்புதமான ஆசாரங்கள் என்னென்ன?

## ஸ்லோகம் 65

*இந்துமதத்தின் கொள்கைகள், சுருக்கமானதும் விளக்கமுள்ளது மான பத்து விதிகளில் கொடுக்கப்பட்டுள்ளன. இவை அனுஷ்டானங்கள் அல்லது ஆசாரங்கள் என்று கொள்ளத்தக்க நியமனங்கள் ஆகும். நாம் கடைப்பிடிக்க வேண்டிய அத்தியாவசிய பயிற்சிகளையும், ஆத்மாவின் தகுதிகளை மென்மேலும் மெருகூட்டிக் கொள்ள நாம் கடைப்பிடிக்க வேண்டிய அணுகு முறைகளையும் இவை சொல்கின்றன.*

## விளக்கம்

அநீதியான நடத்தைகளை அகற்றி விடுவதும், சத்தான மற்றும் ஆன்மீக ரீதியானவற்றைச் செய்வதும், ஆக இவ்விரண்டின் கூட்டுமே நற்பண்புகள் ஆகின்றன.

ஆயிரமாயிரம் வருடங்களாய் இருந்து, தன்னைச் சீர்ப்படுத்திக் கொண்டுள்ள இந்துமதம், இதற்காக பத்து நியமனங்களை கட்டளையிடுகின்றது.

இந்தப் பத்தும், சுபமான *கிரியா* வாழ்க்கைக்கு வழி தரும்.

*அவை:*

1) பணிவுடனும் அடக்கத்துடனும் நடந்து கொண்டு, பாவச்செயல்களுக்கு வெட்கும்படி வாழ்வது: *ஹ்ரீ.*

2) வாழும் வாழ்க்கையில் புனிதமான ஆனந்தத்தை தேடுவது: *ஸந்தோஷா.*

3) தானாய் உவந்து கைம்மாறு எதிர்பாராது வழங்குவது: *தானா.*

4) கடவுள், கடவுளர்கள், குரு மற்றும் ஞானமார்க்கம் ஆகியவற்றில் தளராத நம்பிக்கையை பதிப்பது: *ஆஸ்த்திக்கா.*

5) தினசரி பூஜை மற்றும் தியானம் மூலம் பக்தியை வளர்த்துக் கொள்வது: *ஈஷ்வரபூஜா.*

6) போதனைகளை படித்து அதன்படி வாழ்ந்தோரின் வாழ்க்கை முறையை கவனிப்பது: *ஸித்தாந்த ஷ்ரவண.*

7) ஒரு குருவின் போதனையுடன் ஆன்மீக வைராக்கியத்தையும் ஞானத்தையும் வளர்த்துக் கொள்ளுதல்: *மதி.*

8) சமயம் சார்ந்த கடமைகள், சட்டதிட்டங்கள், நியமனங்கள் போன்றவற்றை நிறைவேற்றுதல்: *வ்ரதா.*

9) புனித மந்திரங்களை தினசரி ஓதுவது: *ஜபம்.*

10) விரதங்கள், தவசு, தியாகம் ஆகியனவற்றை இடைவிடாது கடைப்பிடித்தல்: *தபஸ்.*

**வேதங்கள் கூறியுள்ளன:**

***''மிக்க எளிமையான வாழ்க்கையும், பிறருக்கு உவந்து உதவும் மனப்பாங்கும், தூய்மையும் உள்ளோரிடத்தில் இறைமை எனும் சத்தியம் நிறைகின்றது. அவர்களுக்குள்ளே பிரம்ம உலகம் விளங்கும்.'' ஓம் நமசிவாய.***



*சலவைக்கல் பதித்த தரையில் மண்டியிட்டபடி இனிய இறை கீதத்தைக் கசிந்துருகிப் பாடி, அதனை தனது இறைவனுக்கு அர்ப்பணிக்கின்றாள் இவள்.*

*தம்புரா லயமும் இவள் கை மணியோசையும் கீதத்தோடு இயைந்துள்ளன.*

*பத்து ஆசாரங்களை நிறைவேற்றுவதால் உருவாகும்*
*இறை கீதங்களை ஆண்டவனின் சந்நிதானத்தில் காணிக்கையாக்குவது,*
*இவள் சமய கலாச்சாரத்தின் வலுவான பகுதியாகும்.*

*நிஜத்தில் சொல்லப்போனால், இதோ கண்களுக்குப் புலப்படும் பிரம்மன், நீயேதான். அனைவரது கண்களுக்கும் தெரியும் பிரம்மனே நீதான் என்று இறைவா நான் அறிவிக்கிறேன். நான் சத்தியத்தை மட்டுமே பேசுவேன். இப்படியிருப்பது என்னை காக்கட்டும். என் குருவைக் காக்கட்டும்! ஓம், சாந்தி, சாந்தி, சாந்தி. கிருஷ்ண யஜுர் வேதம்.*

*வஞ்சக குணங்களிலிருந்து மாறாதவன், மனத்தில் நிம்மதியற்று திரிபவன், மனதினை ஒருமுகப்படுத்தாதவன், மனம் புயலாய் சஞ்சலத்தில் இருப்பவன் - இவனால் ஆன்மாவை அறிய முடியாது. தெளிவினால் மட்டுமே அடையவல்லது ஆன்மா. கிருஷ்ண யஜுர் வேதம்.*

*கடைப்பிடிக்க வேண்டிய பத்து உபவாசங்களாக சொல்லப்பட்டிருப்பவை: அகிம்சை, சத்தியம், திருடாமை, பிரம்மச்சரியம், கனிவு, நேர்மை, தவறுகளை மறப்பது, சகித்துக் கொண்டு தாங்கும் பொறுமை, உணவுக்கட்டுப்பாடு மற்றும் கலப்பற்ற தூய்மை. சுக்ல யஜுர் வேதம்.*

*நம்மிருவரையும் அவர் காக்கட்டும். நம்மிடம் அவர் திருப்தியை காணட்டும். நல்விசையுடன் நாமிருவரும் சேர்ந்து உழைப்போம். நமக்கு ஒளி கொடுப்பதாய் கல்வி அமையட்டும். நம்மிருவருக் குள்ளும் மாற்று விருப்பங்கள் நிலவ வேண்டாம். ஓம், சாந்தி, சாந்தி. கிருஷ்ண யஜுர் வேதம்.*

*தெய்வப்பாதையில் நடப்பவர்களின் பின்னால் நான் நடக்கின்றேன். இறைவனைப் புகழ்ந்துப் பாடுவோருடன் நான் வாழ்கின்றேன். தன்னை யார் தேடி நாடுகின்றார்களோ அவர்களை ஆசீர்வதிக்கின்றார் ஆண்டவர். தெய்வத்துடன் யார் இரண்டறக் கலந்து நிற்கின்றார்களோ அவர்களுடைய பாதங்களில் நான் கலக்கின்றேன். திருமந்திரம்.*

*புத்தியைக் காப்பாற்றி அதனை தரமானதாய் ஆக்குங்கள். அதனை புனிதமானதாக்கி, இதயத்தில் நிறுத்துங்கள். இதற்கு பிறகு பரிசுத்தமானதாய் பெருகி வளரும் இறை பிரக்ஞையை மட்டுமே இலக்காக்கிக் கொள்ள வேண்டும். அதனை அடைய பாடுபட வேண்டும். புலன் சார்ந்த இன்பங்களிலிருந்து தன்னை இழுத்துக்*

*கொண்டு வகுக்க முடியாத ஒரே இறை சக்தியிடம் தன்னை பக்தியுடன் அர்ப்பணித்து விட்டவனுக்கு, ஞானத்தெளிவு நிச்சயம். தானறியாமலேயே ஒருவன் இங்ஙனமாய் தரம் உயர்ந்தாலும் அவனுக்கு ஞானம் நிச்சயம். இந்த ஞானவொளி, என்றென்றும் பேரானந்தமாய் விளங்கும் மோட்சத்தை வழங்கிவிடும். ஆகவே ஞானம் நோக்கிப் பிரயாணிக்கும் ஒருவன் சுயநலம் கொஞ்சமு மின்றி கனிவும் இரக்கமும் கொண்டு வாழட்டும். விரதங்களும் தவசுகளும் செய்யட்டும். இந்த ஆகமத்தை படித்தறியட்டும். தேவிகாலோத்தர ஆகமம்.*

*தவசு, ஜெபம், தெளிவினால் கிடைக்கும் சாந்தம், கடவுள் நம்பிக்கை, சைவ நம்பிக்கைகளில் பிடிப்பு, சித்தாந்தத்தைப் படித்தறிவது, தியாக ஆகிருதிகள், சிவ பூஜை, சத்திய பேச்சு - இந்த பத்து நியமங்களையும் கடைப்பிடிக்கும்போது, தனது பாதையை சீர்மையாக்கி விடுகின்றான் பக்தன். திருமந்திரம்.*

*வெற்றியை சத்தியமே வாங்கித் தருகின்றது. அசத்தியம் அல்ல. ஜோதிரூபமான இறை பிரதேசத்துக்கு வழிவகுப்பது சத்தியமே. இதனால் ஆசைகளிலிருந்து அகற்றப்பட்டு விடும் ஞானிகள், சத்தியம் எனும் ரதத்தில் தடையின்றி ஏறிவிடுகின்றார்கள். ஜோதிரூபமாய் ஜொலிக்கும் ஆண்டவனை அளக்க முடியாது. நம் அனைத்து சிந்தனைகளையும் கடந்தவன் அவன். ஆயினும் எளிமைக்கும் எளிமையாய்தான் அவன் விளங்குகின்றான். கைக்கெட்டாது வெகு தூரத்தில் இருப்பவனாய் இறைவன் இருக்கின்றான், ஆனாலும் வெகு நெருக்கத்தில்தான் உள்ளான். நமக்குள்ளேயே இருக்கும் இதயத்தின் ஆழ் மையத்தில் கொலுவீற்றிருக்கிறான். கண்களால் அவனைக் காண முடியாது. வார்த்தைகள் அவனை விவரிக்க இயலாது. புலன்களால் அவனை அடைய முடியாது. புனிதச் சடங்குகள் வாயிலாகவும் எட்டிப் பிடித்துவிட முடியாது. புத்தித் தெளிவு மற்றும் தூய்மை ஆகிய இரண்டின் கருணை நமக்குள்ளும் வாய்க்கும்போதுதான் இறைவனைப் பார்க்க முடியும். வகுக்க முடியாத கடவுளை ஆழ்நிலை தியானத்தில் பிடித்துவிட முடியும். நம் சிந்தையில்தான் ஐம்புலன்களும் உட்கார்ந்துள்ளன. அதே புத்தியால் நாம் ஆண்டவனை பார்த்து விட முடியும். அனைத்து புத்திகளும்*

புலன்களின் ஆதிக்கத்தால் வேயப்பட்டிருந்தாலும், தெளிந்த புத்தி, ஆன்மா என்னும் பேரொளியில் ஜொலிக்கும். சிந்தை தெளிந்து விட்ட அப்போது, என்னென்ன வேண்டுமென்று அவனுடைய புத்தி நினைக்கின்றதோ, என்ன தாகங்கள் தீராமல் இன்னும் அவனுக்குள் இருக்குமோ, அனைத்தையும் அவன் அடைந்து தீர்கின்றான். வெற்றி தேடுவோர், ஆவி எனும் ஆன்மாவின் பாதையைத் தொடரட்டும். *அதர்வண வேதம்.*

உயிரைவிட மேலானது நேர்மை. நேர்மையைக் கடைப் பிடிக்கும் எவரும் தமது வாழ்க்கையில் உயர்ந்த அம்சங்கள் அனைத்தும் பொருந்தியிருப்பர். மனிதாபிமானம், உண்மை, கொலை மற்றும் திருட்டினைத் தவிர்த்தல், மற்றவரைத் தாக்கு வதிலிருந்து விலகி விடுதல் என, நேர்மையான வாழ்க்கையை வாழத் தேவையான எல்லாவற்றையும் அடைந்து விடுவார்கள். செய்யும் வேலை எதுவாக இருந்தாலும் அதனை உள்ளன்போடு சந்தோஷமாய் செய்ய ஒருவன் கற்க வேண்டும். இங்ஙனமாய் தன்னை சுத்திகரித்துக் கொள்ளும்போது சிந்தையை ஒருமுகப் படுத்துவது அவனுக்குச் சாத்தியமாகும். புத்தி, ஒருநிலையில் நிற்கும். இது, விறுவிறுவென தனது சக்தியைப் பெருக்கிக் கொள்ள ஆன்மாவை அனுமதிக்கும். அப்போது அவர் நினைப்பதே உடனடியாய் நடந்துவிடும். ஒருத்தனை நண்பன் என்றும் மற்றவனை எதிரி என்றும் அழைக்கும் பாகுபாடுகள் புத்திக்குள் நுழையாது. கவலைகளுக்கான அனைத்துக் கதவுகளும் அடைக்கப்பட்டுவிடும். *நற்சிந்தனை.*

சீரிய பண்புகள் சொர்க்கத்தில் தகுதியையும், பூமியில் சம்பத்துக்களையும் தரும். இதைவிடச் சிறந்த கனி ஒரு மனிதனுக்கு வேறென்ன இருந்துவிட முடியும்? உங்களால் எப்படியெல்லாம் முடியுமோ அப்படியெல்லாம் நல்ல காரியங்களை செய்து முடிக்கத் தயங்கவே செய்யாதீர்கள். *திருக்குறள்.*

தூய்மையற்றவற்றிலிருந்து புத்தியை விலக்கி வையுங்கள். தனிமையில் இருக்க ஆரம்பிப்பதே சீரிய பண்புகளின் துவக்கம். மீதியனைத்தும் வெறும் வெற்று வேட்டுக்கள். புத்தியின் தூய்மையும் நடத்தையின் தூய்மையும், ஒருவனுடன் இருப்பவர்களை சார்ந்தவை. *திருக்குறள்.*

# அஹிம்ஸா



## காயப்படுத்தாமை

*சொர்க்கம் சாந்தத்தில் உறையட்டும். வானமும் பூமியும்கூட.*
*நீர்நிலைகள் சாந்தமாய் ஆகட்டும்.*

*தாவரங்களும் மரங்களும்கூட. இறைவர்கள் சாந்தத்தில் நிலைக்கட்டும்.*

*பிரம்மம் சாந்தத்தில் நிலைக்கட்டும். அனைத்து மனிதர்களுக்கும் மீண்டும்*
*மீண்டும் சாந்தி நிலவட்டும். எனக்கும் சாந்தி இருக்கட்டும்!*

**-சுக்ல யஜுர் வேதம்**

# அஹிம்ஸை எனும் மிகச்சீரிய பண்பென்றால் என்ன?

## ஸ்லோகம் 66

*அஹிம்ஸா அல்லது காயப்படுத்தாமை - இதுவே ஒவ்வோர் இந்துவின் முதல் மற்றும் தலையாய கடமை. உடலாலும், புத்தியாலும், உணர்ச்சிபூர்வமாகவும், காயப்படுத்தாமல் மிருதுவாய் இருப்பதாகும் இது. எந்தவொரு ஜீவனுக்கும் காயம் உண்டாக்காமல் அடங்கியிருப்பதாகும், அஹிம்ஸை.*

## விளக்கம்

இந்து மதத்தின் அடித்தளம், புனிதம் என்பதாகும். நதிகள், புனிதமானவை. வானம், புனிதமானது. சூரியன் புனிதம் நிரம்பியது.

ஒருத்தருடைய மனைவி, கடவுள். அக்கணவன், கடவுள். அவர்களுடைய பிள்ளைகள் தேவர்கள். இவர்களனைவரும் வாழும் இல்லம், ஒரு கோயில்.

மறுபிறப்பு எனும் சுழலிலிருந்து தப்பித்து விடுதலை பெற நடக்கும் புனித யாத்திரையே வாழ்க்கை.

இந்த உயர் பதவிக்கு நிகழும் பிரயாணத்தில் எவ்வித வன்முறையையும் உடன் கொண்டு செல்ல அனுமதி கிடையாது.

வன்முறை என்பது செய்யக்கூடாத உயர்பட்ச குரூர செயல்களைக் குறிக்கும் அதே நேரத்தில், அஹிம்ஸா என்பது இன்னமும் ஆழமாய் செல்கின்றது.

கொல்லாமையை அறிவுறுத்தும் அஹிம்சை, சின்னச்சின்ன காயங்களையும் நுணுக்கமான கடுமைகளையும்கூட நிந்திக்கின்றது.

*சத்தியம் எனும் இறைமையை நாடும் ஒருவன் விட்டுவிடாமல் கடைப்பிடிக்க வேண்டியதொரு பெரும் தெய்வீக சபதமாய் அஹிம்சையை முன்வைக்கின்றார் பதஞ்சலி முனிவர்.*

*புத்தி, வார்த்தைகள் மற்றும் செயல் உள்ளிட்ட அனைத்து வகையிலும் உருவாக்கவல்ல காயங்களை இது குறிக்கின்றது. சுற்றுப்புறச் சூழலுக்கு ஏற்படுத்தவல்ல பங்கங்களும் இதில் அடங்கும்.*

*காயப்படுத்த போடப்படும் திட்டம், கனவில் செய்யப்படும் வன்முறை - இவையெல்லாம்கூட அஹிம்சை எனும் கட்டுக் கோப்பினை மீறுவதேயாம்.*

*தர்மத்தினைப் பற்றி உணர்ந்து விளக்கியிருக்கும் நம் ரிஷிகள், இயற்கையுடன் இயைந்து வாழவும், மக்களுக்குள் அமைதியை நிலவச் செய்யவும், நமக்குள் சாந்தத்தை அடையவும் உள்ள ஒரே வழி அஹிம்சை என்கிறார்கள்.*

**வேதச்சாறு:**

*‘‘சிந்தை, சொல், செயல் ஆகிய இம்மூன்று வகைகளிலும், வாழும் ஜீவன்களுக்கு எக்காலத்திலும் வலி ஏற்படுத்தாததே, அஹிம்சை.’’ ஓம் நமசிவாய.*



*இது ஆரம்ப வேதகாலம். வேதியர்கள் அக்னியை வழிபடுவதன் மூலம் தேவர்களின் ஆசீர்வாதத்தைப் பெறுகின்றார்கள்.*

*நீண்ட நெடுங்காலமாக வழிபட்டு வருகின்றது, அஹிம்ஸை எனும் கொல்லாமை.*

*அஹிம்சையாய் வாழும் மனிதர்களால், அச்சுறுத்தப்படாத விலங்குகள் பாதுகாப்பாய் உணர்கின்றன... அவர்களிடம் நெருங்கி வருகின்றன.*

# கொல்லாமையின் உற்பத்தி ஸ்தானம் எது?

## ஸ்லோகம் 67

*கொல்லாமை எனும் தத்துவத்தின் அஸ்திவாரத்தினை இரு நம்பிக்கைகள் அமைக்கின்றன. இவற்றில் முதல் விதி, கர்மா. இதுவே கர்மவினை என்றாகின்றது. இதனால் மற்றவர்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகள் தவறாமல் திரும்பி வருகின்றன. இரண்டாவது நம்பிக்கை: அனைத்து மக்கள் மற்றும் இனங்களில் தெய்வம் மிளிர்கின்றது. ஓம்.*

## விளக்கம்

நாம் செய்யும் வன்முறை நடவடிக்கைகள் அனைத்தும் தேவவழியாய் நிச்சயமாக குறி தப்பாது நம்மையே வந்தடையும் என்பதில் இந்துக்கள் முழு நம்பிக்கையை வைத்துள்ளார்கள்.

கர்மவினை எனும் விதியின்படி, மற்றவர்களுக்கு நாம் என்ன செய்துள்ளோமோ அது அப்படியே நம்மையே வந்தடையும் - இந்த ஜென்மத்தில் இல்லாவிட்டால் மற்றொரு ஜென்மத்தில் - என்பதை ஓர் இந்து நன்கறிவான்.

ஒருவன், யாரை எவ்விதமாய் காயப்படுத்த நினைக்கின்றானோ, அதே நிலையில் ஒரு நாள் அவனே படுமோசமான கைதியாய் நிற்பான் என்பதை இந்து அறிவான். இது, அவனுடைய வெறுப்பையும் பயத்தையும் மேம்பட்டதொரு வாழ்க்கை விளக்கமாய் ஆக்கவே என்பதையும் அவன் அறிவான்.

எங்கெங்கிலும் பரவியிருக்கும் சுயம்புவே கடவுள் எனும் நம்பிக்கை, சகிப்புத்தன்மையை வளர்க்கின்றது. மற்றவர்களை ஏற்றுக் கொள்ளும் குணாதிசயத்தைத் தந்து விடுகின்றது.

*அனைத்து ஜீவராசிகளுக்குள்ளும் உறையும் புனித தெய்வீகத்தின் மீது ஓர் இந்து வைத்திருக்கும் மதிப்பையும் மரியாதையையும் கூற, சகிப்புத்தன்மை எனும் சொல் போதுமானதாகாது.*

*எனவே, இவற்றையெல்லாம் விளங்கிக் கொண்டு உயர் மட்டத்துக்கு எழும்பி விட்ட இந்துக்கள் அனைவரிடமும், அஹிம்சை இருக்கும்.*

*தனக்கே திரும்பி வரவல்ல காயத்தினை, இந்து மற்றவர்களுக்கு ஏற்படுத்த மாட்டான்.*

**வேதங்கள் உரைக்கின்றன:**

*‘‘அனைத்திலும் இருப்பவர். இருந்தாலும் அனைத்தையும் விட மாறுபட்டவர். இவரை எல்லோரும் அறிந்திலர். இவரது உடலே அனைத்தும். உள்ளேயிருந்தபடியே ஒவ்வொன்றையும் கட்டுப்படுத்துபவர். இவரே, உன் ஆன்மா. உள்ளிருக்கும் நடத்துநர். அழியாதவர்.’’ ஓம் நமசிவாய.*



*பரந்து கிடக்கும் ஓர் ஆலமரத்தின் அடியில், தனது படைப்புகளுடன் அமைதியாய் பிணைந்தபடி அமர்ந்திருக்கிறார் தட்சிணாமூர்த்தி.*

*அனைத்து ஜீவராசிகளின் வாழ்க்கையும் தெய்வத்தின் உறைவிடம்தான் என்பதால் வன்முறையை முழுக்கவும் தவிர்க்க சொல்கின்றது இந்து மதம்.*

*காயப்படுத்துவதோ அல்லது கொல்வதோ, அனைத்திலும் உள்ள கடவுளின் இருப்பினை அவமதிப்பதே ஆகும்.*

# வன்முறையின் உற்பத்தியிடம் யாது?

## ஸ்லோகம் 68

*பயம், கோபம், பொறாமை, பேராசை மற்றும் வெறுப்பு போன்ற கீழ்த்தரமான பிரக்ஞைகள் வன்முறை என்றாகின்றன. நல்லது எது கெட்டது எது, பொதுநலம் எது சுயநலம் எது போன்ற தொடர்புகள் விளங்காத குணாதிசயம் உள்ளோரிடம் கிடக்கும் உணர்விது. ஓம்.*

## விளக்கம்

ஒவ்வொரு நம்பிக்கையும் ஒரு குணாதிசயத்தை உருவாக்குகின்றது.

குணாதிசயங்கள் நம்முடைய நடவடிக்கைகளை ஆளுகின்றன.

ஆகவே நம்முடைய நடவடிக்கைகளை வைத்து நம்மீதும் நம்மைச் சார்ந்துள்ள உலகத்தின்மீதும் நாம் வைத்துள்ள உள்ளார்ந்த கருத்துக்களையும் நம்பிக்கைகளையும் கண்டுபிடித்து விடலாம்.

அக்கருத்துக்கள் தப்பானவையாக இருந்தால், நமது நடவடிக்கைகள் பிரபஞ்ச தர்மத்துடன் ஒத்துப் போகாமல் அமையும்.

உதாரணத்துக்கு சுயநலம்-பொதுநலம், தெய்வ சக்தி-துர்சக்தி, சொர்க்கம்-நரகம் போன்ற இருமைகளின் மீது நாம் கொண்டுள்ள கருத்துக்கள், நம்மை நாமே ஒரு பாதுகாப்பில் வைத்துக்கொள்ள வேண்டும் என்றொரு குணாதிசயத்தை வளர்க்கும். இது வன்முறையாய் நிலைக்கும்.

நாம் யாரை கெட்டவர்கள் அல்லது அந்நியர்கள் அல்லது பிரயோஜனமற்றவர்கள் என்று நினைக்கின்றோமோ அவர்களை

உடல்ரீதியாகவோ அல்லது உளரீதியாகவோ காயப்படுத்தினால் இந்த குணாதிசயம் தணிகின்றது.

இப்படியான நினைப்புகளே விவாதங்களுக்கும், தானே சரி எனும் வாதத்திற்கும் பாதை அமைக்கின்றன.

ஆக நம்முடைய நினைப்புகள் இருமை சார்ந்தே இருக்கும்வரை விரோதப் போக்கு நம்முள் தொடர்ந்து முளைத்துக் கொண்டே தானிருக்கும். இது, அவ்வப்போது வன்முறைகளில் போய் முடியும்.

கீழ்த்தரமான எண்ணங்களிலும் சிந்தனைகளிலும் வாழ்வோர், சமுதாயத்தின் விரோதிகளே ஆவர்.

அவர்கள், தாம் செய்த தப்புகளே சரி என்றே கதறும் மக்கள். வன்முறையாளர்கள். பொறாமையும், கோபமும், பயமும் நிறைந்து, தங்களை தாங்களே காயப்படுத்திக் கொள்ளும் கீழ்க்குணமும் கொண்டவர்கள் இவர்கள்.

கொலை பண்ண வேண்டும் என்று கொல்வதையும், திருட வேண்டும் என்பதால் திருடுவதையும், சிலர் தங்களுடைய ஒரு பொழுதுபோக்காய் கொண்டுள்ளார்கள்.

**வேதங்கள் குறிப்பிட்டுக் காட்டுகின்றன:**

''இயற்கையின் குணாதிசயங்களுடன் முரண்படுவதே இந்த ஆன்மாவின் இயல்பாகும். இதனாலேயே குழப்பத்தில் விழுகின்றான் மனிதன்.'' ஓம் நமசிவாய.

# புலால் உண்ணாமை, காயப்படுத்தாமல் வாழ்வதற்கு உதவுமா?

## ஸ்லோகம் 69

*மற்ற உயிரினங்களுக்கு குறைந்தபட்ச தீங்கினைக் கூட ஏற்படுத்தாமல் வாழ வேண்டும். அதற்கு புலால் உண்ணாமையே சிறந்த மார்க்கம் என போதிக்கின்றது இந்து மதம். மாமிசம், மீன், முட்டை போன்றவற்றைச் சாப்பிடும்போது, விலங்கின உயிர்களை கொல்லும் குரூரத்துக்கு மறைமுகமாக துணை போகிறோம். ஓம்.*

## விளக்கம்

*உயிர்களைக் கொல்வதற்கும் காயப்படுத்துவதற்கும் எவ்வகையிலும் துணைபோவதில்லை என்று தீர்மானம் எடுக்கும்போது, இது இயற்கையாய் காய்கறிகளை மட்டுமே சார்ந்து வாழும் நல்வழிக்கு வழிவகுக்கின்றது.*

*மாமிசம் வேண்டும் என்று அலைபாயும் மாமிசப் பிரியர்களின் உத்வேகமே, வேறு ஒருவனை அந்த மாமிசத்தை தயார் பண்ணித் தரத் தூண்டுகின்றது.*

*வாடிக்கையாளரின் தாகத்தினாலேயே கசாப்புக் கடைக் காரனின் நடவடிக்கைகள் துவங்குகின்றன.*

*மாமிசம் சாப்பிடுவது, வன்முறைக்கான மனநிலையை உண்டுபண்ணுகின்றது. வேதியியல் ரீதியாக சிக்கலான அமைப்பு கொண்ட மாமிசத்தை உட்கொள்ளும்போது, உயிர்வதை செய்யப்பட்ட அதே உயிரினத்தின் அச்சத்தையும், வலியையும், கிலியையும், அதனைச் சாப்பிடுபவனும் கிரகித்துக் கொண்டு விடுகின்றான்.*

*இந்தக் கீழ்த்தரங்கள் மாமிசம் சாப்பிட்டவரின் உள்ளேயும் கலந்துவிட, குரூரம் மற்றும் குழப்பம் எனும் ஒரு வட்டத்துக்குள் அவர் வீழ்ந்து விடுகின்றார்.*

*தனிப்பட்ட அந்த மனிதரின் பிரக்ஞை எழும்போது, அவருக்குள் ஒரு நல்ல புரிதல் புலப்படும்போது, அவரது சிந்தனையும் புத்தியும் விஸ்தாரமடைகின்றன. இப்போது அவரால் புலால் உணவினை விரும்ப முடியாது. முன்பெல்லாம் அவர் சாப்பிட்டு வந்த மாமிசம், மீன், முட்டை போன்றவற்றையெல்லாம் இப்போது அவரால் ஜீரணிக்கக்கூட முடியாது.*

*மாமிசம் சாப்பிட்டுக் கொண்டு வாழ்க்கை நடத்தும் ஒருவனால் நிச்சயமாய் சாந்தமாகவும், ஒருங்கிணைந்து வாழும் ஒற்றுமை உணர்வுடனும் வாழவே முடியாது என்று இந்திய கண்டத்தில் வாழ்ந்துள்ள மகாத்மாக்கள் அடித்துக் கூறியுள்ளார்கள்.*

*மாமிச தாகம் கொண்ட மனிதர்களால் பூமிப்பந்துக்கே ஆபத்து நேருகின்றது.*

*மாமிச வேட்டைக்காக பொன்னையொத்த காட்டினையே இவர்கள் அழிக்கின்றார்கள்.*

**திருக்குறள் பாகுபாடின்றி உரைக்கின்றது:**

*‘‘தன்னுடைய சதைக்குத் தீனி போட மற்றொரு விலங்கின் சதையை உண்ணும் ஒருவனால் எங்ஙனம் சத்திய அன்பினை வளர்த்துக் கொள்ள முடியும்? ஓர் உயிரினத்தைக் கொன்று உண்ணாமல் இருப்பது, ஆயிரம் குடம் நெய்யை அக்னிக்கு ஆகிருதியாய் இடுவதை விடவும் சாலச்சிறந்ததாகும்.’’ ஓம் நம சிவாய.*



அடுத்த அறையில் உட்கார வைக்கப்பட்டிருக்கும் ஒரு சந்நியாசியின் வரவால், பக்தனொருவன் இங்கு மரியாதை படுத்தப்பட்டுள்ளான்.

அருமையானதொரு மதிய உணவினை விறகடுப்பில் சமைக்கின்றான் இவன்.

அரிசியும், பருப்பும், முருங்கைக்காயும், கத்திரிக்காயும் கொண்ட உணவு முழுக்க முழுக்க காய்கறி உணவாகும். புண்ணிய ஆன்மாக்கள் புலால் உண்பது கிடையாது.

# பூமியில் அமைதியை எப்படி அடைவது?

## ஸ்லோகம் 70

*ஆன்மீக இறைப் பிரக்ஞையின் பிரதிபலிப்பே, சாந்தம். அமைதி. ஒவ்வொரு தனிமனிதனுக்குள்ளும் இது துவங்குகின்றது. பிறகு வீடு, அக்கம்பக்கத்தார், நாடு, அதனையும் கடந்து, என இது பரவுகின்றது. கீழ்மட்ட இயல்பினை உயர்மட்ட இயல்புகள் தனது கட்டுக்குள் கொண்டு வந்துவிடும்போது இது தானாய் வாய்க்கின்றது. ஓம்.*

## விளக்கம்

நம் நெஞ்சுக்குள் நாம் சாந்தத்தைக் கொண்டு வந்து நிலைநிறுத்தாவிட்டால், இவ்வுலகத்தில் சாந்தம் உண்டாகும் என்று நம்மால் எதிர்பார்க்க முடியாது.

புத்தியின் இயற்கையானதொரு நிலைப்பாடாகும், சாந்தம். நம்முடைய புத்திக்கு இயற்கையிலேயே தரப்பட்டுள்ள ஒரே தகுதி, அமைதி.

இது நம்மிடையே பூரணமாய் உள்ளது. உள்ளே. இதனை தியானம் மூலமாக நாம் அடைய வேண்டியிருக்கின்றது. அடைந்ததை, பிறகு, சுயகட்டுப்பாட்டுகளின் மூலம் நாம் நிலைநிறுத்திக் கொள்ள வேண்டியிருக்கின்றது. இதற்கப்புறமாய் தான் நாம் பரிபூரணமாய் அனுபவிக்கும் சாந்தத்தினை நம்மால் வெளியுலகுக்குப் பரப்ப முடியும்.

வீட்டுக்குள் ஏற்படும் கருத்து வேற்றுமைகளை உடனுக்குடன் விரைவாய் பைசல் பண்ணி, குடும்பத்தாருக்கு சாந்தத்தின் முக்கியத்துவத்தை கற்பிப்பதன் மூலமாக மட்டுமே, சாந்தம் அல்லது அமைதி எனும் உயர்ந்த இலக்கினை மேலே கொண்டு போக முடியும்.

விசால மனப்பான்மையை வளர்த்துக் கொண்டு அதிக சகிப்புத் தன்மைக் கொண்டவராய் நாம் ஆகும்போது, தேசம் மற்றும் சர்வதேசம் ஆகிய நிலைகளில் நம்மால் சாந்தத்தை அதிகமாய் கொண்டாட முடியும்.

இங்கு மதத்தலைவர்கள் உதவிக்கரம் நீட்டலாம்.

வேறுபாடுகள் நிறைந்த இவ்வுலகத்தில், அச்சம் கொள்ளாமலும் தன் கருத்து மட்டுமே சரியென்று மற்றவர்கள்மீது அதனைத் திணிக்காமலும் எப்படி வாழ்வது என்பதை தனது மதத்தாருக்கு மதத்தலைவர்கள் போதித்து வழிகாட்டலாம்.

உலக மன்றங்கள் சட்டங்கள் இயற்றி உதவலாம். இச்சட்டங்கள், வன்முறை சார்ந்த குற்றங்கள் நிகழாமல் தடுக்கும் வண்ணம் அமைதல் வேண்டும்.

ஆகவே, உயர் ஞானம் அடைந்த புண்ணிய ஆத்மாக்கள், சமுதாயத்தை தங்களது கட்டுக்குள் கொண்டு வரும்போதுதான் நிஜத்தில் சாந்தம் தவழ ஆரம்பிக்கும். இதற்கு வேறு வழியே கிடையாது. ஏனென்றால், கருத்து வேறுபாடுகளும் அவற்றால் உருவாகும் கருத்து வேற்றுமைகளும் கீழ்த்தள சிந்தனையில் வாழும் மனிதக் கூட்டத்தினாலேயே உருவாகின்றன.

பழிக்குப்பழி வாங்குதல் ஒன்றுதான் வாழ்க்கையின் போக்கு என்பதே இவர்களின் நிலைப்பாடு.

**வேதங்கள் உரைக்கின்றன:**

‘‘பூமிக்கும் விண்ணுக்கும் சாந்தம் கிட்டட்டும்! சொர்க்கத்துக்கும், நீர்நிலைகளுக்கும், தாவரங்களுக்கும் மரங்களுக்கும் சாந்தம் கிடைக்கட்டும்! அனைத்து தெய்வங்களும் எனக்கு அமைதியை அளிக்கட்டும்! சாந்தத்தை அழைக்கும் இந்த பிரார்த்தனையால், அமைதி, துளைத்துக் கொண்டு உட்புகட்டும்!’’ ஓம் நமசிவாய.



*விலைமதிப்பற்ற பாரிஜாத மலர்கள் கொண்ட மரத்தினைக் கண்டுபிடித்து விடும் இவள், தனது காலை நேரத்துப் பூஜைக்காக இரண்டு கூடைகள் பாரிஜாத மலர்களை சேகரித்துக் கொள்கின்றாள்.*

*இவளுடைய சாந்தமான மற்றும் தனக்குள் தான் திருப்தி கண்டுவிட்ட போக்கினை, ஒருவன் ரகசியமாய் கவனிக்கின்றான்.*

*அனைத்து வகைகளிலும், எல்லாவற்றையும் பொறுப்பதே, அஹிம்ஸை. துறவறம் என்பது ஒரு வரம். இறுதி புனிதத்தன்மை என்பதே மரணம். ஆக அனைத்து தெய்வீகமும் இவ்வுடலிலேயே நிர்மாணிக்கப்பட்டுள்ளன. கிருஷ்ண யஜுர் வேதம்.*

*நாம் எதைச் செய்தாலும் எதைச் செய்யாவிட்டாலும், அமைதி எப்போதும் நம்முடையதாகட்டும். நமக்கு கிடைக்கும் அனைத்தும் தயாளமானதாய் இருக்கட்டும். இந்த ஐம்புலன்களாலும், ஆறாம் புலனாய் உள்ள அறிவினாலும், என் இதயத்திலுள்ள அனைத்தையும் படைக்கும் இறைமையான பிரம்மத்தினாலும், நமக்கு சாந்தியே கிடைக்கட்டும். அதர்வண வேதம்.*

*நாம் பூமியையோ, சொர்க்கத்தையோ அல்லது வெளியுலகத்தையோ காயப்படுத்தியிருந்தாலும் - தந்தையையோ தாயையோ எதிர்த்திருந்தாலும் - அவற்றிலிருந்து அக்னி எனும் புனிதம் நம்மைக் கழுவிவிட்டு, நல்ல பாதை நோக்கி நமக்கு வழிகாட்டி அழைத்து செல்லட்டும். அதர்வண வேதம்.*

*கடவுளால் அளிக்கப்பட்டுள்ள உங்களுடைய உடம்பால், அதே கடவுளாலேயே அளிக்கப்பட்டுள்ள இன்னபிற ஜீவன்களை - அது மனிதனோ, விலங்கோ அல்லது வேறெதுவோ - கொல்லக்கூடாது. யஜுர் வேதம்.*

*இரண்டு கால்கள் மற்றும் நான்கு கால்கள் கொண்டு நம்மிடையே உள்ள ஜீவன்களைக் காத்திடுங்கள். அவற்றுக்குத் தேவைப்படும் உணவையும் நீரையும் அளியுங்கள். நம்முடன் இணைந்து அவை பரஸ்பர பலத்தை அதிகரிக்கட்டும். சக்திகளே... காயங்களிலிருந்து எங்களை நாள் முழுமைக்கும் காத்திருங்கள். ரிக் வேதம்.*

*காற்று, நம்மை கருணை மட்டுமே நிறைந்ததாய் விசிறட்டும். சூரியன், நம்மை குதூகலமான கதிர்களால் கதகதப்பூட்டட்டும். இனிதான ஒலியுடன் மழை பொழியட்டும். ஒவ்வொரு நாளும், நமக்கு வாழ்த்துக்களுடன் வந்து செல்லட்டும். இரவுகள் நம்மை நெருக்கமாய் தழுவட்டும். ஓ, இந்தப் பூமி, நம்மை பலமாக்கட்டும். அனைத்து ஜீவன்களும் என்னை நட்பான கண்களுடன்*

பார்க்கட்டும். மற்ற ஜீவன்கள் அனைத்தையும் நான் தோழமையுடன் பார்க்கக் கடவது. நண்பனின் கண்ணோட்டத்தில் நாம் ஒருவருக்கொருவர் வாழ்வோம். *சுக்ல யஜூர் வேதம்.*

படைக்கப்பட்டுள்ள எந்தவொரு ஜீவனுக்கும் வலி ஏற்படுத்தலாகாது. *தேவிகாலோத்தர ஆகமம்.*

அஹிம்ஸை எனும் அலைகளில் புத்தி முழுதும் ஸ்திரமாய் பதிந்து நின்று விட்டால், அதற்கு முன்னால் பகைமை என்பதே கரைந்து போய் விடும். *பதஞ்சலி யோக சூத்திரம்.*

வேதங்கள் சொல்லும் தெய்வீகமான ஆன்மாவுக்கு எதிராக போவதே ஹிம்ஸை என்பதாகும். தர்மம் என்று பரிந்துரைக்கப் பட்டுள்ளவற்றுக்கு எதிராக நடப்பதாகும் இது. ஆத்மா என்பது ஈடுயிணைற்றது, வகுக்க முடியாதது, தூய்மையானது, எங்கும் நிறைந்திருப்பது எனும் அடிப்படை சத்தியத்தினை விளங்கிக் கொள்வதே அஹிம்ஸை. *சுத்த ஸம்ஹித்தா.*

அழியக்கூடிய இவ்வுலக நிலத்தில், 'இங்கிருக்கும் அனைத்திலும் இருப்பவர் நம் அனைவரின் ஒரே கடவுள்தான்' என்று யார் பார்க்கின்றானோ, அவனே சத்தியத்தைக் கண்டவனாகின்றான். பிறகு, தன்னில் இருக்கும் அதே கடவுள்தான் மற்றவற்றிலும் இருக்கும் ஒரே கடவுள் என்று அவன் காணும்போது, மற்றவர் களைத் துன்புறுத்தி அதன் வழியாக தன்னையே துன்புறுத்திக் கொள்ளும் தவறினைச் செய்ய மாட்டான். அப்போது அவன் மிகவுயர்ந்த தர்மப்பாதைக்கு போய் விடுகின்றான். *பகவத் கீதை.*

சதையினை விலைகொடுத்து வாங்குபவன், செல்வத்தால் ஹிம்ஸை செய்கின்றான். அதனை ருசித்து சாப்பிடுபவனும் ஹிம்ஸை இழைத்தவனாகின்றான். விலங்கினைக் கட்டி வைத்து அதன் மாமிசத்துக்காக கொல்பவன், அதனை கொன்று விடுவதால் ஹிம்ஸை செய்தவனாகின்றான். ஆக இங்கு மூவகையான கொலைகள் உள்ளன: மாமிசத்தை வாங்குபவன், அதனை அறுத்து சதையெடுப்பவன், அதனை விற்பவன் அல்லது உண்பவன். இம்மூவருமே மாமிசம் உண்பவர்களாகவே கருதப்பட வேண்டியவர்கள். *மகாபாரதம்.*

*கொல்லாமை, சத்திய உண்மை, கோபத்திலிருந்து விடுதலை, தவம், கற்பையொத்த தூய்மை, அனைத்து ஜீவன்களிடத்தும் கருணை, பேராசையிலிருந்து விலகிய அமைதி, நிலைதடுமாறாமை, மனிதாபிமானம், மன்னித்தல், சக்தி, கஷ்டங்களைத் தடுமாறாமல் சந்தித்தல், நல்ல இலக்குகள், தற்பெருமையற்ற வாழ்வு - சொர்க்கத்தில் சேர்வதற்காக பிறந்தவனின் தகுதிகள் இவை. பகவத் கீதை.*

*வாழும் உயிரினங்களுக்கு உபாதைகள் உண்டுபண்ணாமல் மாமிசத்தைப் பெறவே முடியாது. சொர்க்கத்தின் பேரானந்தத்தை அடைய மிருகவதை ஒரு மாபெரும் தடைக்கல். ஆகவே புலால் உணவினை மனிதன் தவிர்க்கக் கடவது. மனு தர்ம சாஸ்திரம்.*

*பழி வாங்கும் தீர்மானத்தோடு அடுத்தவருக்கு காயம் ஏற்படுத்துவோர், பிரயோஜனமற்றவர்கள். ஆனால் கஷ்டங்களால் துவளாமல் அவற்றை அப்படியே தாங்கிக் கொள்வோர், சேமித்து வைத்துள்ள தங்கத்துக்கு ஒப்பானவர்கள். வலியால் ஏற்படும் உளைச்சல்களிலிருந்து விடுதலை பெற விரும்புவன், அப்படி தானும் செய்யாமல் இருக்கப் பழகட்டும். திருக்குறள்.*

*பூஜைக்கும் வழிபாட்டுக்கும் பற்பல புஷ்பங்கள் கொட்டிக் கிடக்கின்றன. ஆனால் பிரார்த்தனைக்கு மிக உசிதமானது, அணுவளவுகூட உயிரினத்துக்கு தீங்கிழைக்காமையே ஆகும். அசையா தீபமே, சாந்தமடைந்த புத்தி. வழிபாட்டுக்கு உன்னதமான ஒரேயிடம் ஆன்மா உறையும் இதயம். திருமந்திரம்.*

# க்ருஹஸ்த தர்மாஹ்



உபநிடதம் ஆறு:
குடும்ப வாழ்க்கை

# தம்பதி



**கணவன் - மனைவி**

*ஓ, தேவர்களே... கணவன் மனைவி என தம்பதியானவர்கள், களங்கமற்ற இதயங்களுடன் அர்ப்பணிப்புடன் வாழட்டும்.*

*உங்களை இனிமையான பக்திப் பாடல்களுடன் பால் வார்த்து வழிபடட்டும்.*

*அவர்கள் தேவையான உணவினைப் பெறட்டும்.*
*தியாகங்கள் செய்து குடும்பங்களை வளர்க்க வழி கிடைக்கட்டும்.*
*சக்தியிலும் உற்சாகத்திலும் அவர்கள் துவளவே வேண்டாம்.*

***-ரிக் வேதம்***

# திருமணத்தின் மைய நோக்கம் என்ன?

## ஸ்லோகம் 71

*திருமணத்தின் இரண்டு நோக்கங்கள்: பொருள் சார்ந்து மற்றும் அருள் சார்ந்து, கணவனும் மனைவியும் ஒருத்தருக்கொருத்தர் தரும் ஆதரவு. பிறகு, குழந்தைகளை இவ்வுலகுக்கு அளிப்பது. திருமணம் என்பது ஒரு புனித மதச்சடங்கு. மனித சாசனம். மற்றும் சமூகக் கட்டமைப்பு. ஓம்.*

## விளக்கம்

*திருமணத்தின் வாயிலாக ஓர் ஆணும் ஒரு பெண்ணும் தத்தமது கடமைகளை முழுமையாய் முடிக்கின்றார்கள். உடல்ரீதியாக, உணர்ச்சிரீதியாக மற்றும் ஆன்மீகரீதியாக முழுமை பெற்று விடுகின்றார்கள்.*

*அவனுக்கு அவளுடைய தளிர் அருகாமை தேவை. அவள் தரும் ஊக்கம் அவசியம்.*

*அவளுக்கு அவனுடைய அன்பும், புரிந்து கொள்ளுதலும், இவ்விரண்டால் பெறக்கூடிய பலமும் அவசியம்.*

*இவர்கள் இருவரின் இணைப்பு, மனித குலம் தழைத்து ஓடிக்கொண்டிருக்க பிள்ளைகளை உருவாக்குகின்றது.*

*திருமணம் என்பது, மூன்று பகுதிகள் கொண்டதொரு நிலைப்பாடு:*

*இது ஒரு புனிதச்சடங்கு, ஓர் ஒப்பந்தம், மற்றும் ஓர் அமைப்பு.*

*புனிதச்சடங்கு என்று பார்க்கும்போது, இறைவனின் முன்னிலையில் ஓர் ஆணும் பெண்ணும் இணைவதாகின்றது திருமணம். இறைவனை சாட்சியாய் வைத்து சில வாக்குறுதிகளை*

ஒருவருக்கொருவர் தந்து கொள்கின்றார்கள். பிறகு காலம் பூராவும் கட்டுப்பட்டிருக்க ஒப்புக்கொண்டு, இரு ஆன்மாக்களின் விருத்திக்காக இணைகின்றார்கள்.

ஒப்பந்தம் என்பதன் அடிப்படையில், இணைந்து கணவன் மனைவியாய் வாழ்வதாய் இருவரும் தனித்தனியாய் எழுதும் சாசனமாகின்றது கல்யாணம். இருப்பிடமும் பாதுகாப்பும் இடைவிடாத ஆதரவும் தருவது கணவனின் கடமையாகவும், வீட்டினைப் பாதுகாத்து குழந்தைகளை திறம்படப் பேணுவது மனைவியின் கடமையாகவும், இந்த சாசனம் அமைகின்றது.

ஓர் அமைப்பாய் பார்த்தால், சமூகத்தில் சட்டப்படி இடம்பெறும் ஓர் இணைப்பாய் திருமணம் அமைக்கப்பட்டுள்ளது. குடும்பத்துக்கும் சமூக கட்டமைப்புக்கும் நிலைகுலையாத ஒரு ஸ்திரத்தன்மையை வாழையடி வாழையாக வளர்க்க, கலியாணம் எனும் குடும்ப கட்டமைப்பு அத்தியாவசியமாகின்றது.

திருமணம் என்பது ஜீவயக்ஞும் என்றாகின்றது. அதாவது வாழ்க்கை முழுக்க வளர்க்கப்படும் ஒரு யாகம். அதாவது, தியாகம்.

சின்னச்சின்ன விஷயங்களையெல்லாம் தியாகம் செய்து குடும்பத்தை நடத்தி, குடும்பம் மற்றும் சமூகத்துக்கு இறுதியாய் பெரும் நன்மையை விட்டுச் செல்வதாகும், திருமணம் எனும் அமைப்பு.

## வேதங்கள் பூரிக்கின்றன:

''நான் அவன், நீ அவள். நான் பாட்டு, நீ அதன் வரிகள். நான் சொர்க்கம், நீ பூமி. நாமிருவரும் இங்கு செழித்திருப்போம். குழந்தைகளுக்கு பெற்றவர்கள் என்றாகி குலம் வளர்ப்போம்.'' ஓம் நமசிவாய.



*மிக அழகாக அலங்கரிக்கப்பட்டுள்ள தங்களது இல்லத்தில்,*
*தனது மனைவியின் கூந்தலுக்கு மலர் வைக்கின்றான் கணவன்.*

*திருமணம், கலாச்சாரத்தின் ஒரு தூண். இருவரும் தத்தமது கடமைகளை தர்மரீதியாக ஆற்றும்போது, தம்பதியினரின் தேவைகளை அதுவே பூர்த்தி செய்து வைக்கின்றது.*

*இதனால் உடல் மற்றும் உளரீதியான ஆதரவு நிலைக்கின்றது.*

# கணவனின் கடமைகள் யாவை?

## ஸ்லோகம் 72

*மனைவியையும் குழந்தைகளையும் பாதுகாத்து அவர்களுக்கு தேவையானவற்றை அளிப்பது கணவனின் கடமை – புருஷ தர்மம். குடும்பத்தலைவன் அதாவது க்ரஹேஷ்வரன் என்றாகும் கணவன், அவனது குடும்பத்தின் ஆன்மீக, பொருள் சார்ந்த, உடல்ரீதியான, உளரீதியான மற்றும் உணர்ச்சிபூர்வ பாதுகாப்புகள் அனைத்துக்கும் பொறுப்பேற்கின்றான்.*

## விளக்கம்

*ஆணுக்கும் பெண்ணுக்கும் படைப்பிலேயே உள்ள உடல், மனம் மற்றும் உணர்ச்சிபூர்வ வேறுபாடுகளின் காரணமாக, உலகத்தில் இறங்கி வேலை செய்து பொருள் ஈட்ட ஆண் பொருத்தமானவனாய் இருக்கிறான். வீட்டிலிருந்தபடி அதனை நிர்வகித்து குழந்தைகளை மேலே தூக்கிவிட பெண் பொருத்தமாகின்றாள்.*

*எதிர்காலத்து தலைமுறையினரை, எதிர்காலத்து சந்ததியினரை நல்லபடியாய் மேலே கொண்டுவருவதில் இருவருக்கும் சமபங்கு இருந்தாலும், முதலிடம் வகிப்பது கணவன்தான்.*

*இரண்டாவதாக, கணவனுக்கு மிக அருகாமையில் இருக்கும் அவனது குடும்பத்துக்கும் பிறகு தான் சார்ந்த சமூகத்துக்கும் பொருள் ஈட்டுவது கணவனின் கடமையாகின்றது.*

*கணவன், குடும்பம் பற்றி சிந்திக்கும் பொறுப்புடன் இருக்க வேண்டும். புரிந்து கொள்பவனாகவும், பலம் வாய்ந்தவனாகவும், அன்பும் ஆதரவும் கொண்டவனாகவும், தர்மரீதியாக தன்னால் எத்தனை ஈட்ட முடியுமோ அவ்வளவு ஈட்டி சுயநலமின்றி அளிப்பவனாகவும் புருஷன் இருக்க வேண்டும்.*

*தன்மீது திணிக்கப்படும் மனஉளைச்சல்கள் மற்றும் தேவைகளை, உடல் மற்றும் உள்ள ரீதியாக சந்திக்க கணவன் வசதி பெற்றிருக்க வேண்டும்.*

*தர்மரீதியாக தனது கடமையினை அவன் குடும்பத்தில் ஆற்றும்போது, அக்குடும்பம் பொருள்ரீதியாகவும் உணர்ச்சி ரீதியாகவும் பாதுகாப்பாய் விளங்கும்.*

*இருந்தாலும், குடும்பம் என்பது மனைவியின் கட்டுப்பாட்டி லிருக்கும் எல்லை என்பதையும், வீட்டுக்கு அவள்தான் மந்திரி என்பதையும் மறக்காமல், இல்லத்தின் சின்னச்சின்ன விஷயங்களில் அவன் தாராளமாய் பங்கேற்கலாம்.*

**வேதங்கள் கூறுகின்றன:**

*''இப்புனித சடங்கின் மூலம், இந்த மாப்பிள்ளை புத்தம்புதிதாய் கொழிக்கட்டும். இவனுக்கே உரிய ஆண் சக்திகள் கொண்டு, இவனிடம் ஒப்படைக்கப்படும் பெண்ணை இவன் போஷாக்காக் கட்டும். பலத்தால் முன்னேறட்டும், இவன் செல்வத்தில் முன்னேறட்டும்! பன்மடங்காய் பெருகும் சம்பத்துக்களில் இத்தம்பதிகள் பொங்கி வழியட்டும்!'' ஓம் நமசிவாய.*



*தங்களுக்கான தனிமைப்படுத்தப்பட்ட வராந்தாவில்,*
*இந்த இளந்தம்பதியினர் உட்கார்ந்துள்ளார்கள்.*

*கணவன், தனது மனைவிக்கு பெட்டி நிறைய அணிகலன்கள்*
*கொண்டதொரு அன்பளிப்பு கொண்டு வந்துள்ளான்.*

*கனிவான காதல் வார்த்தைகள் மற்றும் ஆதரவு சொற்கள் பேசி, அவளை*
*கரவளையமிட்டு அணைக்கும் கணவன், அந்த நகைகளை அவளுக்குச் சூடுகின்றான்.*

# மனைவியின் முக்கிய கடமைகள் யாவை?

## ஸ்லோகம் 73

*குழந்தைகளைத் தாங்கிப்பெற்று, பாதுகாத்து, வளர்க்க வேண்டியது, ஸ்த்ரீ தர்மம் - அதாவது மனைவியின் கடமை. கணவனுக்குப் பின்னால் பக்கபலமாய் நின்று அவன் முன்னேற்றத்துக்கு உதவுவதில் அவள் ஒரு சிறந்த நிர்வாகியாக இருக்கிறாள். அவளுடைய குழந்தைகளுக்கு தாயாகவும் பாடங்கள் சொல்லித் தரும் ஆசானாகவும் உள்ளாள். க்ருஹிணி என்ற அர்த்தத்தில் அவளே குடும்பத்தின் மவுனத் தலைவியாகின்றாள். ஓம்.*

## விளக்கம்

*உடல்ரீதியாய் ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள வேறுபாடுகள், அவர்களுடைய மனோ தர்மத்துக்கான ஒரு பகுதியாக ஆக்கப்பட்டுள்ளன. இருவரும் ஒன்றாய் இருந்து அங்கு முழுமையை ஏற்படுத்துகின்றார்கள்.*

*சந்தோஷம், துக்கம், நட்பு மற்றும் உதவுவது ஆகியவற்றில் இருவரும் சமபங்கு வகிக்கின்றார்கள். இருந்தாலும் இருவரின் பணிகளும் வெவ்வேறானவை.*

*சனாதன தர்மத்தின் உறைவிடம் இந்துக்களின் இல்லமாகும்.*

*இதனை மனைவி மற்றும் தாய் என்ற இரு ஸ்தானங்களில் நிறைவேற்ற வேண்டிய பொறுப்பு பெண்ணுக்கு உள்ளது. இதனால் நம்பிக்கையை உருவாக்கி அதனடிப்படையில் ஒரு நல்ல பிரஜையை உருவாக்கி நாட்டுக்குள் விட வேண்டியுள்ளது.*

*கணவனுக்கு வீட்டைக் கட்டிக்காக்கும் தகுதி இருக்கும் வரையில், இல்லத்தினை விட்டுவிட்டு ஒரு பெண் வேலைக்காக*

உலகத்துக்குள் இறங்கக் கூடாது. ஆயினும் வீட்டிலிருந்தபடியே நிர்வாகம் பண்ணி அவள் சம்பாதிக்கலாம்.

பெண்ணையும் தாயையும் வெளியுலகத்துக்கு வேலைக்கு அனுப்பி வைப்பதால் கர்மபாவம் கூடுகின்றது... மேலும், பெண்ணற்ற வீட்டிலிருக்கும் பிள்ளைகள் ஆன்மீக மற்றும் உணர்வுபூர்வ இழப்புக்கு உள்ளாகின்றார்கள். இவ்விரண்டும், பெண் வெளியே போய் ஈட்டிவரும் பொருட்களால் ஒருபோதும் ஈடுகட்டிவிட முடியாது.

குழந்தைகளின் ஒழுங்கான பராமரிப்புக்கும் மேம்பாட்டுக்கும், பெண்களுக்கு சுயமாகவே சற்று அதிகமாய் கொடுக்கப்பட்டுள்ள மிருதுத்தன்மை, கனிவு, அரவணைப்பு, பெருந்தன்மை போன்ற குணங்கள் தேவைப்படுகின்றன.

**வேதங்கள் ஊக்குவிக்கின்றன:**

''சந்தோஷம் உங்கள் குழந்தைகளுக்காக இருக்கட்டும்! இவ்வீட்டினை இதன் தலைவியாகக் கவனி. உன்னை உன் கணவனுடன் முழுக்கவும் ஐக்கியமாக்கிவிடு. இப்படிச் செய்வதால் உன் கடைசி காலம் வரை உன் சொல்லுக்கு மதிப்பும் மரியாதையும் இருக்கும்.'' ஓம் நமசிவாய.



*குழந்தை தன் காலருகேயே இருக்க, விளக்கேற்றுகின்றாள் இப்பெண்.*

*இதன் வழி, அடுத்த தலைமுறைக்கு ஒளியைக் கொண்டு செல்கின்றாள் இவள்.*

*பணியிலிருந்து தனது கணவன் திரும்பும் நேரமிது என்பதைக் கணித்து, தரையில் கோலங்கள் வரைந்து மாலைநேரத்து பூஜைக்கு அவள் தயாராகின்றாள்.*

*தெய்வத்துக்கான பூமாலையுடன் அவன் திரும்புகின்றான்.*

# புணர்ச்சி பற்றிய இந்துமதத்தின் பார்வை என்ன?

### ஸ்லோகம் 74

*காதலின் அழகான நெருக்கத்தினை தனது துணைக்கு காட்டுவதும், கணவனையும் மனைவியையும் ஒன்றாய் இழுத்து சந்ததியை உருவாக்குவதும், புணர்ச்சியின் நோக்கங்களாய் உள்ளன. இந்துமதம் சமுதாயத்துக்கு தேவையான வழிமுறைகளை தந்தாலும், புணர்ச்சி சம்பந்தப்பட்ட விஷயங்களை சட்டங்களாக்க வில்லை. ஓம்.*

### விளக்கம்

புணர்ச்சியின்போது கொள்ளப்படும் உடலுறவு, இனப் பெருக்கத்துக்கான ஓர் இயற்கை நிகழ்வு. உள்ளுணர்வின் உந்துதலால் எழுவது. ஆணையும் பெண்ணையும் இழுத்து இணைத்து பிள்ளை பிறக்க அடிகோலுவது.

நெருக்கத்தின் அடிப்படையில் புணர்ச்சி நிகழ்வதால், அன்பின் பரிமாற்றத்துக்கான அடித்தளமாகவும் செக்ஸ் உள்ளது.

புணர்ச்சியின்போது பரிமாறப்பட்டு திருப்தியேற்படுத்தும் அன்புதான், உடலுறவினை உயர் தளத்தில் நிறுத்தி, விலங்கின இயக்கத்திலிருந்து வேறுபட்ட மனிதகுல கடமையாய் ஆக்குகின்றது.

மிகவும் அந்தரங்கமும் நெருக்கமும் கொண்டதான செக்ஸ் பிரச்சினைகள் குடும்பத்தையும் சம்பந்தப்பட்ட தனிநபர்களையும் பாதிக்கும் என்ற காரணத்துக்காக, இந்துமதத்தில் இது சட்டம் சம்பந்தப்பட்டதாக ஆக்கப்படவில்லை. இருந்தாலும், சம்பந்தப் பட்ட ஆண் மற்றும் பெண்ணின் சமூக கட்டுப்பாடுகளுக்கு

உட்பட்டு, இப்பிரச்சினைக்கான தீர்வு அவ்விருவரின் முடிவுக்கே விட்டுவிடப்படுகின்றது.

இந்துமதம், குழந்தை பிறப்பு கட்டுப்பாட்டினை ஒதுக்கவுமில்லை, எதிர்க்கவுமில்லை. இதேபோல கருக்கலைப்பு, சுயஇன்பம், ஓரினச் சேர்க்கை, பலதார மணம், செக்ஸ் தூண்டுதல் போன்றவற்றையும் இம்மதம் வளர்க்கவுமில்லை, எதிர்க்கவுமில்லை.

மனித இயல்புக்கு எதிராக இம்மதம் எவ்விதமான முரட்டுத் தனமான தீர்மானங்களையும் எடுப்பதில்லை. ஆயினும் புனித நூல்கள், கள்ளத் தொடர்புகள் மற்றும் தாயின் உயிரைக் காப்பதற்கான காரணம் தவிர இடம்பெறும் கருக்கலைப்பு போன்றவற்றைக் கண்டிக்கின்றன.

இது சம்பந்தமான அறிவுரைகள் பெற்றோர்கள், மூத்தவர்கள் மற்றும் சமயத் தலைவர்களிடம் பெறப்பட வேண்டும்.

இதில் உள்ள ஒரேயொரு கட்டாயமான சட்டம், மதம் காட்டும் வழியை தவறாது கடைப்பிடித்து ஒழுகுவதாகும்.

**வேதங்கள் சொல்கின்றன:**

‘‘அனைத்து புதிய நீரோட்டங்களின் சக்திகளும் நமக்குள் ஒன்றாய் கலக்கட்டும்! கடவுளும், கடவுளின் தூதர்களும் நம்மைச் சேர்த்து வைக்கட்டடும்!’’ ஓம் நமசிவாய.



*மனோஹரமான பவுர்ணமியும் நட்சத்திரங்களும் வானில் நிறைந்துள்ள காலத்தே,*
*கணவனும் மனைவியும் நெருக்கமாய் இணைகின்றார்கள்.*

*புணர்ச்சி வழி இணையும்போது அவர்களுடைய அன்பின்*
*வெளிப்பாட்டுக்கான ஓர் அடையாளமாய் அது அமைகின்றது.*

*கலாச்சாரத்தையும், நம்பிக்கைகளையும், குடும்ப செல்வங்களையும்*
*மறு தலைமுறையினருக்கு கொண்டு செல்லவும்,*
*பிள்ளைகள் பெற்றுக் கொள்ளவும் இது வழி அமைக்கின்றது.*

# திருமணத்துக்கும் புணர்ச்சிக்கும் உள்ள தொடர்பு யாது?

### ஸ்லோகம் 75

*புணர்ச்சியினால் இடம்பெறும் உடலுறவு நெருக்கம், திருமண பந்தத்துக்கு கட்டுப்பட்டு அமைய வேண்டும் என்கின்றது தர்மம். திருமணத்துக்கு முந்தைய தொடர்புகள் ஏதுமில்லாமல் இடம் பெறும் கல்யாணங்களே உண்மையானதும் வலுவானதுமாய் அமையும். இவையே பெரும்பாலும் பிரிதல் அல்லது விவாகரத்தில் முடியாமல் இருக்கும். ஓம்.*

### விளக்கம்

*மாசில்லாத ஒரு பெண்ணும் ஆணும் திருமணம் செய்து கொண்டு ஒருவருக்கொருவர் அந்தரங்கத்தினைப் பகிர்ந்து கொள்ளும்போது அத்திருமணத்தில் ஒருங்கிணைப்பு வலுவாகவும், நீடிப்பு அசைக்க முடியாததாகவும் இருக்கும்.*

*இது ஏனென்றால், இருவருடைய நாடி எனப்படும் உளம் சார்ந்த நரம்புகள் ஒன்றாய் வளரும். இது, ஒருடல் ஒரே சிந்தனை எனுமொரு கட்டமைப்பினை இருவருக்குள்ளும் உருவாக்கி விடும்.*

*மாறாக, அப்பெண்ணோ அல்லது பையனோ திருமணத்துக்கு முன்னமேயே உடலுறவு கொண்டிருந்தால், உணர்ச்சிபூர்வமான நெருக்கம் இத்திருமணத்தில் பாதிக்கப்படும். இது, எத்தனை முறை திருமணத்துக்கு முந்தைய தொடர்புகள் இருந்தன என்பதைப் பொறுத்து தீவிரமானதாய் அமையும்.*

*ஒரு திருமணம் வெற்றிகரமாய் செல்ல, புணர்ச்சி சார்ந்த உடலுறவு கணவன் மற்றும் மனைவி ஆகிய இருவருக்குள் மட்டுமே அடங்க வேண்டும்.*

*இவ்விஷயத்தில் ஒருவருக்கொருவர் உள்ள தேவைகளை நன்கு புரிந்து கொண்டு, உடலுறவினை முழுக்கவும் நிராகரித்து விடாமலும் அதே சமயத்தில் அதிகம் வற்புறுத்தாமலும் பார்த்துக் கொள்ள வேண்டும்.*

*செக்ஸ் சம்பந்தப்பட்ட சமாச்சாரங்களைப் பொறுத்தமட்டில், தனக்குத்தானே இதனை புறக்கணிக்காத ஒரு நல்ல ஆரோக்கியமான சூழலில் இது கையாளப்பட வேண்டும்.*

*தங்களது கற்பினை ஒரு புனிதப் பொருளாக பாதுகாக்க வேண்டும் என்று சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் சொல்லித் தர வேண்டும். இந்த புனிதத்தினை, வரப்போகும் தனது துணைக்கான ஒரு முக்கிய அன்பளிப்பாக பாதுகாத்து வைக்க வேண்டும் என்பதையும் போதிக்க வேண்டும்.*

*திருமணத்தில் செலுத்தப்பட வேண்டிய தார்மீகப் பொறுப்புகளை அவர்களுக்கு சொல்லித் தந்து, திருமணத்துக்கு முந்தைய தப்பான தொடர்புகளைப் பற்றி சிந்திப்பதே பெருந்தவறு என்பதை சிறார்களின் சிந்தையில் ஏற்றிவிட வேண்டும்.*

**வேதங்கள் உரைக்கின்றன:**

*''நாம் பரிமாறிக் கொள்ளும் பார்வைகளில் இனிமை இருக்கட்டும். உண்மையான கரிசனையை நம் முகங்கள் காட்டட்டும். என்னையும் உன் இதயத்தோடு இணைத்து விடு. நம்மிடையே இனி ஒரேயோர் ஆவி மட்டும் நிலவட்டும்.'' ஓம் நமசிவாய.*



*ஒரு கலைஞன், அவனுக்கான உபகரணங்கள் அருகில் இருக்க,*
*தனது மனைவியுடன் வெளியே அமர்ந்து பேசிக் கொண்டிருக்கின்றான்.*

*இருவரும் திருமணத்தின்போது தூய்மையானவர்களாய் இருந்தபடியால்,*
*மனத்தளவிலான அவர்களது திருமண பந்தம் மிகவும் இறுக்கமாய் உள்ளது.*

*இவர்களால் வாழ்க்கைப் பாதையை சுலபமாய் எதிர் கொள்ள முடியும்.*

ஓ, ஆண்களே, பெண்களே... கற்றறிந்தோரிடமிருந்து சிறந்த புத்தியினை நீங்கள் அடைந்துள்ளீர்கள். இப்போது திருமணத்துக்குள் நுழைய உங்களுக்குள் தோன்றியுள்ள கருத்தினை நல்லோரிடம் அறிவியுங்கள். வன்முறையற்ற அணுகுமுறையை கடைப்பிடித்து, உயர்ந்து, உங்களுடைய ஆன்மாவின் தரத்தினை மேம்படுத்துங்கள். நரித்தனத்தை மூடிவிடுங்கள். சந்தோஷமாய் ஒருவருக்கொருவர் உரையாடுங்கள். அமைதியான இல்லத்தில் வாழுங்கள். உங்களுடைய வாழ்க்கையைப் பாழாக்கிக் கொள்ளாதீர்கள். உங்களுடைய சந்ததிகளைப் பாழாக்காதீர்கள். இவ்வுலகில், பூமி முழுதும் ஆனந்தம் மட்டுமே நிறைந்துள்ள நிலையில், நீங்களும் உங்கள் வாழ்க்கையை சந்தோஷமாய் கழியுங்கள்! சுக்ல யஜுர் வேதம்.

கணவனும் மனைவியும் இனிமையான இதயங்களோடு இறைவனுக்கு பால் வார்க்கின்றார்கள். ஆண்டவனிடமிருந்து சௌபாக்கியத்தை மனதார கருதுகின்றார்கள். அவர்களுக்கு கைகொள்ளா அளவு உணவு தானிய இருப்பு அதிகமாகின்றது. அவர்கள் ஒருங்கிணைந்து விடுகின்றார்கள். அவர்களது பெருமை என்றும் குறைவதில்லை. கடவுளிடமிருந்து அவர்கள் விலகித் திரிவதில்லை. அவர்களுக்கு ஆண்டவன் கிருபையால் கிடைத்த வற்றையும் அவர்கள் மறைத்து வைப்பதில்லை. ஆகையால் அவர்களுக்கு பெரும் பாக்கியம் கிட்டிவிடுகின்றது. மகன்களும் மகள்களும் தங்கங்களாய் அருகருகிலேயே இருக்க, அவர்கள் பல்லாண்டு காலம் வாழ்கின்றார்கள். ரிக் வேதம்.

நீங்களிருவரும் ஒன்றாகவே சாப்பிடுங்கள். பொதுவாகவே அருந்துங்கள். நான் உங்களிருவரையும் ஒன்றாய் கட்டியுள்ளேன். சக்கரத்தில் மையத்தை குறிவைத்து அதன் கம்பிகள் இணைந்திருப் பதைபோல இருவரும் ஆண்டவனைப் பூஜிக்க ஒன்றிணையுங்கள். ஒரே சிந்தனையுடன் ஒரே காரணத்துக்காக நான் உங்களைப் படைத்துள்ளேன். கடவுளைப் போலவே இருங்கள், மரணமின்றி! அன்பைப் பரிமாறிக் கொள்வதில் என்றும் குறை வைத்து விடாதீர்கள். அதர்வண வேதம்.

சொர்க்கம் நோக்கி சுழித்தோடும் கடவுளின் பாதைகள் பற்பல. பாலும் வெண்ணெயும் கொண்டு வந்து சேர்த்து, அவை என்னை

நோக்கி ஆதாயங்களாய் பொழியட்டும். இதேபோல என் பணியிலும் நான் பொங்கி வென்று செல்வங்களைக் குவிக் கட்டுமாக. சக்தியையும் ஆரோக்கியத்தையும் கொடு என்ற பிரார்த் தனையோடு உனக்கு இந்த வெண்ணெயையும் மரச்சுள்ளி களையும் ஆகிருதி இடுகின்றேன், தெய்வமே. மனதார நான் சொல்லும் இந்தப் புனித துதிப்பாடல்கள், பல நூறினை வெல்வதற்காக. நிலைமாறாத மனத்துடன், வைராக்கிய பக்தியுடன், நாங்கள் எங்களுடைய துதிப்பாடல்களை எப்போதும் உனக்கு சமர்ப்பிப்போம். உன்னுடன் எப்போதும் நெருக்கமாகவே இருக்கும் நாங்கள், எதிலும் வருத்தம் கொள்ள வேண்டாம் என அருள்க. *அதர்வண வேதம்.*

வருணனும், கதிரவனும், எங்களுக்கும் எங்களுடைய குழந்தைகளுக்குமான அனைத்தையும் அருளட்டும். வாழ்க்கைப் பாதையில் பிரயாணிக்க சுகமானதாக, எப்போதும் எங்களுக்கு இனிமையான பாதையே அமையட்டும். உங்களுடைய ஆசீர்வாதங்களால், ஓ... கடவுளே, எங்களை மேலும் மேலும் காத்திடுங்கள். *ரிக் வேதம்.*

பிரபஞ்சத்தைப் படைத்த ஆண்டவன், தைரியமும் கலைகளில் வல்லமையும், இறைசக்திகளில் அன்பும் கூழாங்கல்லினைப் போல வைராக்கியமும் கொண்டதோர் ஆண்மகனை உங்களுக்குத் தரட்டும். *ரிக் வேதம்.*

இந்த தம்பதியினரை காதல் பறவைகளைப் போல இணைத்து வை, இறைவா. குழந்தைகளால் இவர்கள் சூழப்படட்டும். நீண்ட நாட்கள் இணைந்து சந்தோஷமாய் வாழட்டும். *அதர்வண வேதம்.*

நம் வீட்டில் அடுக்கி வைக்கப்பட்டிருக்கும் பொருட்களை யெல்லாம் மேகக்கடவுள் காக்கட்டும்! நன்மைகளையும் செல்வங் களையும் நமக்களித்து மேகக்கடவுள் நமக்கு சம்பத்துக்களை அருளட்டும். எல்லையற்ற செல்வங்களின் இருப்பிடமான ஆண்டவன், அனைத்து சம்பத்துக்களையும் நம் இல்லத்திலும் கொட்டுவாராக. *அதர்வண வேதம்.*

*மரணம் வரை நமக்குள் நம்பிக்கை இருக்கட்டும். சுருக்கமாய் சொல்லப்போனால், கணவன் மனைவியின் உயர்ந்தபட்ச கடமை என்றே இதனைச் சொல்ல வேண்டும். எனவே கணவனும் மனைவியும் தத்தமது கடமைகளைச் செய்து கொண்டு, பிரிந்துபோய் தனித்தனியாய் அலையாதவாறு இருக்க எப்பாடு பட்டாவது சேர்ந்தே இருக்கட்டும். மனு தர்ம சாஸ்திரங்கள்.*

*குடும்ப வாழ்க்கையில் எத்தனைதான் முழுமை இருந்தாலும், அதிலுள்ள மனைவிக்கு உயர்ந்தபட்ச நடத்தைகள் இல்லாமல் இருந்தால், அக்குடும்பம் ஒரு பூஜ்யமாகத்தான் விளங்கும். தரமான குடும்பம் ஒரு வரம் என்றும், அதன் தங்கமான பிள்ளைகள் கிடைப்பதற்கரிய பொக்கிஷங்கள் என்றும் சொல்லப்படுகின்றது. திருக்குறள்.*

*என் கர்மாக்களை செய்து முடிப்பதிலிருந்து நான் விலகவே மாட்டேன் என்று ஒரு மனிதன் சொல்வதைவிட சிறந்ததொரு வைராக்கியம் இருக்க முடியாது. திருக்குறள்.*

*அவன் சந்நியாசியாக இருக்கட்டும் அல்லது கிரஹஸ்தனாக இருக்கட்டும்... அன்பு மற்றும் வெறுப்பு ஆகிய இரண்டிலிருந்தும் விடுபட்டவனே மாபெரும் மனிதனாவான். இப்படிப்பட்டவர்களை மகாத்மாக்கள் ஜீவன்-முக்தர்கள் என்று போற்றுகின்றனர். தனது சத்தியமான 'நிஜ ஆன்மாவுடன்' சேர்ந்தே ஐக்கியமாகியிருப்பது, ஒரு பெரும் வரம். இது ஒரு நிதர்சன இறை உணர்வு. தனக்குத்தானே சத்தியமாய் ஒருவன் இருக்கும்போது அவனுக்கு அனைத்துமே தெளிவாகிவிடும். மற்றவர்களையும் தன்னைப் போலவே பாவித்து அன்பு செலுத்துவது, ஒரு தவமாகும். அதுதான் தர்மம். எங்கெங்கிலும் இருப்பது சிவம். நற்சிந்தனை.*

# விவாகம்



## கல்யாணம்

*பெண்ணுக்கு சம்பத்துக்களையும் நீண்ட வாழ்நாளையும் இப்போது தந்துள்ளது அக்னி. அவளது கணவன் ஆயிரம் பருவகாலங்களைக் கண்டு நீண்ட நாட்கள் வாழட்டும்.*

***-ரிக் வேதம்***

# சந்தோஷமான திருமணத்துக்கான அடிப்படை என்ன?

### ஸ்லோகம் 76

*சந்தோஷமான திருமணத்துக்கான முதலும் முக்கியமுமான அடிப்படை, முதிர்ச்சியான காதல். காமம் சார்ந்த மேலோட்டமான காதல் அல்ல. சுயநலமற்ற தொடர் கவனிப்பு, ஆரோக்கிய திருமண பந்தத்துக்கு தேவைப்படுகின்றது. திருமணத்தை வெற்றிகரமாக்க இருவரும் உழைப்பதே இங்கு முக்கியம்.*

### விளக்கம்

*அனைத்து கல்யாணங்களும் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட கல்யாணமாய் அமைவதில்லை என்றாலும், இவ்வாறு அமையும் கல்யாணங்களால் ஒரு தெளிவு இருக்கும். எனவே பெற்றவர்களால் நிச்சயிக்கப்படும் திருமணங்கள், இந்து கலாச்சாரத்தில் ஓர் அங்கமாகியுள்ளன.*

*அடிப்படை சமாச்சாரங்களில் ஒற்றுமையாய் இருப்பது என்று ஒரு குடும்பம் எடுத்துக் கொள்ளும் சபதத்தில், இருவரின் வெற்றி உள்ளது. இந்த அணுகுமுறை, காதல் வயப்பட்ட உடல் தேடலை பின்னுக்குத் தள்ளிவிட்டு பந்தத்தை பற்பல ஆண்டுகள் நீடித்திருக்கச் செய்யும்.*

*திருமணத்தில் நுழைய பெண்ணுக்கேற்ற வயது 18 முதல் 25 வரை. ஆணுக்கு, 21 முதல் 30 வரை.*

*திருமணத்தின் போது மாப்பிள்ளை பையன் படிப்பினை முடித்து சுயமாய் சம்பாதிக்கும் திறனை அடைந்திருந்தால், அந்த திருணமத்தின் நிலைப்புத்தன்மை மேம்பட்டதாயிருக்கும். ஆண், பெண்ணைவிட 5 வயது மூத்தவனாக இருப்பதும் இதற்கு உதவும்.*

கடமைகளைத் தட்டிக்கழிக்காமல் ஏற்றுக் கொள்ளுதல், கஷ்டமான சமயங்களைச் சந்தித்தல் ஆகியவை முதிர்ச்சியடைந்த காதலின் அங்கங்களாகும்.

தங்களது திருமண பந்தத்துக்காக உழைப்பதற்கு தம்பதியினர் தயாராய் முன்வர வேண்டும். அதுவாய் எப்படியோ நடந்துவிடும் என்றொரு எதிர்பார்ப்புப் போக்கு கூடாது.

ஒவ்வொருவரும் குறிப்பிட்ட சில கடமைகளையும் சத்தியங்களையும் நிறைவேற்றத் தவறுவதில்லை என்றொரு சாசனத்தை மாப்பிள்ளையும் மணப்பெண்ணும் இணங்கி எழுத்துபூர்வமாய் செய்து கொள்வது நல்லது.

திருமணத்தை புனிதமானதொரு சடங்காய் இருவரும் அணுகி, இருவரையுமே ஆன்மீகரீதியில் இது முன்னுக்குக் கொண்டு போகும் என்ற நம்பிக்கையில் மணமுடித்துக் கொள்ள வேண்டும்.

நம்பத்தகுந்தவராய், தூய்மையை விரும்புபவராய், குழந்தைகளை இந்து முறைப்படி சீரிய முறையில் வளர்ப்பதில் ஈடுபாடு உள்ளவராய் இருப்பவரை தெரிந்தெடுத்து துணைவராக்கிக் கொள்வது அவசியம். பிறகு வழிபாடு மற்றும் பிரார்த்தனைகளில் ஒன்றிணைந்து வருபவராகவும் துணை தேட வேண்டும்.

### வேதங்கள் சொல்கின்றன:

‘‘பரஸ்பர அன்பால் இணைக்கப்பட்டு, தியாகம், செல்வம் சேர்ப்பது போன்றவற்றுக்கு தங்களை அர்ப்பணித்துக் கொள்வதால், அழிவற்ற தெய்வத்தையே இருவரும் கௌரவிக்கின்றார்கள்.’’ ஓம் நமசிவாய.



*ஒரு பெண் தன்னுடைய புருவங்களைச் சிங்காரித்துக் கொள்கின்றாள்.*
*அவளது சகோதரி அவளுடைய உடையினை சரிசெய்கின்றாள்.*

*ஆடுகளை மேய்த்து விட்டு திரும்பவுள்ள கணவனுக்காக அவள் தயாராகி விட்டாள்.*

*அவன் ஒரு பூமாலையைக் கொண்டு வந்து*
*அவளுடைய கழுத்தினை சுற்றி சூட்டி விடுகின்றான்.*

*முதிர்ச்சியடையும் இவர்களுடைய திருமண பந்தத்துக்கு*
*வழிகாட்டியபடி சூட்சுமமாய் இருக்கின்றார், ஆண்டவன்.*

# நம் சமயத்துக்குள்ளேயேதான் நாம் திருமணம் செய்து கொள்ள வேண்டுமா?

## ஸ்லோகம் 77

*தனது கணவனுடைய சமயம் மற்றும் வாழ்க்கை முறையை அப்படியே அடியொற்றி மனைவி ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற வேண்டுகோளை முன்வைக்கின்றது பாரம்பரியம். இதனால், குடும்ப கலாச்சாரம் மற்றும் சமய வழக்கங்களை தொடர நினைக்கும் ஓர் இந்துப்பெண், அவள் சமயவழி வரும் ஆணையே துணையாய் தெரிந்தெடுப்பாள். ஓம்.*

## விளக்கம்

கணவன் மற்றும் மனைவி எனும் ஓர் உயரிய உணர்வு பரஸ்பரம் ஆன்மீகரீதியாய் மலர்வதே, திருமணத்தின் மைய நோக்கம்.

சமயத்தை விட்டு நழுவி நாம் திருமணத்தை முடிக்கும்போது, வேற்றுமையை உருவாக்கிக் கொள்கின்றோம். நமக்குள்ளும் நம் குழந்தைகளுக்குள்ளும் அபிப்ராய பேதங்களை உருவாக்கிக் கொள்கின்றோம்.

சமயம் சார்ந்து ஆழ்ந்துபோய் நம்முள் முழுமையை அடைவதற்குப் பதிலாக, இப்படிப்பட்ட திருமணங்கள் நம்மை நாம் சார்ந்துள்ள சமயத்திலிருந்தும் மதத்திலிருந்தும் மிகவும் தள்ளி வைத்து விடுகின்றன.

ஒரு திருமணம் ஆன்மீக ரீதியான நோக்கத்தினை அதன் உச்சம் வரை தர வேண்டுமானால், கணவன் மற்றும் மனைவி ஆகிய இருவரும் ஒரே கடவுள் நம்பிக்கைகளையும் சமயச் சடங்குகளையும் கொண்டிருக்க வேண்டும்.

*ஒருவருக்கொருவர் நிலவும் அவர்களுடைய ஒற்றுமை குழந்தைகளின்மீது பிரதிபலிக்கும்.*

*ஓர் ஆண் தனக்கான துணையை தெரிந்தெடுப்பது ஒரு லகுவான முடிவு மட்டுமே, ஏனென்றால் அவள் அவனை பின்தொடர்ந்து தான் போக வேண்டும்.*

*ஒரு பெண்ணுக்கு, இது மிகவும் முக்கியமான ஒரு தீர்மானமாய் போகும், ஏனென்றால் அவளுடைய ஆன்மீக, சமய மற்றும் சமூக எதிர்காலங்களை இந்த முடிவே இறுதி செய்கின்றது.*

*அவனுடைய வாழ்க்கை முறை திருமணத்தால் மாறப் போவதில்லை. ஆனால் அவளுடைய வாழ்க்கை முறை முழுதும் மாறிப்போகும்.*

*ஓர் இந்து, இந்துவல்லாத ஒருத்தரை மணமுடிக்க வேண்டு மானால், அப்பெண்ணின் கணவனுடைய கலாச்சாரத்தினை அவள் பின்தொடர வேண்டும் என்கின்றது தர்மம். எவ்வகையான சமய நம்பிக்கை பேதங்களும் இல்லாமல் பிள்ளைகளையும் அவனுடைய மதநம்பிக்கைகளின் வழியிலேயே கொண்டு போக வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது.*

*திருமணத்துக்கு முன்னாலேயே இவ்வகை நம்பிக்கைக்குத் தேவையான மாற்றங்களை செய்து கொள்ளுமாறு பெண்ணிடம் கணவன் கேட்கவும் செய்யலாம்.*

**வேதங்கள் பிரார்த்திக்கின்றன:**

*‘‘உங்கள் முடிவுகள் ஒற்றுமையாயிருக்கட்டும். உங்கள் இதயங்கள் ஒன்றியிருக்கட்டும். உங்களது ஆவிகள் ஒன்று கலந்திருக்கட்டும். ஒன்றாய், கருத்து வேற்றுமைகளற்று நீங்கள் நீண்ட நெடுநாட்களுக்கு ஜொலியுங்கள்.’’ ஓம் நமசிவாய.*



*விவாஹ ஸம்ஸ்காரம் எனப்படும் இந்துத் திருமண சடங்குகளை இரண்டு புரோகிதர்கள் நடத்தி வைக்கின்றார்கள்.*

*பெண்ணும் மாப்பிள்ளையும் கைநிறையத் தானியங்களை எடுத்து, அவை தங்களுக்குள் பொங்கி செழிக்கும் பொருட்டு, அவற்றை அக்னிக்குள் ஆகுதியாக இடுகின்றார்கள்.*

*தங்களது சமய நம்பிக்கைளுக்குள்ளேயே மணமுடித்துக் கொள்வதன் வாயிலாக, தங்களது கலாச்சாரத்தினை அவற்றின் பாரம்பரியம் கெடாமல் தங்களது குழந்தைகளும் தொடருவார்கள் என்பதை இதன் மூலம் இருவரும் உறுதி செய்து கொள்கின்றார்கள்.*

# இந்துத் திருமணங்கள் எவ்வாறு ஏற்பாடு செய்யப்படுகின்றன?

### ஸ்லோகம் 78

*பையனும் பெண்ணும் இணைவது மட்டும் கல்யாணம் கிடையாது. அவர்களுடைய குடும்பங்கள் சேர்வதும்தான் திருமணம். முக்கியமான சமாச்சாரங்களையெல்லாம் ஒதுக்கி விடாமல், இரு வீட்டு குடும்ப அங்கத்தினர்களும் பங்கெடுத்துக் கொண்டு, கல்யாணத்துக்கு தயாராகியிருக்கும் தங்களுடைய பையனுக்கும் பெண்ணுக்கும் மிகவும் உகந்த வரனைத் தேடுவார்கள். ஓம்.*

### விளக்கம்

பையனுக்கு பெண் தேடும்போதோ அல்லது பெண்ணுக்கு பையன் தேடும்போதோ, வயது, உடற்தகுதி, கல்வி, சமூக அந்தஸ்து, சமயம், நடத்தை மற்றும் தோற்றம் ஆகியவை இலக்குகளாகக் கொள்ளப்படுகின்றன.

வீட்டுப் பெரியவர்கள், தங்களுக்குள் அறிமுகமாகியிருக்கும் குடும்பங்களில் வாழ்க்கைத் துணை இருக்கிறதா என்று முதலில் தேடுவார்கள். திருமணம் எனும் பந்தத்தின் மூலம் அவர்களுடன் மேலும் நெருக்கமாய் இணையலாமா என்று எதிர்பார்ப்பார்கள்.

முரண்பாடில்லாமல் இருக்குமா என்பதற்காக தவறாமல் ஜோதிடம் கலந்தாலோசிக்கப்படும். இருந்தாலும், பையனுக்கும் பெண்ணுக்கும் ஒருவருக்கொருவர் பிடித்துப் போவதும், முழு சம்மதமும்தான் இங்கு இறுதியான தீர்மானமாக அமைய வேண்டும்.

*வலுவான ஒரு துணை பரிந்துரைக்கப்படும்போது, நண்பர்கள் மற்றும் உறவினர்கள் வாயிலாக அவரை பற்றிய மறைமுகமாக விசாரணைகள் செய்யப்படும்.*

*இந்த விசாரணைகள் சாதகமாக ஆகும்போது பெண்ணின் தகப்பனார் பையனுடைய தகப்பனாரிடம் போய் திருமணத்தினை முன்மொழிவார்.*

*இதன் அடுத்தபடியாக, இரு குடும்பங்களும் பரஸ்பரம் அறிமுகமாகி பழகிக் கொள்ள ஏதுவாக பெண் வீட்டில் சந்தித்துக் கொள்ளும். அப்போது பெண்ணும் பையனும் தத்தமது எதிர்பார்ப்புகள் பற்றி மனம்விட்டு பேசிக்கொள்ளும் சந்தர்ப்பம் தரப்படும்.*

*எல்லாம் திருப்திகரமாகவும் பொருத்தமாகவும் முடிந்தால், பையனின் தாயார், பெண்ணுக்கு, தங்கச்சங்கிலி போடுவார். அல்லது இரு குடும்பங்களுக்குள்ளும் அன்பளிப்புகள் பரிமாறிக் கொள்ளப்படும். இதுவே நிச்சய தாம்பூலம்.*

*நிச்சய தாம்பூலமாய் மலரும் இவ்வுறவு திருமணத்தில் நிறைந்து மணம் வீசும்.*

**வேதங்கள் சொல்கின்றன:**

*‘‘ஒற்றுமையாய் நாம் பிரயாணிக்கவுள்ள திருமணப் பாதை, முட்கள் அற்று, நல்பாதையாய் ஆகுக! ஆர்யமான் பகத் போன்ற தேவர்கள் நம்மை வழிநடத்தட்டும்! சொர்க்கம், நமக்கு நிரந்தரமான திருமண வாழ்க்கையை அருளட்டும்...’’ ஓம் நமசிவாய.*



*தனது புது மனைவியை பாதுகாப்பேன் என்றும் கௌரவமான வாழ்க்கைக்கு தேவையான அனைத்தையும் அவளுக்கு தருவேன் என்றும், தனது மற்றும் பெண்ணின் உறவினர்களுக்கு முன்னால் சத்தியம் செய்கின்றான் பையன்.*

*இவனுடைய சத்தியத்துக்கு சாட்சியாய் நிற்கின்றார் சிவபெருமான்.*

*பாண்டித்தியம் மிக்க சமூக மூத்தவர்களால் ஏற்பாடாகியுள்ள இந்த திருமணத்தை அவர் வாழ்த்துகின்றார்.*

# இந்துக் குடும்பத்தின் கட்டமைப்பு எத்தகையது?

**ஸ்லோகம் 79**

*இந்து மதத்தின் முக்கியமான சமூக அம்சம், கூட்டுக் குடும்பமாகும். வழக்கமாய், பற்பல தலைமுறையினர், அம்மா மற்றும் அப்பாவின் வழிகாட்டுதலில் வாழ்வதாய் இது அமைந்திருக்கும். நீட்டிக்கப்பட்ட குடும்பம் எனுமொரு பெரிய குடும்பத்தின் பகுதியே ஒவ்வொரு கூட்டுக் குடும்பமும் ஆகும். ஓம்.*

**விளக்கம்**

கூட்டுக் குடும்பம், ஒரே கூரையின் அடியில் வாழும்.

இதில், அம்மா, அப்பா, அவர்களின் பிள்ளைகள், பேரப் பிள்ளைகள், கொள்ளுப் பேரப்பிள்ளைகள், இவர்களனைவரின் மனைவியர் ஆகியோர் இருப்பார்கள்.

மேலும், பெண்கள், பேத்திகள், கொள்ளுப் பேத்திகள் ஆகியோரும், அவர்களுடைய திருமணம் வரை கூட்டுக் குடும்பத்தில் இடம்பெற்றிருப்பார்கள்.

இக்குடும்பத்தின் தலைவர், அப்பா. இவருக்கு உதவியாய் இவருடைய மனைவி.

மனைவி இல்லாதபோது, அவளால் ஊக்குவிக்கப்பட்டு வளர்க்கப்பட்ட முதல் மகன். அல்லது, அடுத்த மூத்தவர்.

அவரவர்களுடைய திறமைகளுக்கு ஏற்ப குடும்பத்தலைவன் வேலைகளை குடும்ப அங்கத்தினர்களிடையே பகிர்ந்தளிப்பார்.

*வீட்டு நடவடிக்கைகள், அன்பு, பராமரிப்பு, வந்து போவோருக்கான உபசாரம், அவர்களுக்கான அன்பளிப்புகள் போன்றவற்றை தாயார் கவனித்துக் கொள்வார்.*

*சமயம் சார்ந்த சடங்குகள் அனைத்தும் முதல் மகனின் பொறுப்பு.*

*சுயநலமற்ற பங்களிப்பாலும், குடும்பத்தில் உள்ள அங்கத்தினர்கள் ஒவ்வொருவரின் கருத்தும் முக்கியம் என்ற நிலைப்பாட்டுடனும் கூட்டுக்குடும்பம் அமைக்கப்பட்டுள்ளது.*

*ஓரிரு கூட்டுக் குடும்பங்களையும், சமூகத்தின் மூத்தவர் களையும், அவர்களுடைய வாரிசுகளையும், குடும்பத்தினுடைய மணமான பெண்களையும், அவர்களுடைய பிள்ளைகளையும், நெருக்கமான நண்பர்களையும், வியாபார தொடர்பில் நட்புள்ளவர்களையும் உள்ளடக்கியதாய் அமைக்கப்பட்டிருக்கும், நீட்டிக்கப்பட்ட குடும்பம்.*

*நீட்டிக்கப்பட்ட குடும்பத்தின் தலைவர்களாக குடும்ப குரு, பூசாரிகள், பண்டிதர்கள் இருப்பார்கள்.*

**வேதங்கள் தரும் வாழ்த்து:**

*‘‘வீட்டில் ஜொலியுங்கள். எப்போதும் பிரிந்து இருக்காதீர்கள்! நாளின் முழு நீளத்தையும் உங்களுடைய பிள்ளைகளுடனும் பேரப்பிள்ளைகளுடனும் கொண்டாடிக் கழியுங்கள். உங்கள் இதயம் குளிரும்வரை வீட்டில் ஆனந்தமாய் இருங்கள்.’’ ஓம் நமசிவாய.*



*சகோதரர்கள் மற்றும் அவரவர் தம் மனைவியருடன் ஒரே கூரைக்குள் வாழும் ஒரு கூட்டுக் குடும்பம், நல்ல மாலைப் பொழுதொன்றில் அளவளாவக் கூடுகின்றது.*

*ஒரு பெண்மணி தம்புரா மீட்டுகின்றாள். மற்றொருவள் வீணை வாசிக்கின்றாள்.*

*அடுத்தவள் இதற்கு ஒப்ப தாளமிடுகின்றாள். கூட்டுக் குடும்பங்கள் ஆதரவையும் ஆரோக்கியமான உறவுமுறைகளையும் நிச்சயப்படுத்துகின்றன.*

# திருமணப் பிரச்சினைகள் எவ்வாறு தீர்க்கப்படுகின்றன?

## ஸ்லோகம் 80

*திருமணத்தில் பிரச்சினைகள் எழும்போது, அவற்றைத் தீர்ப்பதற்கான ஆலோசனைகளுக்காக இந்துக்கள் தர்மரீதியான நூல்களைப் படிக்கின்றார்கள். குடும்பப் பெரியவர்கள் மற்றும் ஆன்மீக தலைவர்களின் ஆலோசனைகளை நாடுகின்றார்கள். ஒரு நல்ல குடும்பத்துக்கு, கணவன் அதிகாரம் கொண்டவனாகவும், மனைவி பெண்மையின் திருவுருவாகவும் இருக்க வேண்டிய தேவையுள்ளது.*

## விளக்கம்

ஒரு திருமணத்தின் வெற்றியானது, பிரச்சினைகளை இருவரும் மனம்விட்டு பேசவும், அவற்றை ஆக்கபூர்வமாக அணுகவும் கற்றுக் கொள்வதில் அடங்கியுள்ளது.

ஒருவரை மற்றொருவர் விமர்சிப்பது கட்டாயமாக தவிர்க்கப்பட வேண்டும். இது ஒரு கல்யாணத்தை மிக விரைவாக கரைத்துவிடும்.

எந்த ஒரு சூழலிலும் கணவன் மனைவியை அடிக்கக்கூடாது. அல்லது அவளிடம் வன்முறையில் ஈடுபடக் கூடாது. இதேபோல மனைவியும் கணவனை கைக்குள் போட்டுக் கொண்டு அவனை இயங்க விடாமல் பண்ணக்கூடாது.

பொறாமை கொள்ளாமல் வாழ்வதும், அதிகமான பாதுகாப்பு செலுத்தாமல் இருப்பதும் மிக முக்கியம்.

ஆனால் ஒருவர்மீது மற்றவர் முழு நம்பிக்கையுடன் இருக்க வேண்டும். அந்த நம்பிக்கைக்கு துரோகம் வந்து விடாமல் கண்காணிப்பாய் வாழ்ந்து வர வேண்டும்.

பிரச்சினைகள் ஏதேனும் இருந்தால் அவை அன்றன்றே படுக்கப் போகுமுன் தீர்க்கப்பட்டுவிட வேண்டும்.

இதையும் மீறி ஒற்றுமையின்மை நீடித்தால் பெரியவர்களின் ஆலோசனையை நாடிச் செல்ல வேண்டும்.

பரஸ்பர அர்ப்பணிப்புக்கும் புரிந்து கொள்ளுதலுக்கும், திருமணத்துக்கு முன்னால் எழுதித்தந்த சபதத்தை எடுத்து அடிக்கடி படித்துக் கொள்வது உதவியாய் அமையும்.

தானாக முன்வந்து குடும்பத்தை வழிநடத்தாமல் கணவன் இருந்தால், அவன் தனது கடமையிலிருந்து வழுவியவனாகவே கருதப்படுவான். திருமண வாழ்வில் எரிச்சலூட்டும்படி தன்னை ஒரு மனைவி முன் நிறுத்திக் கொண்டால், இதனால் அந்தக் குடும்பத்தை அவள் பலஹீனமாக்குகின்றாள் என்றே பொருள்.

நேர்மையான வழியில் கணவன் தைரியமாய் இயங்க, மனைவியின் அடக்க ஒடுக்கம் பக்க பலமாய் அமைகின்றது.

தம்பதியினர் செக்ஸ் எனப்படும் புணர்ச்சியிலும் ஆரோக்கிய மான அணுகுமுறையை அமைத்துக் கொள்ள வேண்டும். தன்னால்தான் செக்ஸை தர முடிகின்றது என்ற மமதையோ, அல்லது தண்டனை தரும் நோக்கத்துடன் புணர்ச்சியை மறுப்பதோ, அறவே செய்யக்கூடாதவை.

## வேதங்கள் சொல்கின்றன:

‘‘கருணையுடன் நடந்துக் கொள்ளுங்கள். கடுமையான காலங்களில் ஒன்றாய் திட்டமிட்டு உழையுங்கள். இனிமையாய் பேசியபடி தொடர்பிலிருங்கள். ஒரே சிந்தனையுடன், ஒன்றிணைந்திருங்கள்.’’ ஓம் நமசிவாய.



*அனைத்தையும் துறந்து விட்டதற்கான அடையாளமாய் தண்டத்தினை வைத்துக் கொண்டு, தனது குடிலில் இருக்கின்றார் ஸ்வாமிகள்.*

*தங்களது கல்யாண சவால்களைச் சுமந்து கொண்டு அவரை நாடுகின்றார்கள் ஒரு தம்பதியினர்.*

*ஸ்வாமியின் ஆலோசனையை கேட்பதற்குமுன், தனது திருமண சபதத்தை ஒருமுறை படிக்கின்றாள் அவள்.*

*எல்லாம் வல்ல இறைவன், உன் கைகளைப் பிடித்துக் கொண்டு உன்னை வழிநடத்தட்டும்! இரண்டு அஸ்வின் பறவைகளும் அவற்றின் தேரில் உன்னை வைத்து வழிநடத்தட்டும்! நீ, உன் வீட்டில், அதன் எஜமானியாக நினைத்தபடி நுழை. பேசும் பேச்சில் உரிமை என்றும் உன்னுடனிருக்கட்டும். அதிர்ஷ்டம், பெண்ணின் பக்கம் என்றென்றும் துணைநிற்கட்டும். அவளை வாழ்த்துங்கள். ரிக் வேதம்.*

*இத்திருமணத்தை ஏற்பாடு செய்து முடித்துள்ள தெய்வத்துக்கு நன்றிகள். கிளையிலிருந்து பறிக்கப்படும் வெள்ளரிப் பிஞ்சினைப் போல உன்னை எடுத்து இந்த வீட்டிலிருந்து அனுப்புகிறேன் - ஆனால் கண்காணா தூரத்துக்கு அல்ல. என் கண்படும் தூரத்துக்கே. அன்பு, குழந்தைகள், சந்தோஷம் மற்றும் செல்வம், உன் நம்பிக்கைக்கு ஏற்றபடி அமையட்டும். உன் கணவனின் தேவைகளுக்காக முழு அர்ப்பணிப்போடு வாழ்ந்து, தெய்வீகத்தை அடையும் வழியைக் காண். அதர்வண வேதம்.*

*என் வாழ்க்கையை நான் இந்த வீட்டில் நிலைநிறுத்துகிறேன். அசையாது அது நிற்கட்டும். மனதார சந்தோஷத்துடன், ஓ இல்லமே, எங்கள் மக்கள் அனைவரும் உன்னை நாடுவோம். குதிரைகள், ஆடு மாடுகள், குறைவற்ற தானிய உணவுகள், பால், வெண்ணெய் அனைத்துடனும் இங்கு நீ வாழ்வாயாக. பெரும் எதிர்காலத்துக்காக நிமிர்ந்து நில்! அதர்வண வேதம்.*

*பிராஜாபதி எங்களுக்கு ஒரு பேறினை வழங்கட்டும். இப்புனித திருமணத்தில் எங்களது இறுதிக்காலம் வரை எங்களை இணைத்து வைக்கட்டும். அபசகுனங்கள் ஏதுமின்றி, உன்னுடைய கணவனது இல்லத்துக்குள் நீ நுழை. மானுடர்கள் மற்றும் ஆடுமாடுகள் என அனைத்துக்கும் நீ வாழ்வளி. கெட்ட எண்ணங்களுடனும், கடுமையானவளாகவும், நீ உனது கணவனுக்கு இருக்காதே. கனிவாய், கதிர்வீச்சாய், மிருதுவான இதயங்கொண்டவளாய், அன்புடன் வீட்டினை வளர்த்து வா. மானுடத்துக்கும் கால்நடைக்கும் ஒருசேர இன்பம் தா. ஓ கடவுளே, வீரமான மகன்களை தந்து அவள் மனதுக்கு தெம்பு கொடு. அவளுக்கு பத்து மகன்களை தா. பதினொன்றாவதாக, அவளுடைய கணவன். ரிக் வேதம்.*

உன் மாமனார், மாமியார் மற்றும் அவனுடைய சகோதரிகளுக்கு முன்னால், நீ ஒரு ராணி போல போற்றப்படும்படி வா. உன் கணவரின் சகோதரர்களாலும் நீ ஒரு ராணி போல கருதப்படும்படியாய் நடந்து கொள். *ரிக் வேதம்.*

கடவுள் நமக்கு செல்வங்களைக் கொண்டு வருகின்றான். தினமும் சாப்பிட உணவினை அளவில்லாமல் தருகின்றான். நம் இதயங்களைக் குளிர்விக்கும் விதமாய் ராஜா போன்ற மகன்களைத் தந்துள்ளான். ஆக, பிள்ளைகளுக்கான ஒரு தகப்பனார்போல நமக்கு அவன் உள்ளான். எங்கள் சந்தோஷத்துக்காக, இறைவா, நீ எங்களுடன் தங்கி இரு. *ரிக் வேதம்.*

நம் புத்திகள் அனுசரித்தபடி செல்லட்டும். என்ன காரணத்துக்காக மற்றும் என்ன தேவைக்காக இயங்குகின்றதோ, அவற்றுக்கு ஏற்றவாறு நம் சிந்தனைகள் ஒத்து இயங்கட்டும். நம் பிரார்த்தனைகளும் வழிபாடுகளும் ஒன்றுபோல அமையட்டும். பக்தியோடு நாம் அர்ப்பணிப்பவை மாறுபாடில்லாத ஒரே வஸ்துவாக இருக்கட்டும். *ரிக் வேதம்.*

நாம் நண்பர்களாகிறோம். நான் உன்னுடைய தோழமையை அடையக் கடவது. உன் நட்பிலிருந்து நான் அறுத்தெறியப்பட வேண்டாம். என் நட்பிலிருந்து நீயும் பிடுங்கப்பட வேண்டாம். *ஹிரண்யகேஷி க்ருஹ ஸூத்ரம்.*

விலைமதிப்பற்ற ஆடை ஆபரணங்கள் போன்றவற்றை ஈன்ற மகளுக்கு அன்போடு பூட்டி, வேதத்திலும் நடத்தையிலும் சிறந்து விளங்கும் ஒரு ஆண்மகனை உளமார வரவேற்று, அவனிடம் இவளை ஒப்படைப்பது, பிரம்ம கடமை என்றாகின்றது. *மனு தர்ம சாஸ்திரம்.*

அழகு மற்றும் நல்ல மனம் ஆகிய தகுதிகளுடன், புகழும் செல்வங்களும் பெற்று, தேவைப்படும் ஆனந்தங்களையெல்லாம் தர்மவழியில் அடைந்து வாழும் தம்பதியினர், ஒரு நூற்றாண்டு வாழ்வார்கள். *மனு தர்ம சாஸ்திரம்.*

தாங்கள் நன்றாய் இருக்க வேண்டும் என நினைக்கும் தந்தையர், மகன்கள், சகோதரர்கள் மற்றும் கணவனின் சகோதரர்கள்,

*தங்களது பெண்ணை மதித்துப் போற்ற வேண்டும். எங்கு பெண்கள் போற்றப்படுகின்றார்களோ, அங்கு கடவுள் திருப்தி கொள்கின்றான். ஆனால் எங்கு பெண் மதிக்கப்படவில்லையோ அங்கு எத்தனை யாகங்கள் செய்தாலும் பலன் இருக்காது. மனு தர்ம சாஸ்திரம்.*

*பின்வரும் ஐந்து சேவைகளை செய்வதே குடும்ப வாழ்க்கையின் தலையாய கடமையாகும்: கடவுள், விருந்தாளிகள், குழந்தைகள், முன்னோர்கள் மற்றும் சுயம். குடும்ப வாழ்க்கையில் அன்பும் அறனும் நிறைந்து விட்டால், அதன் பயன் முழுதும் கிடைத்து விட்டது என்றே ஆகும். திருக்குறள்.*

*தந்தையும் தாயும் சிவபெருமான் ஆவர். அன்புள்ள சகோதரர் களும் சகோதரிகளும் சிவபெருமான் ஆவர். ஈடிணையற்ற மனையாள், சிவபெருமானே. பொக்கிஷமான பிள்ளைகள், சிவபெருமானே. ஆட்சியாளர்களும் மகாராஜாக்களும் சிவபெருமான்தான். அனைத்து கடவுளர்களும், சிவபெருமான். இந்த முழு அண்ட சராசரமுமே சிவபெருமான். நற்சிந்தனை.*

# அபத்யம்



## குழந்தைகள்

*ஓ, தெய்வமே...எங்கள் குழந்தைகளுக்கான மிகச்சிறந்த செல்வங்களை ஈட்டுத்தரும் ஒரே நபர் நீங்களே.*

*எங்கள் இல்லத்தின் இறைவனே... எங்களுக்கு ஆனந்தத்தையும் வலிமையையும் அருளுங்கள்.*

***-சுக்ல யஜுர் வேதம்***

# ஒரு திருமணத்தின் முழுமை எது?

## ஸ்லோகம் 81

*குடும்ப சந்தோஷத்துக்கான ஒரு பெரும் மூலகாரணம், குழந்தைகள். கிரஹஸ்த வாழ்வு பெருமையும் முழுமையும் அடைவது, பிள்ளைகளும் பெண்களும் பிறப்பதினால்தான். திருமணம் அப்போதுதான் குடும்பம் என்றாகின்றது. அடுத்த தலைமுறை தலைதூக்க வழி பிறக்கின்றது.*

## விளக்கம்

*கிரஹஸ்த தர்மத்தின் முழு நிறைவு, குழந்தைகளே.*

*முதல் குழந்தை பிறப்பு நிகழும்வரை அல்லது தத்தெடுக்கப்படும் வரை, திருமணம் முழுமை அடையாமலே இருக்கும்.*

*முதல் குழந்தையின் வரவு குடும்பத்தை முழுமையாக்குகின்றது.*

*பிறக்கும்போதே, அந்த தாய், தந்தை மற்றும் குழந்தையை காத்து நிற்கும் தேவர்கள் அனைவரும் அற்புதமாய் வந்து உடன் இருப்பார்கள்.*

*அவர்கள் அனைவரின் ஒருங்கிணைந்த அதிர்வுகள், வாழ்த்துக் களாய் வீட்டின் மீது பொழியும். வீட்டினை இது ஒரு கதகதப்பான இனிய இல்லமாக்கிவிடும்.*

*கணவன் மற்றும் மனைவி, தாய் மற்றும் தந்தையாக வேண்டியது அவர்களது கடமையாகும்.*

*இக்கடமை, கரு உருவாவதற்கு முன்னமேயே, பிரார்த்தனைகள், தியானம் மற்றும் ஒரு நல்ல ஆன்மாவை பூமிக்கு பிள்ளையாய் கொண்டு வர வேண்டும் என்ற ஆசை என துவங்கி விடுகின்றது.*

*அதனை நல்ல முறையில் வளர்க்க உகந்த அனைத்தையும் தரும் முயற்சியாய் பிறகு தொடரவும் செய்கின்றது.*

*பல குழந்தைகளைப் பெற்றெடுத்து வளர்ப்பது, அவர்களின் பெற்றோர்களுக்கு பெருமதிப்பாய் அமையும்.*

*பெரிய குடும்பங்களில் ஒருங்கிணைப்பு மிகுந்திருக்கும். நிலைப்புத்தன்மை சிறந்திருக்கும். தங்களால் இயன்ற வரை ஒருத்தருக்கொருத்தர் பராமரிப்பதையும் ஊக்குவிக்கும்.*

*குழந்தைப் பருவம் முதல் பருவமடையும்வரை நல்ல வகையில் உணவும் ஊக்கமும் அளித்து குழந்தைகளை கொண்டு வர வேண்டியது, பெற்றவர்களே.*

**வேதங்கள் கூறுகின்றன:**

*‘‘மகனும் மகளும் கிடைக்கப்பெற்று இவர்கள் வாழ்க்கையின் கடைசி துளி ஆனந்தம் வரை அனுபவிக்கட்டும்.’’ ஓம் நமசிவாய.*



ஒரு பெருமைக்குரிய தகப்பனார், அருகில் தனது மனைவியிருக்க,
இருவரின் குழந்தையையும் சுமந்துள்ளார்.

இது குழந்தையின் பிறந்த நாள்.

இதனை புனிதமாக்கும் வகையில் ஒரு பண்டிதர் வேதம் ஓதுகின்றார்.
மாமா,மலர்களால் குடும்பத்தை நிறைக்கின்றார்.

# பெற்றவர்களின் முக்கிய கடமைகள் யாவை?

## ஸ்லோகம் 82

*குழந்தைகளுக்கு அடிப்படைத் தேவைகளான உணவு, உடை மற்றும் இருப்பிடம் ஆகியவற்றை அளிப்பது பெற்றவர்களின் முதன்மைக் கடமையாகும். அவர்களைப் பாதுகாப்பாகவும் ஆரோக்கியமாகவும் வைத்துக் கொள்ள வேண்டியதும் அவர்களது அடிப்படைக் கடமை. தர்மவழி மற்றும் சமயம் சார்ந்த வாழ்க்கை உள்ளிட்ட கல்வியை அவர்களுக்குப் போதித்து அளிப்பது பெற்றோர்களின் அடுத்தகட்ட முக்கிய கடமை.*

## விளக்கம்

வளரும் தங்களுடைய குழந்தைகளுக்கு ஆரோக்கியத்தையும் நல்ல சூழ்நிலையையும் வழங்குவது பெற்றோர்களின் மிக முக்கியமான கடமையாகும்.

ஈன்றெடுத்த பிள்ளைகளை ஒருபோதும் ஒதுக்கலாகாது.

இவற்றை தாண்டி, தங்களையே ஒரு சிறந்த முன்னுதாரணமாக ஆக்கிக் காட்ட வேண்டியது பெற்றோர்களின் கடமையாகும்.

நல்ல நடைமுறைகள், தர்மவழி, சிறந்த குணாதிசயத்தின் பலன்கள், ஒழுக்கம் ஆகியவற்றோடு இந்து மதத்தின் பண்பாடு மற்றும் கலாச்சாரம் ஆகிய இரு பொக்கிஷங்களையும் கற்றுத் தரத் தவறிவிடக் கூடாது.

பூஜை நேரத்தில் வழிபட, மகன்களும் மகள்களும் பெற்றோர்களுடன் இணைய வேண்டும். அதில் இந்து புனித வழிமுறைகள் இடம்பெற வேண்டும்.

அனைத்து வகை போதனைகளும் பிள்ளைக்குக் கிடைக்கப் பெறச் செய்வது, பெற்றோர்களின் கடமை. செக்ஸ் என்றால் என்ன, அதன் புனிதம் யாது, திருமணம் வரை எதற்காக பிரம்மச்சரிய கற்புடன் திகழ வேண்டும் உள்ளிட்ட பெருமைகளை அவர்களுக்கு போதித்தாக வேண்டும்.

சட்டதிட்டங்களை மதிக்க பிள்ளைகள் கற்க வேண்டும். வயதில் மூத்தவர்களை மதிக்கவும் கவுரவிக்கவும் கற்க வேண்டும்.

பெற்றவர்கள் தங்களது குழந்தைகளை மனதார நேசிக்க வேண்டும். அப்படி அன்பு காட்ட அவர்களையும் பழக்க வேண்டும்.

இதற்கு மிகச் சிறந்த ஒரே வழி, பெற்றவர்கள் தாங்கள் அப்படியே வாழ்ந்து பிள்ளைகளுக்கு உதாரணமாய் நிற்பதுதான்.

**வேதங்கள் உரைக்கின்றன:**

''ஒரே சிந்தனையுடன் சொல்கிறேன்... வெறுப்பிலிருந்து விலகிவிடு. தான் ஈன்றெடுத்த கன்றுக் குட்டியின் மீது அதன் தாய்ப்பசு காட்டும் அன்பினைப் போல் ஒருவருக்கொருவர் அன்பு செலுத்துங்கள். மகன், தந்தையின்பால் கனிவாய் இருக்கட்டும். தாயின்பால் ஒரே மனதுடன் விளங்கட்டும். தனது கணவனுக்கு இனிமையாகவும் மிருதுவாகவும் இருக்கும் வார்த்தைகளை மட்டுமே மனைவி பேசட்டும்.'' ஓம் நமசிவாய.



தாயார் தனது கணவனுக்கும் பிள்ளைகளுக்கும் இரவு சாப்பாடு சமைக்கின்றாள்.
இரு சகோதரிகளும் ஒரு சகோதரனும், தங்களது பள்ளிக்கூட
வீட்டுப்பாடத்திலிருந்து தற்காலிகமாக விலகி, விளையாடுகின்றார்கள்.

கலாச்சாரம் மற்றும் பண்பாட்டின் இருப்பிடமாய் திகழும் இந்த இல்லம்,
சிவபெருமானின் இருப்பினை, தங்களது வீட்டிலும் தினசரி
நடவடிக்கைகளிலும், தினந்தோறும் கொண்டு வந்து நிலைநிறுத்துகின்றது.

# குழந்தைகளுக்கு வழிகாட்டுவதில், எத்தனை கடுமையாய் இருக்கலாம்?

## ஸ்லோகம் 83

*தங்களுடைய குழந்தைகளை தப்பான சகவாசம் மற்றும் சூழலிலிருந்து காப்பாற்றி நல்வழிப் படுத்துவதில் பெற்றவர்கள் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இதற்கு கறாராய் இருக்கலாம், ஆனால் கடுமையாகவும் சிறிய புத்தியுடனும் இருக்கக் கூடாது. அவர்கள் வளரத் தேவையான சுதந்திரத்தை அளித்தபடி, கட்டுப்பாட்டை அளிக்க வேண்டும். ஓம்.*

## விளக்கம்

குழந்தைகள் இடைவிடாது கற்கின்றன. இக்கல்வி, பெற்றவர்களால் ஜாக்கிரதையாய் வழிகாட்டப்பட வேண்டும்.

இளைய பிள்ளைகளின் கல்வி, பொழுதுபோக்கு மற்றும் சகவாசம் என அனைத்தும் கண்காணிக்கப்பட வேண்டும். அவர்களது குலத்தின் பெருமை குழந்தைகளுக்கு போதிக்கப்பட வேண்டும்.

குழந்தைகளுடைய சமயம் சார்ந்த ஞானம் அனைத்தும், பெற்றவர்களின் கைகளில்தான் உள்ளது.

படித்து முன்னேறுவதில் கடுமையாய் உழைக்க வேண்டும் என்று அவர்களுக்கு சொல்லித்தர வேண்டும். அவர்களுக்கென இயற்கையாய் அமைந்துள்ள திறமையில் பளிச்சிட, சவாலுடன் உழைக்க கற்றுத்தர வேண்டும்.

அவர்கள் பெறும் வெற்றிகளுக்காக அவர்களை பாராட்ட வேண்டும். அன்பளிப்புகள் அளிக்க வேண்டும்.

குழந்தைகளுக்கு வழிகாட்டுதல் தேவைப்படும். அவர்கள் அதனைத் தேடுவார்கள். அதனைப் பெற்றவர்களால் மட்டுமே நிஜமானதாய் தர முடியும்.

பொதுவாய் அன்பையும் ஊக்குவிப்பையும் தாயார்தான் கொடுப்பாள். தந்தையார், ஒழுக்கத்தினை திருத்துவார்.

குழந்தையின் தவறுகள் திருத்தப்படாவிட்டால், அது வயது வந்த பிறகும் தொடர்ந்து கொண்டிருக்கும்.

இருந்தாலும், அதிகபட்ச எதிர்ப்புடன் பெற்றவர்கள் இயங்கி விடாமலிருக்க அவர்கள் ஜாக்கிரதையாய் நடந்து கொள்ள வேண்டும்.

குழந்தைகளை எக்காரணம் கொண்டும் அடித்துவிடக் கூடாது. தப்பாய் அணுகலாகாது. பழிக்கக்கூடாது. பயத்திலேயே அவர்களை வைக்கக்கூடாது.

சின்ன குழந்தைகளோ அல்லது சிறுவர் கட்டத்துக்கு வந்து விட்ட வளர்ந்த பிள்ளைகளோ... அவர்களுக்கென்று கர்மங்களும் தர்மங்களும் உண்டு. அப்பருவத்தில் அவற்றை குழந்தைகளுக்கு அளிக்க பெற்றோர்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள். அவற்றை பிறகொரு காலத்தில் பெற்றவர்களுக்கு திருப்பித் தர பிள்ளைகள் கடன்பட்டிருக்கிறார்கள்.

### வேதங்கள் கோரிக்கை வைக்கின்றன:

''ஓ, மானுட நண்பர்களே... என் பிள்ளைகளை பாதுகாத்து வையுங்கள். என் கன்றுகளை காப்பாற்றிடுங்கள். ஓ, அக்னி ஆயுதமே, என்னுடைய சத்துக்களை காப்பாற்றிடு.'' ஓம் நமசிவாய.



*பெற்றவர்கள், தங்களது பெண் குழந்தையை தங்கள் இல்லத்தில் வாஞ்சையுடன் கொண்டாடுகின்றார்கள். அம்மா, அவளுடைய நெற்றியில் அழகுற முத்தமிடுகின்றாள்.*

*அப்போது அவளுடைய தந்தையார் அவளது முதுகினைத் தடவிக் கொடுத்து பாதங்கள் கூசுகின்ற வகையில் வருடுகின்றார்.*

*சந்தோஷமாகவும் பாதுகாப்பாகவும் உணரும் அக்குழந்தை, இந்நினைப்பிலேயே அற்புதமாய் வளர்ந்து விடும்.*

# அனைத்து இளம் வயதினரும் திருமணம் செய்து கொள்ள வேண்டுமா?

## ஸ்லோகம் 84

*சந்நியாச வாழ்க்கை நோக்கிய நாட்டமில்லாத அனைவரும் திருமணம் செய்து கொள்ள ஊக்குவிக்கப்பட வேண்டும். தர்மவழி நடந்து அவர்கள் நிறைவேற்ற வேண்டியவற்றை திறமையாய் முடிக்க பயிற்றுவிக்க வேண்டும். சந்நியாசியாய் உருவாக்கப்பட பிறந்துள்ள இளைய பையன்கள், அவர்களது சத்குருவின் குருகுலத்தில் சேர்க்கப்பட்டு இவ்வழியில் வளர்க்கப்பட வேண்டும்.*

## விளக்கம்

*பாரம்பரியமாய் பார்க்கப் போனால், சந்நியாச இலக்குடன் வாழும் பையன்கள் அடையாளம் காணப்பட்டு, அவர்களுடைய சத்குருவின் வழிகாட்டுதலின் பேரில் அவர்களுக்கு பிரத்தியேக பயிற்சி அளிக்கப்படும்.*

*ஆரம்பத்தில் சந்நியாசியாகவும் பிறகு ஒரு ஸ்வாமியாகவும் வளரும்படியான மகனொருவன் இருக்கும் குடும்பம், பெரும் பாக்கியம் செய்த நற்குடும்பம் என ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது.*

*பொதுவாய், கிரஹஸ்தன் எனும் பாதையில் பிரயாணிக்க தங்களைத் தாங்களே தயார் படுத்திக் கொள்ளும்படி, பிள்ளைகள் பழக்கப்படுத்தப்பட வேண்டும்.*

*ஏறத்தாழ அனைத்து ஆடவர்களும் திருமண வாழ்க்கையைத் தான் தெரிந்தெடுப்பார்கள். ஆகவே அவர்களுக்கு தொழில்நுட்ப மற்றும் தொழில்சார்ந்த பயிற்சிகள் வழங்கப்பட வேண்டும்.*

*வீட்டுக் கலாச்சாரத்தை ஒழுங்காய் கடைப்பிடிக்க பெண்கள் பழக்கப்பட வேண்டும்.*

வேதக்கலைகளில் மொத்தம் அறுபத்து நான்கு கலைகள் உள்ளன. இவையனைத்திலும் ஆடவர்களும் பெண்களும் பழக்கப் படுத்தப்பட வேண்டும்.

தந்தையாரின் தொழிலில் சிறுவயதிலிருந்தே ஆண் பிள்ளைகளுக்கு பயிற்சி தரப்படும்போது, அவனுக்கு அத்தொழிலில் பெருத்த பலன் உண்டாகி விடுகின்றது.

எதிர்காலத்து குடும்பத்தின் தாயாராக இளம் பெண்பிள்ளை உருவாவதால், தற்போதைய குடும்பத்தின் தலைவியாக இருக்கும் தாய்தான் அவளுக்கு மிகச்சிறந்த முன்னுதாரணமாக விளங்குகின்றாள்.

வெறும் உல்லாசமாய் திரியும் ஆடவரும் பெண்களும் திருமணத்தால் பெரும் லாபம் அடைய முடியாது. ஆகவே இந்த பந்தத்தில் செலுத்த வேண்டிய விசுவாசத்தினை இளம் பிள்ளைகளின் மனங்களில் ஊறும்படி போதிக்க வேண்டும். கூடவே, சமுதாயம் தரவல்ல சவால்களை எதிர்கொள்ளும் பக்குவத்தினையும் தந்துவிட வேண்டும்.

**வேதங்கள் பிரார்த்திக்கின்றன:**

''கருணை மயமான இறைவா... தெளிவு எனும் ஞானத்தை அடையவும், உன்னைப் போற்றும் மனிதனின் தெளிவிற்காகவும், நீ அன்பு ஆறாய் ஓடு. அவனை ஒரு சிறந்த தலைமுறையினனாய் ஆக்கு.'' ஓம் நமசிவாய.



*நகை வியாபாரியை அழைத்து தனது திருமணத்துக்கான நகைகளை அம்மா அப்பாவுடன் தெரிந்தெடுக்கின்றாள் இவள்.*

*தாலி, சங்கிலி, வளையல்கள், தோடுகள், மோதிரங்கள் மற்றும் பலவகை ஆபரணங்களை வாங்குகின்றாள்.*

*ஆடவன் ஒருவனுடன் தனியாய் பெண்கள் இருக்க மாட்டார்கள் ஆகவே அவளுடைய சகோதரிகளும் உடன் உள்ளார்கள்.*

# குடும்ப ஒற்றுமை எப்படிக் காக்கப்படுகின்றது?

**ஸ்லோகம் 84**

*ஒருத்தருக்கொருத்தர் தரப்படும் மதிப்பு, அன்பு மற்றும் புரிந்து கொள்ளுதல்தான் இந்துக் குடும்பங்களின் ஒற்றுமைக்கு பாறாங்கல் போன்று ஸ்திரமாய் உதவுகின்றன. சண்டை போடாமலும், விமர்சிக்காமலும், விவாதிக்காமலும் வாழ்ந்து, ஆன்மீகச் சூழலை குடும்ப அங்கத்தினர்கள் வளர்ப்பார்கள். அதில் அனைவரும் வளர்வார்கள். ஓம்.*

**விளக்கம்**

ஒருங்கிணைந்த ஒற்றுமையானதொரு கூட்டுக் குடும்பத்துக்கு, இல்லத்தினை வலுவானதாக ஆக்க வேண்டியது அவசியம்.

ஆக்கபூர்வமான நடவடிக்கைகளின் மையமாகவும், அழகும் சுத்தமும் நிறைந்ததொரு இல்லமாகவும், ஒவ்வொரு நபருக்குமான சரணாலயமாகவும் வீடு திகழ வேண்டும்.

சொத்தினைச் சேர்ப்பதற்காக பாடுபட்ட போதிலும், புத்திசாலித்தனமான குடும்பங்கள் அவர்களுக்குள்ள கட்டுக்குள் வாழும். இருப்பவற்றில் நிம்மதி கொண்டு வாழ்க்கையை இனிதே நடத்தும்.

ஒவ்வொருவருக்குள்ளுமுள்ள அனுபவங்களைப் பகிர்ந்து கொள்ளும் விதமாய் வீட்டின் நடவடிக்கைகள் திட்டமிட்டு செயல்படுத்தப்படும்.

குடும்பம் நெடுகிலும், மிருதுவான அதே சமயம் வழுவாத மதிப்பும் மரியாதையும், வரிசைக்கிரமமாக வரும் வீட்டுப் பெரியவர்களுக்கு அளிக்கப்படும்.

*சிறியவர்கள் தேவையற்று மூக்கை நுழைத்து பேசுவதிலிருந்து தள்ளி வைக்கப்படுவார்கள். அதே சமயம், பெரியவர்களும், தங்களுக்கான அதிகாரத்தினை தவறுதலாக பிரயோகிப்பதை தவிர்ப்பார்கள்.*

*வளர்ந்த பிள்ளைகள், வீட்டிலிருக்கும் சின்னக் குழந்தைகளின் பாதுகாப்பு மற்றும் பராமரிப்புக்கான பொறுப்பாவார்கள்.*

*குழந்தைகளுக்குள் உருவாகும் பிரச்சினைகள் தாய்மார்களால் தீர்க்கப்பட்டு விடும்... ஆயினும், அவை தந்தையர்களிடமிருந்து மறைக்கப்பட்டதொரு ரகசியமாய் வைக்கப்படக் கூடாது.*

*குடும்பங்களுக்குள் பிரச்சினைகள் எழும்போது அவற்றைச் சீர்படுத்தி குடும்ப ஒற்றுமையை நிலைநாட்டிவிட வேண்டிய முழுப் பொறுப்பும் குடும்ப ஆண்களின் தோள்களிலேயே உள்ளது. ஆயினும், தேவைப்பட்டால், சம்பந்தப்பட்ட எவரும் இதற்கு முன்மொழிந்துக் கொண்டு வரலாம்.*

**கிரஹஸ்தனின் வாழ்க்கை பற்றி வேதங்கள் சொல்கின்றன:**

*‘‘ஒருவருக்கொருவர் கட்டுண்டு, ஒற்றுமை குலையாமல், வெறுப்புகள் இல்லாமல் வாழ, பிரார்த்தனைகள்.’’ ஓம் நமசிவாய.*



*வீட்டு வாசலில் ஒரு குடும்பம் கூடி அமர்கின்றது.*

*இது இல்லறம் நடக்குமிடம் என்று அறிவிக்கும்*
*ஸ்வஸ்திக் சின்னம் கதவுக்கு மேலே.*

*கணவன் கவிதையொன்றை வடிக்க, அதனை வீணையில்*
*மனைவியும் மிருதங்கத்தில் மகளும் இசையாக்கி மகிழ்கின்றார்கள்.*

*நான் ஞானியரை வணங்குவதில் சம்மதம் உள்ளவன். இவர்களிட மிருந்தே அனைத்து சம்பத்துக்களும் பெறப்படுகின்றன. எங்கள் சந்ததியினரை நீங்கள் உயர் ஸ்தானத்துக்கு கொண்டு செல்லுங்கள். நாங்கள் வழிபாட்டில் ஈடுபட்டு பிரார்த்திக்கும் போது இயற்கைக்குள் கொட்டிக் கிடக்கும் அனைத்து செல்வங்களையும் நாங்கள் அடையுமாறு ஆசீர்வதியுங்கள். ரிக் வேதம்.*

*சூரிய பகவானே... நீ எங்களுடன் ஒரு நண்பனாக இருந்து, நற்சிந்தனை, நல்நோக்கு, கீழான எண்ணங்களிலிருந்து விடுதலை, பிள்ளைப் பேறு எல்லாம் தந்து கைதூக்கி விடு! ரிக் வேதம்.*

*ஒரு சகோதரர், தனது மற்ற சகோதரரை எப்போதும் வெறுக்க வேண்டாம். ஒரு சகோதரி, தனது சகோதரியைக் காயப்படுத்த வேண்டாம். காரியத்துக்காக மனத்தளவில் ஒற்றுமையாகி, இனிமையாய் ஒன்றாய் உறவாடுங்கள். அதர்வண வேதம்.*

*அனைத்து மானுடர்களின் கருணை தெய்வமே, இறைவா... உன் பெருமையை உணர்ந்து உன்னைப் போற்றிப் பாடுகின்றோம். எங்களையும் எங்களுடைய குழந்தைகளையும் கண்காணித்துக் கொண்டிருக்குமாறு உங்களைப் பிரார்த்திக்கின்றோம். எங்களுடைய மற்றும் எங்களுடைய கன்றுகளின் ஆயுசுக்குக் காவலாயிருங்கள். அதர்வண வேதம்.*

*இறைவர்களுக்கும், தந்தையருக்கும் ஆற்ற வேண்டிய கடமைகளில் எவ்விதமான முடையும் இருக்க வேண்டாம். தாய் கடவுளே. தந்தையும் கடவுளுக்கு சமமானவரே. குருவும் கடவுள் தான். வரும் விருந்தாளியும் கடவுள்தான். கிருஷ்ண யஜுர் வேதம்.*

*'இவன் மீண்டும் பிறக்க வேண்டும்' என ஆண்டவன் முடிவெடுத்து விட்டால், அவன் தனது கவனத்தை திருப்பி எந்தக் குடும்பத்தில் வைக்கின்றானோ - அது பிராமணக் குடும்பமானாலும் சரி, அல்லது ராஜ குடும்பமானாலும் சரி - அங்கு இவன் பிறப்பான். சுக்ல யஜுர் வேதம்.*

*தனது தாயை ஒருவன் மதிப்பதனால் இவ்வுலகினை வெல்கின்றான். தன் தந்தையை அவன் மதிப்பதனால் மத்திய லோகத்தை அவன் வெல்கின்றான். ஆனால் தனது குருவுக்கு*

*மரியாதையுடன் நடந்துகொண்டு அவன் கடைப்பிடிக்கும்போது அவன் பிரம்மத்தையே வெல்கின்றான். இவர்கள் மூவரையும் மதித்துப் போற்றும் ஒருவனுக்கு, இங்குள்ள அனைத்து கடமைகளும் பூர்த்தியடைந்து விடுகின்றன. மனு தர்ம சாஸ்திரம்.*

*தனது மழலையின் இனிய குரலைக் கேட்காதோர்தான் குழல், யாழ் போன்ற இசைக்கருவிகளின் ஒலியே உகந்தது என்பர். திருக்குறள்.*

*'எப்படிப்பட்ட மகனைப் பெற்றெடுத்துள்ளார்கள்...' என உலகம் தன்னை பெற்றவர்களைப் போற்றுமாறு நடந்து கொள்வது தான் ஒரு மகனின் தலையாய கடமை. திருக்குறள்.*

*நாமறிந்துள்ள பேறுகளிலேயே மிகப்பெரும் பேறு, புத்திசாலித் தனமான குழந்தையொன்றினைப் பெற்றெடுப்பதுதான். தங்களை விடவும் சிறந்த ஞானம் கொண்டு தனது பிள்ளை திகழ்வதைவிட பெற்றவர்களுக்கு கிடைத்து விடவல்ல பெருமை வேறென்ன இருக்க முடியும்? திருக்குறள்.*

*நன்றாய் கற்க. மரியாதையுடன் நடந்து கொள்க. உன் தந்தை, தாய், சகோதர சகோதரிகள், உறவினர்கள் சொல்லும் அறிவுரைகளை கேட்டு நட. பிறருக்கு மரியாதை தருவதில் உன்னை நீயே முன்னுதாரணமாய் உலகுக்கு காட்டு. நற்சிந்தனை.*

*தியானி. ஐந்தெழுத்து இறைவனின் திருநாமத்தை தியானி. சிவத்தொண்டனாகி, உவந்து பணிவிடை செய்ய நீயே முன்னுக்கு வா. தவமிருந்து வளர். இதற்கு முடிவே கிடையாது. பெற்றவர்கள் மற்றும் மற்ற உறவுகளின் அரவணைப்பில் இரு. அலைபாயும் மனத்தினை கொஞ்சம் கொஞ்சமாய் வெற்றிக் கொள். உனது வழிபாட்டினை உன்னுடைய குருநாதரின் பாதங்களில் சமர்ப்பித்துவிடு. பாவத்தை ஒதுக்கு. அனைத்தின் மீதும் அன்பும் இரக்கமும் கொள். உன் பசிக்கு ஏற்றவாறு மிதமாக சாப்பிடு. ஞானம் என்ன என்பதை பிரித்தறிந்து விட எத்தனை கஷ்டமானாலும் முயற்சி செய்தவாறு இரு. இளமையிலேயே அறிவியலையும் கலையையும் கற்றுக்கொள். கீழ்த்தரமான மற்றும் தாளவொண்ணா மனிதர்களுடன் நீ இணைந்திராதே. நல்மனிதர்களின் நட்பினை*

*எப்படியாவது போற்றிப் பாதுகாத்துக் கொள். உனக்கு எக்குறையும் கிடையாது என்று சொல்லியபடி, ஆனந்தமாக வாழ்ந்து விடு. உன் சகோதரர்களையும் அனைவரது குழந்தைகளையும் கவனித்துக் கொள். உள்ளும் புறமும் உன் வாழ்க்கை ஒன்றுபோலவே அமையட்டும். மன்னிக்கும் மனப்பக்குவம் கொண்டு, கருணை மயமாய் நீ ஆகிவிடு... இதில் பிடிமானமாய் இரு. மமதையை அழி. சந்தேகம் எழாமல் மனதை வை. பிறகு, உன் குருவின் பெருமைகளை, வாய் ஓயாமல் பேசு. நற்சிந்தனை.*

*என் தாய்க்கும் தந்தைக்குமே சந்தோஷம்! கன்றுகளுக்கும், மானுடர்களுக்கும் ஆனந்தம் சேரட்டும்! அனைத்து வாழ்த்துக் களும் கருணைகளும் எங்களுக்கு சேரட்டும்! நீண்ட காலம் நாங்கள் சூரியனைக் கண்டு வாழக் கடவது! காற்று, எங்களை நோக்கி சந்தோஷத்தை மட்டுமே வீசட்டும். கதிரவன், ஆனந்தத்தை மட்டுமே எங்களுக்குக் கொட்டட்டும். அதர்வண வேதம்.*

# மங்கள க்ரியா



உபநிடதம் ஏழு:

*புனித கலாச்சாரம்*

# போதி தந்த்ரா



## ஞானத்துக்கான வழிகள்

*நல்ல கர்மவினை விளைய, சிறப்பான, உதாரகுணமுள்ள செயல்களையே செய்யுங்கள்.*

*புண்ணியனை புகழுங்கள். புண்ணிய பூமியை சேர வேண்டுங்கள்.*

*பூமியில் பிறக்க புண்ணியம் செய்து, இங்கிருந்து இறை நிலத்தை அடைய,*
*ஒவ்வொரு மனிதனுக்கும் விதிக்கப்பட்டுள்ள கடமை இதுதான்.*

***-திருமந்திரம்***

# வாழ்க்கையின் இடையூறுகளை நாம் எப்படித் தாண்டுவது?

## ஸ்லோகம் 86

*ஒரு சிறு இலையை நமது கண்ணுக்கு நேராய் தூக்கிப்பிடித்தால் அது எப்படி சூரிய ஒளியையே மறைத்து விடுமோ, அதேபோல, கடந்த ஜென்ம கர்மங்கள் நிகழ்காலத்தை மேகமெனச் சூழ்ந்து நம்முள்ளிருக்கும் இறைமையை மறைத்து விடக்கூடும். வேத முறைகள் அல்லது தந்திர முறைகளால் இடையூறுகள் அனைத்தையும் களைந்து, உள்ளே என்றென்றும் உள்ள தேவ ஜோதியை நாம் கண்டுபிடித்து விடலாம். ஓம்.*

## விளக்கம்

ஒரு பழமையான உபநிடதம், ஆன்மீக முன்னேற்றத்துக்கான தடைகளாய், இருபது இடையூறுகளைச் சொல்கின்றது. அவை:

பசி, தாகம், சோம்பல், காமம், பேராசை, பயம், கேலி, பரபரப்பு, துடிப்பு, கெட்ட காலம், துயரம், நிர்க்கதி, கோபம், கொடூரம், ஒதுக்கப்படுதல், பொறாமை, கருமி, பெருத்த எதிர்பார்ப்பு, மரணம் மற்றும் பிறப்பு.

மற்றுமொரு தடை, மேதாவிலாசம். முறையாய் வழிப்படுத்தப் படாத மேதாவிலாசம், வெறும் டம்பமாய் அமைந்துவிடும்.

இத்தடைகளை அனுபவிக்கும்போது நமக்குள் எதிர்வினைகள் உண்டாகின்றன. அவற்றின்படி நடந்து கொள்கின்றோம். இதுவே சம்ஸ்காரா என்பதாகும். இவையே, கடந்தகால மற்றும் நிகழ்கால கர்மப்பதிவுகளாய் நம்முள் இறங்குகின்றன.

நமது சராசரி வாழ்க்கையில் வாழும்போது, இவையே நம்முடைய குணாதிசயங்களையும் இலக்குகளையும் அமைக்கின்றன.

*வாஸனா என்பது இதன் பெயர். இந்த ஜென்ம மற்றும் பூர்வ ஜென்ம வாசனையே நமது போக்கினை வடிவமைப்பதால் உருவான பெயர் இது.*

*வாஸனா சிக்கலானது. மூளையையும் புத்தியையும் மேகமாய் மூடி மறைத்து விடும் இயல்பினது.*

*இது முறையே வசப்படுத்தப்பட்டு வெளியேற்றப்பட வேண்டும்.*

*தடையற்ற வாழ்க்கையை வாழ, சிக்கலற்ற வாழ்க்கையில் இருக்க, இவற்றிலிருந்து விடுபடுவதற்கு உதவும் தந்திரங்கள் உள்ளன. ஆயுர்வேதம், ஜோதிடம், தினசரி பாராயணம், வழிபாடு, சுயநலமற்ற தர்மம் மற்றும் பற்பல யோகாக்கள் இதற்குதவும்.*

**வேதங்கள் விளக்குகின்றன:**

*''தூசி படிந்த கண்ணாடி சுத்தம் செய்யப்பட்டதும் பளபளப்பதைப் போல, உடலால் பிணைக்கப்பட்டுள்ள ஆன்மா, சத்தியமான ஆத்மன் என்பதை உள்ளூர கண்டுவிட்ட பிறகு, இறைமைக்கும் தனக்கும் வேற்றுமையில்லை என்ற ஐக்கியத்தை உணர்ந்து, வாழ்க்கையின் இலக்கினை எட்டிப்பிடித்து விடுகின்றது. துயரங்களிலிருந்து ஆத்மனுக்கு அப்போது விடுதலை கிடைத்து விடுகின்றது.'' ஓம் நமசிவாய.*



புராணங்கள், உலகினைக் காப்பதற்காக பிறந்த கடவுள் கந்தக்கடவுள் என்கின்றன.

மயில் மற்றும் சண்டைக் கோழி ஆகியனவற்றின் துணைகொண்டு,
தனது வேலாயுதத்தால் சூரபத்ம அரக்கனை சம்ஹாரம் செய்கின்றார் முருகன்.

இதேபோல நாமும் நம் வாழ்க்கைப் பாதையின் நடுவே வரும்
கலவரங்களை தைரியமாய் எதிர்கொள்ள வேண்டும்.

# இந்துக்களின் தினசரி யோகப் பயிற்சிகள் யாவை?

## ஸ்லோகம் 87

*இறைபக்தி செறிந்த இந்துக்கள் தினசரி பூஜையில் விழிப்பாக இருப்பார்கள். இதற்கு சந்தியா உபாசனா என்பது பெயர். வாடிக்கையாய் இது விடியலுக்கு முன்னமேயே நிகழும். பூஜைக்கும், ஜபத்துக்கும், தியானத்துக்கும், மந்திர உச்சாடனங் களுக்கும், பாடுவதற்கும் மிகவும் உகந்த இந்த புண்ணிய வேளைதான், தனிமனித புனித வாழ்க்கைக்கான அடித்தளம்.*

## விளக்கம்

*இரவின் ஐந்தாவது இறுதிப் பாகத்தின் போது கோடிக்கணக்கான இந்துக்கள் துயிலெழுவார்கள். குளித்து, மடித்துணி அணிந்து, திலகம் போன்ற புனித சின்னங்களை உடலில் எழுதி, சமயச் சடங்குகளை செய்ய அமைதியான மற்றும் சுத்தமானதொரு இடத்தில் உட்கார்வார்கள்.*

*பக்தி யோகத்தின் அங்கமான அர்ப்பணிப்பான பூஜை சடங்குகள், கிழக்கு அல்லது வடக்கு நோக்கி அமர்ந்து மேற்கொள்ளப்படும்.*

*துதிப்பாடல்கள், ஜபங்கள் போன்ற விஷயங்களும் இதில் இடம்பெறும்.*

*இவற்றுக்கு பிறகு வேதம் ஓதலும், தியானமும் இடம்பெறும். விடியலுக்கு ஒன்றரை மணி நேரத்துக்கு முந்தைய காலம், பிரம்ம முகூர்த்தமாகும். இப்பொழுதில், நிலா போன்ற உள்ளார்ந்த ஜோதி ரூபத்தின்மீது ஆழ்ந்து நினைவைப் பதித்து தியானம் நடைபெறும்.*

*தொடரும் நாள் முழுமைக்கும், கிடைக்கும் சந்தர்ப்பங்களில் எல்லாம் சுயநலமற்ற தொண்டுகள் செய்து கர்ம யோகத்தினை நிறைவேற்ற வேண்டும்.*

*யோகத்தின் மையக்கருவான - ஆனந்தமான, ஆக்கபூர்வ சிந்தனை கொண்ட ஒற்றுமையானதொரு வாழ்க்கையினை நடைமுறைப்படுத்துகின்றார்கள் இந்துக்கள்.*

**வேதங்கள் அறிவிக்கின்றன:**

*''புத்தி, துரிதமாய் இயங்கும் ஒருலகம். ஆகவே அது மிகவும் பிரயத்தனப்பட்டு சுத்தம் செய்யப்பட வேண்டும். ஒருவனது புத்தியில் என்ன இருக்கின்றதோ அதுவாகவே அவன் ஆகின்றான் - இது என்றும் அழியாததொரு ரகசியம்.'' ஓம் நமசிவாய.*



*காலை விடியலுக்கு முன்னால் எழுந்து கோயிலில் உள்ள சிவலிங்கத்துக்குப் பூஜைகள் செய்கிறார் பூசாரி.*

*நெய் விளக்கு எரிய, சுவரெங்கும் தேவர்கள் மற்றும் விலங்குகளின் சிற்பங்கள் அங்கு உள்ளன.*

*மரியாதை நிமித்தமாக தனது மேல் துண்டை உதறியிருக்கும் இவர், உருவமற்ற புனித லிங்கத்துக்கு பாலபிஷேகம் செய்விக்கின்றார்.*

# ஆயுர்வேதமும் ஜோதிடமும் எவ்வாறு பயன்படுத்தப்படுகின்றன?

### ஸ்லோகம் 88

*இந்துக்களுடைய வாழ்வியல் முறை, ஆயுர்வேதமாகும். இது முழுமையான, புனித, மருத்துவ இயல். ஜோதிடம் அல்லது வேத சாஸ்திரம், சரியான காலம் எது என்பதையும் எதிர்கால பலன் களையும் அறிய உதவும் இயலாகும். இரண்டுமே, சத்தானதோர் ஆக்கபூர்வ வாழ்க்கைக்கு உதவும் சிறந்த சாதனங்கள். ஓம்.*

### விளக்கம்

*அதர்வண உபவேதத்தில் உள்ளது ஆயுர்வேதம். இது வியாதிகளைத் தடுப்பது மற்றும் குணப்படுத்துவது ஆகிய இரண்டையும் விளக்கிக் கையாளுகின்றது.*

*எட்டு மருத்துவக் கலைகளின் ஆக்கம், ஆயுர்வேதம். இதிலுள்ள மந்திரங்கள், தந்திரங்கள் மற்றும் யோக வழிமுறைகள் ஆகியன, மனிதனின் - உடல்சார்ந்த, மனம் சார்ந்த மற்றும் உணர்ச்சிகள் சார்ந்த தேவைகள் அனைத்தையும் ஆன்மீக ரீதியாய் சூழ்ந்து, தீர்வளிக்கின்றன.*

*நிஜமான நிவாரண சக்தி மனித புத்தியில் உறைந்துள்ளது என்பதை போதிக்கின்றது ஆயுர்வேதம்.*

*உடலுக்கு அத்தியாவசியமான மூவகை சக்திகளை சரிவிகிதத்தில் வைத்துக் கொள்வதிலும் (தோஷம்), சத்துள்ள காய்கறி உணவி னாலும், தர்ம வழியில் வாழ்வதாலும் மற்றும் இயற்கையாய் நிவாரணம் அடைய முயல்வதாலும், ஆரோக்கியம் காக்கப்படு கின்றது.*

*இதேபோல வேத சாஸ்திரமான ஜோதிடமும் ஒவ்வோர் இந்துவின் வாழ்க்கைக்கும் அத்தியாவசியமாய் உள்ளது.*

*மாறிக்கொண்டே இயங்கும் பிரபஞ்சத்தையும் அதன் ஒருபகுதியே நாம் என்பதையும் உரக்க முழங்குகின்றது ஜோதிடம். நம் பிறப்பின்போதிருந்த நட்சத்திர மற்றும் கோள்களின் நிலைகளை வைத்து, முக்கிய நட்சத்திரங்கள் மற்றும் கோள்கள் நம்மேல் செலுத்துகின்ற ஆதிக்கத்தை ஜோதிடம் விளக்குகின்றது.*

*இந்த வாழ்க்கையில் நாம் கொண்டு வந்துள்ள நமது நல்ல மற்றும் கெட்ட கர்மவினைகளை நட்சத்திரங்களே ஆள்கின்றன என்று நன்கு தெரிந்து கொண்டு, ஒவ்வொரு முக்கிய நிகழ்ச்சிக்கும் நாம் சுபமுகூர்த்தம் எனும் நல்ல நேரத்தைத் தெரிந்தெடுத்து இயங்குகின்றோம்.*

*ஜோதிட சாஸ்திரி மற்றும் ஆயுர்வேத வைத்தியன் இல்லாமல் ஒரு ஆச்சாரமான இந்துக் குடும்பம் முழுமையாகாது.*

**வேதங்கள் போதிக்கின்றன:**

*''கோள்களும், நிலாவும், சூரியனும், ராகுவும் நமக்கு சாந்தத்தினை அருளட்டும்.'' ஓம் நமசிவாய.*



*சிறந்த மூலிகைகளைக் கொண்டு வந்து ஆயுர்வேத*
*மருத்துவர் ஒருவர் மருந்துகளைத் தயாரிக்கின்றார்.*

*ஒரு மூலிகையை அவர் எடை பார்க்கும்போது, அதனை என்ன*
*அளவுக்கு எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற அளவீட்டினை*
*அவருடைய சீடன் ஒரு சமஸ்கிருத ஸ்லோகம் பார்த்து சொல்லுகின்றான்.*

# கலை மற்றும் கலாச்சாரத்தினை இந்துக்கள் எப்படி எடுத்துக் கொண்டுள்ளனர்?

### ஸ்லோகம் 89

*இந்து மதத்தின் எப்பிரிவினரும் கலை மற்றும் கலாச்சாரத் தினைப் புனிதமாய் கருதி போற்றிப் புகழுகின்றார்கள். கலை, நாடகம் மற்றும் நடனம் ஆகியன கடவுளால் ஆட்கொள்ளப்பட்ட ரிஷிகள் பெற்றுத் தந்துள்ள ஆன்மீக அனுபவங்களாயும், கோயில் வழிபாட்டின் பிரிக்க முடியாத அங்கமாகவும், கொள்ளப் பட்டுள்ளன. ஓம்.*

### விளக்கம்

*இந்துக்களின் தர்மத்தைப் பொறுத்தமட்டில், கலையும் கலாச்சாரமும், பரிணாம வளர்ச்சி தந்துள்ள அற்புதக் கனிகள் ஆகும்.*

*படைப்புத்திறனை கலை மற்றும் நுண்கலைகளுக்குள் திணித்து, அவற்றை மேலும் மெருகூட்டி அதன் வாயிலாக குடும்பத்துக்கும் சமூகத்துக்கும் நன்மை சேர்க்க ஒவ்வோர் இந்துவும் உழைக்கின்றான்.*

*வீடு என்பது, கோயில் என்பதன் ஓர் ஆன்மீக நீட்டிப்பு.*

*இந்திய புனித இசையால் சூழப்பட்டுள்ள வீட்டினை, சமயப் படங்களும், குறியீடுகளும், சின்னங்களும் அலங்கரிக்கின்றன.*

*அறுபத்து நான்கு கலைகளிலும் பயிற்சிகள் தரப்படும் இந்துக் குழந்தைகளுக்கு, வேற்றுக் கலைகளின் தாக்கங்கள் பாதிக்காமல் தங்களது கலையை எங்ஙனம் பாதுகாக்க வேண்டும் என்பது ஆரம்பம் முதலே கற்பிக்கப்படுகின்றது.*

*மனித உறவுகளும் ஒருங்கிணைந்து ஒற்றுமையாய் அமைக்கப் பட்டு, ஒவ்வொருவரையும் மேல்நோக்கித் தரம் உயர்த்துமாறு அமைக்கப்படுகின்றது.*

*இந்துக்களின் உடையலங்காரம் அடக்கமும் மிதமானதாயும் அமைந்து, அதே சமயம் எடுப்பாயும் இருக்கும்.*

*திலகங்கள் இட்டுக் கொள்ளப்படும். தினசரி நடவடிக்கை களான தூங்கி எழுந்திருத்தல், குளியல், சமையல், உண்ணுதல், கடைகளுக்கு செல்லுதல், தூங்குதல் போன்ற அனைத்திலும் மந்திரங்கள் மனசால் ஓதப்பட்டு ஒவ்வொரு பணியும் புனிதமாய் நடைபெறும்.*

*உலக இயலிலிருந்து விடுபடும் முழு விடுதலையை வருடாந்திர திருவிழாக்களும் ஷேத்திர பயணங்களும் உண்டுபண்ணித் தரும்.*

**வேதங்கள் புகழ்கின்றன:**

*‘‘உடுக்கையும், தந்தி வாத்தியங்களும், மிருதங்க வாத்தியங் களும், இறைவனின் புகழ்பாடி ஒலிக்கட்டும்.’’ ஓம் நமசிவாய.*



பூஜை தவிர, கற்கவும் கலை வளர்க்கவும் இந்துக் கோயில்கள் மையமாய் உதவுகின்றன.

பருவகால மழைக்கு நடுவே இங்கு ஒருவர் கச்சேரி இசைக்கின்றார்.

புல்லாங்குழல், மிருதங்கம், தம்புரா உடனிசைக்க,
இறைமையின் பாவங்களோடு இவர் பாடுகின்றார்.

# பிறருக்குத் தருவதில், இந்துமதம் கொண்டுள்ள பார்வை என்ன?

### ஸ்லோகம் 90

*தர்மம், சுயநலமற்றுத் தரப்படும் ஈதல், இதுதான் தர்மவழியின் மையக்கரு. விருந்தோம்பல், அறம் மற்றும் இறைவனை நம்பி அவனுக்கு ஆதரவாய் அவன் வேலைகளை இப்பூமியில் செய்தல் போன்றவை, 'இந்த ஜென்மத்தின் கடனே ஆன்மீகப் பணி செய்து, கிடப்பது தானே ஒழிய பொருள் சார்ந்து அலைவதினால் அல்ல என்ற நம்பிக்கையில் பூக்கின்றன. ஓம்.*

### விளக்கம்

பழமையான திருக்குறளில் சொல்லப்பட்டிருப்பதைப்போல வேறெங்கிலும் தர்மத்தின் சிறப்பு சொல்லப்பட்டதில்லை. 'தரும சிந்தனைக்கு இணையாய் இவ்வுலகில் வேறு எதுவும் கிடையாது. சொர்க்கத்தில்கூட தருமத்துக்கு இணையான சீரியதாய் ஒன்று கிடையாது.' இது திருக்குறள்.

ஏழ்மையில் இருந்தாலும் தன்னால் இயன்ற தருமத்தை பண்ண ஓர் இந்து முயற்சிக்கின்றான். சுயநலமற்ற இப்பரம்பரையில், விருந்தாளிகள் கடவுளாகப் போற்றப்படுகின்றார்கள்.

நண்பர்கள், பழகியவர்கள், அந்நியர்கள் உட்பட அனைவரும், மரியாதை கலந்து தரப்படும் உபசரிப்பால் திக்குமுக்காடிப் போவார்கள்.

இங்கு, அதிக வசதியற்ற துர்லபர்களுடன் நம் வசதியை நாம் பகிர்ந்து கொள்கின்றோம்.

வயதான முதியவர்களை நாம் பராமரிக்கின்றோம்.

*அன்பளிப்புகள், பணம் மற்றும் உடைகள் தந்து ஸ்வாமிமார்களை நாம் வணங்குகின்றோம்.*

*தருமம் செய்வதையும் உதவும் மனப்பான்மையையும் நாம் வளர்க்கின்றோம். தானம் எனப் போற்றப்படும் தருமத்தை குடும்பத்துக்குள்ளும் குடும்பத்தாருக்குள்ளும், நமது சமயத்துக்குள்ளும் நாம் மனமுவந்து ஊக்கப்படுத்துகின்றோம்.*

*தஷாம பாக வ்ரத எனும் விரதத்தினை சைவ பக்திமார்க்கத்தை விடாது ஒழுகும் இந்துக்கள் பலர் கடைப்பிடிக்கின்றார்கள். இதன்படி, மாதச்சம்பளத்தில் பத்து சதவிகிதம் நம் மனம் விரும்பும் அறக்கட்டளைக்கோ அல்லது தருமத்துக்கோ தரப்படுகின்றது.*

*சனாதன தர்மத்தின் ஓர் உயர் ஒழுக்கமாகின்றது இது.*

**வேதங்கள் கெட்டிக்காரத்தனமாய் எச்சரிக்கின்றன:**

*‘‘தேவையில் இருக்கும் ஒரு நொடித்தவனுக்கு சக்தி கொண்ட வசதிமிக்கவன் தரவேண்டும். முன்னால் விரியும் வாழ்க்கை சாலையை கொஞ்சம் அவன் கவனத்தில் கொள்ளட்டும்! பணக்காரர்கள், தேரின் சக்கரங்களைபோல சுழலுகின்றார்கள். இப்போது ஒரு மனிதனுக்கு உதவவும், பிறகு வேறொருவனுக்கு உதவவும்!’’ ஓம் நமசிவாய.*



*கம்பளி நெய்யும் தொழிலை செய்யும் ஒருவனுடைய வீட்டினை, ஒட்டுத்துணி இல்லாத இருவர் தஞ்சமடைகின்றார்கள்.*

*நேசனின் அன்றைய தொழில் முடிந்து விட்டது.*

*அவனே ஏழை ஆயினும், புதிதாக நெய்திருந்த வேட்டியை எடுத்துக் கொண்டு வருகின்றான் அவன்.*

*இவ்வாறான சுயநலமற்ற தருமத்தால் சிவபெருமானின் பாதங்களையே ஜெயித்து விட்டதாய் அர்த்தம் உள்ளது.*

கலைச்சாரத்தின் ஆண்டவனும், மனிதர்களுடன் இருக்கும் போதே ஞானம் தரும் கடவுளும், அக்னி பகவானும், அறநெறி பேச மொழி தந்துள்ள இறைவனும், எங்களை வாழ்த்த வரட்டும். எங்கள் நெஞ்சங்களில் ஒளிகூட்ட வரட்டும். *ரிக் வேதம்.*

முட்டாள் மனிதன் தேவையில்லாமல் உணவினைச் சேர்க்கின்றான். சத்தியமாய் சொல்கிறேன், இப்படி தனக்கென சேமிப்பது அவனுடைய அழிவுக்குத்தான்! தனது தோழர்களுக்கோ உறவினர் களுக்கோ இல்லாமல் தனக்கென மட்டுமே சேர்க்கின்றான் அவன். தான் மட்டும் சாப்பிடும் அவன், பாவத்தில் சேர்கின்றான். விவசாயி பசி போக்க உதவுகின்றான். பாதிரியார் உபதேசித்து புண்ணியம் அடைகின்றார். இங்ஙனம் உதவும் நண்பனே சிறந்தவன். *ரிக் வேதம்.*

மனிதன் செய்யும் கலைப்படைப்புகளுக்கு ஷில்பனி என்று பெயர். இவை இறை வடிவங்களின் பிரதி பிம்பங்களே. தெய்வ அதிர்வுகளின் உதவியால், பிரதி பிம்பம் அளந்தளந்து அமைகின்றது. *ரிக் வேதம்.*

ஐந்து பெரும் தியாகங்கள் உள்ளன. இவை ஐந்து வகையான சடங்குகளாகும்: அனைத்து உயிரினங்களுக்கும் செய்யும் தியாகம், மனிதர்களுக்காக செய்யும் தியாகம், மூதாதையர்களுக்கு செய்யும் தியாகம், கடவுளர்களுக்கு செய்யும் தியாகம் மற்றும் பிரம்மத்தினை உணர்ந்துள்ளோருக்கு செய்யும் தியாகம். *கிருஷ்ண யஜுர் வேதம்.*

யோகம் பழக, அமைதியான ஓரிடத்தைக் கண்டுபிடித்து அங்கு சென்று விடுங்கள். காற்றிலிருந்து அகன்றிருக்கும், சமதளமாயும் சுத்தமாயும் இருக்கும், குப்பைகள் அற்றிருக்கும், அசுத்தங்கள் இல்லாமல் இருக்கும் பகுதியாய் தெரிந்தெடுங்கள். அங்கு ஓடையின் சலசலப்பும், பிரதேசத்தின் அழகும், உங்கள் சிந்தனையை ஆழ்மனத்துக்கு அனுப்ப உதவிகரமாய் இருக்கட்டும். *கிருஷ்ண யஜுர் வேதம்.*

லகுத்தன்மை, ஆரோக்கியம், ஸ்திரத்தன்மை, நிறத்தில் பொலிவு, அழகாகி விட்ட குரல், நறுமணம் கமழும் உடல் - இவையெல்லாம் யோகா முறையினைச் சிறந்து பழகி முன்னேறும்போது கிடைக்கவல்லவை என்கிறார்கள். *கிருஷ்ண யஜுர் வேதம்.*

வாசனா எனப்படும் வாசனை இருவகையாகின்றது. சுத்தமானது. அசுத்தமானது. நல்ல வாசனையால் வழிகாட்டப்படுபவர்கள், சீக்கிரத்திலேயே 'எனது நிலைமையை' எய்தி விடுகின்றார்கள். ஆனால் பூர்வ ஜென்ம பாவங்கள் அசுத்தங்களாய் ஒட்டிக் கொண்டிருப்போருக்கு, ஆபத்து நேர்கின்றது. அவை, தர்மப் பிரயத்தனங்கள் பல செய்து கழிக்கப்பட வேண்டும். *சுக்ல யஜூர் வேதம்.*

நமக்கு கருணை மிக்கதாய் நட்சத்திரங்களும் நட்சத்திர மண்டலங்களும் திகழட்டும். நம்மைத் தாக்கும் உயிர்க்கொல்லி நோய்களும் நமக்குக் கருணையாய் இருக்கட்டும். சூரியனும், நிலவும், அந்த இரண்டு பாம்புகளும் நம்மிடம் கருணை யோடிருக்கட்டும். சக்திமிகு ருத்ர கணங்களும் மரணமும் நம்மீது கருணை காட்டட்டும். *அதர்வண வேதம்.*

தியாகங்களும், இறையாண்மையும், மனமார்ந்த அன்பளிப்புகளும் தவிர்க்கப்படக் கூடாதவை. செய்ய வேண்டியவை. இவைதான் நம் ஆன்மாவின் அழுக்குகளைக் களைபவை. ஆனால் இந்த சேவைகளும் அர்ஜுனா, மனத்தின் தூய நிலையில் நின்று செய்ய வேண்டியவையாம். எவ்வித மறுபலனும் எதிர்பாராமல் செய்ய வேண்டியவை. இதுவே என் இறுதி வார்த்தை. *பகவத் கீதை.*

பூஜையின்போது ஒரு பசும் இலையைச் சமர்ப்பிப்பது நம் அனைவருக்குமே சுலபமானதாகும். ஒரு பிடி உணவினை பசுவுக்கு அளிப்பது நம் அனைவருக்குமே சிறந்தது. சாப்பிட உட்காருமுன் ஒரு கவளத்தை எடுத்து தனியாய் வைத்து விடுவதும் சுலபமானதே. மற்றவர்களிடம் இனிய வார்த்தைகளை பேசுவதுகூட நமக்கு மிக சுலபமானதுதான். *திருமந்திரம்.*

அது சூரியனாகட்டும், சந்திரனாகட்டும்... செவ்வாயோ, புதனோ வெள்ளியோ ஆகட்டும்... சுக்கிரனோ சனியோ அல்லது அந்த இரு பாம்புகளோ...! எல்லா நட்சத்திரங்களும் கோள்களும் நமக்கு நல்லவையே. சிவனடியார்களுக்கு இவையனைத்தும் நன்மையையே செய்யும். *திருமுறை.*

சத்தியத்தைக் கொண்டு உழுங்கள். ஞானத்தேடல் எனும் விதையினை நடுங்கள். தப்பான களைகளைக் களைந்தெறியுங்கள். பொறுமை எனும் நீர்ப்பாசனம் கொண்டு புத்தியைச் செழிப் பாக்குங்கள். சுய ஆலோசனை பண்ணி உங்களை நீங்களே கண்காணியுங்கள். தர்ம நடத்தை மற்றும் தர்ம சட்டம் ஆகியன கொண்டு ஒரு புனித தடுப்புச் சுவரினை உருவாக்கிக் கொள்ளுங்கள். நீங்கள் சீக்கிரத்திலேயே சிவனின் கருணை எனும் சிவானந்த நிலைமையினை அடைவீர்கள். திருமுறை.

நீங்கள் உயிர் வாழத் தேவையான அளவுக்கு சராசரியாய், மிகச் சராசரியாய் சாப்பிடுங்கள். புத்தியை பகுத்தறிய எப்போதும் சற்று நேரம் ஒதுக்கி விடுங்கள். இளமையாய் இருக்கும்போது அறிவியலும் கலைகளையும் படித்து விடுங்கள். சின்ன புத்தி கொண்டோருடன் இணைந்திருக்காதீர்கள். நன்கு பாண்டித்தியம் பெற்றோரின் நட்பினைத் தெரிந்தெடுத்து அது விட்டுவிடாமல் பாதுகாத்துக் கொள்ளுங்கள். நீங்கள் எதிலும் குறைந்தவர் கிடையாது என்று சொல்லிக் கொண்டே சந்தோஷத்திலேயே இருங்கள். உங்கள் சகோதரர்கள் மற்றும் குழந்தைச் செல்வங்களை எல்லாம் கவனித்துக் கொள்ளுங்கள். உள்ளும் புறமும் உங்களது வாழ்க்கை ஒரே மாதிரியாய் இருக்கும்படி செய்யுங்கள். நற்சிந்தனை.

# சம்ஸ்காரம்



## புனிதச் சடங்குகள்

*தினங்கள் ஓர் ஒழுங்குடன் தொடர்ந்து வருவதைப்போல,*
*பருவகாலங்கள் ஒன்றுக்கடுத்து ஒன்றாய் சீராய் தொடர்வதை போல,*
*எங்களைக் காக்கும் இறைவா... மூதாதையரின் வழியை விட்டு அகலாதபடி*
*எங்களுடைய இளையவர்களையும் அவர்தம் வாழ்க்கையையும் சீராக்கித்தா.*

***-ரிக் வேதம்***

# வாழ்க்கைப் பயணத்தில், இந்துக்களின் சடங்குகள் என்னென்ன?

### ஸ்லோகம் 91

*வாழ்க்கையின் முக்கியமான கட்டங்களை இந்துக்கள் புனிதச் சடங்குகளால் கொண்டாடுகின்றார்கள். இவை வாழ்க்கையின் சடங்குகள் ஆகின்றன. அடியாழத்து மனத்தின் திருப்திக்கும், குடும்ப மற்றும் சமூகத்தவர்களை ஊக்குவிக்கவும், இறைமையின் ஆசீர்வாதங்களை உள்ளுக்குள் எழுப்பவும் இந்த சம்ஸ்காரங்கள் அடிகோலுகின்றன. ஓம்.*

### விளக்கம்

இந்துக்களுக்கு வாழ்க்கை என்பதே ஒரு புனிதப் பிரயாணம். இதில், உடல் மற்றும் உணர்வுபூர்வ மாற்றங்கள் நேரும் ஒவ்வொரு மைல்கல் தருணங்களும், புனிதச் சடங்குகளால் நீராட்டப்படுகின்றன.

அப்போதெல்லாம் குடும்பத்தினர்களும் நண்பர்களும் நெருங்கி வந்து ஆதரவும், ஊக்கமும், அறிவுரைகளும் தந்து இணைவார்கள்.

சடங்குகளின்போது குடும்ப ஷேமத்துக்கும் பாதுகாப்புக்கும் மந்திரங்கள் ஓதப்படும். குடும்ப அங்கத்தினர்களும் பண்டிதர்களும் வேதம் சார்ந்த சடங்குகள் மேற்கொண்டு, தங்களுடைய ஆன்மீக மற்றும் குடும்ப சுபிட்சத்துக்காக ஆண்டவனைத் தட்டியெழுப்புவார்கள்.

வகைவகையான சடங்குகள் உள்ளன. கருவுற்றதிலிருந்து கட்டையேறும் வரை சடங்குகள் உள்ளன.

இவை ஒவ்வொன்றும் நெறிமுறையுடன் கடைப்பிடிக்கப்படும் போது, ஒவ்வொரு சடங்கிலும் ஒரு புனிதத்தினை நம் ஆன்மா

*கண்டுபிடித்து அவற்றைத் தனக்குத்தானே படிப்படியாய் விளங்கிக் கொள்கின்றது. கடவுள் படைப்பின் ரகசியம் மெல்ல கண்முன் விரிகின்றது. இது, ஆன்மீக வாழ்க்கைப் பாதையை வலுவாக்கி, இந்து மதத்தின் கலாச்சாரத்தையும் பேணிக் காக்க உதவுகின்றது.*

*முக்கியமான சடங்குகளாய், பூப்படைதல், கருவுற்ற விழா, பிரசவம், பெயர் வைத்தல், மொட்டையடித்தல், முதல் அன்னம் அளித்தல், காது குத்தல், முதன்முறையாய் படிக்க வைத்தல், திருமணம், முதியவரானதன் கடமைகள் மற்றும் இறுதிச் சடங்குகள் ஆகியன உள்ளன.*

**புனித வேதங்கள் முழங்குகின்றன:**

*‘‘அந்த ஒரே தலைவனிடமிருந்தே பக்திப் பாடல்கள் எழுகின்றன. சடங்குகளும், தியாகங்களும், ஆகுதிகளும், பலிகளும் பிறக்கின்றன. அவனிடமிருந்தே வருடங்களும், பளபளக்கும் நிலாவும், பிரகாசிக்கும் சூரியனும் வருகின்றன.’’ ஓம் நமசிவாய.*



*வாழ்க்கைப் பிரயாணத்தில் ஜனனம் முதல் மரணம் வரை நிகழும் மாற்றங்களைக் குறித்துக் காட்டுகின்றன புனிதச் சடங்குகள்.*

*மையத்தில், பூணூல் சடங்கு முடிந்ததும் சிறுவன் படிக்கின்றான்.*

*கடிகாரச் சுற்றில் மேலிருந்து: முதல் பால் தருதல், மொட்டையடித்தல், அந்திமச் சடங்குகள், மரணப் படுக்கை மற்றும் திருமணம்.*

# குழந்தைப் பிராயத்துக்கான சடங்குகள் யாவை?

### ஸ்லோகம் 92

*குழந்தை வயதில் செய்ய வேண்டிய அத்தியாவசியமான சடங்குகளாக உள்ளவை: பெயர் சூட்டும் விழாவான நாம-கரணம். மொட்டையடித்தலான சூடாகரணம். முதன்முதலாய் உணவினை தரும், அன்ன ப்ரஸன்னம். காது குத்தும் விழாவான கர்ணவேதம். முறையாய் படிக்க ஆரம்பிக்கும், வித்யாரம்பம். ஓம்.*

### விளக்கம்

*குழந்தைகளின் புனிதத்தன்மையையும், சிறந்த ஆன்மீக வழியில் அது வளர்வதற்கு உள்ள சாத்தியக்கூறுகளையும், சம்ஸ்காரங்கள் எடுத்துரைக்கின்றன.*

*குழந்தை பிறந்து 11 முதல் 41 நாட்களுக்குள் பெயர் சூட்டும் விழாவான நாமகரணம் இடம்பெறுகின்றது. இது வீட்டிலோ கோயிலிலோ நடத்தப்படும்.*

*ஜோதிட சாஸ்திரப்படி தெரிந்தெடுக்கப்பட்ட குழந்தையின் பெயர், அதன் வலது காதில், குழந்தையின் தகப்பனாரால் சொல்லப்படும். இந்துத்துவத்தில் குழந்தை முறைப்படி நுழைவதை இது உறுதி செய்கின்றது.*

*குழந்தை பிறந்த முப்பத்தியோராவது நாள் முதல் நான்கு வயதுக்குள், சூடாகரணம் எனப்படும் மொட்டையடிக்கும் வைபவம் நடத்தப்படுகின்றது. இது கோயிலிலேயே இடம்பெறும்.*

*குழந்தை முதன்முதலில் எடுத்துக் கொள்ளும் திடப்பொருளைக் கொண்டாடுகின்றது, அன்ன ப்ரஸன்னம். குழந்தையின் அப்பா*

*அல்லது குடும்ப குருவினால், இனிப்புப் பொருள் முதன்முதலாய் குழந்தைக்கு அளிக்கப்படுகின்றது.*

*ஆண் குழந்தையானாலும், பெண் குழந்தையானாலும், அதன் முதல், மூன்றாவது அல்லது ஐந்தாவது வயதில், கர்ணவேதனம் எனப்படும் காதுகுத்துக் கல்யாணம் நடத்தப்படும். ஆயுள் ஆரோக்கியத்துடன் குழந்தை வாழ இது செய்யப்படுகின்றது. தங்கத்தால் ஆன இரு தோடுகள், சங்கிலிகள், வளையல்கள் ஆகியன காது குத்தப்படும் குழந்தைக்கு அணிவித்து அழகு பார்க்கப்படும்.*

*முறையான கல்வி போதிப்பினை துவங்கி வைக்கும் சடங்காகின்றது, வித்யாரம்பம். அரிசியும் நெல்லும் தூவப்பட்ட தட்டில், தனது முதல் அட்சரத்தை குழந்தை எழுதும் விழா இது.*

**வேதங்கள் சொல்கின்றன:**

*“எங்கும் எதிலும் அதிர்ந்து நகரும் சக்தி எதுவோ, அதுவே சிவன் என்றறி.” நமசிவாய.*



*மேலே, அன்ன ப்ரஸன்னம் எனும் சடங்கில், தனது குழந்தைக்கு இனிப்பு பலகாரத்தை அளிக்கின்றாள் அதன் தாய்.*

*வீட்டிலேயே இடம்பெறும் இச்சடங்கில், ஒரு யானையை தனக்கென சொந்தமாய் வைத்திருக்கும் அளவுக்கு அவள் சொத்துள்ளவள்! இரு வருடங்கள் கழிந்த பிறகு, அவளும் அவளுடைய கணவனும் ஒன்றிணைந்து தங்களது குழந்தைக்கு காது குத்துகின்றார்கள்.*

*இதனை பார்க்கிறார் ஹனுமன்.*

# வயது வந்த காலத்துக்கான சடங்குகள் யாவை?

## ஸ்லோகம் 93

*வயது வந்த இளைஞர்களுக்கான மிகவும் முக்கியமான கடமையாக, திருமணச் சடங்கான விவாஹ சம்ஸ்காரா உள்ளது. இதற்கு முன் இடம்பெறும் நிச்சய தாம்பூல உறுதிமொழியும் முக்கியமானதாகும். ஓர் ஆணோ அல்லது ஒரு பெண்ணோ பருவமெய்துவதையும் வீட்டளவில் சிறந்ததொரு சடங்காய் அனுசரிக்கப்படுகின்றது. ஓம்*

## விளக்கம்

*பூப்பெய்துவது ஆணுக்கும் பெண்ணுக்கும் நடக்கும் ஓர் இயற்கை இயக்கம்.*

*ஒரு பெண் முதன்முதலாய் தூரமாவது ரிது காலா என்ற சடங்காகவும், இதுவே ஓர் இளைய ஆணுக்கு கேஷாந்த காலா என்று முதன்முதலாய் நடைபெறும் மீசை மழிக்கும் சடங்காகவும் நடத்தப்படுகின்றது.*

*சம்பந்தப்பட்ட இளைஞருக்கு புதுத் துணிகளும் நகைகளும் தந்து அணிவிக்கப்படும். இதனால், ஆனந்தமாக அந்த இளைஞர் இளைய சமூகத்துக்குள் ஏற்றுக்கொள்ளப்படுகின்றார்.*

*பெண்களுக்கு, அவளுக்கான முதல் புடவையும், ஆணுக்கு, அவனுக்கான முதல் சவர செட்டும் தரப்படும்.*

*திருமணம் வரை கற்பின் புனிதத்துவம் காக்கப்படும் என்ற வாக்குறுதியினை அந்த இளைஞர் எடுத்துக் கொள்வதே இச்சடங்குகளின் நோக்கமாகும்.*

*இதற்கு அடுத்து வரும் முக்கிய சடங்கு, வாக்தானா எனப்படும் நிச்சய தாம்பூலமாகும். இதில், பெற்றவர்களின் சம்மதத்துடன், இளைய ஆணும் பெண்ணும் திருமண பந்தத்துக்காக நிச்சயிக்கப் படுவார்கள். புத்தாடைகளும் நகைகளும் இருவருக்கும் அளிக்கப்படும்.*

*இந்த சடங்கினை அடிப்படையாய் வைத்து, அந்த இளைஞர்களும் மற்றும் அவர்தம் குடும்பத்தினரும், எதிர்காலத்தில் ஒருங்கிணைந்து செயல்படுவது பற்றி திட்டமிடுவார்கள்.*

*விவாஹா எனப்படும் திருமணத்தில், கடவுளர்களின் சாட்சிக்கு முன்னால் எடுத்து வைக்கப்படும் ஏழு அடிகளும், பெண்ணின் கழுத்தில் கட்டப்படும் மங்கள நாணான தாலியும், இருவரையும் கணவன்-மனைவி என்று பிணைத்து வைத்துவிடும்.*

*இச்சடங்கு கோயிலிலோ அல்லது மண்டபத்திலோ புனித அக்னியால் வளர்க்கப்படும் ஹோமக் குண்டத்துக்கு முன்னால் நடத்தப்படும். நீண்டதொரு விழாபோல விவாகம் இடம்பெறும்.*

**கிரஹ சூத்திரங்கள் உரைக்கின்றன:**

*''முதல் அடி சக்திக்கு. இரு அடிகள், வீரியத்துக்கு. மூன்று அடிகள், வளத்துக்கு. நான்கு அடிகள், சந்தோஷத்துக்கு. ஐந்து அடிகள், கால்நடை செல்வங்களுக்கு. ஆறு அடிகள் பருவகாலங்களுக்கு. ஏழு அடிகள், நட்புக்கு.'' ஓம் நமசிவாய.*



*விவாஹ ஸம்ஸ்கார விழாவில், ஓர் ஆணும் பெண்ணும்*
*திருமணம் செய்து கொள்கின்றார்கள்.*

*ஒரு புரோகிதர் வேதங்களை ஓதுகின்றார்.*
*மற்றொருவர் புனித அக்னிக்கு நெய் ஊற்றுகின்றார்.*

*அவளது கையை அவன் பிடித்தபடி, அக்னியை சுற்றி ஏழு அடிகள்*
*எடுத்து வைத்து அவர்கள் வலம் வருகின்றார்கள்.*

*அவர்களை வழிகாட்டி நடத்த பின்னிருந்தபடி தெய்வங்கள் ஆசீர்வதிக்கின்றார்கள்.*

## கர்ப்ப காலத்துச் சடங்குகள் யாவை?

### ஸ்லோகம் 94

*கர்ப்ப-தானா எனப்படும் கர்ப்பம் தரிப்பதற்கான உரிமை, முதலாவதாக வருகின்றது. மூன்றாம் மாதத்து வாழ்த்துக்கள், புன்ஸவன என்று அடுத்து வருகின்றது. பிரசவத்துக்காக பிறந்தகம் செல்லும் சீமந்தோண்ணயம் அடுத்தும், புத்தம்புதுக் குழந்தையை வரவேற்கும் ஜாதகர்மா இதற்கடுத்தும் வருகின்றன. ஓம்.*

### விளக்கம்

*கர்ப்பம் உருவாதல், குழந்தையை சுமப்பதில் உள்ள கடுமையான கட்டங்கள் மற்றும் பிரசவம் ஆகிய அனைத்துமே கணவனால் தனிப்பட்ட முறையில் முன்னின்று நடத்தப்படும் புனிதச் சடங்குகளாய் வழிவகை செய்யப்பட்டுள்ளன.*

*கர்ப்பத்தை உருவாக்கும் கர்ப்ப-தானா எனும் நிலை, உடலுறவு என்று முன்னிறுத்தப்படுகின்றது. பிரார்த்தனை, மந்திர ஜபம் மற்றும் இறைவனை துதித்தெழுப்புதல் போன்றவற்றால், ஓர் உயர்ந்த ஆத்மாவை இந்த மண்ணுக்குக் கொண்டு வரும் குறிக்கோளை மட்டுமே கொண்டு புணர்ச்சி இடம்பெறுகின்றது.*

*கருவில் புதிதாய் உயிரொன்று உண்டான பிறகு புன்ஸவன சடங்கு இடம்பெறும். தாய்க்கும் சேய்க்கும் எந்தத் தீங்கும் நேராமல் சுகமாய் பிரசவம் நடந்தேற பிரார்த்தனைகள் இச்சடங்கில் உண்டு.*

*சீமந்தோண்ணயன சடங்கு, நான்கு மாத கர்ப்பம் முதல் ஏழு மாத கர்ப்பம் வரை இடம்பெறும். இதில் கணவன் தனிமையில், மனைவியின் கூந்தலைக் கோதி அன்பு வார்த்தைகள் பேசி, அவளது அழகினை புகழ்ந்து காதுகளில் சொல்லி, அவனது ஆதரவும்*

*பாதுகாப்பும் என்றும் உண்டு என்பதற்காக நகைகள் உள்ளிட்ட அன்பளிப்புகள் வழங்கி, ஆசையாய் நடந்து கொள்வான்.*

*ஜாதகர்மா நிலையில், புதிதாய் பூமி வரும் குழந்தையை அதன் தகப்பனார் வரவேற்பார். அதற்கு தேனும் நல்ல வெண்ணெயும் அளித்து, நீண்ட ஆயுசுக்கும் கல்விக்கும் திறமைக்கும் பிரார்த்தனைகள் செய்து கொள்வார் அவர்.*

**வேதங்கள் கூறுகின்றன:**

*''எந்த ஆன்மாவில் பிரார்த்தனைகளும் இசையும், நல்லொழுக்கமும் அழகாய் பொருந்தியுள்ளனவோ - சக்கரத்துக்கு உதவும் அச்சாணி போல எந்தவொரு ஆன்மா அனைத்தையும் ஒருங்கிணைத்து உள்ளதோ - அந்த ஆன்மா எனக்கு குழந்தையாய் அனுப்பப்படட்டும்.'' ஓம் நமசிவாய.*



*ஓர் ஆணும் பெண்ணும் குழந்தையை உருவாக்கத் தயாராகின்றார்கள்.*

*அவர்களுடைய புனிதமான தனியறையில், புணர்வதற்கு முன் தங்களைத் தாங்களே சுத்தம் செய்து கொள்கின்றார்கள் தம்பதிகள்.*

*உயர்ந்ததோர் ஆன்மாவை தங்கள் வாரிசாய் ஈர்க்கும் வண்ணம், சிவபெருமானை ஒன்றாய் ஒருமனதாய் பிரார்த்திக்கின்றார்கள்.*

# வயதாகும்போது, முக்கிய கட்டங்களுக்கான சடங்குகள் உள்ளனவா?

**ஸ்லோகம் 95**

*ஆலோசனைகளும் அறிவுரைகளும் கூறவல்ல கட்டத்துக்கு 48வது வயதில் நுழைவது. அறுபதாவது வயதில் நிகழ்த்தப்படும் அறுபதாவது திருமண வைபவம். 72 வயதில் உலகினையே துறந்து வாழத் துணிவது. இவையெல்லாம் முக்கியமான சடங்குகளாகக் கொள்ளலாம். இறுதியாய் மரணிப்பது, மரணம் எனும் வழியே உருமாறுவதைக் குறிக்கின்றது. ஓம்.*

**விளக்கம்**

*இந்து மதம், மூத்தவர்களை மதித்து அவர்களை பாதுகாக்கின்றது. அவர்களது அனுபவத்தை மதித்து ஆலோசனை பெற அது தவறுவதில்லை.*

*48 வயது நிறைவுறும்போது, வானப்ரஸ்த ஆஸ்ரமம் நுழைவது குறிக்கப்படுகின்றது. இது, சில சமூகத்தினரால் முக்கிய சடங்காய் அனுஷ்டிக்கப்படுகின்றது.*

*அறுபதாவது வயது துவக்கத்தில், கணவனும் மனைவியும், அவர்களது திருமணத்தின்போது எடுத்துக்கொள்ளப்பட்ட வாக்குறுதியினை மீண்டுமொரு முறை உறுதி செய்து கொள்ளும், சஷ்டியப்த பூர்த்தி கொண்டாடப்படுகின்றது.*

*தானாக தன்னை சமுதாயத்திலிருந்து விலக்கிக் கொள்ளுவதை, வயது 72ன் துவக்கம் குறிக்கும். இதுதான் சந்நியாச ஆஸ்ரமம் எனப்படுகின்றது. இது சில சமயங்களில் சடங்கு நடத்தி ஏற்றுக் கொள்ளப்படுகின்றது. ஆனால் இது ஒருபோதும் சந்நியாச தீக்ஷையுடன் இணைத்துக் குழப்பிக் கொள்ளப்படுவது கிடையாது.*

*அந்தியேஷ்டி எனப்படும் இறுதிச்சடங்குகள், ஒரு புனிதச் சடங்காக, வாத்தியார் ஒருவரின் துணைகொண்டு நடத்தப்படும்.*

*மரணமடைந்தவரின் ஆன்மாவினை உயர் தளத்துக்குப் பிரயாணிக்க வகை செய்வது, உடலை எரியூட்ட தயார் செய்வது, எலும்புகளைச் சேகரிப்பது, சாம்பலை கரைப்பது, வீட்டினை மீண்டும் புனிதமாக்குவது, மரணமடைந்த நாளிலிருந்து ஒரு வாரம், ஒரு மாதம், ஒரு வருடம் கழித்து நடத்தப்படும் ஸ்ரார்த்தங்கள் போன்றவை, அந்தியேஷ்டி எனப்படும் இறுதிச்சடங்கில் அடங்கும்.*

*அந்தியேஷ்டி-யின் வாயிலாக சிவபெருமானின் கமலப் பாதங்களுக்கு ஆன்மாவானது விடுவிக்கப்படுகின்றது.*

**வேதங்கள் ஆலோசிக்கின்றன:**

*‘‘உன் கடமைகளை முடி. பிறகு வயோதிகத்தை ஏற்றுக்கொள். அனைத்து நல்லவைகளையும் அருளும் இறைவன், இவற்றுக்கான நீண்ட ஆயுளை உனக்களிக்கட்டும்.’’ ஓம் நமசிவாய.*



தனது பேத்திகள் தாங்கிக் கொண்டு அழைத்து வர, மிகவும் வயோதிகமான இந்த முதியவர்,ஒரு நல்லுள்ளம் கொண்டவரை அடைகின்றார்.

முதியவருக்கு உதவிகள் தருவதற்காக அவர் அழைத்து வரப்படவில்லை.

அவரது அனுபவம் மற்றும் வயது ஆகியவற்றின் பயனாக விளையவல்ல ஆலோசனைகளை, தனது இக்கட்டான தருணத்தில் பெற்றுக் கொள்வதற்காக, முதியவரை அழைத்து வந்திருக்கிறார் அந்த இளையவர்.

# உற்சவம்



**பண்டிகைகள்**

*பக்தியோடு நமது கடவுளை கொண்டாடுவோம்.*

*அவரது கமலப் பாதங்களில் சரணாகதி அடைந்து*
*அவரது திருப்புகழினை உள்ளூரப் பாடுவோம்.*

*உள்ளத்தினுள்ளேயே அவரோடிணைந்து ஆனந்தமாய் ஆடுவோம்.*

*அப்போது அவர் உங்களைக் காப்பார், கன்றினைப் பசு காப்பதைப்போல.*

***-திருமந்திரம்***

# சைவத்துக்கான பண்டிகை நாட்கள் யாவை?

### ஸ்லோகம் 96

*பண்டிகை நாட்கள், கடவுள் மற்றும் கடவுளர்களுடன் தொடர்பேற்படுத்திக் கொள்ள உதவும் முக்கிய நாட்களாகும். குடும்பத்தினரும் சமூகத்தினரும் ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொண்டு இறைவன் புகழ் பாடும் சாதனாவில் பங்கேற்கும் நன்னாள். சைவ மதத்தவர்கள் பற்பல உற்சவங்களை கோயில் களிலும் இல்லங்களிலும் கடைப்பிடிக்கின்றார்கள். வாராவாரமும் மாதந்தோறும் புனிதநாட்கள் உள்ளன.*

### விளக்கம்

வடஇந்தியாவில், திங்கட்கிழமை ஒரு புனிதமான கிழமையாகும். தென்னிந்தியாவில் வெள்ளிக்கிழமைக்கு புனிதத்துவம் தரப் பட்டுள்ளது.

கோயில் சென்று தரிசிக்கவும், வீட்டினை சுத்தப்படுத்தி கோயிலைப் போல அலங்கரிக்கவும், ஜபம் பூஜை போன்றவற்றை மேற்கொண்டு ஆன்மீக படைப்புகளைப் படிக்கவும், இப்புனித நாள் வாரந்தோறும் அமைந்துள்ளது.

இத்தினங்களில் நமக்கான வேலைகளையும் நாம் விட்டு விடாமல் செய்வோம் ஆகையால், இது ஓய்வெடுக்கும் தினமாகாது.

இறைவன் மீதான பிரதான பண்டிகைகளாக உள்ளவற்றில் வருபவை: மகா சிவராத்திரி, வைகாசி விசாகம், விநாயக சதுர்த்தி, ஸ்கந்த சஷ்டி, கார்த்திகை தீபம், விநாயகா விரதம், ஆரூத்ரா தரிசனம் மற்றும் தைப்பூசம்.

கோயில்களில், பத்து நாட்கள் வரை எடுக்கப்படும் கொண்டாட்டமான பிரம்மோற்சவங்கள் இடம்பெறும்.

குடும்பத்தினரும் சமூகத்தினரும் ஒன்று கூடுவதற்கான விசேஷ தினங்களாக பண்டிகை நாட்கள் ஆகின்றன. ஜப சாதனையில் முழுதும் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளவும், விரதமிருக்கவும், தியானிக்கவும், வழிபடவும், உலகியலிலிருந்து விலகியிருக்கவும், இந்நாட்கள் உதவுகின்றன.

புனித இந்து காலண்டரின் வழிகாட்டுதலின் பேரில், சிவபெருமான், விநாயர் மற்றும் முருகனுக்கு, இந்துக்கள் மாதந்தோறும் சிறப்பு வழிபாடுகள் நடத்துகிறார்கள்.

**வேதங்கள் உரைக்கின்றன:**

*பலன் கருதாது உன் ஆயுளில் நீ கடமைகளை ஆற்றி விட்டால், அது இறைவனின் அன்பை பெற்றுத் தரும். ஓம் நமசிவாய.*



*சிவபெருமானிலிருந்து மூன்று முக்கிய உற்சவங்கள் பரவுகின்றன.*

*முருகனின் வாகனங்களான மயிலும் சேவலும் கவனிக்க, ஸ்கந்த சஷ்டி அன்று காவடிகள் தூக்கி செல்கின்றான் ஒரு பக்தன் (மேல், இடது).*

*இன்னொருவன் இரவு முழுக்க விழித்திருந்து சிவராத்திரி விரதம் நோற்கின்றான்.*

*மூன்றாமவன், விநாயக சதுர்த்தி அன்று, பிள்ளையாருக்கு தேங்காய் உடைத்து வழிபடுகின்றான்.*

# சிவபெருமானுக்கான அடிப்படை உற்சவங்கள் யாவை?

## ஸ்லோகம் 97

*பரசிவனை பயபக்தியுடன் பூஜிக்க உகந்தது, மகா சிவராத்திரி. எல்லையற்ற ஜோதியான சக்தியை துதித்தொழுகுகின்றது கார்த்திகை தீபம். பிரபஞ்ச நடனமாடும் நடராஜப் பெருமானின் ஆசீர்வாதங் களை பெறுகின்றது, ஆரூத்ரா தரிசனம். ஓம்.*

## விளக்கம்

*பிப்ரவரி-மார்ச் மாதங்களின் பவுர்ணமி தினத்துக்கு முந்தைய இரவாகின்றது, மகா சிவராத்திரி.*

*இரவு முழுதும் கண் விழித்திருந்து, தியானம் மேற்கொண்டு, சிவனின் 1008 திருநாமங்களை ஓதி, அவருடைய பெருமைகளை உரக்கப்பாடி, ருத்ரம் சொல்லி, சிவலிங்க அபிஷேங்களை நடத்தி, இந்நாளை ஓர் ஒழுக்கமாகவும் பண்டிகையாகவும் இரண்டும் சேர்த்து நாம் கொண்டாடுகின்றோம்.*

*இந்நாளில், வைராகி எனப்படும் சிவபெருமானின் தீவிர பக்தர்களுடன் நம்மையும் இணைத்துக் கொண்டு, பரசிவத்தினை உணர அவர்கள் மேற்கொள்ளும் தீவிரமான முயற்சிகளை கவனிக்கின்றோம்.*

*நவம்பர்-டிசம்பர் மாதத்திய கார்த்திகை நட்சத்திரத்தின்போது, கார்த்திகை தீப விழா எடுக்கப்படுகின்றது. இந்நன்னாளில் சிவபெருமானை, அடியும் நுனியும் அற்ற ஒரு பேரொளியாய் நாம் போற்றிப் பாடுகின்றோம்.*

*கிராமங்கள் முழுக்க அகல் விளக்குகள் ஏற்றப்படும். கோயில் களில் பிரத்தியேக மகாதீபங்கள் காட்டப்படும். வீடுகளெங்கும் நெய் விளக்குகள் துலங்கும்.*

முருகன் கோயில்களில் இது மிகவும் முக்கியமானதொரு உற்சவமாகும்.

டிசம்பர்-ஜனவரி மாதத்தில் வரும் ஆரூத்ரா நட்சத்திரத்தில் அனுசரிக்கப்படுகின்றது, ஆரூத்ரா தரிசனம். நடராஜ பெருமானுக்கு அலங்கார அபிஷேகங்கள் நடத்தப்படும். யோக நிலையில் நிலைபெறுவதற்கான பிரார்த்தனைகள் பக்தர்களால் இடம்பெறும். செல்வச் செழிப்புக்கும், திருமண வாழ்வின் நிம்மதிக்குமான பிரார்த்தனைகளும் முக்கியமாய் மேற்கொள்ளப்படும்.

ஜூன்-ஜூலை மாதத்திய உத்திர பல்குனி நட்சத்திரத்தின் போதும் சிவபெருமான் உள்ளார்ந்து எழுப்பி வழிபடப்படு கின்றார். ஒவ்வொரு வருடமும் இன்னபிற தினங்களில் நான்கு முறை வரும் இதே காலத்திலும், சிவபெருமானுக்கான வழிபாடுகள் விமரிசையாய் இருக்கும்.

மாதாமாதம் வரும் பிரதோஷ நாட்களும், சிவபெருமானை பிரார்த்தித்து வழிபட்டு விமரிசையான பூஜைகள் நடத்தப்படும் நாட்களாகும்.

**வேதங்கள் சொல்கின்றன:**

''ஆண்டவன், எங்கும் நிறை பரப்பிரம்மம், ஒவ்வொருவரின் இதயத்திலும் ஜொலிக்கின்றான். கருணைமயமான அவன், அனைத்து ஜீவராசிகளையும் தன் கருணையின் பக்கமாய் திருப்பி, வீடுபேறு அளிக்கின்றான்.'' ஓம் நமசிவாய.



*சிவராத்திரி எனும் புனித தினத்தின் இரவில் ஒன்றும் சாப்பிடாமலும் தூங்காமலும் தன்னால் இருக்க முடியுமா என சந்தேகங்கொள்கின்றான் ஒரு பக்தன்.*

*இதற்கு உற்சாகமளிக்கும் நண்பன், சிவலிங்கத்தை சுட்டிக்காட்டி, சிவபெருமான் உள்ளங்களில் உறைகின்றான் என்று பக்தனுக்கு ஞாபகப்படுத்துகின்றான்.*

*அங்கு, எதையும் தாங்கும் பலத்தினை பெற முடியும் என்கின்றான் அவன்.*

# விநாயகப் பெருமானுக்கான முக்கிய உற்சவங்கள் யாவை?

### ஸ்லோகம் 98

*விநாயகப் பெருமானின் பிறந்த நாள் கொண்டாட்டமாக விநாயக சதுர்த்தி தடபுடலாய் அனுஷ்டானிக்கப்படுகின்றது. 21 நாள் விரதம் மற்றும் கோயில் வழிபாட்டினை உள்ளடக்கியது, விநாயக விரதம். குடும்பத்தோடு ஐந்து நாட்கள் தொடர்ச்சியாய் வழிபாடுகள் செய்து அன்பளிப்புகளை பரிமாறிக் கொள்ளும் விதமாய் அமைகின்றது, பஞ்ச கணபதி. ஓம்.*

### விளக்கம்

ஆகஸ்ட்-செப்டம்பரில் வரும் விநாயக சதுர்த்தியன்று, விமரிசையான வழிபாடுகளும் பூஜைகளும் கோயில்களில் நடத்தப்படும்.

அன்றைய தினம், நாமே செய்யும் அல்லது வாங்கிக் கொள்ளும் களிமண்ணினால் ஆன கணேச விக்கிரகத்துக்கு, கோயில் போல அலங்கரிக்கப்படும் இல்லங்களிலும் பூஜைகளும் வழிபாடுகளும் செய்யப்படும்.

விநாயக சதுர்த்தி நிறைவடைந்த பிறகு அதே தினத்திலோ அல்லது பத்து நாட்கள் கழித்தோ, விஸர்ஜன எனும் ஒரு நீண்ட கூட்டத்தில் நாமும் கலந்து கொண்டு, நதியிலோ அல்லது புண்ணியக் குளத்திலோ அல்லது கடலிலோ கொண்டு போய், விநாயக சதுர்த்தியன்று வழிபட்ட களிமண் கணேச விக்கிரகத்தை கரைத்து விடுகின்றோம். விக்கிரகத்துக்குள் பூட்டி வைக்கப் பட்டிருந்த கணேச சக்தியினை பிரபஞ்சத்துக்குள் விடுவிப்பதாய் இதற்கு அர்த்தம் சொல்லப்பட்டுள்ளது.

*நவம்பர்-டிசம்பரையொட்டி வரும் கணேச விரத விழாவின்போது, கணேசருக்கு நடத்தப்படும் பூஜையில் தினசரி பங்கெடுத்துக் கொள்வதென்று பக்தர்கள் பிரமாணம் எடுத்துக் கொள்வார்கள். தண்ணீரை மட்டுமே அருந்தி விரதமிருப்பார்கள். அந்தி சாய்ந்த பிறகே அன்ன ஆகாரம் எடுத்துக் கொள்வார்கள்.*

*டிசம்பர் 21 முதல் 25 வரை வரும் பஞ்ச கணபதி, ஒரு நாகரீக விழாவாகின்றது. அன்பார்ந்த பிள்ளைகளுக்கு அன்பளிப்பு வழங்குவது இந்நாளில் இடம்பெறும்.*

*கணபதியின் ஐந்து சக்திகளையும் ஒவ்வொரு நாளாய் இல்லத்தில் எழுப்புவார்கள். குடும்பத்துக்குள் ஒற்றுமை, ஒருங்கிணைப்பு, நண்பர்கள் மற்றும் அக்கம்பக்கத்தாருடன் நல்லுறவு, தொழிலில் மேம்பாடு, அனைவருக்குள்ளும் கலாச்சார மேம்பாடு மற்றும் தர்ம சிந்தனை ஆகியனவற்றை வேண்டிப் பெறுவது, பஞ்ச கணபதி நாட்களின் காரணமாகின்றது.*

*பவுர்ணமியை அடுத்த நான்காம் நாள் வரும் சதுர்த்தி திதி, மாதாமாதம் வரும் கணேசப் பெருமானின் புண்ணிய நாளாகும்.*

**வேதங்கள் கூறுகின்றன:**

*‘‘கலைகளின் முதல்வனே, ஒழுக்கத்தின் தலையாய தெய்வமே. எங்கள் பிரார்த்தனைகளைக் கேட்டு, எங்கு அனைத்து சம்பத்துக் களும் எங்களுக்கு உள்ளனவோ அங்கு எங்களை அழைத்து செல்வாயாக.’’ ஓம் நமசிவாய.*



*தனது தகப்பனாரை சிவலிங்க வடிவத்தில் விநாயகப் பெருமான் வழிபட்டுக் கொண்டிருக்க, ஒரு யானை, காட்டுக் குளத்திலிருக்கும் நறுமண தாமரை மலர்களைப் பறித்து வந்து அர்ச்சித்து விநாயகப் பெருமானை வணங்குகின்றது. இந்துமதத்தின் அனைத்து தரப்பினராலும் பாகுபாடின்றி வழிபடப்படும் கடவுளாவார், யானைமுக பிள்ளையார்.*

# முருகக் கடவுளுக்கான முக்கிய உற்சவங்கள் யாவை?

### ஸ்லோகம் 99

*கந்தக்கடவுளின் அவதார திருநாளை கொண்டாடும் விதமாய் அமைகின்றது வைகாசி விசாகம். அஞ்ஞானம் அகற்றி ஞான விளக்கேற்றும் முருகனின் அருளுக்காக ஆறு நாட்கள் அனுஷ்டிக் கப்படும் விரதமாகின்றது, கந்த சஷ்டி விரதம். முருகனை தியானிக்கவும், தான தருமங்களைச் செய்யவும் தைப்பூசம் உகந்ததாகின்றது. ஓம்.*

### விளக்கம்

கார்த்திகேயனின் நட்சத்திரம், வைகாசி விசாகம். மே-ஜூன் மாதத்தில் இது வரும். இந்நாளில் முருகன் உறைந்துள்ள கோயில்களில் விமரிசையான அபிஷேகங்கள் நடத்தப்படும்.

பண்டிதர்களுக்கு அன்பளிப்புகள் வழங்குதல், ஞானமெய்திய ஆன்மாக்களை உபசரித்தல், ஏழைகளுக்குத் தானம் செய்தல், மரஞ்செடிகொடிகளைப் பராமரித்தல், ஆன்மீகப் பாதையில் நுழைதல், தீக்ஷை பெறுதல் போன்றவை வைகாசி விசாகத்தன்று மேற்கொள்ளப்படும்.

அக்டோபர்-நவம்பரில் வரும் அமாவாசையைத் தொடர்ந்து ஆறு நாட்களுக்கு கந்த சஷ்டி விழா எடுக்கப்படும். முருகனின் பாதுகாப்பையும் அருளையும் வேண்டி பக்தி ஊர்வலங்களும் வழிபாடுகளும் கோயில்களில் களைகட்டும்.

கார்த்திகேயன் வேலினைப் பெற்ற நாளை இவ்விரதம் போற்றுகின்றது. ஆன்மீக ஒளி எழுந்து அசுர சக்தியான அஞ்ஞானம்

எனும் இருளினை அழித்தொழித்த முருகனின் வியத்தகு வெற்றியினை ஞான சக்தியாய் இவ்விரதம் கொண்டாடும்.

ஜனவரி-பிப்ரவரியில் வரும் பூச நட்சத்திரத்தில் அமைகின்றது, தைப்பூசம்.

விரதங்களும் தான தருமங்களும் தைப்பூசத்தின்போது பிரதானமாகின்றன.

மமதை, தலைக்கனம் ஆகியவற்றை அகற்றி தெளிவும் ஞானமும் அளிக்குமாறு முருகனுக்குக் காவடி எடுத்து இடம்பெறும் வேண்டுதல்கள், தைப்பூச விரதத்தின் முக்கியமாகின்றது.

மாதந்தோறும் வரும் கிருத்திகை நட்சத்திரமும் அமாவாசையை ஒட்டி வரும் சஷ்டியும் முருகனை தொழுவதற்கு உகந்த முக்கிய நாட்களாகும்.

**வேதங்கள் கூறுகின்றன:**

''ஓடும் நதியின் கரையில் கூவும் புள்ளினங்களைப் போல, மழை மேகங்கள் எழுப்பும் கடும் ஓசையைப் போல, மலையிலிருந்து சந்தோஷமாய் வந்து விழும் நீரினைப் போல, நாங்கள் பக்தியோடு சொன்ன பாமாலைகளும் ஒலி நயத்தோடு ஆண்டவரை போய்ச் சேர்ந்திருக்கும்.'' ஓம் நமசிவாய.



*வேலேந்திய வேலவன், அவனுக்கான பண்டிகைகளால் சூழப்பட்டுள்ளான்.*
*இடமிருந்து: அன்பளிப்பு தரும் உற்சவம், வைகாசி விசாகம்.*

*பெண் தீச்சட்டி ஏந்தியும், ஆண் காவடி தூக்கியும் நேர்த்திக் கடன் கழிக்கும் தைப்பூசம்.*

*அஞ்ஞான இருளை வெல்லும் ஜோதிப் பிரகாசமாய் ஆகின்றது, கந்த சஷ்டி விரதம்.*

# மற்ற முக்கிய உற்சவங்கள் யாவை?

## ஸ்லோகம் 100

*கோயில் வழிபாடுகளைத் தாண்டி, குடும்பம், சமுதாயம் மற்றும் நாடு சார்ந்த வழிபாடுகள் உள்ளன. தீபாவளி, இந்துப் புதுவருடம், தைப்பொங்கல், குரு பூஜை நாட்கள், கும்ப மேளா மேலும் குரு பூர்ணிமா ஆகியன அவை. ஓம் நமச்சிவாய.*

## விளக்கம்

அக்டோபர்-நவம்பரில் வரும் தீபாவளி, தீபங்களின் பண்டிகையாகும். இது மிக முக்கியப் பண்டிகையாகும். அனைத்து தரப்பினரும் அன்பினாலும் நம்பிக்கையாலும் ஒருங்கிணைந்து கொள்ளும் திருநாளிது. புது நிதிக் கணக்குகள் தொடங்குவது, வாழ்த்து அட்டைகளைப் பரிமாறிக் கொள்வது, புத்தாடைகள் புனைவது, விளக்குகளை வரிசையாய் ஏற்றி வைத்துக் கொண்டாடுவது ஆகியன இப்பண்டிகையின் அங்கங்கள்.

மறப்போம் மன்னிப்போம் என்ற அணுகுமுறையால் குடும்ப பந்தம் இறுக்கப்படும் நாள், தீபாவளி.

ஜனவரியில் வரும் தைப்பொங்கல், விவசாயப் பெருமக்களுக் கான அறுவடைத் திருநாள்.

வயலுக்கு நன்றி தெரிவித்து, நல்ல சாகுபடிக்கான வேண்டுதல்கள் முன்வைக்கப்படும் தமிழர் திருநாள்.

கதிர்களின் காவலான சூரியக் கடவுளுக்கு பூஜைகள் நடத்தப்படும். பெண் பிள்ளைகளுக்கு அன்பளிப்புகள் தரப்படும்.

குடும்ப குருக்களும் சாதுக்களும் மகாசமாதி அடைந்த தினங்களில் குரு பூஜைகள் பக்தியுடன் அனுசரிக்கப்படும்.

*சத்குரு பிறந்த தினத்தன்று அவரது பாதுகைகளை வைத்து சந்தனக் காப்பிட்டு பூஜைகளும் வழிபாடுகளும் நடத்தப்படும்.*

*ஜூலையில் வரும் பவுர்ணமியன்று குரு பூர்ணிமா இடம்பெறும். இத்தினத்திலும் சத்குரு வழிபாடு உண்டு.*

*கும்ப மேளா, பக்தர்கள் பெருமளவில் கூடும் ஒரு நாடு சார்ந்த வழிபாடாகும். மூன்று வருடங்களுக்கு ஒருமுறை இந்தியாவின் நான்கு பகுதிகளில் இது நடத்தப்படும்.*

**வேதங்கள் சொல்கின்றன:**

*‘‘அனைத்தும் அறிந்த இறைவனை நாம் பக்தியால் அடைகின்றோம். நாங்கள் ஊக்கத்துடனும் சக்தியுடனும் இருக்குமாறு காப்பாற்றுவாயாக.’’ ஓம் நமசிவாய.*



*மலர்களாலும் கோலங்களாலும் அலங்கரிக்கப்பட்ட மேடையொன்று,*
*கிராமத்து திருவிழா ஒன்றுக்காக அமைக்கப்பட்டுள்ளது.*

*திடீரென்று சிவபெருமான் அந்த மேடையில் எழுந்தருளுகின்றார்.*

*அவரை வரவேற்பதற்காக, கையில் மலர்களுடனும் தேங்காயுடனும்*
*குடையுடனும் விசிறியுடனும் பக்தர்கள் ஓடி வருகின்றார்கள்.*

*சொர்க்கம் மற்றும் பூமியால் கவரப்பட்டு, ஜோதிரூபமாய் பரிமளித்துக் கொண்டு, அனைத்துக்கும் பொதுவானதொரு விளக்காய் விளங்கும் கதிரவனின் பிரகாசம் அதற்கு எங்கிருந்து கிடைக்கின்றது? ஆனந்தத்தை தரும் அந்த ஒரே கருணையிடமிருந்து தானே? அவனுக்கே நம் அத்தனை பக்தி அர்ப்பணிப்புகளும். ரிக் வேதம்.*

*வாக்கின் ஆண்டவனை, இங்கிருக்கும் அனைத்தையும் படைத்தவனை, தெளிவினை அள்ளித் தருபவனை, இங்கு நாம் இப்பொழுது நமக்காக எழுப்புவோம். அவன், என்றும் கருணையான அவன், நம் கோரிக்கைகளுக்கு செவிமடுக்க என்றும் காத்திருக்கும் ஆண்டவன், நல்லவையை மட்டும் அருளும் இறைவன், நம்மை இங்கிருந்து வாழ்த்தட்டும்! ரிக் வேதம்.*

*செல்வம் எனும் வரமும், எடுக்கும் காரியங்கள் அனைத்திலும் ஜெயமும், இனிய மலர்களின் நறுமணமும், மதிப்பும் புகழும், அன்பும் காருண்யமும், அவனது எல்லைகள். இதனாலேயே ஆனைமுகத்தானை தேவர்கள்கூட பக்தி ததும்பக் கையெடுத்துத் தொழுகின்றார்கள். திருமுறை.*

*எங்கெல்லாம் நான் உடுக்கை ஒலியை கேட்கின்றேனோ, இசையின் நாதத்தைக் கேட்கின்றேனோ, வேதங்கள் முழங்கப்படு கின்றதோ, அங்கெல்லாம் நமக்கெல்லாம் முதல்வனான ஆண்டவனை என் மனம் தொழுகின்றது. திருமுறை.*

*கண்டத்தில் விஷமும், கேசத்தில் நன்னீரும், நாவில் வேதங்களும் கொண்டுள்ள நரையூர் உறை இறைவன், மகோத்ஸவ ஊர்வலம் வருகின்றான். இதில், அவன் பக்தர்களும் ஞான சாதுக்களும் அவன் புகழ் பாடுகின்றார்கள். எங்கெங்கும் பரவியிருக்கும் அவனது கீர்த்தியை பாடுகின்றார்கள். திருவிழா கொட்டுகள் தெருவெங்கும் முழங்க, தேரோட்டம் எண்திசையும் ஒளிபரப்பி நகர்கின்றது. திருமுறை.*

*அழகுப் பெண், பூம்பாவையே! எப்போதும் திருவிழா கோலம் பூண்டிருக்கும் மயிலை பதிகத்தின் தெருக்களை நீ பார்க்காமல் போவாயா? விழாவின் ஓயா ஓசையும், அழகுப் பெண்கள் நடனமாடும் இனிய நாதமும், அன்னதானங்களும் நிறைந்து, திருவிழாக்களின் நடுநாயகமாய் திகழும் கபாலீஸ்வர புண்ணியத் தலத்தைத் தொடாமல் போவாயா? திருமுறை.*

*நீ கொலுவிருக்கும் புண்ணியத் தலமாய் இடைமருது கோயிலை, இறைவா நீயே தெரிந்தெடுத்துக் கொண்டுள்ளாய். பண்டிதர்கள் வேதமோத, தை மாத தைப்பூசத் திருவிழாவுக்காக சாதுக்களும் ஞானிகளும் தேவர்களும், உலகை ரட்சிக்க நீ குடிகொண்டுள்ள இத்தலத்துக்கு வந்துள்ளார்கள். திருமுறை.*

*வெகு தூரத்திலிருப்போரும், வெகு அருகிலிருப்போரும், பக்தனும் பித்தனும், பிணி தீர்க்குமாறு தினம்தினம் பிரார்த்திக் கின்றார்கள். ''என் தெய்வமே, என் தங்கமே, அப்பனே, மகனே'' என்று அழுவோருக்கு ஆரூர் உறைபவனே விடிவு! ஆரூர் பட்டிணத்தில் நடக்கும் ஆரூத்ரா திருநாளுக்கு இத்தனை மகிமையுண்டு! திருமுறை.*

*நிலவின் வெண்மையில் இருக்கும் சங்கோசையும், பறையின் டமாரவோசையும், பக்தர்களின் நடன அசைவுகளுக்கேற்ப பெரிய ஜால்ராக்கள் மோதி உருவாகும் கிண்கிணியோசையும் எங்கெங்கும் பரவ, ஏதோ மழை வருவதற்கான இடியோசைதான் கிளம்பி விட்டதோ என்று கருதி மயில்கள் நடனமாடத் துவங்கிவிட்டன. ஆரூர் நகரத்தில் நடக்கும் ஆரூத்ரா தரிசனத் திருநாள், இத்தகையது! திருமுறை.*

*உவகையோடு ஏற்றுக்கொள்! கருணையை அள்ளிக் கொடுப்பவன், சங்கரன்! அவனை ஆனந்தமாய் கொண்டாடு! சிவலோகத்தின் ஆதி, சங்கரனே! நம்மை துயரத்திலிருந்து மீட்கக் காத்திருக்கும் தெய்வம்! அவனை விட்டுவிடாதே! ஈடுயிணையற்றவன்! தேவர்களின் தலைவன்! அவன் தாள் பிடி! திருமுறை.*

*அனைத்து புண்ணியநதிகளில் நீராடிய புண்ணியத்தையும், அனைத்து ஷேத்திரங்களை தரிசித்த பலனையும், குருவின் காலடிகளைக் கழுவிய நீரை அருந்தி அதனை தலையில் தெளித்துக் கொள்வதின் வாயிலாக சிஷ்யன் அடைகின்றான். குரு கீதா.*

*நான் அவனை மலர் மாலைகளால் போற்றுவேன். என் நெஞ்சோடு நெஞ்சாக அணைத்துக் கொள்வேன். அவன் பேரும் புகழும் பாடியாடி மலர்களை ஆராதனையாய் அளிப்பேன். ஆடிப்பாடுவதன் மூலம் இறைவனை நாடு. எனக்கு இது மட்டுந்தான் தெரியும். திருமந்திரம்.*

# உபாஸனா



உபநிடதம் எட்டு:

*புனித வழிபாடு*

# சிவாலயா



**சிவாலயங்கள்**

*வழிபாட்டு தர்மவழி நின்று, சிவபெருமானுக்கு மலர்களால் அர்ச்சனைகள் செய்து அவர்தம் கோயிலை வலம்வந்து பிரதட்சணம் செய்யாத இவ்வுடல் இருந்தும் என்னதான் பயன்? சிவனை வழிபடாத இந்த சவத்தின் பயன் என்ன?*

***- திருமுறை***

# சிவாலயங்களின் இயல்பு என்ன?

## ஸ்லோகம் 101

*சிவபெருமான் மற்றும் ஏனைய தேவர்கள் அனைவரும் உறையும் ஓர் இறைமையான தலம், கோயில். சுவர்களால் பாதுகாப்பாய் அரணமைக்கப்பட்ட கோயில், மூவுலகங்களும் பிரக்ஞையுடன் இணையும் ஓரிடம். கோயில், பிரத்தியேகமாய் புனிதமாக்கப்பட்ட பகுதியாகும். இறையுலகத்துடன் ஆன்மாவை இணைக்கவல்ல ஆன்மீக சக்தியைக் கதிர்வீச்சாய் பரப்பிக் கொண்டிருக்கும் கருணைத்தலம். ஓம்.*

## விளக்கம்

*சைவமதத்துக்கு அதனைத் தாங்கும்படியாய் மூன்று தூண்கள் உள்ளன. அவை: கோயில்கள், மறைகள் மற்றும் சத்குருக்கள்.*

*சைவமதத்தின் தர்மத்தை தாழ்ந்து விடாமல் இம்மூன்றும் காலகாலமாய் தூக்கிப் பிடித்து நிலைநிறுத்திக் கொண்டிருப்பதால், இவற்றை நாம் பக்திகொண்டு பாதுகாக்கின்றோம்.*

*சிறு கிராமத்தில் இருந்தாலும் சரி... அல்லது விண்முட்ட கோபுரங்கள் கொண்டு அமைக்கப்பட்டிருந்தாலும் சரி... கருணைமிகும் சிவபெருமான் உறையும் புண்ணிய க்ஷேத்திரமாக நாம் சிவாலயங்களைப் போற்றுகின்றோம்.*

*சிவாலயத்தில், சிவபெருமானுக்கு மிகவும் அருகாமைக்கு நாம் இழுக்கப்பட்டு, உலகயியலிலிருந்து விலகிய ஒரு தஞ்சம் புகுதலை அங்கு அனுபவிக்கின்றோம்.*

*எங்கெங்கும் நிறைந்து வியாபித்திருக்கும் அவரது மாகருணை, நான்கு சுவர்களுக்குள் கண்ணியமாய் அடக்கப்பட்ட புனிதக் கோயில்களில் நமக்கு சுலபமாய் அனுபவமாகும்.*

கும்பாபிஷேகம் நிறைவேற்றப்பட்டு புனிதத்தலமாக ஆக்கபட்ட சிவாலயத்தில்தான் மூவுலகங்களும் துல்லியமாய் இணைந்து தொடர்பு கொள்கின்றன. இதனால், தங்களுடைய ஆன்மத் தளத்தில் நின்று, தன்னுடனும் இறைமையுடனும் ஓர் இணைப்பினை பக்தர்களால் வேகமாய் ஏற்படுத்திக் கொண்டுவிட முடியும்.

கோயிலில் பூஜைகளின் மூலமாக ஆன்மீக சக்தி தட்டியெழுப்பப் பட்டு அது வெளியுலகம் முழுதும் பரவி வியாபிக்கின்றது. அத்தருணத்தில், கடவுளும் கடவுளர்களும் தொடர்பில் இருக்கும் முக்கியமானதொரு புண்ணியத்தலத்தில் இருக்கிறோம் என்பதை ஒவ்வொரு சைவர்களும் உணர்ந்து அனுபவிப்பார்கள்.

சிவாலயங்களுக்குள்ளேயே கணபதிக்கும் கார்த்திகேயனுக்கும் தனித்தனிக் கருவறைகள் இருக்கும். மேலும் பல கடவுளர்களுக்கும் ஞானிகளுக்கும்கூட அங்கு சந்நிதிகள் அமைக்கப்பட்டிருக்கும்.

## வேதங்கள் விளக்குகின்றன:

‘‘மேலும் கீழும் இடமும் வலமுமுள்ள அனைத்து சமயங்களையும் சூரியக்கதிர்கள் ஒளிரச்செய்வதைப் போல, கருணையும் தொழத்தக்கதுமான ஆண்டவன் அனைத்து படைப்புகளையும் ஆள்கின்றான்.’’ ஓம் நமசிவாய.



*மூன்று பக்தர்கள் கருவறையில் உள்ள*
*பெரிய சிவலிங்கத்தை வழிபடுகின்றார்கள்.*

*ஒரு முனி, உலகத்தின் ஆணிவேர் பற்றிய தத்துவத்தில் இறங்கியிருக்கிறார்.*

*அவர் கூறுபவற்றை மற்றவர் ஓலையில் பதிகின்றார்.*
*திடுமென்று எழுத்தாணியை தரையில் வைத்துவிடும் அவர்,*
*அந்த தெய்வீக அறையில் சிவ-சக்தியின் இருப்பினை உணர்ந்து மெய்சிலிர்க்கின்றார்.*

# ஆலயங்கள் எவ்வாறு அமைக்கப்பட்டு, கட்டப்படுகின்றன?

### ஸ்லோகம் 102

*சிவாலயங்கள், ஆண்டவனாலேயே அமைக்கப்படுகின்றன. சைவமதத்தில் இறுக்கமான பக்தி கொண்டுள்ள ஒரு பக்தனின் கனவில் தோன்றியோ அல்லது அவர் தனிமையில் இருக்கும்போது தோன்றியோ, இறைவன் தனது ஆக்ஞையை முன்வைக்கின்றான். பிறகு ஆகம விதிகளின்படி கோயில் எழுப்பப்படுகின்றது. இத்தகைய புண்ணியத்தலங்களில், புண்ணியம் மட்டுமே துலங்கும். ஓம்.*

### விளக்கம்

*சிவாலயத்தில் நிலவவேண்டிய சாந்நித்யம் மற்றும் புனிதம் கருதி, சிவாலயங்கள் பெரும்பாலும் சிவபெருமானாலேயே எழுப்பிக் கொள்ளப்படுகின்றன. அவரது பக்தர்களின் வாயிலாக அது உருவாகின்றதே அன்றி, மனிதர்களால் அல்ல.*

*ஆலயம் எழவேண்டிய பகுதி தீர்மானமானதும், கோயில் கட்டுவதில் பரம்பரையாய் ஈடுபட்டுள்ள ஸ்தபதிகளால் கட்டுமானம் முடிவாகின்றது. கோயில் எழுகின்றது.*

*புனித ஆகமவிதிகளில் கூறப்பட்டுள்ள கட்டுமான விதிகளின்படி ஒவ்வொரு செங்கல்லும் வைக்கப்படும். இது வழிவழியாய் கடைப்பிடிக்கப்படும் ஒரு கலாச்சாரம்.*

*இவ்வாறு முறையாய் கட்டி முடிக்கப்படும் ஒரு சிவாலயம், மூவுலகங்களும் முறையாய் சங்கமிக்கும் ஒரு தொடர்புப் பிரதேசமாய் பூமியில் நிலைக்கின்றது. மனித குலத்தின் ஆன்ம முன்னேற்றத்துக்கும், சிவபெருமானின் தர்ம விதிகளைச்*

செவ்வனே நிறைவேற்றுவதற்குமான, தேவர்களின் கூடாரமாய் தெய்வீகப் பொலிவு கொள்கின்றது, அந்த சிவாலயம்.

சிவபெருமானின் பக்தர்கள் உலகம் முழுதும் வாழ்கின்றார்கள். ஆண்டவனின் கருணைக்காக தவமாய் தவம் கிடந்து காத்திருக் கின்றார்கள். அப்படிப்பட்ட தன்னுடைய பிள்ளைகளுக்கு தனது கருணையையும் அன்பினையும் கிடைக்கச் செய்வதற்காக, உலகம் முழுதும் பல சிவாலயங்களை சிவபெருமானே மனமுவந்து முன்வந்து கட்டிக் கொண்டுள்ளார்.

சிவபெருமான் பெயரால் கோயில் கட்டப்படுகின்றது. அங்கு இறைவனாரின் பிம்பம் நிலைநிறுத்தப்படுகின்றது. அவரது புகழைப் பாடிப்பாடி பக்தி செலுத்துவன் மூலம் சிவபெருமானே அங்கு நேரடியாய் எழுப்பப்படுகின்றார்.

இக்கோயில்கள் அனைத்தையும் தனது சொந்தக் கோயிலாகவே கருதும் சிவபெருமான், தனது ஆசீர்வாதக் கதிர்களை இத்தலங்களில் பாய்ச்சி, பக்தர்களுக்கு சக்தி அளிக்கின்றார்.

**வேதங்கள் உரைக்கின்றன:**

''பிரம்மனே, பாதிரி. பிரம்மனே, தியாகம். பிரம்மன் என்ற பெயரிலேயே தூண்கள் எழுப்பப்படுகின்றன. பிரம்மத்திலிருந்தே சிவனடியார் பிறக்கின்றார். பிரம்மத்திலிருந்தே சரணாகதி பிறக்கின்றது.'' ஓம்.



*ஞானம் கிடைக்கப் பெற்ற ஒரு சாது, தன் மனக்கண்ணில் தோன்றும் சிவாலயம், அதன் கோபுரம் மற்றும் தங்கக்கலசங்களைக் கண்டு தன்னிலை மறந்து கைகள் நீட்டி அமர்ந்திருக்கின்றார்.*

*சிவபெருமானின் ஜடாமுடி பக்தனை அரவணைத்திருக்கத் தோன்றியுள்ள உள்ளார்ந்த இந்தக் கீற்றுக் காட்சி, சிவபெருமானின் கடாட்சம்.*

*ஆச்சரியமாய் இவ்வாறு காட்சியாகும் தோற்றம், பிறகு உருவாகும்போது அது நிச்சயமாய் ஒரு புண்ணிய ஷேத்திரமாகத்தானே இருக்கும்.*

# எப்போது ஒருவர் கோயிலுக்குப் போக வேண்டும்?

### ஸ்லோகம் 103

*சிவபெருமானுடனும் கணேசனுடனும் கார்த்திகேயனுடனும் ஒன்று கலக்கும் ஒரே எண்ணத்தோடு நாம் கோயிலுக்குப் போகின்றோம். குறைந்தபட்சம் வாரம் ஒருமுறையும், முக்கியமான பண்டிகை நாட்களிலும் நாம் கோயிலுக்குச் சென்று வருகின்றோம். ஓம்.*

### விளக்கம்

சிவாலயம் ஒன்றுக்கு வெகு அருகாமையில் வசிக்க வேண்டும் என்று ஒவ்வொரு சைவ பக்தனும் எண்ணுகின்றான். மேலும் உலகின் எந்த மூலையில் இருந்தாலும் அங்கு ஒரு சிவாலயம் எழுப்பிவிட வேண்டும் என்றும் அந்த பக்தன் விழைகின்றான்.

இப்பிறவிக்கும், வரும் அடுத்த பிறவிகளுக்கும் கடாட்சத்தை வெல்லும் புண்ணியமானதொரு நடவடிக்கையாகும் இது.

ஆன்மீகம் சார்ந்த தினசரி வாழ்க்கை இவ்வாறு கோயிலை மையமாய் கொண்டு அமைகின்றது.

இங்குதான், கடவுளின் இந்த இல்லத்தில்தான், அவனுடனான உறவினை நாம் சுவைக்கின்றோம்.

இறைவனிடமிருந்து தள்ளியிருக்க விரும்பாமல் அவனது இல்லமான கோயிலின் அருகிலேயே தனது கோயிலையும் அமைத்துக் கொள்ளும் பக்தன், வாராவாரம் சிவபெருமானை கோயிலில் தரிசித்து தியானிக்கின்றான். பெண்கள், மாதத்தில் மூன்று நாட்கள் மிகுந்திருக்கும் இந்த சேவையிலிருந்து விலகியிருந்து விடுவார்கள்.

*கோயிலிலுள்ள தெய்வத்தின் சக்தி வெகுண்டிருக்கும் முக்கியமான விழாநாட்களில், எப்படியாவது போய் தெய்வத்தினை தரிசித்து விடுவது என்பதில் பக்தர்கள் கறாராய் இருப்பார்கள்.*

*வெகு தூரத்தில் அமைந்திருக்கும் புண்ணிய சிவ ஷேத்திரங் களுக்கு வருடத்துக்கு ஒருமுறை சென்று இறைவனின் அருளாசியை பெற்று வருவார்கள்.*

*தீவிர சிவபக்தர்கள், சிவபெருமானுக்கான தினசரி பூஜைகளில் பங்கு கொள்வார்கள்.*

*சிவபெருமானுக்கு மிகவும் உகந்த திருநாளான சிவராத்திரி தினத்தன்று, சைவ பக்தர்கள் சிவாலயத்தினை தவறாது தரிசித்து விரதம் மேற்கொள்வார்கள்.*

*கோயில்களிலேயே மிகவும் பழமையானவை, சைவத் திருத்தலங்கள்தான்.*

*இதனாலேயே, கடவுள் மற்றும் தேவர்களின் புண்ணிய இருப்பிடங்களாய் உள்ள சைவத்திருத்தலங்கள், மிகுந்த பயபக்தியுடன் அணுகப்படுகின்றன.*

*மகாராஜாவை நெருங்கும்போது மனம் கொள்ளும் மரியாதை மற்றும் பயபக்தி ஆகிய உணர்வுகள், சிவன் வசிக்கும் கோயில்களை நெருங்கநெருங்க உருவாகும்.*

**வேதங்கள் சொல்கின்றன:**

*‘‘நாம் பாடும் புகழ்ப் பாமாலையில் தெய்வம் மனம் குளிரட்டும்! மனிதர்களில் பூசாரியாய் உயர்ந்துள்ளவர், சொர்க்க தேவர் களுக்குப் பூமாரி பெய்து அர்ச்சிக்கட்டும்!’’ ஓம் நமசிவாய.*



இந்துக் கோயில்களில் ஒவ்வொன்றிலும் தனித்துப்
பிரத்தியேகமாய் கருவறை ஒன்று அமைக்கப்பட்டிருக்கும்.

இறைவனின் சக்தி உறைவது இங்குதான்.
ஒவ்வோர் ஆன்மாவினுள்ளும் அவன் ஆழ்ந்து
இருப்பதற்கு ஒப்பாய் இங்கு அவன் உறைகின்றான்.

பூஜையின்போது சிவபெருமானின் பூரண அனுக்கிரகத்தை
வேண்டும் தொனியில், தனது இரு கைகளையும் நீட்டி
இறைஞ்சியபடியே சிவலிங்கத்தை நெருங்குவான் பக்தன்.

# சிவன் கோயிலுக்கு ஒருவர் எப்படிப் போக வேண்டும்?

## ஸ்லோகம் 104

*பக்தி மனம் முழுக்க நிறைந்திருக்கும் நிலையில் கோயிலுக்குள் நுழையும் நாம் முதலில் பிள்ளையாரைத் தொழுகின்றோம். பிறகு பிரதட்சணமாக கோயிலை வலம்வந்து, பூஜை நிறைந்திருக்கும் பிரகாரத்துக்குள் நுழைகின்றோம். சிவபெருமானின் அருளினை தரிசித்த பிறகு, கிளம்புவதற்குமுன் அங்கேயே அமைதியாய் சாந்தத்தில் உட்கார்ந்து கொள்கின்றோம். ஓம்.*

## விளக்கம்

கைநிறைய அர்ச்சனைக்கான பொருட்களை எடுத்துக் கொண்டு கோயிலடைந்ததும் காலணிகளை வெளியிலேயே விட்டு விடுகின்றோம். பிறகு கைகள், கால்கள், வாய் ஆகியவற்றை நன்கு கழுவிக்கொண்டுவிட்டு நேராய் கணேசப் பெருமானின் அருளாசி பெற அவரது சன்னிதியை அடைகின்றோம்.

பிறகு, மகாமண்டபவத்தை சுற்றிலும் செல்லும் பிரகார பாதையில் வலம் வருகின்றோம்.

சுற்றி முடித்து பலிபீடம் அடைந்ததும் அங்கு உலகியல் சார்ந்த அனைத்து சிந்தனைகளையும் நாம் பலியிட்டு விடுகின்றோம். அங்கிருக்கும் த்வஜஸ்தம்பம் எனப்படும் கொடி மரத்தினருகே நெடுஞ்சாண்கிடையாக விழுந்து நமஸ்காரம் செய்கின்றோம்.

அதனருகே இருக்கும் நந்தியை தொழுகின்றோம்.

பிறகு கர்ப்பக்கிரகத்தினை மும்முறை வலம் வந்துவிட்டு இறைவனை வழிபட அவன் உறையும் கருவறைக்கு செல்கின்றோம்.

*பூஜை நடைபெற்று முடியும்வரை அஞ்சலி முத்திரை என்பதற்கு இணங்க கைகூப்பித் தொழுதபடி நிற்கின்றோம்.*

*பிரார்த்தனை வழக்குப்படி அமைதியாய் உட்கார்ந்து சாந்தமாய் தியானிக்கலாம். அல்லது பாமாலை தொடுக்கலாம்.*

*கற்பூர ஆரத்தி நிறைவுற்றதும், நெஞ்சு தரை தொடும்படி ஆண்களும், பெண்கள் குனிந்தமர்ந்து விழுந்தும் நமஸ்காரம் செய்ய வேண்டும்.*

*இதன் நிறைவாய் தரப்படும் பிரசாதத்தினை வலக்கையில் மரியாதையும் பக்தியும் மனதில் நிறைத்து பெற்றுக் கொள்ள வேண்டும்.*

*கிளம்புவதற்கு முன்னால், நிறைவாக மற்றுமொருமுறை கர்ப்பக் கிரகத்தினை வலம்வருகின்றோம்.*

**வேதங்கள் அறுதியிட்டு சொல்கின்றன:**

*''ஒரு மனிதன் முழு நம்பிக்கையுடன் கோயிலில் தன்னையே அர்ப்பணித்து பக்தி செலுத்தினானேயானால், அவன் மீது தெய்வம் முழு நம்பிக்கையை பதிக்கின்றது.'' ஓம் நமசிவாய.*



சிவபெருமான் கவனித்துக் கொண்டிருக்கும் நிலையில்தான் பக்தன் அவருடைய கோயிலுக்குள் நுழைகின்றான்.

காலணிகள் மற்றும் தனது பொருட்களை நுழைவாயிலிலேயே விட்டுவிட்டு, ஆரத்தி தட்டில் மலர்கள் உட்பட்ட ஆராதனை பொருட்களை மட்டும் வைத்து உள்ளே எடுத்துச் செல்வார்கள்.

கொடிக்கம்பத்துக்குக் கீழே பக்தன் நமஸ்கரிக்கின்றான்.

நந்தியைத் தொட்டுப் பிரார்த்தித்து தாயும் மகளும் வரம் வேண்டுகின்றார்கள்.

# சிவபெருமான் கோயிலுக்குள் என்ன நடக்கின்றது?

## ஸ்லோகம் 105

*தினசரி நடக்கும் வழக்கமான பூஜைகளிலிருந்து வருடாந்திரமாய் வரும் விமரிசையான திருவிழாக்கள் வரை, சிவபெருமானின் கோயில்களில் நடைபெறும் வழிபாட்டு முறைகள் வேறுபடு கின்றன. எத்தகையதாகினும், லட்சோபலட்சம் மக்கள் கூடும் பெருவிழாவில்கூட, பக்தனின் பிரார்த்தனை தனிமனித தியானம் சார்ந்த ஒன்றாய்த்தான் இருக்குமே ஒழிய, கூட்டு வழிபாடாய் அமையாது. ஓம்.*

## விளக்கம்

தினசரி தவறாமல் நடைபெறும் வழக்கமான வழிபாடுகளுக்கு இடையே பற்பல முக்கிய நிகழ்வுகள் கோயிலுக்குள் நடைபெறும். வேண்டுதல்களை நிறைவேற்றும் பக்தர்கள், வேதம் ஓதும் வாத்தியார்கள், ஊர்வலங்கள், ஆசீர்வாதம் வழங்கும் யானை, பூத்தொடுத்தல், திருமணங்கள், மண்டபங்களில் நிகழ்த்தப்படும் பேருரைகள், பக்திப்பாடல்கள், அன்னதானம், கலை மற்றும் நடன நிகழ்ச்சிகள், குளத்தில் இடம்பெறும் புண்ணிய நீராடல், தியானம், சமய அறிவுறுத்தல்கள், மேலும் திருவிழாக்கள் சம்பந்தப்பட்ட பல சமாச்சாரங்கள்.

வழக்கமாய் ஏழுகால பூஜை நடத்தப்படும். காலை 5, 6 மற்றும் 9. நண்பகல் 12. மாலை 6. இரவு எட்டு மற்றும் 10.

முறையாய் இறைவனை அணுகுவதற்கும், மனமுவந்து நம்மை இறைவனடியில் சரணாகதி ஆக்குவதற்குமே இத்தனை புறவழிபாடுகள் தேவைப்படுகின்றன.

*முதலில் நமது அன்பைத் தருவதற்கும், பிறகு இறைவனார் மீதான நம்முடைய பூஜையை மிகுந்த பக்தியுடன் கொண்டாட்டமாய் அர்ப்பணிப்பதற்குமே, வழிபாடுகள் அமைகின்றன.*

*மனம் முதலில் ஒப்ப வேண்டும். பிறகுதான் பிரார்த்தனைகள்.*

*தெள்ளிய புறவழிபாட்டு முறையில் சரணாகதியை அடைந்த பிறகு, பிரார்த்தனைகளும் வேண்டுதல்களும், சிவனாரின் பாதங்களில் வைக்கப்படுகின்றன.*

*அகவழிபாடும் உண்டு. அகவழிபாடும் வேண்டும். இதுதான் தியானம்.*

*அவசரப்படாமல், பரபரப்பில்லாமல், அமைதியாய், சாந்த மனத்துடன் ஓரிடத்தில் அமர்ந்து, சற்றுநேரம் தியானிப்பது. இது விட்டுவிடாமல் தினசரி பழக்கப்படுத்தப்படும்போது, உள்ளார்ந்த சக்தியை, இறைமையை, நமக்குள்ளேயே இருக்கும் கடவுளின் பிரத்தியட்ச இருப்பினை, கண்கூடாய் உணர முடியும்.*

**வேதங்கள் சொல்கின்றன:**

*மனம் நின்று விடும் அளவுக்கு பூரணமாகும் மனிதனிடம், தியானம் முடிகிறது. அப்போது இறைமை உதிக்கிறது. ஓம் நமசிவாய.*



*தன்னைத்தானே பரிசுத்தமாக்கிக் கொண்டு, கோயிலுக்குள் பக்தன் வருவதேகூட, ஒரு சிறந்த வழிபாட்டு முறையாகும்.*

*இறுதியாய் அவன் நடனத்தின் தலைவனான நடராஜனின் முன்னால் நிற்கின்றான்.*

*பக்திப்பெருக்கோடு 'அஞ்சலி முத்திரையில்' கைகள் கூப்பியிருக்க, பக்தன் தனது பக்தியையும், நன்றியினையும், அர்ப்பணிப்பினையும் காணிக்கையாக்குகின்றான்.*

இறைவர்களின் தலைவன். அரசர்களுக்கெல்லாம் அரசன். சிவபெருமானை நாம் தொழுவோம். ஆழ்மனத்தினுள் அடையவல்ல சிவனே, வேறெதனையும்விட தொழத்தக்கவன். *கிருஷ்ண யஜுர் வேதம்.*

பயம் கலந்த ஆச்சரியத்துடன் இறைவனாரை அடையும் பக்தன் பிறகு சொல்கின்றான்: என்றும் எங்கும் பிறக்காத சுயம்பு அவன். ருத்ரனின் திருமுகம் என்மீது பட்டு ஒளிரட்டும். அவனது கருணையும் அன்புமே என்றும் எனது பாதுகாப்பாய் அமையட்டும். *கிருஷ்ண யஜுர் வேதம்.*

அனைவரையும் காத்து ரக்ஷிக்க வேண்டும் என்ற காரணத்துக் காகவே, இறைவனே பல சாதுக்கள் மற்றும் சாதாரண மனிதர் களிடம் தோன்றி, வழிவகைகள் தந்து, பற்பல லிங்க வடிவங்களாய் கிராமங்களில் கொலுவீற்றிருக்கின்றான். *காரண ஆகமம்.*

அறுக்க வேண்டிய கற்களை அறுப்பதும், வடிவமைக்கப்பட வேண்டிய கற்களை வடிவமைப்பதும், கடைய வேண்டிய கற்களை கடைவதுமே, ஒரு சிற்பியின் பணி. கட்டுமான வல்லுநர்களும் சிற்பிகளுமே கோயிலைக் கட்டி அதிலுள்ள திருவுருவங்களைக் கலைநுணுக்கத்துடன் சமைக்கின்றார்கள். ஆனால் *தக்ஷகா* என அழைக்கப்படும் அருள் பெற்றவர்களே, இங்ஙனமாய் உருவாகும் திருவுருவங்களின் கண்களைத் திறந்து, அவற்றுக்கு உயிரூட்டி, மக்களைக் காக்குமாறு கோயில் விக்கிரகங்களில் சக்தியினை நிலைநிறுத்துகின்றார்கள். *ஸுப்ரபேத ஆகமம்.*

தென்கிழக்கு திசையில் அமர்ந்திருக்கும் நந்தியை வணங்கிய பிறகு, தென்மேற்கு திசையில் இருக்கும் மகாகாலனையும் வணங்க வேண்டும். *காரண ஆகமம்.*

தன்னுடைய சக்திக்கும், சூழ்நிலைக்கும், வசதிக்கும் உட்பட்டு எத்தனை முறை சொல்ல முடியுமோ அத்தனை முறை சிவமந்திரத் தினைச் சொல்லிச்சொல்லி, தன்னையே சிவபெருமானிடம் தஞ்சம் புகுத்திவிட வேண்டும். *காரண ஆகமம்.*

நற்சிந்தனைகள் பொதிந்து முழு நம்பிக்கை மற்றும் பக்தியால் பல்வேறு கடவுளர்கள் தொழும் சதாசிவ லிங்கத்துக்கு முன்னால்

*நான் நமஸ்கரிக்கின்றேன். கோடானுகோடி சூரிய ஜ்வலிப்பு களுக்கு நிகரானது, சதாசிவ ஜ்வலிப்பு. லிங்காஷ்டமம்.*

*பதி என்பது ஆசீர்வதிக்கப்பட்ட சிவலிங்கம். பசு, இதற்கு முன்னால் நிற்கும் தெய்வீகபசு. திலகமிட்ட நிலையில் இருப்பவர் இவர். தேடிக்கொண்டு வரும் பக்தர்களின் கண்களுக்கு மட்டும் அகப்படும்படி இந்நிலையில் நிற்கின்றார் இறைவர். திருமந்திரம்.*

*சிவாலயத்தில் வழிபாடுகள் குறையும்போது, நாட்டை ஆள்பவனை சூது கவ்வுகின்றது. மழை குறைகின்றது. நிலத்தில் பஞ்சமும் திருட்டும் தலைதூக்குகின்றது. தூய நந்திநாதன் சொல்கின்றான் இப்படி. திருமந்திரம்.*

*கோயிலற்ற பகுதி, புனிதமுமற்றது. விபூதி எனும் திருமண் பூசாமல் ஆண்கள் இருக்கும் பகுதி, புனித வேதத்தினை ஒலிக்காத பிரதேசம், பல புண்ணியத் தலங்களை உள்ளடக்கியிராத நிலம், வெண்சங்கு பக்திப்பரவசத்துடன் ஊதப்படாத நகரம், திருவிழாக்கள் எடுத்து கொண்டாடப்படாத கிராமங்கள், பக்தர்கள் வழிபாட்டுக்காக பூக்களைக் கொய்து வராத இடம், இதெல்லாம் வாழத்தகுந்த நகரங்களே அல்ல. வெறும் காடு. திருமுறை.*

*பூக்களை சேகரியுங்கள். புனித நீரினை எடுத்துக் கொள்ளுங்கள். அவருக்கு அபிஷேகம் நடத்தி பொற்பாதங்களில் பூக்களைக் கொட்டுங்கள். முன்நின்று பிரார்த்தித்து குன்றாத பக்தியுடன் அவரை கொண்டாடுங்கள். என்றென்றும் சம்பத்துக்களுடன் விளங்குவீர்கள். புலன்களை அடக்கி விடுங்கள். அவரை நோக்கி விரையுங்கள். முழுசாய் சரணடைந்து விட்டு தினசரி வழிபடுங்கள். அவர் நிச்சயமாய் பக்தியில் தோய்க்கப்பட்ட உங்களுடைய பூஜையினை ஏற்றுக் கொண்டு பதிலளிப்பார். திருமந்திரம்.*

*எல்லையற்ற இறைவனுக்கு, இந்த இதயமே புனிதத்தலம். சதையும் ரத்தமும் கொண்ட புனித உடலே, பெருங்கோயில். வாய்தான் நுழைவாயில். இந்த அமைப்பினுள் ஆழ செல்பவர் களுக்கு, ஜீவனே சிவலிங்கமாய் வசப்படும். திருமந்திரம்.*

# பூஜை



## சிவாலய பூஜைகளுக்கான அதிகாரங்கள்

*வாசனைத் திரவியங்கள், புஷ்பங்கள், ஊதுவத்திகள், விளக்குகள் மற்றும் புது கனிகள் ஆகிய ஐந்தினையும் சமர்ப்பிப்பது, கலாச்சாரமான பூஜை வழிபாடாய் மிளிர்கின்றது.*

**-காமிகா ஆகமம்**

# பூஜையின் உள்ளார்ந்த முக்கியத்துவம் என்ன?

### ஸ்லோகம் 106

*பாரம்பரியமாய் வழிவழி வரும் ஓர் உரிமையே வழிபாடு எனப்படும் பூஜா. இந்துக்களுக்கு இது ஒரு புனிதத்துவம் வாய்ந்த சடங்கு. பூஜை என்பது சிவபெருமான் மற்றும் ஏனைய கடவுள்களை எழுப்புவதாகும். மனமார்ந்த அன்பு, பக்தி மற்றும் சரணாகதியைக் காட்டும் ஓர் இறைவழியுமாகும். ஓம்.*

### விளக்கம்

*பூஜை என்பதே ஒரு விழாதான். மணியடிப்பது, சூடமேற்றிக் காட்டுவது, நிவேதனங்களை அளிப்பது, மந்திரங்கள் ஓதுவது ஆகியன, சிவபெருமானையும் இன்னபிற தேவர்களையும் தட்டியெழுப்பும். பிறகு இறைவர்கள் வந்து நம்மை ஆசீர்வதித்து உதவுவார்கள்.*

*இறைவனுடன் இரண்டற நாம் கலக்க உள்ள ஒரு புனித வழி, பூஜை.*

*ஆச்சரியமும் மிருதுவுமான இறைதொடர்புகள் நிகழும் பூஜையில்.*

*சிரத்தையுடன் பூஜை நிகழும் நாள், நம் மனம் நேசிக்கும் இஷ்ட தெய்வத்துடன் மிகவும் நெருக்கமாகவும் பிரக்ஞையுடனும் நாம் கலந்திருக்கும் தினமாக அமையும். எனவே, சைவர்களுக்கு, ஆன்மீக வாழ்க்கையின் அச்சாணியாகின்றது, பூஜை.*

*சிவ ஆகமத்தில் சுட்டிக்காட்டப்பட்டுள்ள வழியில் இடம் பெறும் நமது பூஜைகள், நம் வேண்டுதல்களை செலுத்தும் ஒரு வழியாக அமைகின்றது.*

*வாழ்க்கையின் புனித நாளாக அமையும் பூஜை நாளில், சரணாகதியாய் இறைவனின் பாதங்களில் விழுந்து பக்தன் தனது நன்றியை தெரிவிக்கின்றான். மனதார பிரார்த்தித்து கோரிக்கைகளை முன்வைக்கின்றான். ஆன்மாவில் இறைவன் உறையும் ஆழ்பிர தேசத்துக்குள் தியானத்தின் வழி பிரவேசித்து, அப்படியே கருணை நதியில் மூழ்கிப் போகின்றான்.*

*சுபநாட்களன்று, கோயில் பூசாரிகளை வைத்து, விரிவாகவும் சுத்தமாகவும் ஆகமங்கள் உரைத்துள்ள வகையிலும் பூஜைகளை நடத்தலாம்.*

*அல்லது, வீட்டிலேயே கோயில்போல சுத்தமாக பராமரிக்கப் படும் இடத்தில், காலையும் மாலையும் பக்தி சிரத்தையோடு பக்தனால் பூஜை மேற்கொள்ளப்படலாம்.*

**வேதங்கள் புகழ்கின்றன:**

*''பற்பல சடங்குகளை உள்ளடக்கிய விதமாய் தெரிகின்றன, தியாகபூஜைகள்.'' ஓம் நமசிவாய.*



*சிவலிங்கம் கொலுவீற்றிருக்கும் புனித கருவறையில் பக்தன் அமர்ந்திருக்கிறான்.*

*உடலால் புனிதத்தன்மையினை அடைய பற்பல நாட்கள் நோன்பிருந்து சிவநாமம் ஓதியதால் பக்தனின் உடல் மெலிந்து விட்டது.*

*ஆனால், மிகவும் சாதாரணமான பூஜா வகையில் அவனது இறைவனுக்கு பூமாலையும் பாமாலையும் அவன் அளிக்கும்போது, பக்தனின் ஆன்மா ஜொலிக்கின்றது.*

# அர்ச்சனையின் தனித்துவம் யாது?

## ஸ்லோகம் 107

*கோயிலில் நடத்தப்படும் பூஜைகளில் சற்று விரிவானதொரு முறையே அர்ச்சனை. இதில், பக்தனின் பெயர், ராசி, நட்சத்திரம், கோத்திரம் ஆகியன பூசாரியால் இறைவனிடம் தெரிவிக்கப்பட்டு, அவனுக்கும் அவனுடைய குடும்பத்தினருக்கும் தனித்துவமான ஆசீர்வாதங்கள் பெறப்படுகின்றன.*

## விளக்கம்

நம் வாழ்க்கையின் ஏதாவதொரு முக்கியமான நாளில் இறைவனின் ஆசீர்வாதங்களை தனித்துவமாய் நாம் பெற விரும்பினால், அந்நாளில் அர்ச்சனை நடத்தப்படுகின்றது.

இது கோயிலிலேயே கட்டணம் கட்டி மேற்கொள்ளப் படுகின்றது.

பூ, மாலை, வாழைப்பழம், விபூதி-குங்குமம், கற்பூரம், வாசனைத் திரவியங்கள், பன்னீர் போன்றவை அடங்கிய பூஜைக்கான கூடை பூசாரியிடம் தரப்படும். பூசாரியிடம் நமது பெயர், நட்சத்திரம் ஆகியன உரத்த குரலில் சொல்லப்படும்.

பிறகு, நமது குடும்பம் எந்த ரிஷியின் வழியில் வருகின்றதோ அவரது பெயர் கொண்ட கோத்திரம் நம்மால் பூசாரியிடம் சொல்லப்படும்.

இதற்கடுத்து, நம்முடைய இந்த அடையாளங்களை அவர் அப்படியே கொண்டு போய் இறைவனிடம் சமஸ்கிருதத்தில் சமர்ப்பிப்பார்.

*இதனையடுத்து, நமக்காக, இறைவனின் 108 திருநாமங்களை சொல்லி ஒரு சிறு பிரத்தியேக பூஜை, அர்ச்சனை எனும் வழியாக செய்யப்படும்.*

*இதன்வழியாய், இறைவனின் ஆசீர்வாதங்கள் நமக்கென்று தனித்துவமாய் பெறப்படும்.*

*நிறைவாய், நாம் தந்தவற்றில் அநேகமானவற்றை 'பிரசாதம்' என்று பூசாரி திரும்பத் தந்துவிடுவார்.*

**வேதங்கள் கூறுகின்றன:**

*''எங்களை எதிர்நோக்கியிருக்கும் படுகுழிகளில் நாங்கள் விழுந்து விடாமல், உனது கருணையால், இறைவா, மீண்டும் எங்களை நீ காப்பாற்றித் தா. எங்களுக்கும் எங்களது குழந்தை களுக்கும் நல்வழி காட்டும் சக்திமிகு விசாலமான கோபுரமாய் நீ நில். எங்களைச் சார்ந்த மக்களுக்கு நீ நலனையும் அமைதியையும் கொண்டு வந்து சேர்.'' ஓம் நமசிவாய.*



*தனது வீட்டிலேயே உள்ள புனிதப் பகுதியில், சிறு ஸ்படிக லிங்கத்துக்கு, பக்தன் மலரபிஷேகம் செய்கின்றான்.*

*அவனது பூஜை ஒருமுகப்படுத்தப்பட்டு துல்லிய சுத்தமாய் இருப்பதால், அவனது ஆன்ம உடலில் சிவனார் தோன்றுகின்றார்.*

*அவன் வாழ்க்கையையே புனிதமாய் மாற்றிவிடுமாறு அவன் சிரசை அவர் ஸ்பரிசித்து அருள்கின்றார்.*

# உருவ வழிபாட்டின் இயல்பு யாது?

**ஸ்லோகம் 108**

*எங்கும் நிறைந்திருக்கும் சிவபெருமானையும் இன்னபிற தேவர்களையும் மூர்த்தம் எனும் உருவ வழியாய் கொண்டு வந்து, அந்த தாற்காலிக பிம்பத்தில் நாம் வழிபடுகின்றோம். அதில் உறையும் இறைமையுடன், பூஜை எனும் புனிதச் சடங்கின் வாயிலாக நாம் தொடர்பினை ஏற்படுத்திக் கொள்கின்றோம். ஓம்.*

**விளக்கம்**

*கல் அல்லது உலோகம் கொண்டு உருவாக்கப்படும் பிம்பங்களை, வெறுமனே தோன்றும் இறை உருவங்கள் என்று எடுத்துக் கொள்ளக்கூடாது. பிம்பங்களில் உள்ள அந்த இறைவனின் அன்பும், சக்தியும், ஆசீர்வாதங்களும், அந்த பிம்பத்தின் வழியாய்த்தான் உலகத்துக்குள் பரவிக் கொண்டிருக்கின்றன.*

*மற்றவர்களுடன் தொலைபேசி வழியாய் தொடர்பேற்படுத்திக் கொள்ளும் அறிவியல் திறனுடன் நாம் இதனை ஒப்பிட்டுக் கொள்ளலாம். ஆயிரம் மைல்களுக்கு அப்பாலிருக்கும் மனிதனுடன் தொடர்பேற்படுத்திக் கொள்ளும் ஒரு வாகனமாய் நாம் தொலைபேசியை பயன்படுத்துகின்றோம்.*

*டெலிபோன் இல்லாது, இத்தனை தூரம் கடந்து நம்மால் தொடர்பேற்படுத்திக் கொள்ளவே இயலாது.*

*இதேபோல, புனிதமாக்கப்பட்ட கோயில் மூர்த்தங்கள் இல்லாமல், நம்மால் இறைமையுடன் சுலபமாய் தொடர்பு கொண்டுவிட இயலாது.*

*இறைவனின் இருப்பினையும் அவரது சக்தியின் அதிர்வையும் பிம்பங்களில் காணலாம்.*

*இந்த புனிதமாக்கப்பட்ட பிம்பத்தையே தனது தற்காலிக உடலாக இறைவனால் ஆக்கிக்கொள்ள முடியும்.*

*பூஜை வழிகளில் நாம் நம்பிக்கை சிதறாது முன்னேறும்போது, அந்த பிம்பத்தையே இறைவனின் திருவுருவாக நாம் கொண்டாட ஆரம்பிக்கின்றோம். ஏனென்றால், பூஜை வேளைகளில், அந்த பிம்பத்தில் அவர் வந்து பிரக்ஞையுடன் குடிகொண்டு விடுகின்றார் என்பதனை நாம் அனுபவித்திருப்போம், அதனால்.*

*அப்போது, நமது இருப்பினையும், எண்ணங்களையும், பிம்பத்தை பூசாரி மிருதுவாய் தொடுவதையும், 'மூர்த்த தெய்வம்' அறிந்தே இருக்கும்.*

**வேதங்கள் புகழ்கின்றன:**

*''மலைகளின் கலைஞனே, ருத்ரா... எங்களிடம் வா. பயமும் குழப்பமும் அற்ற ஞானத் திருமுகத்தின் பிரகாசம் எங்கள் மீதும் படரட்டும். கருணை மயமாய் நீ எங்கள் முன் வா.'' ஓம் நமசிவாய.*



*நெஞ்சுநிறை சரணாகதியுடன், புனிதக் கருவறைக்குள் பக்தன் நுழைகின்றான்.*
*அறையின் திரையினை இழுத்து மூடிவிடுகின்றான்.*

*லிங்கத்தின் மீது ருத்திராட்ச மாலையினை அணிவிக்கும் அவன்,*
*மூர்த்தத்தை சுற்றி நெய் விளக்குகளை வரிசைபடுத்துகின்றான்.*

*அப்போது அவனது பக்தியை மெச்சி, அவன் தோள்களை*
*மிருதுவாய் தொட்டு ஆசீர்வதிக்கின்றார் சிவபெருமான்.*

# சிவாலயங்களின் பூசாரிகள், யாவர்?

## ஸ்லோகம் 109

*சிவனாரின் அடியராய் தன்னை நிறுத்தி, கோயிலை நன்கு பராமரித்து அங்கு நடைபெற வேண்டிய சடங்குகளையும் வழிபாடுகளையும் பரம்பரை பரம்பரையாய் செவ்வனே செய்து வருவோரே, சிவாலயங்களின் பூசாரிகளாய் விளங்குகின்றார்கள். இளவயதிலிருந்தே சிவ வழிபாட்டின் நுணுக்கங்களில் இவர்கள் பயிற்சி பெற்றிருப்பார்கள். ஓம்.*

## விளக்கம்

ஒவ்வொரு கோயிலுக்கும் அதற்கே உரித்தான ஒரு பணிவிடைக் குழு இருக்கும்.

சில கோயில்களில் ஒருத்தர் மட்டுமே இருப்பார்கள். சில கோயில்களில், அதிலுள்ள மற்ற பரிவார மூர்த்தங்களைக் கவனித்துக் கொள்வதற்கும், திருவிழா மற்றும் விசேஷ நாட்களை விமரிசையாய் நடத்துவதற்கும், ஒரு பூசாரி குடும்பமே இயங்கும்.

இவர்களனைவருமே சிவ வழிபாட்டில் உள்ள நுணுக்கமான வழிமுறைகளை, சிறு பிராயம் முதலே கட்டுக்கோப்பாய் கற்றிருப்பார்கள்.

ஆதிசிவனின் வழிதோன்றலில் விளங்கும் பிராமணர்களே வழக்கமாய் சிவாலயங்களின் பூசாரிகளாய் இருப்பார்கள். சில கோயில்களில் இது மாறியிருக்கும்.

கடவுளின் தூதுவர்களாய் நிறுத்தப்படும் இப்பூசாரிகள், உலகியலின் அடிப்படை தத்துவார்த்தங்களில் தெளிந்தவர் களாகவும், உயிரின வாழ்க்கையின் சாற்றினைப் பற்றிய ஆன்மீக ஞானம் நிரம்பியவர்களாகவும், சாதாரண மனிதர்களிலிருந்து

உயர்ந்து ஆன்மீக ஸ்தானத்தில் நிற்க வேண்டும். நூற்றுக்கணக்கான மந்திரங்களை மனதால் அறிந்தவர்களாகவும், அவற்றை அந்தந்த பூஜைகளின்போது அழகாய் பயன்படுத்துபவர்களாகவும் விளங்க வேண்டும்.

முழுதும் சிறப்பாய் பயிற்சி பெற்று தேறுபவர்கள், சிவாலயங் களில் *பரார்த்த பூஜா* எனும் பக்தகோடிகளுக்கான உயர்பூஜையை நடத்தவல்ல சத்குருவாக உயர்த்தப்படுகின்றார்கள்.

பொதுவாய், பக்தர்களின் தனிப்பட்ட சொந்த பிரச்சினைகளில் பூசாரிகள் நுழைவது கிடையாது. பூசாரிகள், கோயிலை பராமரித்து, பூஜைகளை பக்தி சிரத்தையுடன் செய்யும் ஆண்டவனின் சேவகர்கள். பக்தனுக்கும் ஆண்டவனுக்கும் இடையே இவர்கள் ஒருபோதும் நுழைவதில்லை.

தலைமை பூசாரிகள் மணமுடித்தவர்களாக இருக்கும் நிலையில் அவருடைய உதவியாளர்கள் பிரம்மச்சாரிகளாகவோ அல்லது மனைவியை இழந்தவர்களாகவோ அமைகின்றார்கள்.

**ஆகமங்கள் விளக்குகின்றன:**

''நன்கு தரம் வாய்ந்து தேறிய பூசாரிகளால் மட்டுமே, தனக்கான ஆத்மார்த்த பூஜையையும் மற்றவர்களுக்கான பரார்த்த பூஜையையும் செய்ய முடியும். இப்படிப்பட்ட ஆதி சைவனே, சைவ பிராமணன், குரு.'' ஓம் நமசிவாய.



*ஒரு சைவப் பூசாரி, சிவலிங்கத்தின் முன்னால் நிற்கின்றார்.*

*சந்தனக் கதவு திறந்துள்ளது. திரைச்சீலையும் விலக்கப்பட்டுள்ளது.*

*தென்னிந்திய வழக்கப்படி மொட்டை போட்டிருக்கும் இவர், சிவ-சக்தியை குறிக்கும் வகையில் வெள்ளை மற்றும் சிகப்பு நிறங்களாலான உடைகளை தரித்துள்ளார்.*

*குங்கிலியப்புகை இடும் கணப்பினைத் தன் கைகளில் ஏந்தி மணம் பரப்புகின்றார்.*

# பூஜையின்போது பூசாரி செய்வது என்ன?

## ஸ்லோகம் 110

*பூஜையின்போது, மந்திரங்கள், முத்திரைகள் மற்றும் ரகசியமான சடங்கு முறைகள் வாயிலாக இறைமையை எழுப்பு கின்றார் பூசாரி. இறைமையை எழுப்புவதற்கான அனைத்து வழிமுறைகளும் ஆகமங்களில் மிக விளக்கமாக உள்ளன. பூஜையின்போது சிரத்தையாக ஒரு பூசாரி செய்யும் ஒவ்வொரு முத்திரைகளுக்கும், சொல்லும் ஒவ்வொரு மந்திரங்களுக்கும், மனதில் ரகசியமாய் இடம்பெறச் செய்யும் வழிமுறைகளுக்கும், இறைமை ததும்பும் சத்திய அர்த்தங்கள் உள்ளன. ஓம்.*

## விளக்கம்

*கட்டுப்பாடான ஒழுங்குமுறைகள் மற்றும் விசேஷ சுத்திகளைக் கடைப்பிடித்து பூஜை என்று தான் செய்யவுள்ள ஒரு புனித நிகழ்ச்சிக்கு தன்னை பூசாரி தயார்படுத்திக் கொள்கின்றார்.*

*பூஜைக்கு முன்னால், சம்பிரதாய முறைப்படி சுற்றுச்சூழலை சுத்தப்படுத்துகின்றார்.*

*பூஜை துவங்கியதும், அனைத்து விக்கினங்களையும் தீர்த்துத் தரும்படி விக்கின விநாயகரை அவர் தொழுகின்றார்.*

*பிறகு, இறைவனை, சிவபெருமானை, விக்கிரகத்துக்குள் வந்து நிறைந்து ஜொலிக்குமாறு பிரார்த்திக்கின்றார். பக்தர்களின் பிரார்த்தனைகளை ஏற்றுக்கொண்டு கனிவுடன் வந்து அங்கு அருளுமாறு வேண்டுகின்றார்.*

*இறைவனது திருநாமத்தை சொல்லி, வேதங்களிலும், ஆகமங்களிலும் சொல்லப்பட்டுள்ள மந்திரங்களை ஒலிகொண்டு முழங்கி, ஷேமங்களுக்காக பூசாரி வேண்டுகின்றார்.*

*உடையாத அரிசி, எரியும் கற்பூரம், விபூதி, ஊதுவத்தி, மஞ்சள்-குங்குமம், புஷ்பங்கள் மற்றும் நிவேதனங்களை இறைவனுக்கு படைக்கின்றார் பூசாரி.*

*மூர்த்தத்தின் மீது பாலபிஷேகம், பன்னீரபிஷேகம், சந்தன அபிஷேகம் ஆகியனவும் இடம்பெறுவதுண்டு.*

*மணிகள் உரத்து ஒலிக்கும். சங்குகள் வீறுகொண்டு ஊதப்படும். மேள தாளங்களும் உடுக்கை தப்பட்டைகளும், இசைக் குழுவினரால் இசைக்கப்படும்.*

*கோயில் தெய்வத்தினை மகாராஜாக்களின் மகாராஜாவாக கருதி அதனை மிகுந்த அக்கறையுடனும் பாசத்துடனும் தொழுது வழிபடுவார் பூசாரி.*

*பூஜை முடிந்ததும், தற்போது புனிதமாக்கப்பட்டிருக்கும் அனைத்து படையல்களையும் அவர் பக்த கோடிகளுக்காக வெளியே அனுப்புவார்.*

**வேதங்கள் உரைக்கின்றன:**

*''தினசரி பூஜை பரப்பப்படுகின்றது. தினசரி பூஜை நிறைவுறுகின்றது. இவ்வாறு தினசரி வழிபடுபவனை இறைவனுடன் பூஜை இணைத்து வைக்கின்றது. இவ்வாறு மனதின் ஆழ்நிலைக்குப் பூஜையின் வழி சென்று தினசரி சொர்க்கத்தை அனுபவிப்பாயாக.'' ஓம் நமசிவாய.*



*கைகளில் பூஜைக்கான முத்திரைகளைக் கொண்டு வந்து, சிவபெருமானின் சிவலிங்க மூர்த்தத்துக்கு முன்னால் பூஜையில் உட்காருகின்றார் பூசாரி.*

*பூஜையின் முக்கிய அங்கமாகின்றன, ரகசிய முத்திரைகள்.*

*இறைவனை வந்து விக்கிரகத்தில் அமர வைக்கவல்ல ரகசிய முத்திரைகளை மனதால் செய்து முடிக்கும் புலமையை அறிந்தவர்கள் பூசாரிகள்.*

*பூஜை என்பதே ஒரு யோகநிலைதான் என்பதையும், அது சிவன் எனும் பிரக்ஞையுடன் பக்தனை இணைக்கவல்லது என்பதையும் அனுபவரீதியாக பூசாரிகள் அறிந்துள்ளார்கள்.*

புனிதமான தெய்வச் சடங்குகளை பக்தி ததும்ப மேற்கொள்ளும் பக்தர்கள், இறைவனின் உலகத்துக்கு தேர் வைத்து அழைத்துச் செல்லப்படுவார்கள். தாய்ப்பசு தனது கன்றினை வாஞ்சையுடன் வருடிக் கொடுப்பதைப்போல, பக்தி பொங்கும் உணர்வில் அக்னியில் நெய் வார்க்கின்றான் பக்தன். *ரிக் வேதம்.*

பசிக்கும் குழந்தை உணவினை எதிர்பார்த்து தாயிடம் உட்கார்ந்திருப்பதைப் போல, அக்னிஹோத்திரத்தை சுற்றிலும் பக்தர்கள் உட்கார்ந்துள்ளார்கள். *ஸாம வேதம்.*

என் இந்த பிரார்த்தனைக்கு, எனது மூதாதையர்கள் காவலாய் வந்து நின்று உதவட்டும். பூஜையில் உள்ள எனது பங்களிப்பிலும், எனது கடமையிலும், பூஜையின் மீதான எனது அவாவிலும், கடவுளை நான் அழைக்கும் இந்த பிரார்த்தனையிலும், அவர்கள் வந்து நின்று உதவட்டும்! வாழ்க, வாழ்க! *அதர்வண வேதம்.*

யாகத்தின்போது, மரங்களின் தலைவனான அக்னியே... உன்னை பக்தர்கள் உயர் எண்ணெய்களால் பூஜிக்கின்றார்கள். நீ அதில் எழுந்து நிற்கும்போது எங்களுக்கு நல்ல எதிர்காலத்தினை அருள்வாய். கிழக்கு முகமாய் அமைக்கப்படும் உனது பூஜையில் நீ எங்களது பிரார்த்தனைகளை ஏற்றுக் கொள்கின்றாய். எங்களுக்கு சம்பத்துக்களைக் கொண்டு வந்து சேர்ப்பிக்க, நீ நின்று எரி. உன் யாகத்தினை இங்கு நடத்திக் கொண்டிருக்கும் பக்தனுக்கு நீ செல்வத்தையும் மலர்ச்சியையும் கொண்டு வந்து கொடு. *ரிக் வேதம்.*

தானாய் எழுந்திருக்கும் சுயம்பு லிங்கமும், இறைவனின் பிம்பம் கொண்ட படமும், மற்றவர்களின் நலனுக்காக பூஜிக்க உள்ள இறைமைகள் என்றே அர்த்தம். மற்றவர்களின் நலனுக்காக பிரார்த்திக்கும் ஒருவனுக்கு கிடைக்கவல்ல நலன்கள், அவன் அவனுக்காக பிரார்த்திக்கும் நலன்களைப் போலவேதான் கிடைக்கும். ஆரம்பம் முதலே, சிவலிங்கத்தை பூஜிக்கும் முறை, ஆகமங்களில் எப்படி சொல்லப்பட்டுள்ளதோ அதையொட்டியே அமைய வேண்டும். *காரண ஆகமம்.*

திருநீறால் முக்கோடு போட்டுக் கொள்ளும் குருக்களுக்கு, யாகங்கள் செய்யும் அதிகாரமுண்டு. எப்படி அக்னியே

*அனைத்துக்கும் அடிப்படையோ, அப்படியான அடிப்படையாய் உதித்தவர் சிவபெருமான். அவர், மந்திரங்களாகவும் சிவலிங்க மாகவும் பக்தனின் கண்களுக்கு முன்னால் உருவெடுக்கின்றார். காரண ஆகமம்.*

*வழிபாட்டின் போதும், தெய்வச்சடங்கின் முடிவிலும், அபிஷேக நேரத்திலும், மூர்த்தத்தினை அலங்கரிக்கும்போதும், விக்கிரகங்களை நன்னீராட்டும்போதும், தீபங்கள் ஏற்றும்போதும், தெய்வச் சிற்பத்துக்கு சந்தனம் தெளிக்கும்போதும், புண்ணிய நீர்களால் தெய்வ பிம்பங்களை நீராட்டும்போதும், ஊதுவத்தி ஏற்றி வாசம் காட்டும்போதும், வழிபாட்டில் இங்ஙனமாய் பண்ணப்படும் அத்தனை செய்கைகளிலும், மணியோசையினை சிவாச்சார்யா அடித்தாக வேண்டும். காரண ஆகமம்.*

*வ்யோம-வ்யாபி மந்திரத்தினை சொல்லிக்கொண்டு லிங்கத்தைக் குளிப்பாட்ட வேண்டும். நல்லெண்ணெய், தயிர், பால், நெய், இளநீர், தேன் போன்றவற்றால் அபிஷேகங்கள் செய்து விட்டு, ஹ்ருதய மந்திரத்தினை பாராயணம் செய்தபடி, நீர்கலந்த நுண்ணிய அரிசிமாவினால் ஜாக்கிரதையாக லிங்கத்தினைத் தேய்க்க வேண்டும். காரண ஆகமம்.*

*முதலில், பிரார்த்தனை. பிறகு இறைவனை நிலைநிறுத்துதல். மூன்றாவதாக, பாதங்களைக் கழுவ தண்ணீர் அளிக்க வேண்டும். நான்காவதாக, அருந்துவதற்கு தண்ணீர் தரவேண்டும். ஐந்தாவதாக, நீரை தரும், ஆர்க்யா. ஆறாவதாக, சுத்தி செய்வதற்காக தெளிக்கப்படும் தண்ணீர். ஏழாவதாக உடைகளும் சந்தனங்களும் அளித்தல். மலர்களால் பூஜிப்பது, எட்டாவது. ஒன்பதாவது: விளக்கும் வாசனை திரவியங்களும் அளித்தல். உணவினை படைப்பது பத்தாவதாக இடம்பெறுகின்றது. பதினொன்றாவதாக நிவேதனங்கள் தரப்படும். பன்னிரண்டாவதாக, சுத்தமான நெய் அக்னியில் வார்க்கப்படும். பதின்மூன்றாவதாக மீண்டும் நிவேதனங்கள் தரப்படும். இசையும் பாட்டும் பதினான்காவதாய் வரும். பதினைந்தாவதாய், நடனங்கள். பதினாறாவதாய், நிறைவுற்று கிளம்புதல். காரண ஆகமம்.*

சாதுக்களாலும் ஞானியராலும் சிவபெருமானை அடைய முடியும் - ஏனென்றால் ‘அவன்’ தெரிவான். வழிபடுபவர்கள்கூட ‘அவனை’ கண்டுவிட முடியும். ஹரனின்மீது தாளா அன்பு கொண்டு நாம் மாறிவிட்டால், அவரே முன்வந்து ஒரு ஜோதியாய் பக்தனுக்குள் பரிமளித்து விடுவார். *திருமுறை.*

கடனுக்கு பூஜைகள் செய்பவனாய் ஒரு பூசாரி இருந்துவிட்டால், அவனை கிலேசப்படுத்தும் சண்டைகளும் பூசல்களும் அவனுக்கு மூளும். வியாதி பரவும். நிலங்கள் அபகரிக்கப்பட்டுவிடும். புண்ணியமான நந்தி இவ்வாறு சொல்கின்றது. *திருமந்திரம்.*

புஷ்பங்களாலும் தண்ணீராலும் தூயவுள்ளத்துடன் வழிபாட்டினை மேற்கொள்பவர்களே ஆழ்ந்த பக்தர்கள் என்றாகின்றார்கள். இதனைக் கண்டு குளிரும் ஆண்டவன், இப்படிப்பட்டவர்கள் மீதே கருணையை பொழிகின்றார். தூயவுள்ளத்தினை கடைப்பிடிக்கத் தெரியாதவர்கள் அவனது கருணையை சம்பாதிக்க முடியாமல், அறியாமை எனும் இருளில் மடிந்து விடுகின்றனர். *திருமந்திரம்.*

# பக்தி



## கடவுளின் மீதான ப்ரியம்

*மிகவும் கஷ்டப்பட்டு பூக்கள் பறித்து நன்னீர் சுமந்து வருகின்றார்கள் அவர்கள். சந்தேகமற்ற பக்தி கொண்டு ஆண்டவனை அவர்கள் தொழுகின்றார்கள். அவனது பொற்பாதங்களில் பூக்களைச் சமர்ப்பித்து விட்டு ஓதுங்கிநின்று வேண்டுகின்றார்கள். எப்போதும் மழைமேகங்கள் இருந்து செல்வம் கொழிக்கட்டும் என்று பிரார்த்திக்கின்றார்கள்.*

***-திருமந்திரம்***

# ஆரம்ப ஆன்மீக அன்பர்களுக்கு மட்டுந்தான் கோயில் வழிபாடா?

## ஸ்லோகம் 111

*ஆன்மீகத் தேடுதல் கொள்ளத் துவங்கும் எந்த ஆணுக்கும் அல்லது பெண்ணுக்கும் கோயில் வழிபாடு உண்டு. மனிதசேவை, பக்தி, யோகா மற்றும் ஞானத் தெளிவு போன்றவற்றால் நம்முள் ஆன்மீக முகிழ்ச்சி முகிழும்போது, கோயில் வழிபாட்டின் அர்த்தமும் அனுபவமும் ஆழமாகும். ஓம்.*

## விளக்கம்

கோயில் வழிபாட்டினை நாம் தவிர்க்கலாகாது.

ஆன்மீகத்தின் நான்கு நிலைகளில் நாம் மெதுவாய் முன்னேற்றம் காணும்போது, நமக்கு கோயில் வழிபாடு முக்கியத்துவம் கொண்டதும் அர்த்தமுள்ளதாகவும் ஆகின்றது.

*சரியா பாதா* நிலையில், சுயநலமற்ற சேவை செய்வதற்காக நாம் கோயிலுக்கு செல்கின்றோம். கோயில் வழிபாட்டின் இந்நிலையில் மனிதசேவை நம்மிடமிருந்து எதிர்பார்க்கப்படுகின்றது.

வழிபாட்டு முறைகள் அடங்கிய *கிரியா பாதா* நிலையில், நாமே விரும்பி கோயிலுக்கு செல்லும் பக்குவம் மலர்ந்திருக்கும். கடவுளின் மீது நம்முள் முகிழ்ந்திருக்கும் அன்பே, இங்கு உந்து சக்தியாய் நம்மை கோயிலுக்கு தள்ளும்.

*யோக பாதா* நிலையில், இறைவனை, நமது இருதயக் கமலம் எனும் ரகசிய அரங்கத்தில், உள்ளார்ந்து துதிப்போம். இந்நிலையில் தான், தங்களின் இதயக் கோயிலிலேயே தெய்வத்தினை கண்டு விடும் உயர்நிலையில்தான், யோகிகள்கூட கோயில் வழிபாட்டை

*தவிர்க்க முடியும். ஆயினும், ஆழ்நிலை விட்டுவிட்டு மீண்டும் இந்த பூமிப்பந்தின் மாயவலைக்குள் அவர்கள் விழும்போது, வழிபாட்டுக்கு கோயில்கள்தான் யோகிகளுக்கும் கைதரும்.*

*கோயில் வழிபாட்டில் முழுமையை அடைந்தவர்கள், பிரார்த்தனைக்கான ஒரு பொருளாய் ஆகிவிடுகின்றார்கள். இதுவே ஞான பாதா. வாழும், நடமாடும் கோயிலாய் அவர்களே பரிமளிக்கின்றார்கள்.*

**வேதங்கள் புகழ்கின்றன:**

*''அனைத்திலும் உயிர்த்திருக்கும் 'அவனுக்கு' வந்தனங்கள். இங்கிருக்கும், நாளை வரவிருக்கும் அனைத்திலும் உறையும் தெய்வத்துக்கே வாழ்த்துக்கள். சொர்க்கம் என்பதை தனக்கு மட்டுமே சொந்தமாய் கொண்டுள்ள அந்த பிரம்மத்துக்கு நமஸ்காரங்கள்! முழுமையில் பூரணமாய் இருக்கும் அவனே முழுமையை எங்கெங்கும் பொழிகின்றான். முழுமை பெருகுகின்றது - முழுமையுடன் முழுமையை கலக்க.'' ஓம் நமசிவாய.*



*பாறைகளால் கட்டப்பட்டுள்ள ஒரு கோயிலில்,*
*மண்டியிட்டு முழு சரணாகதி ஆகின்றாள் ஒரு பக்தை.*

*காணிக்கைக்காக அவளது அழகிய கூந்தலை அவள் துறந்து விட்டாள்.*

*தனது ஆடையலங்காரங்களை துறந்து வெண்ணிற ஆடை தரித்து விட்டாள் அவள்.*
*துல்லிய தூய நிலை எனும் நிலையிது.*

## வழிபாட்டுக்கு தங்களை எவ்வாறு பக்தர்கள் தயார் செய்கின்றார்கள்?

### ஸ்லோகம் 112

*குளித்து, சுத்தமான துணியணிந்து, சக்திக்கு ஏற்ப புஷ்பங்கள், கனிகள் போன்ற காணிக்கைப் பொருட்கள் எடுத்துக் கொண்டு சிவாலயம் செல்கின்றோம். பூஜைக்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கும்போதேகூட நாம் நமது மனத்தினை ஒருமுகப் படுத்தி இறைவனின் பாதங்களையே சிந்திக்கத் துவங்குகின்றோம். ஓம்.*

### விளக்கம்

சிவாலயமோ அல்லது தெய்வம் உறையும் எந்தவொரு கோயிலோ, வழிமுறையோடு நம்மை நாமே சிறப்பாய் தயார்படுத்திக் கொள்ளாமல் அங்கு வழிபாடு நடைபெறக் கூடாது.

நாம் நம் வழிபாட்டினை எத்தனை சிரத்தையோடு நடத்து கின்றோமோ அதற்கேற்பத்தான் அது தரும் பலனும் அமையும்.

பூஜை நடத்துவதற்கு முன்னால் நம்முடைய உடலை நாம் கவனமாகக் கழுவவேண்டும். வாய் கொப்பளித்து, சுத்தமாய் குளித்து, தூயவுடை தரிக்க வேண்டும். கலாச்சாரத்துக்கு உகந்தவாறு பெண்கள் புடவையும் ஆண்கள் வேட்டியும் அணியலாம்.

இதெல்லாம் செய்து தயார்படுத்திக் கொண்டிருக்கும் காலம் நெடுகிலும் இறைவனின் திருநாமத்தையோ அல்லது மந்திரத்தையோ, மனதுக்குள்ளோ அல்லது மெதுவான ஓசையுடனோ நாம் சொல்லிக் கொண்டேயிருக்க வேண்டும். இதனால் உலகியலில் மனம் உழலாமல் அதனை மெதுவாய் கட்டுக்குள் கொண்டு வர முடியும்.

*இதற்கடுத்து தெய்வத்துக்கு காணிக்கையாக்க வேண்டியவற்றை நாம் எடுக்கின்றோம்.*

*உணவுக்கான நேரம் அருகில் வந்துவிட்டாலும், பூஜை முடிந்தபிறகே நாம் உணவெடுத்துக் கொள்கின்றோம்.*

*வெளிப்புறம் சார்ந்து நாம் வகைவகையாய் எத்தனை விஷயங்களை சாமிக்குக் காணிக்கையாக்கினாலும், உள்ளார்ந்த மனதின் அன்பும் பக்தியும் அர்ப்பணிப்புமே இறைவனின் பாதாரவிந்தங்களில் காணிக்கையாக்கவல்ல மிகவுயர்ந்த சத்தியப் பொருட்களாம்.*

**வேதங்கள் பரிசோதித்து சொல்கின்றன:**

*‘‘ஆன்மாவில் உறையும் ஆண்டவன், நம்பிக்கையோடு செய்யப்படும் பூஜைகளையும் வழிபாடுகளையும் மதிக்கின்றான். இதயத்தின் கொள்கை என்னவோ அதைச் சார்ந்தே நம்பிக்கை அமைக்கப்படுகின்றது. காலையும், மதியமும், அந்தியிலும், நம்பிக்கையுடனேயே பக்தன் பூஜைக்கு வருகின்றான். ஆகவே, ஓ, நம்பிக்கையே, எங்களுக்கு இறை நம்பிக்கையை சாத்தியமாக்கு!’’ ஓம் நமசிவாய.*



ஓர் ஆடவனும் அவனது மனையாளும் குளித்து நல்லுடை
அணிந்து பூஜைக்கு தயாராகி விட்டார்கள்.

காணிக்கைப் பொருட்களை ஒரு கூடையில் அவன் ஏந்தியிருக்க,
பூஜைக்கான சாமான்களை அவள் சுமந்து நிற்கின்றாள்.

கோயில் பணியாளின் வழிகாட்டுதலோடு இருவரும் ஒவ்வொரு கல்
தெய்வமாக போய் தங்களது நம்பிக்கையான பக்தியை அர்ப்பணிக்கின்றார்கள்.

# நம் பிரார்த்தனைகள் எவ்விதமாய் கடவுளைப் போய் சேர்கின்றன?

**ஸ்லோகம் 113**

*கோயில் வழிபாட்டின் வாயிலாக மூவுலகங்களும் ஒன்றுக் கொன்று தொடர்புடையதாய் திறந்து கொள்கின்றன. இதனால் அவற்றிலிருக்கும் அனைத்தும் ஒன்றுக்கொன்று தொடர்பு கொள்ளும்படி ஆகின்றன. ரகசிய முறையாய் திகழும் 'பூஜை' எனும் அணுகுமுறையின் மூலம், மூவுலகங்களும் இயைந்து நிற்க, நம் பிரார்த்தனைகள் அவற்றால் பெற்றுக் கொள்ளப்படுகின்றன. ஓம்.*

**விளக்கம்**

பூஜைகள் நடத்தப்பட்டு பிரார்த்தனைகள் முன்வைக்கப்படும் போது, அவை மூவுலகங்களாலும் பெறப்படுகின்றன.

சில சடங்குகள் இருக்கின்றன. அவற்றை செய்தால் உள்ளார்ந்த உலகங்களில் இருக்கும் வஸ்துக்களுடன் தொடர்பேற்படுத்திக் கொள்ள முடியும்.

பிரார்த்தனைகள் பல வழிகளில் கொடுக்கப்படுகின்றன… பெறப்படுகின்றன.

மிகவும் ஆத்மார்த்தமான நெருக்கமான தொடர்பு முறை - சாமிக்கான பிரார்த்தனையை எழுதித் தந்துவிடுவது.

அக்னி எனும் பகவானுக்கு அது ஆகிருதி இடப்படும்போது அந்த பிரார்த்தனை சிதைந்து, இவ்வுலகம் விட்டு சீக்கிரத்திலேயே மேலுலகத்தைப் போய் அடைந்து விடுகின்றது.

*இவ்வழக்கம் உள்ள கோயிலில் பிரார்த்தனை எழுதப்பட்டு அக்னியில் இடப்பட்ட பிறகு, அதன் பிம்பம் தேவர்களால் உடனடியாக படிக்கப்பட்டு விடுகின்றது. அதற்குண்டான பதிலும், நம் கர்மவினைக்கு உட்பட்டு, உடனடியாக போஸ்ட் செய்யப்பட்டு விடுகின்றது.*

*பிரார்த்தனைகளை இன்னொரு விதமாயும் அனுப்பலாம். நமது முதுகுத் தண்டின் வழியாக பிரார்த்தனை எழுந்து, நம் தலைவழி கடந்து, மேலுலகிலிருக்கும் கடவுளின் கமல பாதங்களில் போய் விழுவதாய் மெதுவாய் நினைத்துக் கொள்வதின் வாயிலாகவும், சாமிக்கு நமது பிரார்த்தனையை தெரியப்படுத்தி விடலாம்.*

*தட்டினால் திறக்கப்படும். அதுவரை தேவர்கள் குறுக்கிட மாட்டார்கள். இதுவே சட்டநியதி.*

**வேதங்கள் சத்தியஞ்செய்கின்றன:**

*‘‘ஆண்டவன், காலை நேரத்து சூரியனாய் தகதகத்துக் கொண்டிருக்கின்றான். அனைத்து தலைமுறை நடவடிக்கை களையும் அறிந்துள்ள அக்னி பகவான், ஆகிருதி இடப்படுபவற்றை அப்படியே கொண்டு போய் சாமியிடம் துரிதமாய் சேர்ப்பித்து விடுகின்றான்.’’ ஓம் நமசிவாய.*



*ஆகாசவுலகில் சிவபெருமான் வீற்றிருக்கின்றார்.*

*எழுதப்பட்ட தங்களது கோரிக்கைகள் மற்றும்*
*பிரார்த்தனைகளுடன் பக்தர்கள் அவரை அண்டுகின்றார்கள்.*

*அவர்களது கர்மவினைகளுக்கு ஏற்ற பலனை தட்டாமல் நான் தந்தருள்வேன்*
*என இருகரம் வாழ்த்தி தஞ்சம் தருகின்றார் சிவபெருமான்.*

# சைவர்கள் கோயில்களில் மட்டும்தான் வழிபாடு நடத்துகின்றார்களா?

## ஸ்லோகம் 114

*பக்தன் தனது கடவுளை எங்கு வேண்டுமானாலும் தொழுது உள்ளார்ந்த இறையுலகத்துடன் தொடர்பினை ஏற்படுத்திக் கொள்ளலாம். அது கோயிலாகவோ, வீட்டின் சுத்தமான பூஜை அறையாகவோ, யோகநிலையில் ஆழ்ந்திருக்கும் தருணமாகவோ இருக்கலாம். ஆயினும், புனிதமான சிவாலயங்களில், மூவுலகங் களும் ஒன்றுக்கொன்று அற்புதமாய் இயைந்து நிற்கின்றன. ஓம்*

## விளக்கம்

*கருவறைக்குள் மகாதேவன் கொலுவிருக்கின்றான். அங்கு பக்தன் முழுமனதோடு அவரைப் பூஜிக்கும்போது, பக்தனுடைய வேண்டுதலைக் காதுகொடுத்துக் கேட்டு அதனை அப்படியே இறைவனாரிடம் கொண்டுபோய் சேர்ப்பிப்பதற்காக, மகாதேவனின் தூதுவர்கள் அனைவரும் குழுமி நிற்பார்கள்.*

*சங்கல்பம் எனப்படும் பூஜைக்கான முறையான தயாரிப்புகள் செய்யப்பட்டால், இறைவர்களை எவ்விடத்திலும் பூஜிக்கலாம்.*

*சிவக்கடவுளின் இருப்பு எங்கும் உள்ளது. எதனுள்ளும் இருக்கின்றது, எதனிடமும் இருக்கின்றது. சிவபெருமான்தானே அனைத்தின் படைப்பாளியும்!*

*காலத்தின் படைப்பாளி சிவனே. அனைத்து வடிவங்கள் மற்றும் அந்த வடிவங்களுக்கான இடங்கள் ஆகிய அனைத்தின் படைப்பும் அவனிடமிருந்தே துளிர்க்கின்றன.*

*சிவபெருமான் சிந்தனையால் வழிபடப்படுகின்றார். இதயத்தில் வைத்து பூஜிக்கப்படுகின்றார். தொண்டைவழியாய் பாடப்பட்டு*

*தொழப்படுகின்றார். யோகத்தில் பூட்டப்படும் யோகியின் சிரசின் வழியாய் காணப்படுகின்றார்.*

*எண்ணற்ற தேவர்களுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு அவர்களுடன் ஐக்கியமாக பாதைவகுத்துத் தந்து உதவும் வழிபாட்டின் சக்திக்கு ஈடுஇணையாய் வேறொன்றினைத் தரமுடியாது.*

*ஒரு சிறு மணியோசை அடிக்கும்போதும், விளக்கேற்றி கர்ப்பக்கிரகம் ஜோதியொளி கொள்ளும்போதும், தூபதீபங்கள் காட்டப்படும்போதும், புஷ்பங்களையெடுத்து அவற்றை மனமுவந்து சிவனாரின் பாதங்களில் அர்ச்சிக்கும்போதும், இறைவனும், இறைவர்களும் எழுப்பப்படுகின்றார்கள்.*

*பூஜையும் அபிஷேக ஆராதனைகளும் முடிந்ததும் நாம் சாந்தமாய் அமர்ந்து ஆழ்நிலைக்குப் போகும்போது, தாயின் தளிர் அன்பினை அள்ளியள்ளித் தரும் பராசக்தியின் இருப்பு கோயிலின் பாறைச் சுவர்களையெல்லாம் துளைத்துக் கொண்டு பரவுவதை நம்மால் உணரமுடியும்.*

**வேதங்கள் வியக்கின்றன:**

*‘‘மானுடத்தின் நண்பன். அனைத்திலும் ஊடுருவியிருப்பவன். அவனே அனைத்தும். ஒரேயொருவன். சொர்க்கத்தின் தலைவன். அந்த சிவபெருமானை பூஜிக்க அனைவரும் கூடுங்கள். ஆதியான அவன், இதோ இங்கு வந்திருக்கின்றான். அவன் காட்டும் வழியே பற்பலர் சென்றுள்ளார்கள்... செல்கின்றார்கள்.’’ ஓம் நமசிவாய.*



*மரத்தினடியில் யோகநிலையில் அமர்ந்திருக்கும் சிவபெருமானுக்கு முன்னால் ஒரு பெண் பக்தி சிரத்தையுடன் பணிகின்றாள்.*

*சிவபெருமானை மனதுக்குள் வரித்து வழிபடுவதே சாலச்சிறந்தது என்றறிந்துள்ள அப்பெண்மணி கண்களை மூடிக்கொண்டு தனது தலைவனை முழுபக்தி மனத்துடன் தியானிக்கின்றாள்.*

# வீட்டில் இருக்கும் பூஜையறையின் முக்கியத்துவம் என்ன?

## ஸ்லோகம் 115

*பக்தன் தனது கடவுளை எங்கு வேண்டுமானாலும் தொழுது உள்ளார்ந்த இறையுலகத்துடன் தொடர்பினை ஏற்படுத்திக் கொள்ளலாம். அது கோயிலாகவோ, வீட்டின் சுத்தமான பூஜை அறையாகவோ, யோகநிலையில் ஆழ்ந்திருக்கும் தருணமாகவோ இருக்கலாம். ஆயினும், புனிதமான சிவாலயங்களில், மூவுலகங் களும் ஒன்றுக்கொன்று அற்புதமாய் இயைந்து நிற்கின்றன. ஓம்.*

## விளக்கம்

ஒவ்வொரு சைவர்களின் குடும்பமும் அவர்களுடைய வீட்டில் அமைக்கப்படும் பூஜையறையினை சுற்றியே இயங்குகின்றது.

இது ஒரு தனித்துவமான அறை. கோயிலின் சூழலை உண்டாக்கித் தருமாறு வடிவமைக்கப்படும் இங்கு பூஜைகள் நடத்தப்படும். நல்நூல்கள் வாசிக்கப்படும். தியானங்களும், பஜனைகளும், ஜபங்களும் ஏற்றப்படும்.

இங்கு கடவுளின் இருப்பு எப்போதும் உணரப்படும். காலையும் மாலையும், உணவருந்துவதற்கு முன்பு சமைத்த அனைத்தையும் நிவேதனம் பண்ணும்போதும், இந்த அறையின் தூய்மையும் இதிலுள்ள தெய்வங்களும் மனதில் ஆழ்ந்து நினைத்துக் கொள்ளப்படும்.

வழக்கமாக, காலை விடியலுக்கு முன்னரே, அந்நாள் முழுதும் சிறப்பாய் நடந்தேற வேண்டியபடி பூஜைகள் இங்கு துவங்கி விடுகின்றன.

*குளியல் முடிந்ததும் பூஜை மேற்கொள்ளப்படும். காயத்ரி மந்திர ஜபிப்பு, மற்ற மந்திரங்களின் ஜபிப்பு, மற்றும் குரு உபதேசம் செய்துள்ள மந்திரங்களின் மனனம் ஆகியன பிறகு இடம்பெறும்.*

*ஆத்மார்த்த பூஜை என வரையறுக்கப்பட்டுள்ள வீட்டு வழிபாடுகள் சுலபமானவையே: தெய்வங்கள் எழுப்பப்பட்டு அவற்றுக்கு நிவேதனங்கள் தரப்படும்.*

*நிறைவாய் கற்பூர ஆரத்திகள் முடிந்த பிறகு, இறைவர்களின் கருணை ஆசீர்வாதங்களை நம்மீதும் நமது குடும்பத்தின் மீதும் தந்தருளுமாறு பிரார்த்திக்கின்றோம்.*

*வீட்டுப் பூஜையறையில் மாலையில் நடைபெறும் பூஜைகளில் ஆரத்தி, பஜனை, தியானம், அறநூல்களைவாசிப்பது போன்றவை இடம்பெறும்.*

**ஆகமங்கள் அடித்துச் சொல்கின்றன:**

*''ஒருவர் தெரிந்தெடுத்திருக்கும் லிங்க வடிவினை, தங்களது இல்லத்துக்கு தெய்வப் பாதுகாப்பு இருக்க வேண்டும் எனும் வேண்டுதலுடன், அக்குடும்பத்தின் எவரும் பூஜிப்பதே, ஆத்மார்த்த பூஜை என்பதாகும்.'' ஓம் நமசிவாய.*



*தங்களுடைய வீட்டிலுள்ள புனிதமான பூஜையிறையில்
கணவனும் மனைவியும் பூஜை செய்கின்றார்கள்.*

*சந்தனக் கல்லிலிருந்து கடைந்தெடுக்கப்பட்ட சந்தனத்தினை
விரலில் எடுத்துக் கொண்டு, அதனை, பிரத்தியேகமான பெட்டியிலிருந்து
எடுக்கப்பட்ட புனித லிங்கத்தில் வைப்பதற்கு கணவன் தயாராகியிருக்க,
அவனுக்கு புண்ணிய நீரினை தந்துதவ மனைவி அருகில் இருக்கின்றாள்.*

*தேவா! தனது வீட்டில் எவனொருவன் தினசரி உன் புகழ்பாடி பூஜைகள் செய்து உன்னை சாந்தப்படுத்துகின்றானோ அவனுக்கு உன்னுடைய அதிகபட்ச கிருபை சென்றடையட்டும். உன் வாழ்த்துக்கள் அவனை நிறைக்கட்டும். அவனிடம் ஆனந்தம் பொங்கட்டும். இதுவே எங்களது பிரார்த்தனை. ரிக் வேதம்.*

*ஓம். அண்டசராசரக் கோளமே! வெளியின் கோள வடிவ இருப்பே! ஓ பிரபஞ்சமே! சூரிய ஜோதிக்கு ஒப்பான படைப்பாளியின், இறைவனின் மேன்மையை, நாங்கள் ஆழ்ந்து எண்ணி வாழக் கடவது! அவனே எங்களது சிந்தனையை நல்வழி நடத்தட்டும். ரிக் வேதம்.*

*இறைவா உனக்கே என் காணிக்கைகள். உனக்கே என் வழிபாடுகள். எனது பிரார்த்தனைகளும் பூஜைகளும் உனக்கே நான் செலுத்துவேன். என்றும் எங்கும் இருப்பவனே... உன்னை எண்ணியெண்ணி ஆன்ம தாகத்திலிருப்பவனுக்கு நீயே பாலைவன ஊற்று. ரிக் வேதம்.*

*ஆண்டவனுடைய திருநாமத்தினையும் அவனது புகழையும் போற்றிப் பாடிப்பாடி, அவனது அருளை நாம் பெறுவோம். அருள் ஒன்றுதான் இறைவன் நமக்குத் தரும் பதிலுரை. ரிக் வேதம்.*

*சத்தியத்தை நாடித்தேடி நிற்கும் ஆன்ம அன்பர்களே... அர்ப்பணிப்பு எனும் சரணாகதி தத்துவத்தினையும் பூஜை வழிமுறைகளையும், இறைவனின் திருநாவிலிருந்தே பெற்று மூன்றாகவுள்ள வேதமாய் கடைந்து தந்துள்ளார்கள் ஞானியர். அவற்றை சிரத்தையாய் செய்யுங்கள். பக்திப் பாதையில் நீங்கள் பிரயாணிக்க நினைத்தால், நீங்கள் செய்ய வேண்டிய தூய நடவடிக்கை இது ஒன்றுதான். அதர்வண வேதம்.*

*என்ன பூஜை செய்தாலும், என்ன காணிக்கைகள் கொடுத் தாலும், எத்தனை அர்ச்சனைகளை மேற்கொண்டாலும், ஒரு சிவலிங்கத்தினை வழிபடுவதன் பலன், இவற்றை ஆயிரமாயிரம் முறை செய்வதற்கு சமமானது. காரண ஆகமம்.*

*காலையில் வெண்மலராலும், நண்பகலில் செந்நிற மலராலும், மாலையில் மஞ்சள் மலராலும், இரவில் இவற்றில் எந்நிற*

மலராலும், சத்யோஜாத மந்திரம் சொல்லி பூஜையில் ஈடுபடும் பக்தன், இறைவனைத் தன் அருகாமைக்கு இழுத்து விடுகின்றான். *காரண ஆகமம்.*

ஐவகை பரிசுத்தங்கள் உள்ளன. பூஜைக்கு இவை தேவை. முதலாவது, பக்தன் தன்னைத்தானே சுத்தப்படுத்திக் கொள்வது. பூஜைக்கான பிரதேசத்தினை சுத்தப்படுத்தி விடுவது, இரண்டாவது. மூன்றாவது, பூஜைக்கான பொருட்களின் சுத்தம். நான்காவதாக அமைகின்றது, வழிபாட்டுப் பொருளான சிவலிங்கத்தினை பரிசுத்தமாக்குவது. ஐந்தாவதாக உள்ளது, சொல்லவுள்ள மந்திரங்களின் பரிசுத்தம். *காரண ஆகமம்.*

பூஜை என்றால் என்ன என்று அறியாதவர்கள்கூட, சூடம் காட்டி நிவேதனம் தந்து இறைவனை வழிபட வேண்டும். இவ்வாறு தினசரி பூஜை செய்து வருபவன் இறைவனை நோக்கிய புனிதப்பாதையில் ஏற்றிவிடப்படுவான். *காரண ஆகமம்.*

அர்ப்பணிப்பான பக்திக்கும் தூய தெளிந்த ஞானத்துக்கும் வித்தியாசங்கள் கிடையாது. சரணாகதி பக்தியால் ஆட்கொள்ளப் பட்ட ஒருவன், ஞான ஆனந்தத்தை அனுபவிக்கின்றான். பக்தியற்ற ஒரு அஞ்ஞானியின்மீது ஞானம் படர்வதில்லை. *சிவ புராணம்.*

கைகூப்பி பக்தியில் முங்கியவன் ஆண்டவனுடைய பாதார விந்தங்களைப் புகழ்ந்து பாடுகின்றான். அவனது கருணைமிகும் அன்பு கரைகின்றது. அவனுள்ளேயே கரைந்துருகுகின்றது. இது, அவன் கண்களின் வழியே ஆனந்தக் கண்ணீராகப் பெருக்கெடுத்து ஓடி அவனுடைய உடல் முழுதையும் நனைக்கின்றது. *பெரிய புராணம்.*

தூய தெளிந்த ஞானமாய் விளங்கும் இறைவனைத் தொழாமல் இருக்கும் ஒருவன், எத்தனை படித்து கற்றவனாயிருந்தாலும் அதனால் என்ன பலன்? ஒப்புயர்வற்ற தெய்வத்தின் கருணை பாதங்களில் அண்டி வாழ்பவர்கள் மட்டுந்தான் வாழ்க்கையின் கவலைகளை அழிக்கின்றார்கள். *திருக்குறள்.*

*சரியா* மற்றும் *கிரியா* ஆகிய இரு பாதைகளில் செவ்வனே பிரயாணிப்பவர்கள் மட்டுமே இறைவனின் இரண்டு கமல

*பாதங்களை வாழ்த்துகின்றார்கள். இவர்கள் புனித அடையாளச் சின்னங்களை அணிகின்றார்கள். இரு கடுக்கன்கள், இரு ருத்திராட்சம் கொண்ட மாலை ஆகியனவற்றைக் கொள் கின்றார்கள். திருமந்திரம்.*

*சிவபக்தி எனும் சிவபெருமான் மீதான அர்ப்பணிப்பான பக்தி ஒன்று மட்டுந்தான் பக்தனுக்கு இறைவனுடைய கடாட்சத்தை பெற்றுத் தருகின்றது. ஏனைய அனைத்தும் பிரயோசனமற்றவை. ஆகவே, இடைவெளி விடாது, சிவ தியானத்தினை பழகுங்கள். எதைப் பற்றியும் நீங்கள் பயப்பட வேண்டாம். வெற்றி உங்களுடையதே! உடல், பொருள், ஆவி - இந்த மூன்றையும் ஆண்டவனிடத்தே அர்ப்பணித்து விடுங்கள். இதனை செய்த பிறகு, உங்களுக்குள் இருக்கும் அனைத்தையும் விட்டொழித்து, அனைத்தும் அவன் என்றும் அவன் மட்டுமே என்றும் காணுங்கள். நற்சிந்தனை.*

*கடவுள்மீது நம்பிக்கை வையுங்கள். அவனை நம்பி நெஞ்சு முழுக்க இறைவனையே சுமந்திருங்கள். ஆனந்தங்களின் பேரானந்தமான இறைவன் உங்களுக்காகத்தான் இருக்கின்றான் என்று நினையுங்கள். கடவுளைத் தவிர வேறொன்றுமே இங்கு கிடையாது என்று நினைத்திடுங்கள். உட்கார்ந்திருந்தாலோ அல்லது நின்றிருந்தாலோ, நடந்திருந்தாலோ அல்லது படுத்திருந்தாலோ சிவபெருமானையே மனதில் நிறுத்துங்கள். உங்கள் நரம்பு, சதை, ரத்தம் எங்கிலும் ஆண்டவனுடைய சிந்தனை மட்டுமே நிரம்பட்டும். நீங்கள் இங்கிருக்கவில்லை... ஆண்டவன்தான் இருக்கின்றான் என்று கண்டிப்பாய் நினையுங்கள். உங்களது வாழ்க்கையின் குறிக்கோள் இறைவனைப் போற்றி வணங்குவதாய் அமையட்டும். ஒருவன் எப்படி நினைக்கின்றானோ அப்படியே ஆகிப்போகின்றான். ஆண்டவனை இதயக்கமலத்தில் நிறுத்தி அவனை அங்கு கொண்டு வந்து விடுங்கள். அனைத்து நடவடிக்கைகளும் அவனுடைய நடவடிக்கைகளாய் இருக்கட்டும். இறுதியில் அவன்தான் எல்லாமும் என்று காண்பீர்கள். நற்சிந்தனை.*

# மஹாத்மா



உபநிடதம் ஒன்பது:

*புனித ஆண்களும் பெண்களும்*

# சந்நியாச தர்மம்



## சந்நியாச வாழ்க்கை

*பிள்ளைகளின் மீதான பற்றுதல், சொத்துக்களின் மீதான பற்றுதல் உலகத்தின் மீதான பற்றுதல் ஆகியனவற்றை ஆழத் தள்ளிய பிறகு, சந்நியாசியாகின்றார்கள்.*

*பிள்ளைகளின்மீது வைக்கும் பற்றினால் வருகின்றது*
*சொத்து மற்றும் பொருட்களின் மீதான ஆசை.*
*பொருட்களைச் சேர்க்க வேண்டும் எனும் ஆசையால்*
*உலகத்தை இறுக்கிப் பிடிக்க வேண்டிய நிலை உருவாகின்றது.*
*இந்த எல்லாமும் ஆசையை தவிர வேறொன்று இல்லை.*
*ஆனால் ஆத்மன் என்கின்ற ஆன்மா, இது கிடையாது, இது கிடையாது.*

***- சுக்ல யஜுர் வேதம், பிருகதாரண்யக உபநிடதம்***

# இந்து மத சந்நியாச கலாச்சாரம் எத்தகையது?

### ஸ்லோகம் 116

*இந்துக் கலாச்சார தர்மத்தில், உலகியலால் ஈர்க்கப்படாமலும் கடமைகள் மற்றும் கர்மங்களால் கட்டுப்படுத்தப்படாமலும் வாழும் ஒருசில ஆண்கள் எப்போதுமே இருக்கின்றார்கள். இவர்களில் சிலர் யாசகம் எடுத்து பிழைப்பு நடத்தும் தனிமை தேசிகர்களாய் இருப்பார்கள். மற்ற சிலர் சகோதரர்களுடன் மடங்களில் வசிப்பார்கள். ஓம்.*

### விளக்கம்

சில ஆடவர்கள், இயற்கையிலேயே ஆன்மத் தேடுதலில் வாழ்வார்கள். தான் யார் என்பதை உணர்ந்துவிட வேண்டும் என்ற தேடுதலுடன் வாழ்வார்கள்.

குடும்பம், சொத்து, சுகம் போன்றவற்றில் இவர்களுக்கு ஈடுபாடிருக்காது.

இப்படிப்பட்டவர்களில் சிலர் சாதுக்கள் வகையினர். வெள்ளுடை தரித்திருப்பார்கள்.

இவர்கள் ஆளரவமற்று தனித்து இருக்கும் குகைகளில் வாழ்பவர்களாய் இருப்பார்கள். தனித்து எங்கோயிருக்கும் காடுகளில் ஒதுங்கி விடுவதுமுண்டு. அல்லது வீடு வாசல் இல்லாமல் பிச்சை எடுத்து திரியும் வகையாகி விடுவார்கள். இந்து மதத்தின் புனிதக்கோயில்களை சரணாலயமாய் கொண்டு அங்குமிருப் பார்கள்.

இன்னும் சிலர், அவர்களுடைய மதகுருவின் ஆசிரமம், ஆதீனம் அல்லது மடத்தில், தன்னைப் போன்ற இன்னபிறருடன் இணைந்து தங்கி விடுவார்கள்.

இங்ஙனமாய் பிட்சு கோலங்கொண்டு காட்டிலிருந்தாலும் சரி அல்லது மடங்களில் வாழ்ந்தாலும் சரி, இவர்கள் ஒருவரும் எவ்விதமான பிரமாணங்களும் எடுத்திருக்க மாட்டார்கள்.

ஆனால் சந்நியாசம் என்ற கட்டுக்குள் இவர்கள் புகுத்தப் பட்டால், காவி உடையை தரித்துக் கொள்வார்கள். சந்நியாசத்துக்கு விதிகள் உண்டு. தங்களை பிரபஞ்ச இந்துவாய் பாவித்து காவியுடைக்குள் புகுந்து விடுவார்கள்.

கிரஹஸ்தன் மற்றும் சந்நியாசி ஆகிய இரண்டும், அதனதன் தர்மங்களின்படி தனித்துவம் வாய்ந்தவை என்கின்றது இந்து தர்மம். இவற்றின் இலக்குகளும் தனித்துவமானவையே என்கின்றன தர்ம நூல்கள்.

அனைத்தையும் துறந்து விட்டு வாழ்ந்தால் மட்டும் தான் யார் என்று அறிந்து விடும் இறைமை ஸ்தானம் கிடைத்து விடாது என்று அறுதியிட்டுச் சொல்கின்றன இந்நூல்கள்.

**புனித வேதம் அறிவிக்கின்றது:**

*''தன்னைத் தான் என்று அறிந்து விட்ட சந்நியாசியோ அல்லது பிட்சுவோ, அமைதியாகி விடுகின்றான். 'அவன் கருணை' மட்டுமே போதும் என்றாகி விடும் அவர்கள் வீடு வாசல்களை விட்டுவிட்டு அலைந்து திரிகின்றார்கள்.''* ஓம்.



*இந்திய கிராமங்களில், வயதான முதிர்ந்த சாது, வெறும் கோவணமும் ருத்ராட்ச மாலையும் கொண்டு மடங்களின் வாசல்களில் உட்கார்ந்திருப்பார்.*

*ஆன்மீகப் பாதையில் இறங்கும் இளைய சாது, இவ்வகை சந்நியாசிகளின் துணி துவைப்பது, அவற்றை உலர்த்தி மடித்து தருவது போன்ற சேவைகளில் திளைப்பார்.*

# துறவு வாழ்க்கையின் இலக்குகள் என்ன?

## ஸ்லோகம் 117

*சந்நியாச வாழ்க்கைக்கு இரண்டு அடிப்படைக் குறிக்கோள்கள் உண்டு. தனிமனித ஆன்மீக முன்னேற்றத்தில் ஈடுபட்டு, அதனை மேம்படுத்தி, அவனை இறைவனை உணரும் அளவுக்கு உயர்த்தி விடுவது. அவரது ஒளிபடைத்த சக்தியின் துணையோடு சிறந்த ஆன்மீகத் தலைவராய் விளங்கி, தனது மதத்தை காத்து, அதனை பரப்பி நிலைக்கச் செய்வது. ஓம்.*

## விளக்கம்

அனைத்தையும் ஒதுக்கி துறவியாய் எழுவதென்பது ஆரம்பக் காலத்து வேத கலாச்சாரத்தின் ஓர் அங்கமாகவே இருந்துள்ளது.

இந்து தர்மத்தின் மிக உன்னதமான ஒரு பாதையிது.

துறவு வாழ்க்கைக்கு தனிப்பட்ட குறிக்கோளும், பிரபஞ்சம் சம்பந்தப்பட்டதொரு குறிக்கோளும் இருக்கும்.

தனிப்பட்ட தனிமனித நிலையில், தனது அபிலாஷைகள் அனைத்தையும் துறந்து விட்டதொரு ஒப்புயர்வற்ற தியாகத்தை செய்தவராய் ஆகியிருப்பார் அத்துறவி. சுயநலமற்ற வாழ்க்கை. உலகியல் எதிலும் ஈடுபாடு கிடையாது. அனைத்தும் அற்றுப் போயிருக்கும். தனது சக்தி மற்றும் பிரக்ஞை ஆகிய இரண்டையும் முழுதுமாய் சிவபெருமானை நோக்கி அவர் திசைதிருப்பியிருப் பார்.

'உபாசகர்' எனும் இறைவனை மட்டுமே சிந்திக்கும் சாதனை மார்க்கத்தில் தனது சத்குருவால் வழிநடத்தப்படும் சந்நியாசி, வருடங்கள் கடக்கக்கடக்க, ஆழ்மனத்து அறிதலைக் கொஞ்சங் கொஞ்சமாய் மொட்டவிழக் காண்பார்.

*இதை இடைவிடாது அந்த சந்நியாசி கடைப்பிடிப்பாராயின், இறுதியில், ஆழ்மனத்து சத்தியமான பரசிவனை நேரடியாய் சந்தித்து அறியும் நிலைக்கு உயர்கின்றார்.*

*இந்து சந்நியாச நெறி, சநாதன தர்மத்தினை பொத்திக் காப்பதன் மூலம், தன் மதத்தின் சத்தியக் கொள்கைகளைக் காத்து வருகின்றது.*

*சந்நியாசத்தில் கரை கண்ட ஸ்வாமிகளே, குருக்கள். வேதவிற் பன்னர்கள். இந்து மத நம்பிக்கையின் அச்சாணி. அனைவருக்கும் வழிகாட்டிக் கொண்டிருக்கும் கலங்கரை விளக்குகள்.*

**ஆதி வேதம் தரும் சாறு:**

*''நிறமற்ற காவி உடையைத் தரித்து, மழுங்க தலையை சவரம் செய்து கொண்டு, தனக்கென ஒன்றையும் வைத்துக் கொள்ளாமல், வெறுப்பு எனும் காழ்ப்புணர்விலிருந்து முழுதும் விடுபட்டு பிட்சை எடுத்து வாழும் சாது, நிஜமான பிராமணன் என்ற தகுதிக்கு உகந்தவனாகின்றான்.'' ஓம் நமசிவாய.*



*தனிப்பட்ட அபிலாஷைகளை உலகை வெறுத்தவன் துறந்து விடுகின்றான்.*

*பெண் மற்றும் இவ்வுலகம் நோக்கிய தனது எண்ணங்களுக்கு முதுகு காட்டி விடுகின்றான்.*

*சிவபெருமானின் நந்தி மீது பக்தி செலுத்தி, சிறந்த சாதுக்களின் வழிகாட்டுதலோடு, தனது சுயத்தை உணர்தலே அவன் குறி.*

# சந்நியாசியின் குண்டலினி பாதை என்ன?

## ஸ்லோகம் 118

*சந்நியாசி தனக்குள்ளேயே ஆண் மற்றும் பெண் ஆகிய இரு சக்திகளையும் சமநிலைப்படுத்தி விடுகின்றார். தனக்குள் தானடங்கிய முழுமையை பெற்று விடும் அவர், சுயேச்சையானவர், சுதந்திரமானவர், முழுமையானவர். இதா மற்றும் பிங்கள ஆகியவற்றில் சமநிலையை எய்திவிட்ட அவர், அனைத்தையும் தெரிந்த ஒருவராகி விடுகிறார். ஓம்.*

## விளக்கம்

*ஆண் பலம் பொருந்திய சக்தியுமல்லாத, பெண் ஆழம் பொருந்திய சக்தியுமல்லாத, பரிசுத்தமான சக்தி ஒரு சந்நியாசிக்குள் ஊற்றெடுக்கும்.*

*இதற்கு சுஷும்னா சுழல் என்று பெயர். இது ஒரு நிஜமான சந்நியாசிக்குள் சக்தி பெறும்.*

*இதன் உதவியால் குண்டலினி சக்தியை கட்டுக்குள் வைத்துக் கொள்வார் அவர். பிறகு, வருடக்கணக்காய் ஜாக்கிரதையாய் குண்டலினி சக்திதனை கட்டுப்படுத்தியதன் பலனாக நிர்விகல்ப ஸமாதி எனும் இறைவனுடன் இரண்டறக் கலக்கும் இறைமையை அவர் அடைகின்றார்.*

*ஆக இந்த வாழ்க்கையிலோ அல்லது அடுத்து வரும் ஏதேனும் ஒரு வாழ்க்கையிலோ அனைவருமே சந்நியாசப் பாதையில் நுழைந்தே தீருவோம்.*

*இருந்தாலும், சந்நியாச மனோநிலைக்குள் போய்விட்ட ஒரு ஆன்மா குடும்ப லௌகீகத்துக்குள் நுழைவது உசிதமாகாது. இதைப்போலவே குடும்ப அவாக்களுக்குள் முழுகியிருக்கும் ஒரு ஆன்மா சந்நியாசம் ஏற்கிறேன் என்று குதித்து விடுவதும் ஆகாது.*

*இங்கு ஓர் எச்சரிக்கை.*

*ஒழுங்கான முறையில் துறவறத்துக்கு தயாராகாமல், குருவால் சந்நியாசமும் அளிக்கப்படாமல், தன்னை சந்நியாசி என்று அறிவித்துக் கொண்டு, குண்டலினி எனும் பிரபஞ்ச இறைசக்தியை உங்களுக்குள் சுண்டி எழுப்புகிறேன் என்று கூறுவோரிடமும் பெரும் யோக பயிற்சிகளால் இறைவனையே காட்டுகிறேன் என்று வரிந்து கட்டிக்கொண்டு முன்வருவோரிடமும், பலத்த ஜாக்கிரதை யுடன் இருங்கள்.*

*சந்நியாசம் என்பது ஒரு கடுமையான பிரயாணம்.*

*சாஸ்திர சம்பிரதாய வழிமுறைகளை ஒரு தபசு போல வருடக்கணக்காய் கடைப்பிடிக்க வேண்டும்.*

*இதனை, நெருங்கிய உறவுகளையும் நண்பர்களையும் பிரிந்து வந்து செய்து கொண்டிருக்க வேண்டும்.*

*யோகம் எனும் சத்தியத்தின் நிஜத்தினை அடைய செயல்படுத்தப் படும் அர்ப்பணிப்பான சந்நியாசப் பாதை, இத்தகையது.*

*இங்ஙனமாய் அனைத்தையும் மற்றும் அனைவரையும் துறந்து சாஸ்திர வழியில் மட்டுமே ஒழுகி வாழ்ந்து முதிர்ச்சியடைய, ஓர் ஆன்மாவுக்குப் பல ஆண்டுகள் பிடிக்கின்றன.*

**திருமந்திரம் அடித்துக் கூறுகின்றது:**

*''அறியாமையாலும், மும்மலத்தின் இருளாலும் மூழ்கியுள்ள ஆன்மாவுக்கு அது எடுத்த பற்பல பிறப்புகளும் இறப்புகளும் மறந்து போயிருக்கும். ஒரு கணத்தில் அருளாளன் சிவபெருமானின் கருணை சித்திக்கும். அப்போது துறவறம் பூண்ட சந்நியாசிக்கு புண்ணிய ஜோதி கைகூடும்.'' ஓம் நமசிவாய.*



*தனக்குப் பின்னால் சாந்த குருவான தக்ஷிணாமூர்த்தி பலம் தர, இட மற்றும் பிங்கள ஆகிய இரு விசைகளையும் கட்டுப்படுத்தி சமநிலையில் வாழ்கிறார் சந்நியாசி.*

*அங்ஙனம் பூரண சந்நியாசியாய் நிற்பது ஜகத்குரு சந்திரசேகரேந்திர சரஸ்வதி, காஞ்சி காமகோடி மடத்தின் 68வது பீடாதிபதி.*

# சந்நியாசியின் தீட்சை கொடுக்கும் உரிமை என்றால் என்ன?

### ஸ்லோகம் 119

*இளைய, திருமணமாகாத இந்து வாலிபர்கள் துறவறம் கொள்ள தகுதி பெறலாம். இதற்கு சந்நியாச தீட்சை என்று பெயர். இது, எந்தவொரு நியாயமான சந்நியாசியாலும் அளிக்கப்படலாம். ஆனால், மிகவும் சக்திமிகுந்த தீட்சை - சந்நியாசத்துக்கு நுழைய அனுமதி - ஒரு சத்குருவிடமிருந்துதான் வரும். ஓம்.*

### விளக்கம்

*சந்நியாச தீட்சை மணமாகாத ஆண்களுக்கு மட்டுந்தான் என்று பாரம்பரியமாய் நியதி இருக்கின்றது. சில நவீன கட்டளைகள் இதில் பெண்களையும் சேர்க்கின்றது.*

*ஆனால், இந்து சட்டங்களின்படி, மற்ற தகுதிகள் இருக்கப் பெற்று இருபத்தைந்து வயதுக்கு முன்னால் ஓர் இளைஞன் சந்நியாச பயிற்சிக்குள் இறங்கினால், அதன் பிறகு தொடரும் பனிரெண்டு வருடங்கள் அவனுக்கு தயார்படுத்துதல் மற்றும் பயிற்சிகள் ஆகியன அளிக்கப்படும்.*

*இதற்கு பிறகு, ஆயுள் முழுதும் சந்நியாசியாய் இருக்கத் தேவையான புனிதப் பிரமாணங்களை அவன் ஏற்கிறான்.*

*ஒரு சந்நியாசி மட்டுமே இன்னொரு சந்நியாசியை தீட்சை தந்து ஏற்படுத்த முடியும்.*

*இருந்தாலும்கூட, சந்நியாசம் என்பதே தனக்குள் 'சுயம்' என்றிருக்கும் கடவுளை உணர்தல்தான்... ஆகையால், ஆன்மீக ரீதியாய் தன் சுயம் அறிந்து பரசிவத்துடன் இணைக்கவல்ல*

*தகுதியுடைய நிஜமான ஆன்மீக ஆசான்கள் மூலமாகவும் சந்நியாசத்தினை ஏற்போர் உண்டு.*

*சந்நியாச தீட்சையாகப்பட்டது மிகவும் சுலபமானதொரு சடங்கு முறையில் அளிக்கப்படுகின்றது.*

*தலையை சிரைப்பது, சில குறிப்பிட்ட ரகசிய பாடங்களின் போதனை, உலக வாழ்க்கையை துறக்கத் துணிதல், சந்நியாச நியமனங்களை நிர்வகிப்பது, காவியுடை தரிப்பது போன்றவை இச்சடங்கில் அடங்கும்.*

**வேதங்கள் கூறுகின்றன:**

*‘‘பரிசுத்தமும் மகாஜோதியுமாய் உள்ளேயுள்ள சுயத்தை, சத்தியத்தை பெருக்கிக் கொள்ளுதல், தவம், ஞானம், புனிதநெறி ஆகியவற்றால் அடைய முடியும். மனித மலங்கள் சுருங்கி செயலிழக்கும்போது, துறவி வெல்கிறான்... சத்திய ஜோதியாம் சுயத்தை எட்டிப் பிடித்து விடுகிறான்.’’ ஓம் நமசிவாய.*



*வசதிமிகும் ஓர் இளைஞன் தனது சத்குருவினை அடையாளம் கண்ட நிமிடத்தில், உலகத்தையே துறந்துவிட்டு, பிள்ளையார் கோயிலின் வாயிலருகே அவரது பாதங்களில் சரணடைந்து விடுகின்றான்.*

*அவரது பாதங்களை இறுகப் பற்றிக் கொள்ளும் பொழுதில் சத்குருவின் முதல் ஸ்பரிஸத்தினை அவன் பெறுகின்றான். அது, ஒரு நிஜமான மற்றும் பழுத்த சந்நியாசியாய் அவனை தரம் உயர்த்த கிடைக்கும் சிறந்த அனுக்கிரகமாகின்றது.*

# சந்நியாசிக்கான புனித கட்டளைகள் யாவை?

## ஸ்லோகம் 120

*ஏழைமை, மதித்து நடத்தல் மற்றும் தவசு ஆகியவையே சந்நியாசிக்கான வாழ்நாள் கட்டளைகள். எக்காலத்திலும் இக்கட்டளைகளிலிருந்து பிறழ்ந்து விடக்கூடாது. ஆன்மீகத் தலைவர்களாகின்றார்கள், சந்நியாசிகள். இவர்கள் சநாதன தர்மத்தின் தூண்கள். ஓம் நமசிவாய.*

## விளக்கம்

துறத்தல் - இதுவே சந்நியாசியின் முதல் புனிதப் பிரமாணம். ஆன்மாவை அடிவரை உலுக்கிப் பார்க்கவல்ல மிகக்குறைந்த அகந்தையையும் விட்டொழித்து விடும் புனிதமிது.

உலகியல் சார்ந்த இச்சைகளையும் அந்த ஆசைகளுக்கான தர்மங்களையும் தள்ளிவிடுதல், துறவறமாகின்றது. இதனால்தான் ஏழ்மையும் மிகவும் தாழ்மையுடன் வாழ்தலும் துறவறத்துக்கு முக்கியமாய் சொல்லப்படுகின்றன.

அடுத்த இரண்டாவது பிரமாணம்: மரியாதையாய் நடந்து கொள்ளுதல்.

தனது சத்குரு சொல்லித் தந்திருக்கும் குறிப்பிட்ட முக்கிய வழிகாட்டுதல்களையும், பாரம்பரிய சந்நியாச தர்மத்தையும் விடாது கடைப்பிடிப்பதற்கான உறுதிமொழியாகும் இது.

தனது சொந்த மனச்சாட்சி, புராணங்கள், கடவுள் மற்றும் கடவுளர்கள் மற்றும் அந்த சந்நியாசியின் குரு பரம்பரை ஆகியவற்றுக்கு மரியாதையாய் நடந்து கொள்வதையே இந்த இரண்டாவது சத்தியம் குறிக்கின்றது.

*'தூய்மை', மூன்றாவது பிரமாணமாகின்றது.*

*சிந்தனை, வார்த்தை மற்றும் செயல்களில் தெள்ளத்தெளிந்த தூய்மையுடன் நடந்து கொள்வதற்கான உறுதிமொழியாகின்றது இது.*

*வாழ்க்கை முழுவதும் கட்டுக்கோப்பாய் இருப்பது, கீழ் உணர்வுகளான வெறுப்பு, பொறாமை, பயம், கோபம், பெருமை, ஆசை இத்யாதிகளிலிருந்து சிந்தனையைப் பாதுகாத்துக் கொள்வது போன்றவை தூய்மை என்றாகின்றன.*

*அஹிம்ஸையே இதன் சாரம். எவ்வகையிலும் காயப்படுத்தாமல் வாழும் நெறி. சைவ உணவு வகைகளையே கடைப்பிடிப்பதும் இதில் முக்கியமாகின்றது.*

**வேதங்கள் சொல்லும் சாரம்:**

*''இனிமேல் தூய்மையாய், சுத்தமாய், சுயமற்று, முடிவற்று, நேர்மையாய், சுயம்புபோல், சுதந்திரமாய் இருப்பவன், உள்ளார்ந்த பேரின்பத்தை தொட்டு விட்டான் என்றாகும்.'' ஓம் நமசிவாய.*



*கங்கை நதிதீரத்தில், ஒரு சிவகுரு, 'ஸ்வாமி' என்றாகவிருக்கும்
நபரின் தலையில் தனது கைகளைப் பதிக்கின்றார்.*

*ஹோம குண்டத்துக்கு எதிரில் இந்த தீட்சை வழங்கும் சடங்கு நடக்கும்.*

*இதற்கு பிறகு அந்த 'ஸ்வாமி, காவி நிற உடையணிந்து அவனுடைய
ஆன்மீக சகோதரர்கள் அணியும் புனித மாலையை அணிந்து கொள்வான்.*

*சிவபெருமானுக்குள் அக்னி அடக்கம். அவருக்குள் நீர் அடக்கம். அவருக்குள் அடங்கி உள்ளன சொர்க்கமும் பூமியும். அவர்தான் உலகம் முழுதையும் பார்த்துக் கொண்டிருக்கும் சூரியன். அந்த ஜடாமுடி சந்நியாசியே, ஒளியும். காற்றினால் கட்டப்பட்ட சந்நியாசிகள், சாம்பலை தங்களது ஆபரணமாய் சூடிக்கொள்கின்றார்கள். அமைதியாகிவிட்ட இந்த சந்நியாசிகள், கடவுள் இவர்களுக்குள் நுழைந்து விட்ட மறுகணமே காற்றின் வேகத்தில் பிரயாணிக்க ஆரம்பிக்கிறார்கள். ''காற்றையே எங்களது போர்க்குதிரையாக்கிக் கொண்டு விட்டோம்'' என்கிறார்கள் இவர்கள். அனைத்து வடிவங்களையும் தன்னகத்தே வைத்துக் கொண்டு நட்டநடு காற்றில் பறக்கின்றார் - பெரும் சந்நியாசி, சிவபெருமான். அனைத்து கடவுளர்களுடனும் தன்னைத்தானே ஒரு சிறந்த நண்பராக்கிக் கொண்டுள்ள இவர், அவர்களுடன் கூட்டுறவுடன் இயங்குகின்றார். காற்றினால் செலுத்தப்பட்டு, அதன் அடிக்கும் வேகத்தை தனது துணையாய் கொண்டுள்ள இவர், கடவுளரால் இயக்கப்பட்டபடி கடலிலும் இருக்கிறார், கிழக்கு மேற்கு என்று எங்கும் நிறைந்துள்ளார். ரிக் வேதம்.*

*உபநிடதமே கைக்கு உதவும் ஆயுதம். இதனை வில்லாக எடுத்துக் கொள்ளுங்கள். பக்தியினால் கூர்மை ஏற்றப்பட்ட நாணினைப் பூட்டுங்கள். அந்த ஒரே கடவுளின் மீது ஒருமுகப்படுத்தப்பட்ட சிந்தனையுடன் வில்லை வளையுங்கள். சாஸ்வதமான அந்த இலக்கினை முட்டிவிடுங்கள். ஓம், இதுவே வில். ஆன்மாவே அம்பு. ஞானியர்கள் சொல்கின்றார்கள்: ஒருமுகப்படுத்தப்பட்ட சிதையாத அர்ப்பணிப்பால் துளைக்கப்பட வேண்டியது, இறைமை எனும் பிரம்மம் என்கின்றார்கள். இப்படியாக இலக்குடன் போய் ஒன்றிநின்றுவிடும் அம்பினைப் போல பக்தன் பிரம்மத்துடன் நின்று விடுகின்றான் என்கின்றார்கள். கிருஷ்ண யஜுர் வேதம்.*

*புத்தியாலும் மனத்தாலும் அறிவுசார்ந்த ஞானத்தினை எய்திய பிறகு, மரணம் எனும் பாதையில் நீங்கள் மேற்கொண்டு பயணிக்கவே மாட்டீர்கள். இதனால்தான், எதையும் சொந்த மாக்கிக் கொள்ளாமல் பற்றற்று ஆகிவிடுவதே, அனைத்து இடர்களையும் கடந்த பேரானந்தம் என்கின்றார்கள். கிருஷ்ண யஜுர் வேதம்.*

*மனிதனைப் பாவங்களிலிருந்து கடைத்தேற்றுதல் என்று வழக்கமாய் சொல்லப்படுவது, நிஜத்தில் இச்சையின்றி அல்லது அவாவின்மை என்கிற பற்றற்ற நிலையே ஆகும். பற்றற்று வாழும் போது அறியாமையிலிருந்து அந்த மனிதன் விடுவிக்கப்பட்டு விடுகின்றான். அமைதியின் அல்லது சாந்தத்தின் உச்சம் என்பதேகூட நிஜத்தில் பற்றற்ற நிலையை எய்திய வெற்றியே யாகும். எதிலும் ஆசை வைக்காமல் உயர்ந்து விடும் ஒரு மனிதனின் ஆன்மா, ஆன்மா எனும் சுயத்தினை உணர்ந்துக் கொண்டு சாந்தமான ஆழ்சிந்தனையில் உய்க்கின்றது. சாம வேதம்.*

*கவனி அர்ஜுனா, எதனை மக்கள் அனைத்தையும் துறந்து விட்ட ஆசையற்ற நிலைமை என்று வர்ணிக்கின்றார்களோ, அதுவே சாட்சாத் யோகம், ஏனென்றால், அனைத்து ஆசைகளையும் துறக்காமல் எந்தவொரு மனிதனாலும் யோகி ஆக முடியாது. யோகியாகிவிட்டவனின் நிலைமை, அமைதியும், தெளிவானதால் விளைந்த சமாதானமும் ஆகும். பகவத் கீதை.*

*தனது சுயம் எனும் ஆன்மாவை எட்டிப்பிடித்து விட்டு அதனால் உள்ளூர அரவமற்று அமைதியாகிவிட்டவன், வெயிலிலும் குளிரிலும், சந்தோஷத்திலும் வலியிலும், பாராட்டிலும் இகழ்ச்சி யிலும், சாந்தத்திலேயே நிலைப்பான். தெளிவடைந்து, அனைத் தையும் உள்ளதுஉள்ளபடி சத்தியமாய் விளங்கிக் கொண்டவனும், அசைவற்ற மனத்துடன் கட்டுப்பாடு குலையாமல் இருப்பவனும், கருங்கல்லும் தங்கமும் சரிசமமென்று இருப்பவனும் எவனோ, அவனே யோகி. பகவத் கீதை.*

*ஆனந்த ஜோதியான எம்மிறைவனை, அனைத்தையும் மனத் தளவில் துறந்துவிடும் யோக தபஸின் வெற்றியால்தான் அடைய முடியும். அவன் புகழ் பாடுங்கள்! ஓயாது பிரார்த்தியுங்கள்! சொர்க்கத்தின் எஜமானான அவர் உங்களுக்கு தர்மத்தின் பாதையைக் காட்டட்டும். திருமந்திரம்.*

*கோடானுகோடி முறை பிறக்கிறார்கள் இறக்கிறார்கள். இதனை அவர்கள் மறக்கிறார்கள். மும்மலங்களும் அவர்களை ஈஷிக் கொள்கின்றது. இறுதியில் மறைந்திருந்த சிவன் எனும் கருணை வெடித்தெழும்போது, இருள் முழுதும் அடித்துத் துரத்தப்பட,*

*பற்றற்ற நிலைமை சித்திக்கின்றது. இது நிகழும்போது, ஒளி பொருந்திய ஜோதியாகிறது, அந்த ஆன்மா. திருமந்திரம்.*

*பிச்சையெடுத்து வாழும் தபசிகளுக்கு மறுபிறப்பு கிடையாது. ஆன்மீக வளங்கள் அனைத்தும் அத்தகையவர்கள்மீது பொழியட்டும். மனத்தாழத்தில் தவம் புரியும் அனைவருமே மீதியுள்ள அனைத்து பிறப்புகளையும் அவித்துவிடும் சக்தியினைப் பெற்று விடுகின்றார்கள். திருமந்திரம்.*

*புராணங்கள் பற்றற்ற துறவறத்தையே அனைத்தையும் விட உயர்ந்தது என முழங்குகின்றன. பரிசுத்தமாய் ஆசையை ஒழிக்கும் எவரும் மிகவுயர்ந்த பீடத்தினை அடைந்து விடுகின்றார்கள். மற்றவர்கள் மாயை எனும் வலைக்குள் தள்ளாடுகின்றார்கள். திருக்குறள்.*

*ஓ சந்நியாசிகளே... விஷ்ணுவாலும் பிரம்மாவாலும் அடியும் நுனியும் காணயியலாத அளவுக்கு விண்ணுயர்ந்த பஞ்சாட்சரமான நமசிவாய எனும் நாமத்தின் உள்சாரத்தை, உங்கள் உள்ளம் முழுதும் நிறுவி வழிபடுங்கள்! உலகத்திலுள்ள அனைத்துமே நீங்கள்தான் என்று கருதிவிட்ட உங்களோடு, உலகின் வேறெதனை ஒப்பிட்டுக் கூற முடியும்? உங்களுடைய கடந்த பிறப்பின் அத்தனை பாவக்கறைகளும் அழிக்கப்பட்டு விடும். தினசரி, உங்களது சிந்தனையில், ''என் இந்த ஜீவன்தானே சிவன்?'' என நீங்கள் தியானிக்க வேண்டும். நற்சிந்தனை.*

*தனது உடைமை, உடல், ஆன்மா ஆகிய அனைத்தையும் முழுமனதுடன் சரண் கொடுக்கும் பக்தனுக்கு, கருணை தெய்வமான நடராஜப் பெருமான், கணம் தாமதிக்காமல் தனது பொற்றாமரைப் பாதத்தைக் காட்டுவான்! இதுவே சத்தியம். நற்சிந்தனை.*

# ஞானி



## கடவுளைத் தெரிந்தவர்கள்

*பரிசுத்தமானவர்கள். தனக்கென்று எதுவும் அற்றவர்கள்.*
*சாந்தமெய்தியவர்கள். சுயநலம் அறுத்தவர்கள்.*

*தங்களுக்குள் எல்லையில்லாதவர்கள்.*
*நொறுக்கிவிட முடியாதவர்கள். அசையாது நிலைத்து விட்டவர்கள்.*

*சுயம்புவாய், விடுதலைப் பேறெய்தி, இறைமைக் கனியை பறித்தவர்கள்.*
*இப்படிப்பட்டவர் தனக்குள்ளான தனிப்பெருங்கருணைக்குள் கரைந்தவர்.*

*கருணை மயமாய் தன்னுள் இருக்கும் சுயத்தினைப் பார்த்து விட்ட இவர்,*
*சுழலும் வாழ்க்கை சக்கரத்தினை, அப்படி சுழலும் ஒரு*
*சக்கரத்தைப் பார்க்கும் ஒரு சாட்சியாய் பார்ப்பார்கள்.*

***கிருஷ்ண யஜுர் வேதம்.***

# இந்துத்துவத்தின் ஆன்மீகத் தலைவர்கள் யாவர்?

## ஸ்லோகம் 121

*தங்களுடைய அர்ப்பணிப்பாலும் பக்தியாலும், கடவுள் மற்றும் கடவுளர்களுடன் தொடர்பு கொள்ளத்தக்க சாதுக்களும், சந்நியாசிகளும் சத்குருக்களும் இந்துத்துவத்தின் புனிதமான ஆண் மற்றும் பெண் என்றாகின்றார்கள். நாம் அவர்களை மிக்க மரியாதையுடன் பார்க்கின்றோம். அவர்கள் தரும் உதாரணங் களையும், மனம் தெளியத் தரும் போதனைகளையும், பிரயத்தனப் பட்டுக் கடைப்பிடிக்கின்றோம். ஓம்.*

## விளக்கம்

*சநாதன தர்மத்துக்குள், இப்போதும் எப்போதும் பல புண்ணிய ஆடவர்களும் பெண்டிரும் வாழ்ந்துள்ளார்கள்.*

*கடவுள் மற்றும் கடவுளர்களிடம் பேதங்கள் ஏதும் பார்க்காமல் தங்களைத் தாங்களே அவர்கள் மனமொப்பி அன்பாய் சரணாகதி ஆக்கியதால், புண்ணிய ஜீவன்கள் என்று கருதப்படுகின்றார்கள்.*

*நமது இந்துமத நம்பிக்கைகளின் மீதான அவர்களது வழுவாத அர்ப்பணிப்பு, அவர்களது ஆன்மீக சாதனைகள் மற்றும் ஆன்மாவை அறிந்த புண்ணியம் ஆகிய காரணங்களுக்காக, சைவர்களின் மத்தியில் அவர்களுக்கு ஆழ்ந்த மதிப்பும் உயர் மரியாதையும் நிலவுகின்றன.*

*அவர்கள் படித்தறிந்துள்ள பாண்டித்தியத்தைவிட, தெரிந்து கொண்டிருப்பது இங்கு முக்கியமாய் கருதத்தக்கது.*

*அவர்கள் வகிக்கும் பதவியைவிட அவர்களுடைய பவித்திரத் தன்மை கருத்தில் கருத வேண்டிய ஒன்று.*

*புனிதத்தன்மைகளை விடாது கடைப்பிடிப்பதும் பக்தி மார்க்கத்தில் நாளெல்லாம் ஒழுகுவதும் அத்தனை சுலபமானதல்ல. ஆகவே, இங்ஙனமாய் தூய்மையாயிருந்து கடவுளின் பாதங்களையும் கருணையையும் எட்டிப் பிடித்தவர்களை நாம் கௌரவிக்கிறோம், அன்பு செலுத்துகின்றோம்.*

*அவர்களுடைய சமுதாய அந்தஸ்துக்களையெல்லாம் கவனத்தில் கொள்ளாமல், அவர்களுக்குள் உறைந்துள்ள இறைமையை கண்டு விட்டார்கள் என்ற காரணத்துக்காக அப்படிப்பட்ட புண்ணிய வான்களை நாம் வழிபடுகின்றோம்.*

*இந்துமதம் பரந்து விரிந்தது. ஆங்காங்கே பிரிந்து, தனித்து இயங்குவது. எனவே புனிதம் எனும் அந்தஸ்துக்கு உயர்ந்தவர்களில் ஒருவரை இந்துமதத்தால் பொதுவான மதத்தலைவராக காட்ட முடியவில்லை. ஆகவே ஒரு குருவோ அல்லது ஆசானோ இம்மதத்துக்கு கிடையாது.*

*ஆயினும், பக்தர்களால், அவரவர்களுடைய சம்பிரதாயங்களுக்கு ஏற்ப, சாதுக்களும், சந்நியாசிகளும் சத்குருக்களும் மத-ஆன்மீக வழிகாட்டிகளாக ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளார்கள்.*

*இப்படிப் பலர் உண்டு.*

*அவர்கள் ஒவ்வொருவரும், அவரவர்களுடைய பக்தி வட்டத்துக்குட்பட்டு வரும் ஆன்மீக அன்பர்களுக்கு, பக்தி, இறைவழிபாடு மற்றும் ஆன்மீக நடைமுறைகளுக்கு ஆலோசனை தரும் அதிகாரத்தோடு விளங்குகின்றார்கள். அந்த பக்தர்களும் அதனை கேட்கின்றார்கள், வழிநடக்கின்றார்கள்.*

**வேதங்கள் உறுதியாக்குகின்றன:**

*‘‘எனக்கு விளங்கவில்லை. ஆயினும் விளங்கிக்கொள்ள விரும்புகிறேன். எனக்குத் தெரியாத அதனை, அறிந்திருக்கும் புத்திமான்களிடம் கேட்கின்றேன்: சுயம்புவாய் இருந்து கொண்டு, ஆறு பிரபஞ்ச சமயங்களை உருவாக்கியிருக்கும் அவர் - யாராக இருக்க முடியும்?’’ ஓம் நமசிவாய.*



சந்நியாசியான திருநாவுக்கரசர் தென்னிந்தியாவில் எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தார்.

சிவ அடியார்களுக்கு அடியவன் என்று தன்னை அறிவித்துக் கொண்ட அவர்,
கோயிலுக்கு முன்னாலிருக்கும் பாதைகளையெல்லாம்
சுத்தம் செய்து வைப்பதை விரும்பினார்.

இதற்கு தேவையான சாமான்களை கூடவே சுமந்து செல்வார்.
கோடிக்கணக்கான சைவர்களால் பாடப்படும்
பக்திப் பாடல்களை எழுதியிருக்கிறார் இவர்.

# பக்தன் என்றால் யாது? ஞானி, சத்குரு என்றால் என்ன?

### ஸ்லோகம் 122

*ஈகோ எனும் அகங்காரத்தினை விட்டொழித்துவிட்ட தூய பக்தர்கள் சாந்தத்தினைப் பிரதிபலிப்பார்கள். மனிதாபிமானம் மற்றும் துறவறத்தின் புனிதத்தன்மைகளை எடுத்துரைப்பார்கள். தங்களுடைய ஆன்மாக்களைக் கண்டுவிட்டு விடுதலைப் பேற்றினை அடைந்தவர்கள்தான் ஞானியரும், ஆனாலும், வெளிப்பூச்சுக்கு அனைத்திலிருந்தும் தள்ளியிருக்கும் ஒரு சாதாரண ஆசாமியாகத் தான் தோன்றுவார்கள். சத்குருக்களும் விடுதலையடைந்தவர்களே. அப்பாதையில் மற்றவர்களுக்கு வழிகாட்டுபவர்களாவர். ஓம்.*

### விளக்கம்

நமது மத நம்பிக்கையின் திருவுருவங்களாக கௌரவிக்கப்படு பவர்கள், தூயபக்தர்கள்.

குடும்ப தர்மத்தில் வாழ்ந்தபடி இருக்கும் இவர்கள், நமக்கு, எப்படி நடந்து கொள்வது என்ற வழிகாட்டுதல்களையும் எங்ஙனமாய் பக்தி செலுத்துவது என்பதையும் போதிப்பார்கள்.

அவர்கள் எந்த அளவுக்கு அப்பழுக்கற்றவர்கள் என்பதற்கு அவர்களுடைய வார்த்தைகளும் செயல்களுமே உதாரணங்களாய் திகழும்.

உள்ளார்ந்து, ஆன்மாவுக்குள் விழித்தெழுந்து, சித்த தூய்மை எய்தி விட்டாலும், இதனை வெளியே காட்டிக்கொள்ளாமல் இருக்கும் சிலர் நம்மிடையே உண்டு. இவர்களே ஞானியர்.

*இவர்கள் பெரும்பாலும் தனிமையான 'முனி' என்ற நிலையில் வாழ்வார்கள். அல்லது, உலகியலிலிருந்து விலகியவர்களாகி தேசாந்திரியாக வீடு வாசலின்றி சுற்றித் திரிவார்கள்.*

*உயர்நிலையில் நமக்கு வழிகாட்டுதல்கள் தருபவர்கள், சத்குருக்கள். ஆன்மீக வாழ்க்கையில் நமக்கு ஒரு பூரணத்துவத்தினை உருவாக்கித் தருபவர்கள் இவர்கள்.*

*ஆன்மாவை அறிதல் எனும் கிடைத்தற்கரிய இலக்கினை வென்று விட்ட புனித ஆடவர் மற்றும் பெண்டிர்களில், ஞானியரும் சத்குருக்களுமே அதிகம் கௌரவிக்கப்படுகின்றார்கள்.*

*இவ்விரு வகையினருமே திருமணமாகாத துறவியராவர்.*

*தங்களது ஆன்ம சித்திக்குள் மூழ்கியே கிடக்கும் நிர்வாணி களாவர், ஞானிகள்.*

*சத்தியம் எனும் ஒரே இறைமையை நோக்கி மற்றவர்களை வழிநடத்திச் செல்லும் உபதேசிகர்களாய் வலம் வருவார்கள், சத்குருக்கள்.*

**வேதங்கள் தரும் புகழ்மாலை:**

*''ஆன்ம ஒளிகண்டு அதனை அனுபவித்துவிட்ட மாபெரும் மனிதர்களை நாம் மனப்பூர்வமாய் கொண்டாடுகின்றோம். பரிசுத்தமாயும், கரைகடந்த ஞானத்தினை எய்தியவர்களாயும், பார்த்த மாத்திரத்தில் கடைப்பிடிக்கத் தூண்டுபவராயும், ஸ்தூலமான உடல் மற்றும் சூட்சும ஆன்மா ஆகிய இரண்டையும் போற்றுபவர்களாயும் அவர்கள் மேன்மையாய் உள்ளார்கள்.'' ஓம் நமசிவாய.*



*வேதங்கள் 108 தேவர் படையினரை பற்றி பேசுகின்றது. மேகங்கள் மற்றும் மழை ஆகிய இரண்டுக்காகவும் வாயு பகவானுக்கு உதவும் படை இது.*

*இந்திரன் இப்படைவீரர்களை எதிர்த்தபோது, அகத்திய மாமுனி இவர்களுடைய உதவிக்கு முன்வந்தார்.*

*அவர்களுடைய யாகத்தினை தன்னுடைய வஜ்ஜிராயுதத்தால் தாக்கினான் இந்திரன். தமிழ் மொழியின் தந்தையான அகத்தியர், அந்த தாக்குதலிலிருந்து காப்பாற்றினார்.*

# புண்ணிய ஆத்மாக்களுக்கு வேறு பெயர்கள் உள்ளனவா?

### ஸ்லோகம் 123

*இந்து மதத்தின் தலைவர்கள், போதகர்கள் மற்றும் ஆன்மீகவாதிகளுக்குப் பல பெயர்கள் உள்ளன. ஜீவன்முக்தா, ரிஷி, முனி, சித்தர், மஹாத்மா, குரு, ஸ்வாமி, சந்நியாசி, தபஸ்வினி, யோகி, யோகினி, சாது, சாதகர், பண்டிதர், ஆசார்யா, சாஸ்திரி, பூசாரி, சிஷ்யா மேலும் பிரம்மச்சாரி. ஓம்.*

### விளக்கம்

ஜீவன்முக்தா என்றால் ஆன்மாவால் விடுதலைப் பேற்றினை எய்தியவர் என்று பொருள்.

வணக்கத்துக்குரிய ஞானியினைக் குறிக்கின்றது ரிஷி எனும் பெயர்.

விளங்கிக்கொள்ள முடியாதபடி நடந்து கொள்ளும் ஒருவரை – குறிப்பாய் தனிமையில் போய் வாழ்ந்து கொண்டு மவுன விரதத்தினைத் தொடர்ந்து அனுஷ்டிப்பவருக்கு முனி என்று பெயர்.

தூய்மையடைந்து விட்ட ஓர் ஆன்மாவைக் குறிக்கின்றது சித்தர். மந்திர சக்திகளை எட்டிப்பிடித்து வெற்றி கண்டவராய் விளங்குவார் இவர்.

அற்புதமான ஓர் ஆன்மாவை, ஆன்மீகத்தைப் போதிக்கும் ஒரு நல்லாசானைக் குறிக்கின்றது, மஹாத்மா அல்லது குரு.

சந்நியாசி அல்லது ஸ்வாமி எனும் பட்டம், சாஸ்திர ரீதியாய் துறவறம் பெற்று மடத்துக்குள் வாழ்பவரைக் குறிக்கும்.

கடுமையான ஒழுக்கங்களைக் கடைப்பிடிப்பதன் வாயிலாக தன்னைத்தானே தூய்மையாக்கிக் கொள்வதில் முனைந்திருக்கும் சாதுவுக்கு தபஸ்வினி என்று பெயர்.

உள்ளார்ந்த ஆன்மாவைத் தொட்டு விட வேண்டும் என்பதற்காக ஆழ்ந்த தியானத்தில் தன்னை அர்ப்பணித்தவருக்கு யோகி என்று பெயர்.

ஆங்காங்கே அலைந்து திரியும் புண்ணியம் எய்திய ஆன்மாவுக்கு சாது என்று பெயர்.

ஆன்மாவைத் தேடிக்கொண்டு அதற்காக கடும் ஆன்மீகப் பயிற்சிகளில் இருக்கும் சந்நியாசிக்கு சாதகர் என்ற பெயர் உள்ளது.

ஆசார்யா, பண்டிதரைப் போலவே, அந்தந்த சமயங்களால் மதிக்கப்படும் மதபோதகராகின்றார்.

சாஸ்திர சம்பிரதாயங்களில் பாண்டித்தியமும் புலமையும் பெற்றுள்ள நபருக்கு சாஸ்திரி என்பது பெயர்.

கோயில் குருக்களுக்கு பூசாரி என்றும், முறையாய் ஆன்மீக மற்றும் வேத மாணவனானவனுக்கு சிஷ்யன் என்றும் பெயர்.

இலகுவான மடச்சட்டங்களில் வாழும் ஆன்மீக பயிற்சியாளருக்கு பிரம்மச்சாரி என்று பெயர்.

பிரம்மச்சாரினி, யோகினி போன்றவை பெண்பால் இணைச்சொற்களாகும்.

**வேதங்கள் விளக்குகின்றன:**

''பிரம்மச்சாரி, உலகங்களை வலுவாக்குகின்றான். அவனுக்குள் தேவர்கள் சந்தித்துக் கொள்கின்றனர். அவனே பூமியையும் சொர்க்கத்தையும் காக்கின்றான்.'' ஓம் நமசிவாய.



*வைணவ மதத்தின் பெரும் வித்தகரான ராமானுஜர், விஷ்ணுவின் பாதங்கள் தாங்கிய சடாரியினைப் பூஜிக்கின்றார். இது, உலகை ஆள்வது விஷ்ணுவே என்பதன் குறிப்பு.*

*விஷ்ணுவின் தாமரைப் பாதங்களைப் போற்றும் விதத்தில்
அப்பாதங்கள் போன்ற திருமண்ணினை அணிந்திருக்கிறார் ராமானுஜர்.*

# குரு ஸ்தானத்தின் செயல்பாடு என்பது யாது?

**ஸ்லோகம் 124**

*குலார்ணவ தந்த்ரா மற்றும் குரு கீதா ஆகியவற்றில் கோடிக்காட்டியுள்ளதன்படி, ஒரு ஆசானுடன் குரு ஸ்தானத்து உறவு கொண்டு அவரது தெளிவு மற்றும் ஆசீர்வாதத்தை சிஷ்யன் பெற்றுக் கொண்டு உள்ளார்ந்த சத்தியத்தை விளங்கிக் கொள்ளும் பாரம்பரிய முறைகளே குரு ஸ்தானத்து செயல்பாடாகின்றது.*

**விளக்கம்**

*குரு ஸ்தானத்து செயல்பாடுகளை மூவழியில் விளங்கிக் கொள்ளலாம்: பக்தி சார்ந்த வழிமுறைகள், ஒத்துப்போகும் சட்டங்கள் மற்றும் மறுப்புகள்.*

*குருவுக்கு சேவைகள் செய்வது பக்தி சார்ந்த வழிமுறைகளில் இடம்பெறுகின்றது. சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து தினசரி தன்னையே அர்ப்பணிப்பது, ஓர் அன்பளிப்பினை தினமும் வழங்குவது, குருவின் பெயரினை தினமும் பாராயணம் செய்வது, அவரையே இறைவனாய் பாவித்து அவரது ஆன்மாவை தனது நெஞ்சில் பதித்து தியானிப்பது, உச்சிஷ்டா எனப்படும் அவரது மிஞ்சும் உணவில் பங்கேற்பது, தெளிவும் ஞானமும் பெற்றுவிட்ட அவருடைய இறை தகுதிகளை கடைப்பிடிப்பது, தனக்குள்ளும் ஆன்ம மலர் மலர யாசிப்பது, அவரது வழிகாட்டுதல்களின்படி ஆன்மாவைப் பிடித்துவிட ஓயாது போராடுவது ஆகியன குருவுக்கான பக்தி சார்ந்த சேவைகளில் வருகின்றன.*

*ஒத்து இயங்கும் அணுகுமுறையில், அவரது வாழ்த்துக்களை நாடிப் பெறுவது, அவரது வழிகாட்டுதல்களுக்கு மதிப்பு தந்து பின்பற்றுவது, எவ்விதமான ரகசியங்களையும் வைத்துக்*

கொள்ளாமல் இருப்பது, அவரது தெய்வீக இருப்பினையே கௌரவிப்பது போன்றவை வருகின்றன.

மறுப்புகள் எனும் பட்டியலிலும் சிஷ்யனின் பல முக்கிய குணங்கள் சொல்லப்பட்டுள்ளன. குருவின் கருத்துக்களுக்கு மறுப்பு கூறுவதோ அதனை எதிர்த்து வாக்குவாதத்தில் ஈடுபடுவதோ எப்போதும் இல்லாதபடி நடந்து கொள்வது, ஒருபோதும் அவரை விமர்சிக்காமல் இருப்பது, அவரைப் பற்றிய மற்றவர்களது விமர்சனங்களுக்குக் கணமும் செவிமடுக்காமல் வாழ்வது, அவரது உடைகளையோ நடைமுறைகளையோ எக்காரணம் கொண்டும் காப்பியடித்து நடந்துகொள்ளாமல் இருப்பது, அவருக்கு மேலாக நிற்பதோ அமர்வதோ நிகழாமல் பார்த்துக் கொள்வது, குருவினை விஞ்சி முன்னால் நடப்பதோ செல்வதோ இல்லாமல் சிஷ்யனாய் இருப்பது, அவரது இருப்பில் தான் அதிகாரத்தைக் காட்டாமல் அடங்கியிருப்பது, அவருக்கு இணையான போதனைகளை சிஷ்யன் செய்யாமல் இருப்பது, அவரால் சொல்லப்படாத வரை சம்பாஷணையையோ அல்லது கேள்விகளையோ எழுப்பாமல் இருப்பது ஆகியன சிஷ்யன் தனது குருவுக்கு முன்னால் செய்யத்தகாதவைகளாக உள்ளன.

**குலார்ணவ தந்த்ரா விளக்குகின்றது:**

''குருவின் சேவையில் எப்போதும் ஈடுபட்டிருங்கள். அவரது இருப்புக்கருகிலேயே இருங்கள். ஆசை மற்றும் கோபத்தை யெல்லாம் விட்டொழித்துவிட்டு, பக்தியுடனும் அடக்கத்துடனும் அவரது ஆன்ம விசாரத்தை உள்ளாரப் பாராட்டியபடி, அவரது வேலைகளை நீங்கள் செய்யத் துணிந்து நில்லுங்கள்.'' ஓம் நமசிவாய.



*வேத பிராமணரான ஸோமஸிம்மரர், சத்குரு சம்பந்தரின்*
*குருகுலத்துக்குள் நுழைகின்றார்.*

*பழங்கள் போன்றவற்றை குருவுக்குப் படைத்துவிட்டு,*
*ஆன்மாவை உணர்ந்து ஒளிபடைத்து விட்ட புண்ணியரின்*
*பாதங்களைத் தொட்டு வணங்குகின்றார்.*

*தன்னந்தனியாய் சுற்றித்திரியும் தேசாந்திரியாகவோ அல்லது*
*ஒரு மடத்தினை நிர்வாகிக்கும் மடாதிபதியாகவோ, குரு இருக்கலாம்.*

# சத்குருவின் தனித்துவப் பணி என்ன?

## ஸ்லோகம் 125

*புத்தியினை அதன் ஆழ்நிலைக்குள் இறக்கி இறுதிக்கட்ட இலக்கினை அடையத் தேடி அலையும் ஆன்மீகவாதிகளுக்கு ஒரு சத்குரு தேவைப்படுகின்றார். ஆன்மாவினை அடையும் பாதையில் செயற்கை கலக்காமல் இயற்கையாய் பிரயாணித்து தெளிவும் ஞானமும் பெற்ற சத்குரு, மற்றவர்களையும் அவர்களுக்குள் உறையும் தெய்வத்தைக் காணும்படி இயக்கிவிட முடியும். ஓம் நமசிவாய.*

### விளக்கம்

பக்தனுடைய ஆன்மீகப் பாதைக்கான நண்பன், துணைவன், வழிகாட்டி என்றாகின்றார் சத்குரு.

மதத்தின் நிறைவான தலைவனாகிவிட்டபடியால், மற்ற ஒவ்வொருவரும் என்ன கட்டத்தில் நிற்கின்றார்கள் என்பதனை சத்குருவால் கணித்து விட முடியும். அவர்களது அடுத்த கட்டம் என்ன என்பது அவருக்கு தெரியும்.

முதன்முதலாய் ஆன்மாவைத் தட்டியெழுப்பி உணர்வதைப் போல வாழ்க்கையில் விலைமதிப்பற்ற ஒன்று இருக்க முடியாது. இதுவே குருவால் உண்டாகும் வாழ்க்கையையே மாற்றிப்போடும் சக்திபாதா ஆகும்.

ஆன்மீகத்தை நம்முள் எழுப்பும் முன்னேற்றத்தில், குருவிடமிருந்து படிப்படியாய் கிடைக்கும் ஆசீர்வாதம் மிகுந்த தீட்சைகளைப் போன்ற அச்சாணிகள், வேறெதுவும் இருந்துவிட முடியாது.

மனித புத்தி தந்திரம் மிகுந்தது. அவனுடைய தான் எனும் அகங்காரமோ தானாய் சுழன்றடிக்கும் குணாதிசயம் மிக்கது. எனவேதான் ஒரு சத்குரு தேவையாகின்றார்.

*சிஷ்யனை அவனுடைய சத்திய சுயமான ஆன்மா நோக்கி முன்னேற்றுவது, அதனை அடைவதற்கான உத்வேகத்தை அவனுள் அணையாமல் வைப்பது, இதற்கு துணை நின்று வழிகாட்டுவது எல்லாமும் குருதான்.*

*சிவபெருமானுடனான உறவினை தீர்மானித்துக் கொண்டு விட்ட சத்குரு, பக்தி எனும் உபாசனை மற்றும் தவம் ஆகியவற்றை சிஷ்யனிடம் மெதுவாய் ஊட்டுவார்.*

*சிஷ்யனுடைய அகம்பாவத்தை அணைத்து, அவனது அடிமனத்திலிருக்கும் ஆசைகளை மறைய வைத்து, இவற்றைச் செய்யும்போதே வெகுண்டெழுந்து விட்ட குண்டலினி சக்தியினை பாதுகாப்பாகவும் சீராகவும் வழிநடத்தி, ஆன்மீக எழுச்சியின் ஒவ்வொரு கட்டத்திலும் சிஷ்யனுக்கு வழிகாட்டி முன்நிற்பது, சத்குருவின் இலக்காகும்.*

**ஆகமங்கள் அடித்துச் சொல்கின்றன:**

*''உலகியலிலிருந்து விலகிவிட வேண்டும் என்று சிவபெருமானின் கடாட்சத்தால் ஆர்வம் கொள்ளும் ஒவ்வொரு தனிமனிதனுக்கும், சிவசாயுஜ்ய பதவி நோக்கி வழிநடத்தும் ஒரு உன்னத குருவின் அருகாமையும் அவர்தம் உதவியால் ஆன்மாவை உணரும் முதல்படியும் நடக்கும்.'' ஓம் நமசிவாய.*



*யோகதண்டத்தைக் கையில் சுமந்து கொண்டிருக்கும்*
*ஒரு சத்குரு, உண்மையாய் நாடி வந்திருக்கும் ஒரு சிஷ்யனை*
*ஆசீர்வதிப்பதற்காக கையை உயர்த்தி வாழ்த்துகிறார்.*

*பிறகு தனது பாதத்தை அவனுடைய தலையில் மிருதுவாய் வைக்கின்றார்.*
*இவ்வகையான ஆசீர்வாதம் அளவற்ற கருணையைக் கொட்டிக் கொடுக்கும்.*
*அகங்காரத்தையும் மாய மலங்களையும் அடித்து விரட்டும்.*

உயிருடன் வாழும்போது விடுதலை கண்டுவிட வேண்டும். அவன் ஆசிர்வதிக்கப்பட்டவன். அனைத்துக் கடமைகளையும் முடித்து விட்டவன். வாழ்நாளிலேயே ஆன்மவிடுதலை கண்டு விட்ட மகான், ஸ்தூல உடலை உதிர்க்க வேண்டிய காலம் வரும்போது, சூட்சும சுதந்திரம் எனும் ஏணியில் ஏறி விடுகின்றார். அப்போதும் அவர் ஆன்மவிடுதலை கண்டவரே. *சுக்ல யஜுர் வேதம்.*

குருவுக்குச் செய்யும் பணிவிடை போன்ற பணிகளடங்கிய பிரம்மச்சரியத்தை 12 வருடங்கள் கடைப்பிடிக்க வேண்டும் என வேதவிதி உள்ளது. *அதர்வண வேதம்.*

இதயத்தில் இருக்கும் கமலத்தில் உறைகின்றது 'சத்திய சுயம்' எனும் ஆன்மா. இதை அறிந்துள்ள ஞானி, தினந்தோறும் இந்தப் புனித சரணாலயத்துக்குள் சென்று வருகின்றார். ஆன்மாவுக்குள் இழுக்கப்பட்டு விடும் ஞானி, தன் உடல் எனும் அடையாளத்தை யெல்லாம் துறந்து விட்டு, கருணைமிகும் இறை பிரக்ஞையில் கிடப்பார். *சாம வேதம்.*

புத்தியும் புலன்களும் சாந்தமாய் இருக்கும் நிலையில் சிவபெருமானை நாட வேண்டும். அப்போது பிரம்மன் எனும் ஞானத்தை அனைத்துக்குமான ஒரே குரு விளக்கிக் காட்டுவார். அப்போது அவனே அழியா ஒரே சத்தியம் என்று ஆகிவிடுவான். *அதர்வண வேதம்.*

தன்னலம் ஏதுமின்றி, வேகமும் அவசரமும் இன்றி, ஆழ்நிலைக்குள் இறங்கி ஆன்மாவுடன் விஸ்தாரமாய் தம்மை ஆக்கிக் கொண்டவர்கள், கர்மவினைகளைக் களைந்து விடும் அதிகாரத்தினை அடைகின்றார்கள். தனது உடலை அவர்கள் துறவுக்கு தந்து விடுகின்றார்கள். அவர் பரமஹம்ஸர். அவரே பரமஹம்ஸர். *சுக்ல யஜுர் வேதம்.*

புண்ணிய ஆன்மாக்களைப் பார்த்த மாத்திரத்தில் அவர்களை புஷ்பங்களாலும், வாசனைத் திரவியங்களாலும், பழங்களாலும், ஊதுவத்திகளாலும், துணி மற்றும் பதார்த்தங்களாலும் - அல்லது சொல், சிந்தனை, செயல் ஆகியவற்றாலும் வழிபடுபவர்களுடைய

பாவங்கள் அங்கேயே அப்படியே கரைக்கப்படுகின்றன. *தேவிகாலோத்தர ஆகமம்.*

தனது ஆன்மாவைக் கண்டு கொண்டு உணர்ந்து விட்ட ஒரு குரு மட்டுமே, இதற்காக அலையும் ஒரு சிஷ்யனுக்கு வழிகாட்டி அருள முடியும். *சிவ சூத்திரங்கள்.*

சத்தியம் என்பதனைத் தங்களுக்கு தாங்களே கண்டவர்களே 'ஆன்மத் தெளிவு' என்பதற்கான குருவாக இயங்க முடியும். அவர்களிடம் கேளுங்கள். அவர்களை வணங்குங்கள். அவர்களுக்கு சேவகனாய் இருங்கள். *பகவத் கீதை.*

தினசரி சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து குருவை வணங்க வேண்டும். வழிபாட்டால் பக்தன் ஒருநிலைப்படுகிறான். இதன் விளைவாக, அவனுடைய நிஜ சொரூபத்தினை அவன் காண்கின்றான். *குரு கீதா.*

தியானத்தின் வேர் குரு வடிவினது. பூஜையின் வேர், குரு பாதத்தைப் போன்றது. மந்திரத்தின் வேரில் வசிப்பது குரு. அனைத்திலிருந்தும் விட்டு விடுதலை என்பது குருவின் கருணையால் வாய்ப்பது. *குலார்ணவ தந்திரம்.*

இறைவனை மட்டுமே பற்றிக்கொண்டு இறைமைக்கு ஒப்பாய் ஒரு புனிதர் இருக்குமிடத்தில், அனைத்துலகங்களும் இருக்கும். அங்கு பகைவர்கள் இல்லை. மழை அளவின்றி கொட்டும். மக்கள் அனைவரும் முழுத் திருப்தியுடன் வாழ்வார்கள். அந்நிலத்தில் எந்த துர்சக்திகளும் வாழாது. *திருமந்திரம்.*

தெளிந்து ஞானமடைந்து விட்ட இதயம் பயத்தில் நடுங்காது. அனைத்து ஆசைகளும் நின்று போய்விட்ட அவ்விதயம், அசைக்க முடியாத சாந்தத்தினைக் கொண்டாடும். அங்கு மரணமோ வலியோ இல்லை. இரவில்லை. பகலில்லை. கழிக்க வேண்டிய கர்மவினைகளும் கிடையாது. ஆசையைத் துறந்து விட்டு ஞானம் எய்தியோரின் தூய நிலை இது. *திருமந்திரம்.*

தனது ஆன்மாவின் முழு நிஜ சொரூபத்தினை உணர்ந்து விட்டவனை மற்ற ஆன்மாக்கள் அனைத்தும் விழுந்து வணங்கும். *திருக்குறள்.*

*நம் வாழ்க்கையின் ஜீவாதாரம், ஆண்டவன். ஆகவே நாம் அவருடைய சொத்து. அவருக்கு கட்டுப்பட்டவர்கள் நாம். நம் அனைத்து இயக்கங்களும் அவருடைய இயக்கங்களே. நாம் எப்போதும் அவரை மறக்கலாகாது. நாம் எதிலும் குறைந்தவரில்லை. நாம் எப்போதும் இருக்கிறோம். நாம் எங்கும் இருக்கிறோம். நமக்கு அனைத்தும் தெரியும். இவ்வாறாய் விடாது தியானித்து ஆழ்ந்து சிந்திப்பதினால், கீழான குணங்களை நாம் இழந்துவிட்டு மேலான இறை சத்தியத்தை அடைவோம். நற்சிந்தனை.*

*மூதாதையர்கள் உள்ள சொர்க்கத்தின் ஆனந்தத்தைவிட நூறு மடங்கு அதிகமானது, வான்மண்டல சந்தோஷம். புண்ணிய வேலைகளும் சேவைகளும் செய்ததன் வாயிலாக இறைமை எனும் ஸ்தானத்தினை எட்டிப் பிடித்து விட்ட தேவர்களின் ஆனந்தம், விண்வெளி ஜீவன்கள் அனுபவிக்கும் ஆனந்தத்தைவிட நூறு மடங்கு அதிகமானதாகும். புண்ணிய சேவைகளால் இறைமையை எட்டிப் பிடித்து விட்ட தேவர்களின் ஆனந்தத்தைவிட, பிறப்பிலேயே கடவுளர்களாய் பிறந்த ஆண்டவனின் ஆனந்தம் நூறு மடங்கு உயர்ந்தது. சுக்ல யஜுர் வேதம்.*

# சாத்திரம்



உபநிடதம் பத்து:

*புனித நூல்கள்*

# ஸ்ருதி



## வெளிப்பட்டுள்ள புனித நூல்கள்

*எரிபொருளை எரிக்கும்போது உருவாகும் நெருப்பிலிருந்து*
*பல்வேறு புகை மண்டலங்கள் உருவாவதைப் போல,*
*புண்ணிய ஆத்மாக்களின் சுவாசங்கள் , ரிக் வேதம், யஜுர் வேதம்,*
*சாம வேதம் மற்றும் அதர்வண வேதம் ஆகியனவற்றை அளித்துள்ளன.*

***- சுக்ல யஜுர் வேதம்.***

# இந்து மதத்தில் வெளியாகியுள்ள புனித நூல்கள் யாவை?

### ஸ்லோகம் 126

*தெய்வமே சொல்லியுள்ள வேதங்கள் மற்றும் ஆகமங்கள் ஆகிய இரண்டும், இந்து மதத்தின் பொன்னான புனித நூல்கள். இவையே ஸ்ருதி – அதாவது 'சொல்லிக் கேட்டவை.' இவை கூறும் சத்தியங்கள் காலங்கடந்து நிற்கின்றன. இவை, அசாதாரண முறையில், உயர் கவிதைகளாய் மனிதனுக்குக் கிடைத்துள்ளன. ஓம்.*

### விளக்கம்

'வேதா' என்பது 'வேத்' என்ற வார்த்தையிலிருந்து வந்தது. 'தெரிந்துகொள்ள' என்பது அர்த்தம். அதாவது, 'இறை ஞானம்' அல்லது 'இறை அறிவியல்.'

இதேபோல 'சமயத்தைச் சேர்ந்த புண்ணிய ஆத்மாக்களால் சொல்லப்பட்டவை' என்ற பொருளில் வருகின்றன ஆகமங்கள். வழிவழியாய் இறங்கும் ஞானம் என்றும் சொல்லலாம்.

வேதங்களும் ஆகமங்களும், புண்ணியம் ததும்பும் ஞானியர் களுக்கும் ஞானதிருஷ்டி கொண்ட ரிஷிகளுக்கும் கடவுளிட மிருந்து நேரடியாய் தரப்பட்டவை.

வாழ்க்கை என்பது எத்தனை புனிதமானது என்பதையும் பூமிக் கோளத்தில் நாம் வந்திருப்பதற்கான காரணத்தையும் செவ்வனே விளக்கும் இவை, இந்துமதத்தின் அடிப்படையான மற்றும் அதிகார பூர்வமான நூல்கள்.

ஞானத்தை விரித்துக் காட்டும் இந்நூல்கள், பற்பல நூற்றாண்டு களாய் விவரிக்கப்பட்டவை.

*மனப்பாடம் பண்ணப்பட்டு, ரிஷி மற்றும் பூசாரி குடும்பங்களுக்குள் வாழையடி வாழையாக வாய் வழி பரப்பப்பட்டுள்ளன வேதங்களும் ஆகமங்களும்.*

*இறுதியாய் இவையிரண்டும், கடந்த சில ஆயிரம் ஆண்டு களுக்கு முன்பு சமஸ்கிருத மொழியில் எழுதி அளிக்கப்பட்டுள்ளன.*

*நுணுக்கமான குறியீடுகள் கொண்ட மொழியாய் விளங்கும் ஸ்ருதி, கடவுளே உவந்து தந்துள்ள வார்த்தைகளாம்.*

*அடர்த்தியான அர்த்தமும் கவிதை நயமும் மிளிரும் படைப்பு இது.*

*சமய வழக்கங்கள், கட்டளைகள் மற்றும் வழிமுறைகள் ஆகியனவற்றை விளக்குவதில், வேதங்கள் சொல்பவை பொதுவாய் இருக்கும். ஆகமங்கள் குறிப்பிட்டு ஆழமாய் விளக்கும்.*

*கடவுளர்களின் பன்முகத்தன்மையை யக்ஞங்கள் எனப்படும் அக்னி யாகங்களின் மூலம் எழுப்புகின்றன வேதங்கள்.*

*ஒரேயொரு தெய்வத்தை மட்டுமே மையங்கொண்டு இயங்கும் ஆகமம். அத்தெய்வத்தை மலர்களாலும், நன்னீராலும், தீபங்களாலும் கோயில்களிலும், புனித க்ஷேத்திரங்களிலும் எங்ஙனம் எழுப்பி வழிபடுவது என்று அடியாழம் வரை சொல்லி விடும் ஆகமம்.*

**திருமந்திரம் புகழ்கின்றது:**

*''இரண்டு புனித நூல்கள் சிவபெருமானாலேயே சொல்லப் பட்டுள்ளன: அடிப்படையான வேதம், அப்பழுக்கற்ற ஆகமம்.'' ஓம் நமசிவாய.*



*தனது கொண்டையை உயர எழுப்பிக் கட்டிய ஒரு ரிஷி,*
*ஓலைச்சுவடியில் புனித நூலினை இயற்றுகின்றார்.*

*சிவலிங்கத்துக்கு முன்னால் உட்கார்ந்துக் கொண்டிருக்கும் இவர்,*
*தனக்குள்ளே ஒலிக்கும் தெய்வக்குரலைக் கூர்ந்து கவனிக்கின்றார்.*

*தான் கேட்கும் அனைத்தையும் எழுதிப் பதிகின்றார்.*
*இவர் எழுதுவதற்கான அடிப்படை, சிவபெருமானைத் தவிர வேறு இலர்.*

# வேதங்களில் அடங்கியுள்ளவற்றின் சாரம் யாது?

## ஸ்லோகம் 127

*மனித இனத்தின் மிகப்பழமையான நூலாய் வேதம் உள்ளது. கிட்டத்தட்ட 6000 முதல் 8000 ஆண்டுகளுக்கு முந்தைய வேதம், நான்கு புத்தகங்களின் தொகுப்பாகும்: ரிக், சாம, யஜுர் மற்றும் அதர்வண என்பவை அவை. ஒவ்வொன்றுக்கும் நான்கு பிரிவுகள் உண்டு. அவை: இறைவனைப் புகழும் கீதங்கள், சடங்குகள், விளக்கங்கள் மற்றும் தத்துவார்த்த கட்டளைகள். ஓம்.*

## விளக்கம்

மிகப்பழமையானதும், வேதங்களின் கருப்பொருளாகவும், ஸம்ஹிதா எனப்படும் இறைவனை சங்கீதமாய் புகழ்ந்து பாடும் பாடல் தொகுப்புகள் விளங்குகின்றன. மொத்தத்தில் இவை நான்கு வேதங்கள் ஆகும்.

ஒரே கடவுளை நோக்கி ஜபித்து பிரார்த்தனை செய்பவையாய் இவை அமைந்துள்ளன. இயற்கை தெய்வங்களான சூரியன், மழை, காற்று, அக்னி, மற்றும் அந்திவானம் போன்றவற்றை பிரார்த்தித்து ஸம்ஹிதா இடம்பெற்றுள்ளது.

மேலும், திருமணம், சந்ததியின் நல்வாழ்வு, பொருள் சேர்ப்பு, வீட்டுச் சடங்குகள், மாயாஜாலங்களுக்கான வழிமுறைகள் என பலப்பல தேவைகளுக்கு பிரார்த்தனைகள் உள்ளன.

அதியழகான வாக்கியங்களில், கவிதை நயம் பொங்க அளந்து அளந்து, மூன்று அல்லது நான்கு வரிகளுக்குள் அடங்குமாறு செழிப்பாய் வடிவமைக்கப்பட்டுள்ளன.

*முழு வேதத்துக்குமான இதயமாய் 10552 செய்யுள்கள் அடங்கிய ரிக் ஸம்ஹிதா உள்ளது.*

*ரிக் செய்யுள்களிலிருந்து சிறப்பாய் தெரிந்தெடுக்கப்பட்ட ஸம்ஹிதாக்களாய் உள்ள யஜுர் மற்றும் சாம வேதங்கள், தலா 2000 செய்யுள்களால் ஆக்கப்பட்டுள்ளன.*

*ஆனால் கிட்டத்தட்ட 6000 செய்யுள்களால் நிரப்பப்பட்டுள்ள அதர்வண வேதச் செய்யுள்கள், தனித்துவம் மிக்க பிரார்த்தனைகள் மற்றும் சடங்குகளாய் உள்ளன.*

*மெலிதாயும் மிருதுவாயும் சொல்வதற்கு வகையாய் சாம வேதம் அமைந்துள்ளது.*

*சந்தச்சுவையுடன் ஆரோகண அவரோகணம் ஜொலிக்கும் வகையில் யஜுர் உள்ளது.*

*ஒவ்வொரு வேதத்துக்குள்ளும் வழிபாட்டுக்கான வழிமுறைகள், சடங்குகளின் நியதிகள், இவற்றின் அர்த்தங்கள், விலைமதிப்பற்ற உபநிடதங்கள் ஆகியன அடங்கியுள்ளன.*

*மொத்தமாய் 10000 வேதச்செய்யுள்கள், சில கட்டுரைகள், மேலும் சில தொகுப்புகள் ஆகியன உள்ளன.*

**திருமந்திரம் முடிவாய் சொல்கின்றது:**

*''வேதங்கள் சொல்வதைத் தவிர வேறு தர்மங்கள் கிடையாது. தர்மத்தின் மத்தியக் கருவினை வேதங்கள் உரக்கச் சொல்கின்றன.'' ஓம் நமசிவாய.*



எழுத்தாணி கொண்டு தான் மனப்பாடம் செய்துள்ள
வேதங்களை எழுதுகின்றார் ஒரு பண்டிதர்.

ஒரு திருவிளக்கால் ஒளியேற்றப்பட்டுள்ள இவருடைய வேலைக்கு
ஆதரவாய் மனைவி விட்டுச் சென்றுள்ள இனிப்புகளும் தேநீரும் அருகில் உள்ளன.

பற்பல நூற்றாண்டுகளாய் வேதங்கள் வாய்வழி பரிமாறப்பட்டுள்ளன.
பிறகு அவை எழுத்து மூலம் பதியப்பட்டன.

# இன்றைய தேதியில் வேதங்கள் எங்ஙனம் முக்கியத்துவம் பெற்றுள்ளன?

### ஸ்லோகம் 128

*ஆன்மீக அதிகாரியாக விளங்குகின்றன வேதங்கள். இந்துக்களின் சிந்தனைகளுக்குள்ளும் அவர்களுடைய சடங்குகள் மற்றும் தியானங்களுக்குள்ளும் துளைத்துக் கொண்டு ஊறியுள்ளன இவை. வாழ்க்கையின் புனிதத்தன்மையையும் இறைவனுடன் ஐக்கியமா வதற்கான வழியையும் விரித்துக் காட்டும் பழமையான பரத சமுதாயத்துக்கு ஜன்னல் திறந்துவிடும் சொற்பமான முத்துக்களில் வேதங்களுக்கு முதலிடம் உண்டு.*

### விளக்கம்

புத்தமதத்துக்கு தம்மபதம்.

சீக்கியர்களுக்கு ஆதி கிரந்தம்.

கிருத்துவர்களுக்கு பைபிள் மற்றும் முகம்மதியருக்கு குர்ஆன்.

இவ்வாறாய் இந்துக்களின் புனித நூலாகின்றன வேதங்கள்.

கணக்கிட முடியாத நூற்றாண்டுகளுக்கு முன்னால் தோன்றி இன்று வரை, மதத்தினைக் கட்டிக்காத்து நிலைத்திருக்க வைக்கும் ஒரு விசையாய் உள்ளன வேதங்கள்.

பக்தர்களை, வழிபாடு (உபாஸனா), கடமை (தர்மா) மற்றும் தெளிவு (ஞானம்) ஆகிய மூன்று நிலைகளிலும் வழிநடத்தும் அதிகாரம்மிக்க ஒரே உபதேச நூலாய் உள்ளன வேதங்கள்.

தத்துவார்த்த ரீதியினாலான ஒரு மையப்புள்ளியாக, பல லட்சம் சந்நியாசிகளுக்கும் பலப்பலக் கோடி ஆன்மீக அன்பர்களுக்கும் விளங்குகின்றன வேதங்கள்.

*வேதங்களின் வாக்கியங்கள், தினசரி கோயில் பூஜைகளிலும் வீட்டுச் சடங்குகளிலும், மனப்பாடம் பண்ணிய பூஜாரிகளாலும் பக்தர்களாலும் ஓதப்படுகின்றன.*

*அனைத்து இந்துக்களும் முழு மனத்துடன் வேதங்களை ஒப்புக் கொண்டுள்ளார்கள். ஆயினும், ஒவ்வொருவரும் அவரவருக்குத் தேவையானவற்றை எடுத்துக் கொள்கின்றார்கள். சுதந்திரமாக அர்த்தப்படுத்திக் கொள்கின்றார்கள். தாராளமாய் விரிவுபடுத்திக் கொள்கின்றார்கள்.*

*சகிப்புத்தன்மை மிக்கவை இந்து வேதங்கள். அதன் காலத்தில், பரதகண்டத்தில் தர்மத்தின் அச்சாணியாய் இவை உருவாகின.*

*இன்று வேதங்கள் சமஸ்கிருதம், ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மனி மற்றும் பல மொழிகளில் வெளியாகின்றன.*

*ஆனால் பிரபலமாயிருக்கும் உபநிடதங்களே மிகவும் அதிகமாகவும் திறமையாகவும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.*

**வேதங்கள் சொல்கின்றன:**

*''சக்கரத்தின் அச்சாணியில் அதன் கம்பிகள் இணைக்கப் பட்டுள்ளதைப் போல, வாழ்க்கையில் பிரகடனப்பட்டுள்ள அனைத்தும் - ரிக், யஜுர், சாம வேதங்கள், தியாகம், மேன்மைக் குணங்கள் - இணைந்துள்ளன. ஓம் நமசிவாய.*



*தந்தையும் அவருடைய பிள்ளைகளும் வெளியே அமர்ந்து வேதங்களை ஓதிக் கொண்டிருக்கின்றார்கள்.*

*தினசரி பயிற்சியின்போது தந்தையார் திரும்பத்திரும்பச் சொல்லும் சமஸ்கிருத செய்யுள்களைத் தெளிந்தறிய பிள்ளைகள் போராடுகின்றார்கள்.*

*சிவலோகத்திலிருந்து இதனை சிவபெருமான் கேட்டுக் கொண்டிருக்கின்றார்.*

# புனித ஆகமங்களின் இயல்பு யாது?

## ஸ்லோகம் 129

*சனாதன தர்மத்தின் இரண்டாவது அதிகாரம், ஆகமங்கள் ஆகும். இவை புனித வாழ்க்கையை வாழ்வது, வழிபாடுகள், யோகா மற்றும் தத்துவார்த்த சிந்தனைகள் ஆகியவற்றை விரித்து விளக்குபவை. சைவம், சக்தி மற்றும் வைணவம் ஆகிய ஒவ்வொன்றும் இவற்றுக்கான ஆகமங்களை அடுக்கித் தந்துள்ளன. இவற்றில் பல 2000 வருடங்கள் பழமை வாய்ந்தவை. ஓம்.*

## விளக்கம்

பரந்து விரிந்து கிடக்கும் ஆகம இலக்கியத்தில் 92 முக்கிய சைவ ஆகமங்கள் உள்ளன. சைவ ஆகமங்கள் பத்து. ருத்ர ஆகமங்கள் 18. பைரவ ஆகமங்கள் 64.

சக்தி ஆகமங்கள் 77 உள்ளன.

108 வைணவ பஞ்சாட்சர ஆகமங்கள் இருக்கின்றன.

ஏறத்தாழ அனைத்து ஆகமங்களுமே நான்கு பாகங்களாக உள்ளன. இவற்றுக்கு பாடங்கள் என்று பெயர். வழக்கமாய் இரண்டடி வரும்படியாய் அமைந்திருக்கும் ஆயிரக்கணக்கான செய்யுள்கள் உள்ளன.

சமயப்படி தினசரி பண்ண வேண்டிய நெறிமுறைகள், சரியான வாழ்க்கை முறை, குரு-சிஷ்யன் உறவு, சமுதாய வாழ்க்கை, வீட்டு வடிவமைப்பு, நகர திட்டமிடல் ஆகியனவற்றை சொல்கின்றது சரியா பாடம்.

பொதுவாய் நீளமாய் அமைந்திருக்கும் கிரியா பாடம், வழிபாடுகள் பற்றியும் கோயில்கள் பற்றியும் மிக ஆழமாய் விளக்குகின்றன. இடம் தெரிவு செய்வது முதல், கட்டுமான

வடிவமைப்பு மற்றும் பிரதிமை விவரணைகள் உட்பட, பூசாரிகளுக்கான சட்ட திட்டங்கள், தினசரி பூஜைகளில் உள்ள பிரச்சினைகள், வருடாந்திர விழாக்கள், வீட்டு பூஜையறை வரை, நுணுக்கமான அத்தனை தகவல்களையும் தருகின்றது இது.

யோகா பாடம், உள்ளார்ந்த தியானத்தினை விவரிக்கின்றது. குண்டலினி நாகத்தினைத் தூக்கத்திலிருந்து தட்டியெழுப்பவல்ல ராஜ யோகம், மந்த்ர யோகம் மற்றும் தந்த்ர யோகங்களை விளக்குகின்றது இது.

கடவுளின் இயற்கை குணத்தினை ஞானப் பாடம் தெளிவு படுத்துகின்றது. விடுதலைப் பேறு அடைவதற்கான வழிகளை இது சொல்கின்றது.

**திருமந்திரம் அறிவிக்கின்றது:**

‘‘வேதங்களும் ஆகமங்களும் இறைவன் எழுதியவை. இரண்டும் சத்தியங்கள். ஒன்று பொதுவாய். மற்றது, குறிப்பிட்டு ஆழமாய். சிலர் கடவுளின் இவ்விரு வார்த்தைகளும் வெவ்வேறான முடிவுகளைத் தருவதாய் சொன்னாலும், சிந்தையில் தெளிந்தவன் வேறுபாட்டைக் காண்பதில்லை.’’ ஓம் நமசிவாய.



இரு காவலர்கள் காவல் காத்துக் கொண்டிருக்க, வழிபாடு, யோகா, விழாக்கள், சமுதாய வாழ்க்கை, வீடு மற்றும் கோயில் கட்டிடங்கள் பற்றியெல்லாம் வேதங்களிலிருந்தும் ஆகமங்களிலிருந்தும் பண்டிதன் ஒருவன் விளக்கிச் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருக்கிறார் மகாராஜா.

## இன்றைய தேதியில் ஆகமங்கள் எங்ஙனம் முக்கியத்துவம் பெற்றுள்ளன?

### ஸ்லோகம் 130

*விதம்விதமான தெய்வங்களைக் கொண்டு இந்துக்களை வேதங்கள் கட்டி வைத்திருப்பது ஒருபுறமிருக்க, ஒரேயொரு தெய்வத்தை மட்டும் முன்வைத்து, ஒவ்வொரு பிரிவையும் ஒரே சிந்தனைக்குள் மடக்கி வைக்கின்றன ஆகமங்கள். ஓம்.*

### விளக்கம்

*அன்பே கடவுள்.*

*அன்புக்கு, கடவுள் மட்டுமே ஒரே புனிதப்பாதை என்று பரிந்துரைக்கின்றது ஆகமம்.*

*ஆகமங்களில் உள்ளவை, கடவுளின் சொந்தக் குரலாகும். இவை, நிரந்தரமில்லாதவற்றில் வைக்கும் ஆசையைத் துறந்து விட்டு அழியாத ஒரே சத்தியத்தின் தாள் பணியச் சொல்லுகின்றன.*

*தெய்வீகத்தை எப்படி நேசிப்பது, எங்கு மற்றும் எப்படி, எந்த மந்திரங்களினால், எந்த சொரூபத்தில், எந்தப் புனித காலத்தில், போன்றவையெல்லாம் ஆகமங்களில் பாதுகாத்து வைக்கப் பட்டுள்ளன.*

*இந்துக்கள் தினசரி வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய ஆசாசரங்களை ஆகமச் செய்யுள்கள் சொல்வதைப் போல வேறெந்த நூலும் சொல்வதில்லை.*

*ஆகவேதான் இந்துக்களின் வாழ்க்கையில் ஆகமங்கள் அபரிமித பங்காற்றுகின்றன. குறிப்பாக கோயில் ஆக்கங்கள் மற்றும் இந்துக்*

*கலாச்சாரத்தில், ஆகமப் பேருரைகளின் வழிகாட்டுதலின்றி சனாதன தர்மத்தைக் காப்பது இயலாத காரியமாகும்.*

*பல ஆகமங்கள் அச்சேறியுள்ளன. இருந்தாலும், இன்னும் பலவற்றை நெருங்க முடியவில்லை. சில குடும்பத்தினர் பரம்பரை தகவல்களை ரகசியமாய் வைத்துள்ளதால் இந்நிலை.*

**திருமந்திரம் சொல்கின்றது:**

*‘‘ஆரம்ப ஆகமங்கள் ஒன்பது. காலப்போக்கில் இருபத்தி எட்டாயின. அவை பிறகு வேதாந்த-சித்தாந்தம் எனும் ஒரே உண்மையை உள்ளடக்கி, மூன்று பிரிவுகளாய் ஆகின. அதுதான், கிடைப்பதற்கரியதும் பொன் போன்றதுமான, சுத்த சைவம்.’’ ஓம் நமசிவாய.*



*பஸவண்ணா ஒரு வீர சைவர். இம்மதத்தை மறுசீரமைத்தவர். பிரதம மந்திரியாக விளங்கியவர். கையில் சிவலிங்கத்தைத் தாங்கிக் கொண்டு பூஜைக்கு புஷ்பங்களை அளிக்கின்றார். வழிபாடு, வான்கணிதம், விண்ணியல் என பலவற்றில் மேதமை நிறைந்துள்ளன, ஆகமங்கள். பின் ஓவியத்தில், ஒருவன் நாகப்பாம்பினை துரத்துகின்றான். ஒரு பெண்மணி, அவள் பூஜை முடிந்த பிறகு வருமாறு பிச்சைக்காரனிடம் சொல்கின்றாள்.*

*மானுடர்களின் பிரயத்தனங்கள் இருவகைப்படுகின்றன. வேத நூல்களை ஓதுக்குவது ஒன்று. அவற்றின்படி ஒழுகுவது மற்றொன்று. வேத நூல்களை ஓதுக்கினால் அது தீங்கில் போய் முடியலாம். அவற்றின்படி வாழ்தல், நிறைவாய் ஒரே சத்தியத்தில் கொண்டு போய் சேர்க்கும். சுக்ல யஜுர் வேதம்.*

*எங்கு இருள் இல்லையோ, பகல்-இரவு எனும் இருமை இல்லையோ, உயிருள்ள அல்லது உயிரற்ற எதுவும் கிடையாதோ, அங்குதான் புனிதம் நிறைந்த அந்த 'ஒரே' புண்ணியம் இருக்கின்றது. தனியாய். முழுமையாய். தெய்வீகமாய். ஆதிகாலத்தில் எதிலிருந்து ஆரம்ப ஞானம் முளைத்து செழித்ததோ, அந்த பிரகாசம், அங்கு ஜோதியின் காந்தியாய் ஜொலிக்கும். கிருஷ்ண யஜுர் வேதம்.*

*உபநிடதம் எனும் அரிய ஆயுதத்தை வில்லாய் கையில் ஏந்தி, தியானத்தால் கூராக்கப்பட்ட அம்பினை அதில் செருக வேண்டும். அந்த ஒரே ஆன்ம ஜோதியில் கவனத்தை நிலைதடுமாறாமல் ஒருமுகப்படுத்திப் பதித்து நாணினை இழுக்க வேண்டும். நண்பா, இறைமை எனும் அந்த 'ஒரே' இலக்கினை நீ துளைத்து விடு. அதர்வண வேதம்.*

*உள்ளார்ந்த ஆன்ம விசாரம், தெய்வீக வெற்றி மற்றும் கடவுளின் அனுக்கிரகம் ஆகியவற்றால், பிரம்ம தேவனின் தரிசனத்தைக் கண்டார் ஷ்வெட்டாஸ்வத்ரா. அப்போது அவர் மிக அருகிலிருந்த மாணவரிடம், துல்லிய தூய்மையின் உச்சம் பற்றி பேசினார். அதுதான் பிரம்மம். ஞானிகள் போற்றுவது. கிருஷ்ண யஜுர் வேதம்.*

*ஓம். இந்த குறியின்மீது மனதினை தியானிக்க வேண்டும். ஒவ்வொரு புண்ணிய வேதமும் ஓம் எனும் மந்திரத்தில்தான் துவங்குகின்றன. இதன் விளக்கம் இப்படிப்பட்டது: அனைத்து உயிரினங்களின் சாரம், இப்பூமி. பூமியின் வாழ்க்கை சாரம், தண்ணீர். தண்ணீரின் வாழ்க்கை சாரம், தாவரங்கள். தாவரங்களின் ஜீவன், மனிதன். மனிதனின் சாரம், வாக்கு. வாக்கின் சாரம், ரிக் வேதம். ரிக் வேதத்தின் சாரம் சாம வேதம். சாம வேதத்தின் ஜீவநாடி, ஓம்.*

*சித்தாந்தத்தின் சைவம், ஆகமம். ஆகமத்தின் ஆரம்பம், காமிக்கா. காரண ஆகமம்.*

*அழகிய வேதங்களில் சிவபெருமான் பின்னால் நிற்கின்றார். அதிர்வோடு வேதியர் சொல்லும் வேத வார்த்தைகளில் அவர் நிற்கின்றார். நெற்றிக்கண் புண்ணியப் பார்வையுடன் அங்கு அவரே வந்து நின்றார். திருமந்திரம்.*

*கடவுளின் கிருபை சித்தித்தால், வேதங்களுக்குச் சமமான ஆகமங்களின் உள்ளார்ந்த அர்த்தத்தினை நான் அறிந்து கொள்ள முடிந்தது. ஆகமம், நெஞ்சங்களைக் கொள்ளைக் கொள்ளும் மாபெரும் படைப்பு. ஆகமப்புத்தகம் தரும் சொர்க்க ரகசியங்களை விடாது ஒருவன் கடைப்பிடித்தால், நானடைந்துள்ள அதே தெளிவினையும் ஞானத்தையும் ஒருவன் அடையலாம். தசைகளைக் கிளறி நெஞ்சங்களை இனிதாக்கும் வேத கீதங்களைப் பாடும்போது, ஞானம் தானாகவே சுரந்து விடும். விடாதீர்கள். முயற்சி செய்யுங்கள். எப்போதும் முயற்சி செய்யுங்கள். அப்போது சித்திக்கும். திருமந்திரம்.*

*கொன்றை மலர்களை மாலையாய் சூடியிருக்கும் தந்தையாகிய கணபதியை விடாதீர்கள். கெட்டியாய் பிடித்துக் கொள்ளுங்கள். வயதற்ற வேதங்களின் ஆசான் இவர். ஆன்மீக தபங்கள் செய்து அவரை நம்மவராக ஆக்கி விடலாம். ராமேஸ்வரத்துக் கோயிலில் வாழ்கின்றார் அவர். திருமுறை.*

*அவரது கீர்த்திகளையும், ஹஸ்தங்களையும், புண்ணியத் தலங்களையும், வகுத்துள்ள பாதைகளையும், கீர்த்தியையும் - ஓராயிரம் புத்தகங்கள் பேசுகின்றன. ஓ, மானிடரே, அவரை உங்களது இதயம் இன்னும் வெற்றி கொள்ளவில்லை! திருமுறை.*

*ஹரா என்று சொர்க்கம் பெயரை எதிரொலித்தபோது, வேதங்களும் ஆகமங்களும் அப்போது முழங்கியபோது, பாண்டித்தியம் மிக்க பிராமணர்களின் கீதங்கள் இசைத்தபோது, நொட்டித்தண் மலையிலுள்ள ஒரே கடவுள் எனக்கு பாதையைக் காட்டினார். அனைத்தையும் கருணையுடன் கொடுக்கும் அதே தெய்வம் நான் பிரயாணிக்க யானையைத் தந்தருளினார். திருமுறை.*

*சந்திர சூரியர்கள் எனக்குப் பாதுகாப்பாய் இருக்கட்டும்! எங்குமிருக்கும் அனைத்து ஜீவராசிகளும் எனக்கு பாதுகாப்பாய் இருக்கட்டும்! மந்திரங்களும் தந்திரங்களும் எனக்கு பாதுகாப்பாய் இருக்கட்டும்! நான்கு வேதங்களும், சைவ ஆகமங்களும், அனைத்து உலகமும் எனக்கு பாதுகாப்பாய் இருக்கட்டும்! நற்சிந்தனை.*

*உடல் ஒரு கோயில். கட்டுப்படுத்தப்பட்ட புத்தியே தீபம். அன்பே பூஜை. இதைத் தெரிந்து கொள்! இந்த உபாயத்தின் வாயிலாக உன்னுள் இல்லாதிருக்கும் அந்த வஸ்துவை நீ அறிவாய். இதைத்தான் வேதங்கள் அறிவிக்கின்றன. உன்னிலிருந்து சிறிதும் விலகியில்லாத ஆண்டவனை அசுத்தமான புத்தியால் அடையவே முடியாது. புத்தி ஒரு கோயில். ஆன்மாவே அதற்கு விளக்கு. தியானி, தியானி! பிறகு சத்தியம் உனக்காக உன்னுள் விடியும். நற்சிந்தனை.*

# ஸ்மிருதி



## அடுத்தகட்ட வேத நூல்கள்

*உலகம் என்றால், அது வெறும் பெயரளவில் கிடையாது. உலகம்தான் ரிக் வேதம், யஜுர் வேதம், சாம வேதம் மற்றும் அதர்வண வேதம் ஆகியனவற்றை தெரியப்படுத்துகின்றது.*

*இந்த நான்கினை தவிர வேதங்களின் வேதமாய் விளங்கும் பலவற்றை அது ஐந்தாவதாக முன்வைக்கின்றது: சடங்குகளில் வாழ்ந்த மூதாதையர்கள், சுழற்சி அறிவியல், கால அட்டவணை, தர்மங்கள், அரசியல், புனித ஞானம், ஆவிகளின் அறிதல், ராணுவ அறிவியல், வான சாஸ்திரம், நாக சாஸ்திரம், விண் வஸ்துக்கள், இவ்வாறாய்.*

**– சாம வேதம்**

# ஸ்மிருதி எனும் நூலும் இந்துமதத்தின் புனித நூல்களும் வேறுபட்டவையா?

## ஸ்லோகம் 131

*பக்திப் பாடல்கள், துதிகள், புராணங்கள், தத்துவம், தர்ம சாஸ்திரங்கள் ஆகியனவற்றின் பொக்கிஷம், இந்துமதத்தின் புனித நூல்களாகும். கொட்டிக் கிடக்கும் இத்தகைய எழுத்துப் பதிவுகளிலிருந்து, ஒரு சிறு பகுதியினைத் தெரிந்தெடுத்து அடுத்தடுத்து வரும் சந்ததியினர் இரண்டாம் கட்ட புனித நூல்களாகக் கொள்கின்றார்கள். இவை, ஸ்மிருதி. ஓம்.*

## விளக்கம்

வேதங்களும் ஆகமங்களும் இந்து மதத்தின் அடிப்படை மற்றும் முதன்மை புனித நூல்களாக இருக்கின்றன. இவை, *ஸ்மிருதி* ஆகும்.

இந்துமதத்தின் உட்பிரிவுகள், இவற்றிலிருந்து அவற்றுக்கு ஏற்றாற்போல வரும் தனித்துவம்மிக்க பகுதிகளை சொந்தமாய் வகுத்துக் கொள்கின்றன. இவையே *ஸ்மிருதி* என்றாகின்றன.

வேதங்கள், புண்ணிய நூல்களாகும்.

இவற்றிலிருந்து உருவாக்கப்படும் ஸ்மிருதியில், பழைமையும் நவீனமும் கலந்துள்ளன. பல மொழிகளிலும் இவை இடம் பெற்றுள்ளன.

இதில் குறிப்பிடும்படியான மையக்கருக்கள், பழைமையான சமஸ்கிருத ஆக்கங்களான இதிகாசங்கள், புராணங்கள் மற்றும் தர்ம சாஸ்திரங்களிலிருந்து எடுக்கப்பட்டுள்ளன. இவையெல்லாம் பரவலாக 'மிகச்சிறந்த ஸ்மிருதி' என்று வகைப்படுத்தப்பட்டுள்ளன.

ஸ்மிருதி என்றால், 'நினைவில் மறக்காமல் வைத்துக் கொள்ளப் பட்டது' என்று அர்த்தம். அதாவது 'பாரம்பரியம்'

*மனிதனின் உள்ளார்ந்த ஞானப்பார்வையாலும், அனுபவங்களினாலும் உருவாகி இந்து சமயத்தின் கலாச்சாரத்தைப் போற்றிப் பாதுகாப்பதால், இதற்கு இப்பெயர் வந்துள்ளது.*

*ஸ்ருதி கடவுளிடமிருந்தே நேரடியாய் வந்தது. எனவே தெய்வீகம் நிறைந்தது. என்றென்றும் அழியாதது. அனைத்து உலகுக்கும் பொருந்துவது.*

*என்றும் வளர்ந்து கொண்டிருக்கும் ஸ்மிருதியோ, மனிதனால் இயற்றப்பட்டது.*

*இயல், இசை, நாடகம் எனும் கலைகளுக்கும், யோகா, பக்தி எனும் சாதனா, புராணங்கள், அறிவியல் ஆகியனவற்றுக்கும், இந்துமதத்தின் புனித நூல்கள் மைல்கற்களாய் நின்று உதவுகின்றன... இவற்றையெல்லாம் வளர்க்கின்றன.*

**வேதங்கள் கேட்கின்றன:**

*‘‘யார் மீது ஆதி மகான்கள் தங்கள் கவனத்தை குவித்திருந்தார்கள்? துதிப்பாடல்களும், பக்திப் பாடல்களும், தியாக விளக்கங்களும், யாரின்பால் எழுதப்பட்டன? அந்த ஆதரவான கருணை யார்? அவர் யாராயிருக்கும், சொல்லுங்கள்?’’ ஓம் நமசிவாய.*



*ஒரு பண்டிதர், துளசி மாலை அணிந்து கொண்டு, வைணவர்களுக்கான நாமத்திலகத்தை இட்டுக் கொண்டு, ஸ்மிருதி நூலைக் கையில் வைத்துள்ளார்.*

*இந்து மதத்தின் ஒவ்வொரு உட்கிளைக்கும், அவற்றின் தினசரி வாழ்க்கைக்கு வழிகாட்டிக் கொண்டிருக்கும் ஸ்மிருதிகள் உள்ளன. இவற்றில் கதைகள் உண்டு.*

*கலை, இலக்கிய வழிகாட்டுதல்கள் உண்டு.*
*ஆன்மாவைப் பல படிகள் மேலே உயர்த்தும் உபாயம் உண்டு.*

# வேதங்களையும் ஆகமங்களையும் எவை விஸ்தரிக்கின்றன?

## ஸ்லோகம் 132

*பல படைப்புகள் வேதங்களுக்கும் ஆகமங்களுக்கும் ஆதரவு தருகின்றன. வேத வழிமுறை, விண் சாஸ்திரம், மொழி, சொல்லதிகாரம் ஆகியனவற்றை விளக்குகின்றன வேதங்கள். அரசியல், மருத்துவம், போர் உத்தி மற்றும் இசை ஆகியனவற்றை விஸ்தரிக்கின்றன உபவேதங்கள். உபாகமங்கள், ஆகமத்தின் வீச்சினை மொழிகின்றன. ஓம்.*

## விளக்கம்

*இந்துமதத்தின் ஞானம், ஸ்ருதியை விஸ்தரித்து விவரணை தரும் பல படைப்புகளால் காக்கப்பட்டு வருகின்றது.*

*புனித வாழ்க்கையினைத் தினசரி வாழ ஏதுவாய் வேதங்களை சுருக்கமாக்கி சாமானியனும் கடைப்பிடிக்க உகந்ததாய் தருகின்றன, வேதாங்க நூல்களும், உபவேத நூல்களும்.*

*புண்ணிய கடமைகளைச் செய்ய உகந்த நல்ல நேரங்களை கோடிகாட்டுகின்றன, ஜோதிஷ வேதாங்கம்.*

*கல்ப வேதாங்கம் எனும் நூல், ஸ்ரௌத்த மற்றும் சுலப சூத்திர பிரிவினரின் பொதுநலக் கடமைகளை விளக்குகின்றது.*

*தர்ம சாஸ்திரங்கள், சமயத் சட்டதிட்டங்களை வகுத்து தருகின்றன.*

*இலக்கணம், கவிதை நயம், வார்த்தை உச்சரிப்பு போன்றவற்றின் அடிப்படையில், மந்திர உச்சாடனத்தில் உள்ள துல்லிய தூய்மையை இன்னபிற நான்கு வேதாங்க படைப்புகள் விவரித்துச் சொல்கின்றன.*

*பல்வேறு அறிவியல்களை வெளிக்கொண்டு வருகின்றன, உபவேதங்கள்.*

*கலைகளை விளக்குகின்றது அர்த்தவேதம்.*

*ஆரோக்கியம் மற்றும் மருத்துவ அறிவியலை ஆழ்ந்து சொல்கின்றது, ஆயுர்வேதம்.*

*மிலிட்டரி சட்டங்கள் மற்றும் ராணுவ அறிவியலை போதிக்கின்றது, தனுர்வேதம்.*

*இசை மற்றும் கலைகளுக்கு ஒளியூட்டுகின்றது, காந்தர்வவேதம்.*

*கட்டுமான அறிவியலுக்கான அடிப்படைகள் மற்றும் ஆழ்ந்த போதனைகளை தருகின்றது, ஸ்தாபத்தியவேதம்.*

*கூடுதலாக, காம சூத்ரா, சிற்றின்ப இச்சையில் உருவாகும் நிறைவினை விளக்குகின்றது.*

*ஆகமங்களுக்கும், துணைப் படைப்புகள் உள்ளன. உபாகமங்கள், பத்ததி ஆகியன அவை.*

**ஞானேஷ்வரி சொல்கின்றது:**

*‘‘இறைவனின் அழகிய திருவுருவ பிம்பத்தை வேதங்கள் முன்வைக்கின்றன. இறைவனாரது உடலாகவே ஆகின்றன, தங்குதடையின்றி வரும் வேத வார்த்தைகள். இவற்றின் எலும்புகள், ஸ்மிருதி.’’ ஓம் நமசிவாய.*



*மையத்தில், புண்ணிய நூல்களான வேதங்களையும் ஆகமங்களையும் சிவபெருமான் வைத்திருக்கிறார்.*

*இவற்றை மையமாய் கொண்டு கலை, விஞ்ஞானம், விண் அறிவியல், கலாச்சாரம், சமயம் போன்ற அனைத்துக்கும் வழிகாட்டும் பல படைப்புகள் உதித்தன.*

*அவை இன்றும் கல்வெட்டுக்களிலும் ஸ்தூபிகளிலும் புதைந்துள்ளன.*

# இந்துமதத்தில் காவியங்களும் புராணக்கதைகளும் உள்ளனவா?

## ஸ்லோகம் 133

*மகாபாரதமும் இராமயணமும் இந்துமதத்தின் இரு பெரும் காவியங்கள். இவற்றுக்கு இதிகாசங்கள் என்றொரு நன்மதிப்பு உண்டு. ஊர்க்கதைகளாகவும், நம்பிக்கையையும் பிடிப்பையும் தர்மத்தையும் வளர்த்து விடும் கதைகளாகவும், மதத்துக்கே உரிய சீரியதொரு முத்திரையாகவும் புராணங்கள் உள்ளன. ஓம்.*

## விளக்கம்

இந்துமதத்தின் செய்யுள் வடிவக்கதைகள், இம்மதத்தின் ரிஷிகள், கடவுளர்கள், நாயகர்கள் மற்றும் அசுரர்களைச் சார்ந்திருக்கும்.

இவை, பாடுவதில் பாண்டித்தியம் மிக்க பண்டிதர்கள் மற்றும் வழிப்போக்கர்களின் பாடல்கள் வழியாக, குழந்தைகளுக்குப் பாடிக்காட்டப்பட்டன. நாடகங்களிலும் திருவிழாக்களிலும் எடுத்துரைக்கப்பட்டன.

உலகின் மிக நீளமான செய்யுள் இதிகாசமாய் அமைந்துள்ள மகாபாரதம், இருபெரும் ராஜவம்சங்களுக்கிடையேயான காவியமாகவும், இவர்களுக்கிடையே நடந்த குருக்ஷேத்திரப் போரில் புலமையும் ஞானமும் மிகும் ஆன்மீக உரையாடல்களை உள்ளடக்கிய பகவத் கீதை பிறந்த காட்சிகளாகவும் உள்ளது.

காவியத் தலைவனான ராமன் ஒரு சாதாரண பிரஜையாக சித்தரிக்கப்பட்டுள்ள ராமாயணம், ராமபிரானின் வாழ்க்கையோடு பின்னிப் பிணைந்த ஒன்று.

மகாபாரதம் போன்ற இதிகாசங்கள் இலக்குகள் பல கொண்ட மாபெரும் தொகுப்புகளாகும். பக்தி மார்க்க போதனைகள்,

*தத்துவங்கள், தர்ம விதிமுறைகள், சடங்குகள், மொழியாளுமை, கலையாளுமை, கட்டுமானம் மற்றும் விவசாயப் புலமை, மாய மந்திர வித்தைகள் என்று பலப்பல இவற்றில் உள்ளன.*

*அடிப்படைப் புராணங்கள் மொத்தம் 18. இவற்றில் ஆறு சிவபெருமானை போற்றுகின்றன. ஆறு விஷ்ணுவையும், ஆறு பிரம்மாவையும் துதிக்கின்றன.*

*கதை தொகுப்பில் முதன்மையாய் வரும் பஞ்சதந்திரக் கதைகள், விலங்குகள் மற்றும் தேவதைகளை உள்ளடக்கி தெளிந்த ஞானத்தைப் போதிக்கின்றன.*

**பகவத் கீதை உரிமையாய் சொல்கின்றது:**

*‘‘எங்களுடைய இந்தப் புண்ணிய உரையாடலை யார் படிக்கின்றார்களோ, தன்னையே முழுக்க அர்ப்பணித்து என்னை அவர்கள் வழிபட்டதாகவே நான் கருதுவேன். முழு நம்பிக்கையுடன் ஐயமற யாரொருவன் இதனைக் காது கொடுத்து கேட்கின்றானோ அவனுக்கு முழு விடுதலை உண்டு. சத்தியம் எனும் எல்லைக்குள் அவன் ஆனந்தமாய் இருப்பான்.’’ ஓம் நமசிவாய.*



கடிகாரச் சுற்றில்: சீதையைக் கைபிடிக்க ராமர் வில்லை முறிக்கின்றார்.
கிருஷ்ணர், அர்ஜுனனுக்கு போதிக்கின்றார்.
கண்ணப்ப நாயனார் தனது கண்களைத் தியாகம் செய்கின்றார்.
கண்ணகி மதுரையை எரிக்கின்றாள்.
நரசிம்ம அவதாரத்தில் விஷ்ணு.
கஜேந்திர யானை விஷ்ணுவின் உதவியை நாடுதல்.
தங்க மானாக மாரீசன்.

## மற்ற வகையான புனித நூல்கள் இருக்கின்றனவா?

### ஸ்லோகம் 134

*இந்தியாவின் உன்னதமான தத்துவப் புத்தகங்கள், பலதரப்பட்ட கோணங்களைத் தர்க்கரீதியாக அலசுகின்றன. சமாதி நிலைக்குள் வியாபிக்க உள்ள ரகசியப் பாதைகளை திரைவிலக்கிக் காட்டு கின்றன யோகப் பொக்கிஷங்கள். உள்ளார்ந்த கடவுள் துதிகள், நமக்குள்ளேயே புதைந்துள்ள கருணை பொங்கும் இறை அன்பினை அடையாளம் காட்டுகின்றன.*

### விளக்கம்

இதிகாசங்கள், வேதங்கள், ஆகமங்கள் இவை நீங்கலாக, இந்துமத இலக்கிய செல்வங்கள் நிறைய உள்ளன. யோக மற்றும் பக்தி படைப்புகள், இப்படிப்பட்டவையே.

ஆறு தத்துவார்த்த தரிசனங்களை முன்வைக்கும் ஆரம்பக்கால நூல்கள், அடிப்படைப் படைப்புகளாகக் கொள்ளப்பட்டுள்ளன.

கபிலர், பதஞ்சலி, ஜெய்மினி, பத்ராயணர், கனடா மற்றும் கௌதமா ஆகியோர் தந்த சூத்திரங்கள். மறைமுகமான மற்றும் அந்தரங்கமான படைப்புகளாய் கருதப்படுகின்றன. இவை, யோகம், ஆசனங்கள், சூட்சும நாடிகள், சக்கரங்கள், குண்டலினி மற்றும் சமாதி நிலைகளை ஆழ விவரிக்கின்றன. முக்கியமான அவை:

யோகா, திருமந்திரம், யோக வசிஷ்தா, சிவ சூத்திரங்கள், சித்த சித்தாந்த விளக்கங்கள், ஞானேஷ்வரி, ஹத யோகா ப்ரதிபிகா மற்றும் க்ரந்த சம்ஹிதா.

**பக்தி இலக்கியத்தில் பிரபலமாக கொண்டாடப்படுபவை:**

*பகவத் கீதை, நாரத சூத்திரங்கள், திருவாசகம், மேலும் இறை புலவர்களான சூர்தாஸ், துக்காராம், ராம்பிரஸாத், மீராபாய், ஆண்டாள், வல்லபர், துளஸிதாஸர், தாயுமானவர், லல்லா, தாகூர், ஔவையார் மற்றும் நாயன்மார்கள், ஆழ்வார்களின் பக்திப்பாடல்கள்.*

**பகவத் கீதை விளக்குகின்றது:**

*‘‘பரவும் நெருப்பு தீண்டும் அனைத்தையும் பஸ்பமாக்குவதைப் போல, ஓ அர்ஜுனா, ஞான நெருப்பு அனைத்தையும் சாம்பலாக்கி விடும். தெளிந்த ஞானத்துக்கு உள்ள சக்தியினைப் போன்றதொரு பலம் பூமியில் வேறெதற்கும் கிடையாது. தன்னாலேயே தனக்குள் இந்த ஞான ஒளியை, காலம் கைகூடும்போது ஒரு யோகி கண்டு ஆழ்கின்றான்.’’ ஓம் நமசிவாய.*



*கிருஷ்ணர் பின்னால் இருக்க, இந்த 13ஆம் நூற்றாண்டு புண்ணியாத்மாவான மத்வாசாரியார் ஆழ்ந்த பூஜையில் ஈடுபட்டுள்ளார்.*

*போதிக்கும் தொனியில் உட்கார்ந்துள்ள இவர், கீதையின் சாரங்களைப் போதிக்கின்றார்.*

*புனிதக் குறியீடுகளை மத்வர்தான் அறிமுகப்படுத்தினார்.*

# கேள்வி-பதில் வகையாய் உள்ள இதற்கான மூலம் எங்கிருந்து வந்தது?

### ஸ்லோகம் 135

*கேள்வி-பதில் வகையாய் உள்ள இதன் அடிப்படைச் சாரம், வேதங்களும் சைவ ஆகமங்களும், திருக்குறளும், திருமுறையும், திருமந்திரமும் மற்றும் நம்பகமான பல புனித நூல்களும் உணர்த்தும் கைலாச பரம்பரையினுடைய தத்துவார்த்தங்களை அடிப்படையாய் கொண்டது. ஓம் நமசிவாய.*

### விளக்கம்

*தென்னிந்திய சைவ பள்ளிக்கூடத்துக்கு சுத்த சைவ சித்தாந்தம் அல்லது அத்வைத சித்தாந்தம் என்று பெயர். இதில், 'கைலாச பரம்பரைகள்' என்றழைக்கப்படும்படியாய் திகழும் மகான்கள் படைத்திட்டவை, ப்ரஷ்ணோத்தாரம் எனும் கேள்வி-பதில் பாணியிலான விவரணைகள்.*

*வேதங்கள் மற்றும் சைவ ஆகமங்கள் போதிப்பவற்றை இவை பிரதிபலிக்கும். தமிழில் உள்ள வழிகாட்டிகளான திருமுறை, திருக்குறள், மற்றும் பாண்டித்தியம் மிக்க கைலாச குருக்கள் சொல்லியுள்ளவற்றையும் இவை பிரதிபலிக்கின்றன.*

*பற்பல சைவ சந்நியாசிகளும் ஞானிகளும் பாடிய துதிப்பாடல் களின் பன்னிரண்டு பாகத் திரட்டாய் உள்ளது திருமுறை.*

*இவற்றில் மிக முக்கியமானது திருமந்திரம். ரிஷி திருமூலரால் சொல்லப்பட்டுள்ள சித்த யோக பொக்கிஷம். 3047 செய்யுள்களில் சைவ சித்தாந்தங்களை இது பதிந்துள்ளது.*

*சித்தாந்தம் மற்றும் வேதாந்தம் ஆகிய இரண்டின் விலைமதிப்பற்ற பிணைப்பு இது என்று போற்றப்படுகின்றது.*

*1330 குறள்கள் கொண்டுள்ள திருவள்ளுவரின் திருக்குறள், உலகத்தின் மாபெரும் தர்மநூலாய் விளங்குகின்றது.*

*இலங்கை சாது யோகஸ்வாமியின் புனித துதிப்பாடல்களின் தொகுப்பே, நற்சிந்தனை.*

**தாயுமானவர் சொல்கின்றார்:**

*‘‘சித்தாந்தா எனும் பேரொளியை நான் தியானிக்கின்றேன். அனைத்து சிந்தனைகளிலும் தலையாய சிந்தனை. அனைத்து ஜீவன்களின் மூல ஜீவன். அனைத்து பொருட்களிலும் பாகுபாடின்றி உள்ளது இது. இதனை பின்தொடரும் பக்தர்களின் நல்வாழ்வுக்காக, ஒப்புயர்வற்ற தூய ஆனந்த ஊற்றினை இது தோற்றுவிக்கின்றது.’’ ஓம் நமசிவாய.*



*சைவ சித்தாந்த வழியில் அடையப்பட்டுள்ளது, இக்கேள்வி-பதில் படைப்பு.*

*புனித சம்பந்தர் கைலாய மலைக்கு யானையில் வந்திறங்கினார்.*

*இதை கேட்ட ராஜா குதிரையின் செவிகளில் ஓம் நமசிவாய என்கின்றார்.*

*பிறகு அதில் பிரயாணித்து சம்பந்தரை சந்திக்க சிவலோகம் கிளம்புகின்றார்.*

ஒவ்வொரு பிரகாசமான நாளும், ஒளியிலிருந்து பிறப்பதைப் போல, கதிர்வீச்சாய் பாடும் பாடகர்கள் எல்லைகள் தாண்டி அகண்டு பிரகாசிக்கட்டும்! கவிஞனின் தெளிவான ஞானம், இறைவனின் மகிமையை விஸ்தரிக்கின்றன. *அதர்வண வேதம்.*

சொர்க்கத்தை, பூமியை, காற்றை, வெளியை, நீர்நிலைகளை, அக்னியை, கடவுளர்களை, மானிடனை, விலங்குகளை, பறவைகளை, புல் முதல் மரங்களை, புழு வரை, பூச்சி வரை, அனைத்தையும் வார்த்தை சொல்லி தருகின்றது. எது சரி எது தவறு, எது சத்தியம் எது அசத்தியம், எது நல்லது எது கெட்டது, எது மனோஹரமானது எது ரணப்படுத்துவது, என்பதையும் வார்த்தை விவரிக்கின்றது. நிஜமாய் சொல்லப்போனால், வார்த்தை (அதாவது வாக்கு - சத்திய வாக்கு - தேவவாக்கு) மட்டும் இல்லாமல் போனால், சரியான ஞானமும் இருந்திருக்காது. தவறான ஞானமும் இருந்திருக்காது. சத்தியமும் இருந்திருக்காது, பொய்மையும் இருந்திருக்காது. மனோஹரமும் அதற்கெதிரான கிலேசங்களும் இருந்திருக்காது. ஒரு சத்திய வார்த்தை, இவையனைத்தையும் அறிந்தவை ஆக்குகின்றது. அந்த சத்தியத்தில் தியானம் வை. *சாம வேதம்.*

ஞான நூல்கள் போதிப்பவற்றைக் கடைப்பிடிக்காமல், அந்த நேரத்தில் உணர்ச்சிகள் சொல்வதைப் பின் தொடரும் ஒருவன், ஆனந்தத்தை அடைவதில்லை. நிறைவையோ, ஞானப் பாதையையோ அடைவது கிடையாது. ஆகவே எது சரி எது சரி கிடையாது என்பதற்கு புனித நூல்களே நமக்கு வழிகாட்டியாயிருக் கட்டும். *பகவத் கீதை.*

தங்கத்தின் மாசுகள் நெருப்பினால் நீக்கப்பட்டு, அந்த வெப்பத்தால் அது பளபளக்கும் தோற்றத்தில் பொலிகின்றது. இதேபோல மனிதனின் மூளை அவன் செய்யும் நடவடிக்கைகள் மற்றும் அவன் கொள்ளும் ஆசைகளினாலேயே தூய்மையாக்கப் படுகின்றது. பிறகு என் மீது உருவாகும் அன்பினால், அவன் ஆழ்நிலைக்குப் போய் நானாகவே ஆகின்றான். என்னைப் போற்றிப் பாடும் துதிகளைக் கேட்பதாலும் பாடுவதாலும் புத்தி தூய்மையடைகின்றது. *பாகவத புராணம்.*

*அவன் நேசிக்கும் நண்பர்கள் தினமும் அவன் வீட்டுக்கு வந்தால், அப்படி வருவது அவனது கண்களுக்கு ஆனந்தப் பிரகாசத்தை ஏற்படுத்தினால், அவன் தனது முழு வாழ்வையும் தன்னுடைய ஆன்மாவில் அடைந்து விட்டதாகவே அர்த்தம். பஞ்சதந்திரம்.*

*லிங்கம் என்பதுதான் ஆதி, அதுதான் முதல் காரணம், அதுவே தெய்வ பிரக்ஞை, பிரபஞ்சத்தின் அடிப்படை என்றுணர்ந்து அதனை ஒருவன் வணங்கினால், மற்ற எதையும் விட அவனே எனக்கு மிகவும் நெருக்கமானவன். சிவ புராணம்.*

*புத்தியும் அதில் நிறைக்கப்படும் அன்பும் தோட்டக்காரர்கள். இவர்களின் உதவியோடு அசையாத ஒரே சிந்தனை எனும் மலரை பறித்து, ஒருவனுடைய சுய ஆன்மாவையே நன்னீராய் பாய்ச்சி, புனிதம் என்பதான அமைதியுடன், இறைவனை வழிபடக் கடவது.'' லல்லா.*

*நான் படும் அவதியை தீர்த்துத் தருவார் யார்? என் சுமைகளை யார் தன்னுடைய தோளுக்கு மாற்றி ஏற்றுக் கொள்வார்? சம்சாரம் சாகரம் எனும் இக்கடலை கடக்க உதவுபவர் அவர். நிர்க்கதியாய் நிற்போருக்கு தோள் கொடுக்க வருபவர் அவர். ஓ நாராயணா இப்போது நீ என்னை நோக்கி ஓடிவா. தேற்றுவாரின்றி புயலில் அகப்பட்ட கப்பலாய் சிதைந்துக் கிடக்கும் என்னிடம் வா. என் புண்ணியம் பாவம் எதையும் நீ பார்க்காதே. துக்காராம் எதிர்பார்ப்பது உன் கருணையைத்தான். துக்காராம்.*

*பானைதான் கடவுள். காற்று தரும் விசிறி கடவுள். தெருவிலுள்ள கல் கடவுள். சீப்பு கடவுள். வீணையின் தந்திகள் கடவுள். கடவுள்கள் இவ்வாறு பற்பல. இம்மி இடுக்கு விடாமல் பற்பல. வச்சன்னா, பசவன்னா.*

*புண்ணியமான கடவுளைப் புகழ்வோர் நீடிக்கும் ஆனந்தத்தினை அடைவர். நான்கு வேதங்களையும் ஆறு புண்ணிய அறிவியல் களையும் அறிந்தவன் அவன். பாண்டித்தியம் பெற்றவர்கள் மறைகளில் ஓதியுள்ள நற்பெயரும் அவரே. திருமுறை.*

*பதினெட்டு புராணங்களும் பழம்பெரும் காவியங்கள். ஆபரணங்கள். அவற்றில் சொல்லியுள்ள கோட்பாடுகள், நல்முத்துக்கள். ஞானேஷ்வரி.*

*அவன்தான் பூமியாகியுள்ளான். காற்று, நீர், அக்னி மற்றும் ஆகாயமாய் உள்ளான். அவனே சூரியனாகவும் சந்திரனாகவும் ஆகியுள்ளான். நட்சத்திர மண்டலங்களாய் அவன் உள்ளான். மந்திரங்களாகவும் தந்திரங்களாகவும் அவன் உருவாகியுள்ளான். அவனே மருந்தாகவும் அதனை விழுங்குபவனாகவும் உள்ளான். இந்திரன் உட்பட்ட கடவுளர்களாக அவனே ஆகியிருக்கிறான். முழு அண்ட சராசரமுமாக அவனே உருவெடுத்துள்ளான். இந்த ஆன்மா மற்றும் உடலும்கூட அவனேதான். நான்கு வேதங்களாய் நிற்கின்றான் அவன். அவன்தான் பந்தத்தளைகளை உருவாக்கு கின்றான். அவற்றிலிருந்து விடுதலைப் பேற்றினையும் அளிக்கின்றான். இந்த பிரார்த்தனையை காலையும் மாலையும் செய்து சிவனை அறிவாயாக! நற்சிந்தனை.*

# மந்திரங்கள்



## நம்பிக்கைக்கான உத்திரவாதங்கள்

*பாமாலைகளால் ஒருவன் இவ்வுலகத்தை எட்டுகின்றான்.*
*தியாகம் செய்வதன் மூலமாக இடைப்பட்ட பிரபஞ்சப் பகுதியை அடைகின்றான்.*

*புனிதமான மந்திரங்களை ஓதுவதால் ஞானிகள் கண்டு*
*சொல்லியுள்ள உலகத்தை அடைகின்றான்.*

*ஓம் எனும் குறியை மட்டுமே ஒரே ஆதாரமாகக் கொள்ளும் புத்திசாலி,*
*சாந்தமும், காலம் கடந்ததும், மரணமற்றதும், பயமற்றதுமான*
*அந்த ஒரே ஜோதியையே எட்டி விடுகின்றான்.*

***- அதர்வண வேதம்.***

# புண்ணியமான நம சிவாய என்றால் என்ன?

## ஸ்லோகம் 136

*வேத மந்திரங்களின் ஆதார துவக்கம், ஓம் நம சிவாய. இதுவே பஞ்சாட்சர மந்திரம் - ஐந்தெழுத்து மந்திரம் என்றழைக்கப்படு கின்றது. சிவனை போற்றுதும் என்பது இதன் பொருள். இதன் பிரபஞ்ச ஸ்ருதியிலும் ஜ்வாலையிலும் சைவத்தின் ஆழ்ந்த ஞானம் அடங்கியுள்ளது. ஓம்.*

## விளக்கம்

*சிவபெருமானின் மிகவும் புண்ணியமான திருநாமம், நமசிவாய. வேதங்களின் கருப்பொருளில் பதிவாகியுள்ள திருநாமமிது. சைவ ஆகமங்களில் நன்றாகவே விளக்கப்பட்டுள்ளது.*

**ந** - *இது, ஆண்டவனின் உள்ளே மறைந்துள்ள மட்டற்ற கருணை.*

**ம** - *இது, உலகு.*

**சி** - *சிவனை குறிக்க அமைகின்றது.*

**வா** - *இது, சிவபெருமான் வெளிப்படுத்தும் கருணை.*

**ய** - *இதுவே ஆன்மா.*

*இந்த ஐந்தும், சிவன் எனும் சக்தியை சுண்டியெழுப்ப பண்டைய வழிமுறையாய் இருந்துள்ளது.*

*ந என்பது பூமியாகவும், ம என்பது தண்ணீராகவும், சி என்பது அக்னியாகவும், வா என்பது காற்றாகவும், ய என்பது ஆகாய மாகவும் ஆகின்றன.*

*இவ்வாறாக உள்ள இந்த ஐந்தெழுத்து தாரக மந்திரத்தின் அர்த்தங்கள் பலப்பல.*

*நமசிவாய எனும் இறைநாமத்துக்கு அத்தனை சக்தி இருக்கின்றது.*

*இந்த திருநாமத்தை வெறுமனே சொல்வதாலேயே ஆன்மாவை சுற்றியுள்ள பாவக்கறைகள் கழுவப்பட்டு விடுகின்றன.*

*நமசிவாய எனும் திருமந்திரம் அறியாமை என்பது என்ன என்பதையும் அஞ்ஞானம் எனும் இருள் எப்படிப்பட்டது என்பதையும் காட்டி விடுகின்றது. இவ்வழியே ஞானம் பிறக்கின்றது.*

*ஞானிகள், மந்திரமே வாழ்க்கை என்று கூறுகின்றார்கள். இந்த மந்திரம் இயக்கத்துக்கு, அந்த மந்திரம் அன்புக்கு, திரும்பத்திரும்ப மந்திரங்களை ஜபிப்பதால் ஞானம் கிடைக்கும் என்றெல்லாம் அவர்கள் சொல்கின்றார்கள்.*

**ஆனால் நற்சிந்தனை கூறுகின்றது:**

*''நமசிவாய எனும் தெய்வத் திருநாமமே, ஆகமமுமாய் வேதமுமாய் நிற்கின்றது. இதுவே சத்தியம். அனைத்து மந்திரங்களையும் தந்திரங்களையும் குறிக்கின்றது நமச்சிவாயம். நம் ஆன்மாக்கள், நமசிவாயமே. நம் உடம்பும் உடைமைகளும் நமசிவாயமே. நம்முடைய நிச்சயமான பாதுகாப்பாய் இருப்பது நமசிவாயம்தான்.'' ஓம் நமசிவாய.*



*ஐந்து அடிப்படைப் பொருட்களைக் கொண்டு படைத்தல்,*
*காத்தல் மற்றும் அழித்தல் ஆகிய திருநடனங்களை ஆடுகின்றார் சிவபெருமான்.*

*அஞ்ஞானம் எனும் இருளிலிருந்து சட்டென்று ஞானம் எனும் பேரொளி நோக்கி மாற்றி விடும் மாபெரும் சக்தியின் ரகசியத்தை தன்னுள் அடக்கி வைத்துள்ளது நமசிவாயம்.*

# நமசிவாய எனும் திருமந்திரம், எப்படி சரியாய் ஓதப்படுகின்றது?

### ஸ்லோகம் 137

*பஞ்சாக்ஷ்ர மந்திரமான நமசிவாய, ருத்திராட்ச கொட்டை களால் ஆக்கப்பட்ட மாலையை கையில் உருட்டி எண்ணியபடி, உச்சரிப்பாகவோ அல்லது மனதுக்குள்ளோ திரும்பத்திரும்ப ஓதப்படுகின்றது. ஓதும்போது மனதினை ஒருநிலைப்படுத்தி அதனை அப்படியே எல்லையற்றவராய் எங்கும் நிறைந்துள்ள சிவபெருமானோடு ஒருங்கிணைத்து விட வேண்டும். ஓம்.*

### விளக்கம்

ஞானம் அடைய வேண்டும் எனும் இலக்கினை அடையும் முயற்சியில் ஜப யோகம் என்பதே முதல் யோகமாகின்றது.

ஜபத்தினைக் கோயிலில் செய்ய வேண்டும்.

உங்களுக்கு மிகவும் பிடித்த மரத்தின் அடியில் ஜபத்தினை மேற்கொள்ளவும்.

ஒதுக்குப்புறமான குகைக்குள் அமர்ந்து ஜபம் செய்யவும்.

விடியற்காலையிலோ அல்லது உச்சி வேளையிலோ அல்லது அந்தி வேளையிலோ, ருத்ராட்ச மாலையை கையில் உருட்டிக் கொண்டு ஓம் நமச் சிவாய எனும் திருமந்திரத்தினை ஜபிக்கலாம்.

சைவர்கள் சொல்வார்கள், ஓம் நமசிவாய.

ஓம் நமசிவாய, சைவ மதத்தவனின் ஆன்மாவுக்கு பேரின்பத் தினை ஊட்டுகின்றது. அவனது சிந்தனையை வளர்க்கின்றது. புலன் சார்ந்த அவனுடைய புத்தியினை அவிக்கின்றது.

*சிவபெருமானின் புனிதமான கண்ணீர்த் துளிகளான ருத்ராட்சக் கொட்டை மாலையைக் கையிலெடுத்துக் கொள்ளுங்கள். அதன் ஒரு கொட்டையினை கட்டை விரலால் நடுவிரலின் மத்திக்கு நகர்த்துங்கள். இப்பிராணத்தின் ஒவ்வொரு நகர்த்தலையும் செய்யுங்கள்.*

*உரக்கவும் நமசிவாய சொல்லலாம். அமைதியாய் மனதுக் குள்ளும் நமசிவாய சொல்லலாம்.*

*இம்மந்திரத்தினை பல வகைகளில் ஓத முடியும். உங்களுக்கு குருவால் எப்படி ஆரம்பித்து வைக்கப்படுகின்றதோ அப்படியே செய்யுங்கள்.*

*அங்கீகாரமற்ற மு றையில் இதனை முயற்சிப்பதற்கு தடை விதிக்கப்பட்டுள்ளது.*

*கோபமெனும் நெருப்புக்கு சட்டென்று அடிமையாகக் கூடியவர்கள் ஜபம் பண்ணவே கூடாது.*

**திருமந்திரம் அறிவிக்கின்றது:**

*''சிவபெருமானின் பாதங்களே ந. அவரது நாசி, ம. அவரது தோள்கள், சி எனும் அட்சரம். அவரது திருவாய், வா. அவரது பிரகாசமான மையத்தொண்டை, யா. இதுவே ஐந்து அட்சர மந்திரமாகும்.'' ஓம் நமசிவாய.*



*ஆன்மீகத் தேடலில் உள்ள அன்பர், காட்டின் ஆழத்தில் போய் உட்கார்ந்து கொள்கின்றார்.*

*கமண்டலம் எனும் நீர் செம்பும், கையைத் தாங்கலாய் வைத்துக் கொள்ள யோகதண்டமும் மட்டுமே அவரின் இருப்புகள்.*

*எங்கும் பரந்து விரிந்து வியாபித்திருப்பது சிவபெருமானே என்ற அறிதலை மனதில் நிறுத்தி, ருத்திராட்ச மாலையை உருட்டிக் கொண்டு நம சிவாய எனும் திருமந்திரத்தினை அவர் ஓதுகின்றார்.*

# ஜபம் செய்ய, குரு ஆரம்பித்து வைக்க வேண்டுமா?

## ஸ்லோகம் 138

*சைவ மந்திரங்களிலேயே பொக்கிஷமான நமசிவாய அனைவராலும் பாடப்படுகின்றது, ஓதப்படுகின்றது. ஜப யோகம் செய்வதற்கான அனுமதியையும் ஆசீர்வாதங்களையும் மந்திர தீக்ஷை அளிக்கின்றது. இது அன்றி பண்ணப்படும் திருமந்திர ஜபம், குறைந்த பலனையே அளிக்கும். ஓம்.*

## விளக்கம்

பஞ்சாட்சர மந்திரம், ஆண்டவன் வாய்மொழிந்தது. சிவபெருமானின் பெயர். சிவபெருமான் என்பதன் சாரம்.

ஆனால் நமசிவாய எனும் திருமந்திரத்தினை தானாய் ஓதுவதற்கும் அதனை ஓதுவதற்கான பதவியை அடைந்து பின்னர் அடைவதற்கும், வித்தியாசமுள்ளது. வங்கிக்கணக்கில் பணமில்லாத போது காசோலையை எழுதுவதற்கும், உரிய பணமுள்ளபோது காசோலையை எழுதுவதற்கும் உள்ள வித்தியாசமே அது.

யோகத்துக்கான வாயிற்கதவு, நமசிவாய எனும் திருமந்திர மாகும்.

ஒரு குறிப்பிட்ட அளவுக்கான தூய்மையும் அர்ப்பணிப்பும் அடையப்படும்போது, இதனை ஓதுவதற்கான அனுமதி ஆசாரமான ஒரு குருவினால் வழங்கப்படுகின்றது.

நமசிவாய எனும் திருமந்திரத்தினை ஓதுவதற்கான அதிகாரத்தினை குரு அளிக்கின்றார்.

*அவ்வாறு அனுமதி கிடைத்து துவக்கப்பட்டதும், இத்திரு மந்திரத்தினை சொல்லிக்கொடுத்தபடி முறையாய் ஓதவேண்டிய தொரு பொறுப்பு அவனுக்கு வருகின்றது.*

*இதுவே குருவுடனான சிஷ்யனின் பந்தத்தை நிரந்தரமாக்கு கின்றது. உள்ளார்ந்த மலர்ச்சிக்கு ஆகிருதி வார்க்கின்றது.*

*என் சத்குரு நாதரின் திருவாயிலிருந்து நான் நமசிவாய எனும் மந்திரத்தினைக் கற்றேன். அதுவே என் வாழ்க்கையின் மையக் கருவாகவும் சக்தியாகவும் இலக்கினை வெற்றிகரமாய் அடைவதற் கான முழுமையாகவும் ஆனது.*

*நமசிவாய என்பதன் ரகசியம், அதனை சரியான ஒரு தருணத்தில், மிகச்சரியான திருவாய் வழி கேட்டறிவதில் அடங்கியுள்ளது.*

*அப்போதுதான், அப்போது மட்டுந்தான், அது உங்களுக்கான ஒரு மிகச்சிறந்த மந்திர அருமருந்தாகும்.*

**சிவ சம்ஹிதா சத்தியம் செய்கின்றது:**

*‘‘குருவின் திருவாய்வழி சொல்லித் தரப்படும் மந்திரமே சக்தி வாய்ந்தது, பயன் தரவல்லது. மாறாக அமையும் எதுவும், கனியாத, பலமற்ற, மிகவும் சிரத்தைப்பட வைக்கும் ஒன்றாய் ஆகிவிடும்.’’ ஓம் நமசிவாய.*



*இறைவனின் வழிகாட்டுதலுடன் தர்மவழியில் ஆட்சி நடத்த நினைக்கும் ஓர் இளம் அரசன், நமசிவாய எனும் திருமந்திரத்துக்குள் செலுத்தப்படுகின்றார்.*

*ராஜ வேலைகளுக்கு நடுவிலும் அவர் புனித ருத்ராட்சத்தினை ஏந்திக் கொண்டு, தனது மனதினை சிவபெருமானின்மீது பதித்து, வார்த்தைகளற்று மனதுக்குள் திருமந்திரத்தினை ஜபித்துக் கொண்டிருக்கின்றார்.*

# சைவத்துவத்தின் நம்பிக்கை என்ன?

## ஸ்லோகம் 139

*‘சிவபெருமானே கருணை, ஆழ்மனத்தின் சத்தியம்’ என்று முழங்குவதே, சைவ மதத்தின் சக்திமிகு நம்பிக்கையாகும். பூமியின் 3000 மொழிகளில் எம்மொழியில் சொன்னாலும், இத்திருமந்திரம், இந்து மதத்தின் சைவக்கிளையின் இந்த நம்பிக்கையை அழுத்தந்திருத்தமாய் முன் வைக்கின்றது.*

## விளக்கம்

*விளங்கிக் கொள்ளக் கடினமான தத்துவங்களை உள்ளடக்கிய தொரு பன்முக பாரம்பரியத்தை, அப்படியே பிழிந்து தரும் கையடக்க விவரணையே, நம்பிக்கை.*

*‘சிவபெருமானே கருணையெனும் அருட்பெரும் ஜோதி, ஆழ்மனத்தின் சத்தியம்’ என்பதே, புனிதமான சைவம் எனும் பசுவிலிருந்து நாம் கறந்தெடுக்கும் கலப்படமற்ற பால். இதிலிருந்து கடைந்து வெண்ணையைப் பிரித்தெடுத்து, அதனை நன்கு கொதிக்க வைத்து சொட்டுச் சொட்டாய் நெய் பிரிக்கப்படுகின்றது.*

*‘சிவபெருமானே கருணையெனும் அருட்பெரும் ஜோதி, ஆழ்மனத்தின் சத்தியம்’ என்பதே, இந்து மதத்தின் சைவப்பிரிவின் நெய்ச்சாறு.*

*சமஸ்கிருத மொழியில் ப்ரேமய்வா சிவமயா, ஸத்யம் ஏவ பரஷிவா என்றாகின்றது இது.*

*இனிக்கும் தமிழில் இது இன்னும் அழகாயும் அமிர்தமாயும் தித்திக்கின்றது: அன்பே சிவமயம், சத்தியமே பரசிவம்.*

*நமது மதத்தின் சுத்திகரிக்கப்பட்ட இறுதி நிஜமிது. இந்த ஆக்கபூர்வமான நம்பிக்கையை மீண்டும்மீண்டும் நாம் நமது*

*புத்திக்கு சொல்லி அதனை நன்கு உரமேற்றிக் கொள்கின்றோம். இதனால் இக்கட்டான நிலைமைகளிலும், உலகயியலில் சிக்கி அல்லாடி படபடக்கும்போதும், நாம் தடுமாறாமல் இருக்க இது உதவிக்கரம் தந்து காக்கின்றது.*

**திருமந்திரம் புகழ்கின்றது:**

*''அனைத்தையும் கடந்து ஆழ்நிலையில் இருந்தாலும், 'அவன்' அனைத்திலும் நிற்கின்றான். இங்கு பூமியில் இருக்கும் அனைவருக்கும் அவனே பொக்கிஷம். அவனே பரம்பரா எனும் அனைத்துக்கும் தலைவன். ஆயினும், அவனது கனிவு அனைத்து உலகங்களிலும் பரவும்படி அவனே வழிவகுத்தான்.'' ஓம் நம சிவாய.*



*கிராமத்தவர்கள் கூடும் இடங்களில், தத்துவமே ஒரு பொது உரையாடலாய் அமையும்.*

*ஓலைச் சுவடியில் எழுதப்பட்டிருக்கும் சைவ சத்தியங்களை,*
*கீழே உட்கார்ந்து கொண்டு ஒருவன் படிப்பான்.*

*'அன்பே சிவமயம், சத்தியமே பரசிவம்.' இது ஆக்கபூர்வமான வாதங்களுக்கு*
*வழிவகுக்க அதனை ஒரு சைவ முதிர்ச்சி பெற்றவர் நெறிப்படுத்துவார்.*

# சைவ மதத்தின் நம்பிக்கை எப்படி பயன்படுத்தப்படுகின்றது?

## ஸ்லோகம் 140

*சைவ மதத்தின் நம்பிக்கையை உரக்கச் சொல்வதினால், கடவுள் வெளியும் உள்ளும் நிறைந்துள்ளார் என்பதனை நாம் மறுப்பின்றி ஏற்றுக் கொள்கின்றோம். உலகம் எங்கிலும் நிறைந்துள்ளார், ஆழ்மனத்திலும் குடிகொண்டுள்ளார் என்று கொண்டாடு கின்றோம். நாம் செலுத்தும் தெய்வீக அன்பாகவும் அவரே உள்ளார் என்றும் உருவமற்ற அரூப சத்தியமாகவும் அவரே உள்ளார் என்றும் உரிமை கொள்கின்றோம். ஓம்.*

## விளக்கம்

உலகெங்கிலும் உள்ள சைவ பக்தர்களின் உதடுகள், 'சிவபெருமானே கருணையெனும் அருட்பெரும் ஜோதி, ஆழ்மனத்தின் சத்தியம்' என்றே அறிவித்துக் கொண்டிருக்கும்.

இது, நிஜத்தின் வாக்கியம். சத்தியம் என்பதன் சுருக்கப்பட்ட வீரிய வெளிப்பாடு. ஒருத்தருடைய தாய்மொழியில் இது சொல்லப்படும்போது மேலும் வலுகொண்டதாகும் வேதவாக்கு.

தூங்கப் போவதற்கு முன்னால், 'சிவபெருமானே கருணை யெனும் அருட்பெரும் ஜோதி, ஆழ்மனத்தின் சத்தியம்' என்று நாம் மறுபடியும் சொல்கின்றோம்.

ரிஷிகளின் வாயிலாக தூக்கத்தின்போது நாம் அனுபவித்த ஆழ்நிலை ஞானத்தினை நினைத்தபடி துயிலெழும்போது, 'சிவபெருமானே கருணையெனும் அருட்பெரும் ஜோதி, ஆழ்மனத்தின் சத்தியம்' என்று சொல்கின்றோம்.

*அன்றைய நாளை எதிர்கொள்ள நாம் குளிக்கும்போது, இப்புனித வாக்கியத்தினை நாம் கூறுகின்றோம்.*

*இந்நாள் சிவனின் நாள். 'அவரது எல்லையற்ற அன்பு நாம்மை காக்கின்றது. வழிகாட்டி அழைத்துப் போகின்றது. நல்ல சிந்தனைகள் உள்ள பிரதேசத்துக்கு நம் மூளையை தூக்கி விடுகின்றது. தாக்குதல்களிலிருந்து நம்மை தள்ளி வைக்கின்றது' என்று உறுதியாய் பிடித்துக் கொண்டு, 'சிவபெருமானே கருணையெனும் அருட்பெரும் ஜோதி, ஆழ்மனத்தின் சத்தியம்' என்கின்றோம்.*

*பக்தர்கள் இப்புனித மந்திரத்தை 1008 முறை எழுதுகின்றார்கள்.*

*நமசிவாய என்பதற்குள் நுழைவதற்கு முன்னால், எந்த மொழியிலும் இப்புனித மந்திரத்தை 108 முறை சொல்லலாம்.*

*ஆம்... 'சிவபெருமானே கருணையெனும் அருட்பெரும் ஜோதி, ஆழ்மனத்தின் சத்தியம்' என்பது சைவம் எனும் பிரக்ஞைக்குள் மாற்றமின்றி அழைத்துப் போகின்றது.*

**திருமந்திரம் சொல்கின்றது:**

*''அஞ்ஞானி, அன்பும் சிவனும் வெவ்வேறு என்று இருபொருட் களாய் காண்கின்றான். அன்பு என்பது மட்டுமே சிவம் என்பதை அவன் அறிவதில்லை. அன்பும் சிவனும் ஒன்றே என்று கண்டு, அன்பே சிவம் என்றும் சிவமே அன்பு என்றும் உணரும்போது, அன்பெனும் சிவமாகவே அவர்கள் ஆகிப்போகின்றார்கள்.'' ஓம் நமசிவாய.*



*சிவன், பார்வதி மற்றும் கணேசப் பெருமான் பின்னணியில் இருக்க,*
*இரு பக்தர்கள் பாமாலையை கோர்க்கின்றார்கள்.*

*ஒருவன் இசைக்கருவியை இசைக்கின்றான். அடுத்தவன், பிரம்மச்சாரி.*

*சைவம் கூறும் நம்பிக்கையின் அடிப்படையில் இயற்றிய பாடலை பாடுகின்றான்.*

ஆரோக்கியத்தின் ஆதாரத்துக்கும் ஆனந்தத்தின் கர்த்தாவுக்கும் வந்தனங்கள். ஆரோக்கியத்தை அருள்பவருக்கும் ஆனந்தத்தை உருவாக்குபவருக்கும் வந்தனங்கள். புண்ணியமான ஆண்டவனுக்கு வந்தனங்கள். *கிருஷ்ண யஜுர் வேதம்.*

எந்த ஞானமாயினும், யோக பழக்கமானாலும், தியான வகையானாலும், அவையனைத்தும் ஒரே சிவகருணையான ஓம் எனும் ஒலியை மட்டுமே தியானிக்க வேண்டும். சொல்லப் போனால், ஓம் எனும் ஒலியே சிவனாம். *அதர்வண வேதம்.*

முந்தைய பிறப்புகளில் பழகிய நற்பழக்கங்களின் பலனாக, மந்திரங்கள் சீக்கிரமாகவே வெற்றிக்கனியை தந்து விடுகின்றன. சரியான முறையில் பெறப்படும் தீக்ஷையும், பாரம்பரிய முறையில் அதனை கடைப்பிடிப்பதும்கூட மந்திரமே. மந்திரங்கள் எண்ணற்றவை. அவையனைத்தும் சிந்தனையைக் கலைக்கின்றன. குருவின் கரு ணையால் கிடைக்கும் மந்திரம் மட்டுமே முழுமையை தருகின்றது. *குலார்ணவ தந்திரம்.*

ஆனந்தம், சந்நியாசம், சுய திருப்தி ஆகியனவற்றை அளிப்பதே, ஜபம். ஆகவே ஜபம் மற்றும் தியானம் ஆகிய யோகங்களை பழகவும். தெரிந்தோ தெரியாமலோ செய்யப்படும் அனைத்து பாவக்கறைகளும் ஜபத்தால் கரைக்கப்படுகின்றன. *குலார்ணவ தந்திரம்.*

பிரம்மன் எனும் ஞான முழுமையை ஆழ்ந்து சிந்திக்க இரு வழிமுறைகள் உள்ளன. ஒலியில். அமைதியில். ஒலியினால் நாம் அமைதி நிலைக்குப் போகின்றோம். பிரம்மத்தின் அந்த ஒலி, ஓம். ஓம் எனும் திருமந்திரத்தைப் பிடித்துக் கொள்ளும்போது நாம் ஞான எல்லைக்கே போகின்றோம். அதுவே பிரம்மத்தின் அமைதி. இந்த எல்லையே, அழிவற்றது, ஒருங்கிணைந்துப் போவது மற்றும் சாந்தமானது. ஓம் எனும் திருமந்திரத்தையே சிந்திப்பதினால் விடுதலை எனும் நிலைமையை மனிதன் அடைந்து விடுகின்றான். பிரம்மத்தின் ஒலியே ஓம். ஓம் என்பதன் எல்லை இறுதியில், அமைதி. இது, ஆனந்தம் எனும் அமைதி. இதுவே சுகம் துக்கம் என்பவை இல்லாத பிரயாணத்தின் முடிவு. ஸ்திரமானது. என்றும்

குலையாதது, சிதறாதது. எப்போதுமிருப்பது. அழிவற்றது. இதுவே, எங்கும் நிறைந்துள்ள தெய்வமான விஷ்ணு என்பதாகும். இந்த மிகவுயரிய ஸ்தானத்தை அடைய, முழு பக்தியுடன், பிரம்மத்தின் ஒலியையும் அமைதியையும் கையிலெடுத்துக் கொள்ளுங்கள். ஏனென்றால், காலகாலமாய் சொல்லப்பட்டுள்ளது: ''ஒலியும் சாந்தமும், இறைவன். இதன் பெயரே ஓம். இதனை அடைய, ஆழ்ந்து சிந்தியுங்கள். பிரம்மத்தினை அமைதியில் ஆழ்ந்து சிந்தியுங்கள்.'' *கிருஷ்ண யஜுர் வேதம்.*

நதிக்கரை, குகை, குன்றின் உச்சி, புண்ணிய நதிகள், நதிகளின் சங்கமிப்பு பிரதேசங்கள், புனிதமான காடுகள், யாருமற்ற தோட்டம், வில்வ மரத்தின் வேர்ப்பகுதி, குன்றுகளின் வளைவுப் பிரதேசங்கள், கோயில், கடற்கரை, ஒருவருடைய சொந்த வீடு - மந்திர ஜபம் பண்ண மிகச்சிறந்த இடங்களாய் இவையனைத்தும் அறிவிக்கப்பட்டுள்ளன. *குலார்ணவ தந்திரம்.*

கடவுள் கொடுத்துள்ள வரமே, ஐந்தெழுத்துக்கள். நமசிவாய. அவற்றின் மையத்தில் கொலுவிருந்து இரவும் பகலுமாய், தெய்வீகம் தளும்ப, எட்டு வடிவங்களை எடுத்துக் கொள்ளும் அவன் ஆடுகின்றான். கருணைமயமான அந்த ஐந்தெழுத்துக்களை உணருங்கள். அந்த ஆழ்ந்த சத்தியம் உங்கள் இதயங்களை நிரப்பும். நீங்களும் அழிவற்றவராய் ஆவீர்கள். பஞ்சாட்சரம் எனும் அந்த ஐந்தெழுத்து மந்திரமே உங்களுக்கு அடைக்கலம், வேறெதுவும் உதவாது. *திருமந்திரம்.*

சிவபெருமானை நினைத்தபடி, நெஞ்சம் முழுதும் கருணை ஊற்றெடுக்க ருத்திராட்ச முத்துக்களை நகர்த்தும்போது, இந்த தியானம் அத்தகைய பக்தர்களுக்கு இறைவனின் கருணையைக் கொண்டு வந்து சமர்ப்பிக்கும். நமது தெய்வத்தின் திருநாமத்தை செப்பிடுங்கள். 'ஓம் நம சிவாய!' *திருமுறை.*

அற்புதங்கள் செய்யவல்ல நமச் சிவாய எனும் திருநாமம், சிவபெருமானின் புண்ணிய நாமமாகும். இதுவே நான்கு வேதங்களின் ஒட்டுமொத்த சாரம். மனம் முழுக்க பக்தியால் ததும்பும் ஆன்மாக்களை நல்வழிப் படுத்தும் மந்திரமிது. இதயம்

*முழுக்க உருக, கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுக்கும் பக்தியுடன் இதனை ஓதுங்கள். திருமுறை.*

*உள்ளும் வெளியும், ரூபமாயும் அரூபமாயும் இருக்கிறான் இறைவன். அவனே வெள்ளம். அவனே கரை. அவனே, அகல தனது கதிர்களைப் பரப்பும் கதிரவன். அவனேதான், விளங்கிக் கொள்ள முடியாத அற்புதம். அனைத்து மனத்தாழத்து ரகசியங்களிலும் உறைந்துள்ளவன் அவனே. அவனே சிந்தனை. அவனே அதனர்த்தம். அவனை மனமார அணைத்துக் கொள்ளும் அனைத்தையும் அணைத்துக் கொள்பவன் அவன். திருமுறை.*

*போன ஜென்மங்களின் அனைத்து கர்மாக்களும் வரிசையாயும் வேகவேகமாயும் வந்து உங்களை சூழ்ந்து கொள்ள வேண்டாம். ஐந்தெழுத்து பஞ்சாட்சர மந்திரத்தினை ஓதுங்கள். யோகஸ்வாமி.*

*ஐந்தெழுத்து திருநாமத்தால் அத்தனை துக்கங்களும் அழிக்கப்படுகின்றன. ஐந்தெழுத்து மந்திரத்தால், அனைத்து தேவைகளும் அழிக்கப்படுகின்றன. ஐந்தெழுத்து திருமந்திரத்தால், சத்தியமான ஆனந்தம் துளிர்க்கின்றது. ஐந்தெழுத்து மந்திரத்துக்குள், நான் அனைத்தும் திருப்தியடைந்து உட்கார்ந்து கொண்டேன். ஐந்தெழுத்து மந்திரத்தின் வாயிலாக இறைவனின் தாமரை மலர்ப் பாதங்களைத் தரிசிக்க முடியும். ஐந்தெழுத்து திருநாமத்தால் முழு உலகத்தையும் நீங்கள் ஆண்டுவிடலாம். ஐந்தெழுத்து திருமந்திரத்தால் மனத்தின் ஓட்டத்தினை நிலைநிறுத்திவிட முடியும். ஐந்தெழுத்து மந்திரம், வந்து என் நெஞ்சுள் நுழைந்து விட்டது. நற்சிந்தனை.*

# அத்வைத-ஈஸ்வரவாதா



உபநிடதம் பதினொன்று:

*தவ வழி*

# அத்வைதம்-துவைதம்



சந்நியாசமும் இருமையும்

*உயர்ந்த மற்றும் தாழ்ந்த இரண்டும், அனைத்துக்குமான இறைவன்தான்*
*என்பது அறியப்படும்போது, இதயத்தை உலகியலோடு*
*கட்டிப்போட்டிருக்கும் கட்டு அறுபடுகின்றது.*

*அனைத்து சந்தேகங்களும் தீர்க்கப்படுகின்றன.*
*கர்மவினைகள் களையப்பட்டு விடுகின்றன.*

***- அதர்வண வேதம்***

# இந்து மதத்தின் பலதரப்பட்ட தத்துவங்கள் என்னென்ன?

### ஸ்லோகம் 141

*கோடானுகோடி ஆண்டுகளுக்கு முன்னரே இந்தியாவின் சாதுக்களும் தத்துவ மேதைகளும் சத்தியத்தின் இயல்பினை விண்டு வைத்துவிட்டார்கள். அவர்கள் கண்டு சொன்ன வழிகாட்டுதலின் பேரில் நூற்றுக்கணக்கான தத்துவ வகைகள் உருவாயின. அனைத்தும் தத்துவத்தின் வித்தான இந்துத்துவத்திலிருந்தே விளைந்தவை. ஓம்.*

### விளக்கம்

*இந்துத்துவத்தின் ஆழ்ந்த அலைவரிசையின் ஒரு பக்கத்தில் அத்வைதம் எனப்படும் சந்நியாச வழிமுறை நிலைபெற்றுள்ளது.*

*கடவுள், ஆன்மா மற்றும் உலகம் ஆகிய அனைத்திலும் ஒருங்கிணைப்பை - ஒற்றுமையை காண்கின்றது இது.*

*சங்கரரின் தத்துவங்கள் மற்றும் காஷ்மீர சைவ சந்நியாச நிலைகளில், இதுதான் உள்ளது.*

*இந்துத்துவத்தின் ஆழ்ந்த அலைவரிசையின் மறு பக்கத்தில் த்வைதம் நிலைபெற்றுள்ளது. இது இருமையானது. இறைவன் மற்றும் இன்னபிற இருப்புகள் தனித்தனியாய் உள்ளன எனும் கருத்தாலானது. மத்வா மற்றும் ஆரம்பக்கால பாஷூப்தாக்கள் இதனையே கூறுகின்றன.*

*இந்த இரு மூலைகளுக்கும் நடுவில் சத்தியம் என்பதை பற்றிய பல கருத்துக்கள் நிலவுகின்றன. சத்தியம் என்பது ஒன்றுதான் ஆனாலும் ஒன்று அல்ல - என்ற கருத்துக்களின் பல கூறுகள் இங்குள்ளன.*

இதுவே துவைத-அத்வைதம் என்றாகின்றது. ராமானுஜரின் வைஷ்ணவ வேதாந்தம், ஸ்ரீ காந்தாவின் சைவ விசிஷ்டாத்து வைதம் ஆகியன இதற்கான உதாரணங்கள்.

இந்து தத்துவம், பற்பல வேத மற்றும் ஆகம பள்ளிக்கூடங்களைக் கொண்டுள்ளது. இவற்றில் ஆறு அற்புதமான தர்ஷணாக்கள் உள்ளன. அவை: நியாயா, வைஷேஷிகா, சாங்கியா, யோகா, மீமாம்ஸா மற்றும் வேதாந்தா ஆகியன.

இவை ஒவ்வொரு கோட்பாடும் ஆண்டவனை தேடும் தாகத்தினை தருகின்றன. இவையனைத்துமே கதைகள், விளக்க வொண்ணா அனுபவங்கள், மற்றும் கலாச்சார விளக்கங்கள் போன்றவற்றால் தாக்கங்கொண்டு அமைக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு கிராமத்திலும் ஒவ்வொரு காலகட்டத்திலும் இப்படிப்பட்ட புராணக் கதைகளும் நாடோடிக் கதைகளும் கொட்டிக்கிடக்கின்றன. இவற்றால் ஆக்கப்பட்டுள்ளன தர்ஷணாக்கள்.

இந்தியா, நாத்திகத்தையும் தந்துள்ளது. இவை வேதங்களை மறுக்கின்றன. எனவே இவை இந்துத்துவத்தின் ஒரு பகுதியாக அமையவில்லை. ஜைனம், சீக்கியம், புத்தமதம் போன்றவை இதற்கான உதாரணங்கள்.

**வேதங்கள் சொல்கின்றன:**

‘‘தத்துவார்த்தவாதிகள் கேட்கின்றார்கள்: எது காரணம்? பிரம்மமா? நாம் இதனாலா பிறந்துள்ளோம்? இதனாலா நாம் வாழ்கின்றோம்? நாம் எதன்மீது ஆக்கப்பட்டுள்ளோம்?’’ ஓம் நமசிவாய.



*சைவத்தைக் கடைப்பிடிப்பவர்கள், வைணவத்தைக் கடைப்பிடிப்பவர்கள் மற்றும் சீக்கிய மதவழி செல்பவர்கள் அனைவரும் ஒரு கூடாரத்தினருகே கூடினார்கள்.*

*இவர்களுடைய பாதைகளும் தத்துவங்களும் மாறுபட்டாலும், அனைவரும் ஒருங்கிணைப்புடன் ஒருவருக்கொருவர் மதிப்புக் கொடுத்து, இறைவனைப் போற்றிப்பாடுவதை மட்டும் பொதுவாய் கொண்டு வாழ்கின்றார்கள்.*

# ஒன்றே என்ற அத்வைதக் கொள்கையும், இருமை கொண்ட துவைதக் கோட்பாடும், எவ்வாறு வேறுபட்டுள்ளன?

## ஸ்லோகம் 142

*அத்வைத வழி செல்லும் அனைவருக்கும், கடவுள் என்பது உள்ளேயே ஒளிர்ந்து கொண்டிருக்கும் பிரிக்க முடியாதவொரு வஸ்து. புனிதமாய் ஆக்கப்படாமல் பூமியிலேயே இருப்பவராய் கடவுள் காணப்படுகின்றார். மனித நிலையிலிருந்தே இறைமை நிலைக்கு உயர்வது. அவர்தான் படைப்பே. கடவுள் இங்கிருக்கும் பொருட்களே. அவற்றின் கர்த்தா அல்ல. ஆனால் துவைதவாதி களுக்கு கடவுள் இறைமையானவர். ஆழ்நிலையில் இருப்பவர். படைப்பாளி எனும் கர்த்தா. படைப்பவர் அவர் - வெறும் படைப்புகள் மட்டும் கிடையாது. ஓம்.*

## விளக்கம்

படைப்பினைப் பற்றி விளக்குவதற்கு, தத்துவவாதிகள் மூவகையான காரணங்களை முன்வைக்கின்றார்கள். அவரே காரணகர்த்தா - சக்தி. இது ஒருவகை. கடவுளே அனைத்துக்குமான காரணம் என்பது இரண்டாவது வகை. அவரே இங்கிருக்கும் பொருட்கள் அனைத்தும் என்பது மூன்றாவது.

இவையனைத்துமே வெறும் களிமண்ணிலிருந்து பானைகள் கொண்டுவரும் ஒரு குயவனுக்கு ஒப்பானவை.

பானையை உருவாக்க இயங்கும் குயவன், இவ்வியக்கத்துக்கான ஒரு சக்தி. பானையை உருவாக்க அவன் சுழற்றிவிடும் சக்கரம், களிமண் பாத்திரங்கள் உருவாகுவதற்கான காரணம். இதில் களிமண்ணே, பொருள்.

*துவைதிகள் கடவுளை அனைத்துக்குமான தலைவனாக - ஒரு படைப்பாளியாக நம்புகின்றார்கள். ஆனால் அவர் மனிதர்களிடமிருந்தும் இன்னபிற பூமியின் வஸ்துக்களிலிருந்தும் பிரிந்தே இருக்கின்றார். ஆக அவர் பூமியின் ஒரு பொருள் கிடையாது.*

*குறிப்பிடும்படியான துவைதவாதிகளில் கபிலர், மாதவர், மெய்கண்டர், சைதன்யர், அரிஸ்டாடில், ஆகஸ்டின் போன்றோர் வருகின்றார்கள். கிருத்துவ மற்றும் முஸ்லீம் இனத்தின் அனைத்து வகைகளுமே துவைதத்தில் பொருந்துகின்றன.*

*அத்வைதிகளின் ஒரு குறிக்கோள்: 'கடவுளே, அனைத்தும்.'*

*அத்வைதத்தின் பார்வை, ஒரு படைப்பாளி எனும் கர்த்தாவாக ஆண்டவனைப் பார்ப்பதை அனுமதிக்கவில்லை.*

*இறைவன், பிரிக்க முடியாதவாறு நம்முள்ளேயே இருப்பவர். இங்கிருக்கும் அனைத்தும் கடவுளே. இங்கிருப்பவையும், இவற்றைப் படைத்தவராய் ஆக்கப்படும் கடவுளும், வெவ்வேறு கிடையாது.*

*சங்கரர், விவேகானந்தர், அரவிந்தர் போன்றோர் வரலாறு கண்டு திளைத்த அத்வைதிகள்.*

**வேதங்கள் கூறுகின்றன:**

*''எரியும் அக்னியிலிருந்து ஆயிரம் பொறிகள் வருகின்றன. ஒன்றைப்போலவே அடுத்ததும் உள்ளது. இப்படியே ஒரே அக்னி சக்தியிலிருந்து அனைத்தும் வருகின்றன. ஆக, ஒன்றுக்கு மற்றது இணை. குழந்தாய்... நிறைவாய் அனைத்தும் அதே அக்னியிலேயே கலக்கின்றன.'' ஓம் நமசிவாய.*



*சிவ-சக்தியை மையமாய் வைத்துக் கொண்டு, ஒரு பெண் பண்ட பாத்திரங்களை பளபளக்க மெருகேற்றுகின்றாள்.*

*தத்துவார்த்தத்தில், ஒரு பானை, பூமியின் படைப்புகளைப் போலவே மூன்று காரணங்களைக் கொண்டு படைக்கப்படுகின்றது.*

*பொருள் (களிமண் அல்லது உலோகம்), உருவாக்கும் உபகரணம் (குயவனின் சக்கரம்) மற்றும் படைப்பாளி (குயவன் எனும் கலைஞன்.) அத்வைதவாதிகளுக்கு, இம்மூன்றும் ஒன்றே.*

# அத்வைதமும், துவைதமும் ஒன்றுக்கொன்று ஒத்துப்போகுமா?

## ஸ்லோகம் 143

*அத்வைதிகள், ஒரே இருப்புத்தான் இங்கு பலவாக பிரிந்து காணப்படுகின்றது என்ற கொள்கைப் பிடிப்பில் உள்ளார்கள். துவைதிகள், கடவுளையும், ஆன்மாவையும், உலகத்தையும், என்றென்றும் அழியாத தனித்தனிப்பொருட்களாகக் கொண்டுள் ளார்கள். இவ்விரண்டும் துல்லியமாய் ஒத்துப்போகும் ஒன்றாய் உள்ளன. ஓம்.*

## விளக்கம்

ஒரு மலையையும், அதன் பனிகட்டியான உச்சிக்கு இட்டுச் செல்லும் பாதையையும் கற்பனை செய்து கொள்ளுங்கள். கீழ்த்தளப் பகுதிகளைப் பிரயாணி கடந்து கொண்டு மேலேறிப் போகும்போது, பல புல்வெளிகளையும், மேற்கொண்டு இட்டுச் செல்லும் பாதைகளையும், அவற்றில் கடும்பாறைகளையும் பார்க்கின்றான்.

இது ஓர் இயற்கை நியதி. மலையின் கோட்பாடு. இதனைத் துவைத நெறியுடன் நாம் ஒப்பிட்டுக் கொள்ளலாம். கடவுளையும் மனிதனையும் தனித்தனியாய் பார்ப்பது.

உச்சிமீது ஏறி நின்ற பொழுதில் பிரயாணிக்கு ஒருண்மை விளங்கிப் போகின்றது. அது: பிரயாணத்தின்போது பார்த்த வெளிகளும், பாதைகளும், முகடுகளும், கடும்பாறைகளும் என அனைத்துமே, மலை என்பதன் அம்சங்கள்தான். அவையெல்லாமும் கூட மலையேதான்.

பேருண்மையை உணரும் இந்நிலையே, அத்வைதக் கோட்பாடு.

*ஆனால், துரதிர்ஷ்டவசமாக, 'அனைத்தும் இறைவனே' எனும் உச்சியை எட்டிப்பிடித்துவிட்ட ஞானியர் பலரும்கூட, அந்த பேரானந்தத்தை அடைய அவர்கள் கடந்து வந்த ஞானப் பாதையைப் போதித்து வைக்க மறுத்து விடுகின்றார்கள்.*

*இந்நிலையிலும், தளராது மேலும் சற்று முயன்று, அடைந்துள்ள ஞான உச்சியையும் கடந்து குண்டலினி சக்தியினைத் திரட்டித் தூக்கும்போது, சத்தியம் என்பதன் முழுச்சாறும் அகப்படும். தூய உண்மை விளங்கிவிடும்.*

*அப்போது, கீழும் மேலும் ஒரே முழுமை என்று காணப்படும்.*

*ஞானம் பெற்றவர் துவைதத்தையும் அத்வைதத்தையும் ஒன்றே என்று ஒப்புக் கொள்வதற்கு இணையாகிவிடும் இது.*

*துவைதம் மற்றும் அத்வைதம் ஆகிய இரண்டுமே, நிலையற்ற தற்காலிக நடவடிக்கைகளுக்கும் என்றுமழியா தெய்வத்துக்குமான வேறுபாடுகளையும், நன்மை மற்றும் தீமை என்று வகைப்படுத்தி நாம் கொள்ளும் குழப்பங்களையும், விலக்கி விளக்குகின்றன. ஞானப்பாதை அமைத்து தருகின்றன.*

**வேதங்கள் சத்தியஞ்செய்கின்றன:**

*''நாமேதான் அனைத்தும் அறிந்த ஞானியாய் ஆகின்றோம் என்பதனை உணர்ந்தவனுக்கும், ஒரே நிரந்தர சத்தியத்துடன் இணைந்து ஐக்கியமாகிவிட்ட ஒருவனுக்கும், ஆன்மா என்பதன் ஆக்கம் விளங்கும்.'' ஓம் நமசிவாய.*



*தியானத்தில் மூழ்கிவிடும் சந்நியாசி, தனது யோக சக்தியால்,*
*துவைதமும் அத்வைதமும் ஒன்றே என்று ஒன்றுக்கொன்று*
*ஒத்துப்போகும் மலையுச்சி நிலைமையை அடைந்து விடுகின்றான்.*

*அத்தருணத்தில் அவன் தலையில் மலர்கிரீடம் வைத்து*
*அவனுக்குள்ளிருக்கும் கருணை நிலைமையைக்*
*கடாட்சித்து விடுகின்றார் சிவபெருமான்.*

*யோகத்தின் உச்சியை எட்டி ஞானமெய்திய*
*அவனை, சக்தி தனது குழந்தையாய் மடியேந்துகின்றாள்.*

# அத்வைதமும், துவைதமும் கலந்த நிலைமையின் பார்வை என்ன?

## ஸ்லோகம் 144

*அத்வைதமும் துவைதமும் கலந்ததொரு பார்வை உள்ளது. இது, படைப்பாளியும் படைப்புகளும் ஒன்றே என்கின்றது. இதன்படி, நித்தியமும் அநித்யமும் அவனே. ஒன்றும் அவனே, பலவாய் இருப்பவையும் அவனே. ஆழ்நிலையில் இருப்பவனும், எங்கெங்கிலும் விளங்கிக் கொண்டிருப்பவனும் அவனே. ஓம்.*

## விளக்கம்

அத்வைதமும் சரி, துவைதமும் சரி... தனித்து நிற்கயியலாமல் மரண அடி வாங்கியுள்ளன. இரண்டாலுமே சத்தியம் என்பதன் சாரத்தினை தனித்து நின்று விளக்க முடியாததே இதற்கு காரணம்.

'கடவுளே மனிதன் மற்றும் இவ்வுலகம்' எனும் அத்வைத கோணம், 'உலகம் மற்றும் மனிதனிலிருந்து தனித்து உள்ளவர் கடவுள்' எனும் துவைத கோணம் ஆகிய இரண்டில் ஏதோ ஒன்று என்பது கிடையாது சத்தியம்.

இறைவனான சத்தியம், இவ்விரண்டுமானது.

'அனைத்தும் கடவுளில்... கடவுளே அனைத்திலும்' எனும் அத்வைத கோட்பாடும் மற்றும் துவைத கோட்பாடும், ஆக இரண்டுமே, அத்வைத ஈஷ்வரவாதம் எனும் மேற்கத்திய பார்வையாகும்.

ஆன்மா உள்ள உடல், மற்றும் இவ்வுடல், எனும் ஒரு வித்தியாசம் காணப்படுகின்றது. இது ஒப்புக்கொள்ளப்படுகின்றது. கடவுளும் ஆன்மாவும் பிணைந்தே உள்ளன எனும் அத்வைதம்; மற்றும் தானே தெய்வம் எனும் அத்வைத ஈஷ்வரவாதம்.

*இந்நிலையில் நமக்கு ஒரு நம்பிக்கை உள்ளது. அது ஞானியருக்கு அனுபவமாகக் கைகூடியுள்ள நம்பிக்கை.*

*சச்சிதானந்தம் மற்றும் பரமானந்தம் ஆகிய நிலைகளில், ஆண்டவனும் மனிதனும் தெய்வீகமாய் பிணைந்து ஐக்கியமாகி விடுகின்றார்கள் என்பதே அது.*

*இருந்தாலும் ஞானநிலைக்கு மெல்ல உயரும் உருமாற்றம் நெடுகிலும் ஆன்மாவும் உடலும் தனித்தனியாகவே உணரப்படு கின்றன.*

*ஆனாலும், இறுதியில் இந்த வித்தியாசமும், 'தான்' எனும் சுயத்தில் - சத்தியத்தில் - ஐக்கியமாகிப்போகின்றது.*

*ஆகவே ஆரம்பமேயற்ற ஒரு தூய ஐக்கியமும், தற்காலிகமாய் உணரப்படும் ஒரு வித்தியாச மாயையும் உள்ளன... இவைதான் ஞானம் போதித்து உள்ளே உறையும் இறைவன் எனும் சுயமாய் நிறைவடைகின்றது.*

**வேதங்கள் கூறுகின்றன:**

*''அவனே நகர்கின்றான். அவனே நகராததாய் நிலைத்துள்ளான். அவன் மிகத் தொலைவில் உள்ளவன்... எனினும் மிக்க நெருக்கத்தில் உள்ளான். இருக்கும் அனைத்திலும் உள்ள அவனே, வெளி நெடுகிலும் நிறைந்துள்ளான். அனைத்தையும் தன்னுள் கண்டு, தன்னையே அனைத்திலும் காணும் பாக்கியம் பெற்ற மனிதன், அனைத்து பயங்களிலிருந்தும் விடுதலை பெற்றவனா கின்றான்.'' ஓம் நமசிவாய.*



*இறைமை கொண்ட இரண்டு துவாரபாலகர்கள், உள்ளிருக்கும் இறைவனை பக்தர்களுக்குச் சுட்டிக்காட்டியபடி கர்ப்பக்கிரகத்துக்கு காவலாய் நிற்கின்றார்கள்.*

*அந்த சந்நிதிக்கு ஒரு பக்தன் வருகின்றான். தன்னை பிற அனைத்துடனும் இரண்டறக் கலந்த ஒன்றாகக் கண்டுவிட்ட ஆனந்தத்தில் தத்தளித்தபடி, சிவனே இவ்வுலகிலும் இதனை கடந்த பிற உலகங்களிலும் உள்ள இருப்பு என்று அனுபவித்து விட்ட பேரானந்தத்தில் தள்ளாடியபடி, சிவபெருமானே படைப்பவன் மற்றும் படைக்கப்படுபவன் என்பதனை இனம் பிரித்து பார்த்துவிட்ட இறையானந்தத்தில் மிதந்தபடி, அவன் வருகின்றான்.*

# அத்வைதமும், துவைதமும் கலந்த நிலைமை, வேதங்களில் காணப்படுகின்றதா?

## ஸ்லோகம் 145

*வேதங்களிலிருந்தும், சத்குருக்களிடமிருந்தும் நாம் மீண்டும் மீண்டும் கேட்டுக் கொண்டுதானிருக்கின்றோம். 'அஹம் ப்ரம்மாஸ்மி.' அதாவது, 'நானே கடவுள்.' கடவுளே ஆழ்நிலையிலிருப்பவன், அநேகமாகவும் காணக்கிடப்பவன். இதனை சுத்தமாய் உள்வாங்கிக் கொண்டோமேயானால், அத்வைதமும் துவைதமும் கலந்த நிலைமையே சாஸ்வதம் என்பது தெளியும். ஓம்.*

## விளக்கம்

அத்வைதமும் துவைதமும் கலந்த நிலைமை, வேததத்துவமாகும்.

பாண்டித்தியம்மிக்க பண்டிதர்கள், இந்து அறநூல்கள் அனைத்துமே அத்வைதமாகவும் துவைதமாகவும் மாறிமாறி இருப்பதைக் கவனித்திருக்கிறார்கள்.

தனி ஆன்மாவும் இறைவனும் ஒன்றேயென்று சொல்லும் அத்வைதமும், தனிப்பட்ட கடவுளை வர்ணிக்கும்படியாய் அமையும் துவைதமுமாய் இந்து அறநூல்கள் மாறிமாறி அமைந்துள்ளன.

இவ்விரு வகைகளிலும் திளைத்து எழாமல், வேதங்களையும் சைவ ஆகமங்களையும் ஞானிகள் படைத்தருளியுள்ள பக்திப்பாக்களையும் ஒருவரால் சிலாகிக்க முடியாது.

இவையிரண்டும் கலந்ததொரு அமைப்பு, இந்து மதத்தினை ஆழப் போதிக்கும் சைவ சித்தாந்தம்.

*திருமூலர், வசுகுப்தர், கோரக்ஷநாதர், பாஸ்கரர், ஸ்ரீ காந்தர், பஸவண்ணா, வல்லபா, ராமகிருஷ்ணர், யோகஸ்வாமி, நித்யானந்தர், ராதாகிருஷ்ணன், மற்றும் பல்லாயிரம் ஞானியரின் தீர்வு இதுதான்.*

*வேதாந்தம் மற்றும் சித்தாந்தம் ஆகிய இரண்டையும் அரவணைத்துச் செல்வதே சைவ சித்தாந்தம்.*

*கடவுள் இருக்கிறார் என்றும் எல்லாவற்றிலும் இருக்கிறார் என்றும் இது சொல்கின்றது.*

*மனித பாவங்களிலேயே உழன்று முடிவில்லாது அனுபவிக்கும்படி யாரும் விடப்படுவதில்லை என்கின்றது சைவ சித்தாந்தம். 'ஒவ்வோர் ஆன்மாவும் பிரிக்கமுடியாதபடி சிவனோடு இரண்டறக் கலக்கும்' என்ற நம்பிக்கையான புனிதம்மிக்க பரமானந்த நிலையை உரக்க கூறுகின்றது இது.*

**பாண்டித்தியமாக வேதங்கள் கூறுகின்றன:**

*''உயர்ந்தவன். காலம் மற்றும் பிரதேச கட்டுகளுக்கு அப்பாற் பட்டவன். அவனிடமிருந்தே, அகண்டு விரிந்த இப்பிரபஞ்சம் வளர்கின்றது. தர்மத்தை நிலைநாட்டுபவன். பாவங்களைக் களைபவன். ஞானத்தின் தலைவன். ஒருவனுக்குள் இருப்பவன் அவனே என்பதை உணருங்கள். அனைத்தையும் கடந்த அழிவற்றவன் அவன் ஒருவனே என காணுங்கள்.'' ஓம் நமசிவாய.*



*பக்திப்பெருக்கின் அடையாளமாக ஒரு பக்தன் தனது கைகளையும் தலைக்கு மேல் தூக்கி நிறுத்தி வணங்குகின்றான்.*

*மனிதர்களின் அறியாமையையும், அதனைக் கடக்க இறை எனும் கருணையின் வழிகாட்டுதல் வேண்டும் என்பதையும் உணர்த்துமாறு பிரபஞ்ச நடனகர்த்தா நடராஜர் 'அபஸ்மாரபுருஷா' எனும் நிலையில் நிற்கின்றார்.*

*இப்பூமியில் மாறுபாடுகளோ வேற்றுமைகளோ கிடையாது. இங்கு இருப்பதாய் தோன்றும் வேறுபாடுகளை பற்றிக் கொள்பவனே மரணத்துக்கு பிறகும் ஜனனம் கொண்டு பிறக்கின்றான். விளக்கமுடியாத, காலங்கள் கடந்த, சுயம்புவான, பேரானந்தமான, அந்த ஒரே ஆன்மாவுடன் இணைந்து கலந்து விடுவது ஒன்றுதான் இலக்காக அமைய வேண்டும். சுக்ல யஜூர் வேதம்.*

*ஆரம்பமும் இடையும் கடையும் இல்லாத, ஒன்றாய் எங்கும் நிறைந்து, கருணையும் காருண்யமுமாய், வடிவமற்று, ஆச்சரியமானதாய், உயர் தெய்வமான உமையவளை துணையாய் கொண்டு, அனைத்தையும் ஆண்டுகொண்டு, முக்கண்களும் நீலகண்டமும் கொண்டுள்ள, சாந்தத்தின் உறைவிடத்தினை - இடைவிடாது ஆழ்ந்து சிந்தித்த ஞானியர், சத்தியம் எனும் ஒரே சாட்சியினை, அந்த ஆரம்பப்புள்ளியினை எட்டிப் பிடிக்கின்றார். அதர்வண வேதம்.*

*மற்றொன்றை ஒருவன் பார்த்தால், வேறொரு வாசனையை நுகர்ந்தால், வேறு சுவையைச் சுவைத்தால், மற்றொருவரிடம் பேசினால், வேறொரு குரலைக் கேட்டால், வேறு ஒருத்தர் இருப்பதாய் உணர்ந்தால், அங்கு இருமை என்று ஒன்று இருக் கின்றது என ஆகும். ஆனால், அனைத்தும் ஒருவனுக்குள்ளேயே உள்ள ஒன்றாய் ஆகிவிட்ட பிறகு, வேறு எதனுடன் அவன் தன்னை காண முடியும்? எதில் போய் வேற்று வாசனையை அவன் நுகர முடியும்? வேறெதில் போய் மாற்றுச் சுவையை அவன் உணர முடியும்? வேறு யாருடன் போய் எதை அவன் பேசிவிட முடியும்? வேறு யார் குரலை அவன் புதிதாய் கேட்க முடியும்? வேறு எதனை அவன் சிந்திக்க முடியும்? சுக்ல யஜூர் வேதம்.*

*உள்ளேயே உறையும் இறைவனைக் கண்டவர்கள், ஆழ்நிலையில் வசிப்பார்கள். இதையும் கடந்த ஆழ்ந்த நிலைக்கு, அந்த இறைவனுள் நுழைபவர்கள் வசிப்பார்கள். இவ்வாறு இருவேறு நிலைப்பாடுகள் இருப்பதாய் சத்தியத்தை அறிந்து சொன்ன பழங்கால ஞானியர்கள் போதித்துள்ளார்கள். ஆழ்நிலைக்குள் நுழையவல்லவர்கள் மரணத்தை வெல்கின்றார்கள்.*

அதையும் கடந்து இறைவனுடன் கலக்கவல்லவர்கள், அழியா நிலையினை அடைகின்றார்கள். *சுக்ல யஜூர் வேதம்.*

அவனைவிட உயர்ந்தது கிடையாது. அவனைவிட குறுகியது கிடையாது. அவனைவிடப் பெரிது கிடையாது. சிறிதும் கிடையாது. சொர்க்கத்தில் நிர்மாணிக்கப்பட்ட நெடுமரமாய் நிற்பவன் அவன். அவனால், அந்த ஒரே 'சாமியால்', முழு பிரபஞ்சமும் நிறைக்கப்பட்டுள்ளது. *கிருஷ்ண யஜூர் வேதம்.*

நீருக்குள் நீர் கலப்பதைப்போல, அக்னிக்குள் அக்னி கலப்பதைப் போல, காற்றுக்குள் காற்று கலந்து கரைந்து விடுவதைப்போல, இறைமை எனும் ஒரே ஞானத்துடன் பக்தனின் சிந்தனை கரையும்போது அது இறுதி விடுதலையைப் பெறுகின்றது. கிருஷ்ண *யஜூர் வேதம்.*

பிரிக்கமுடியாத அந்த ஒரே சக்தியுடன் யாரால் ஆழ்நிலையில் கலக்க முடிகின்றதோ, அவர் அனைவரது ஆன்மாவிலும் நிரவி நிற்பார். உள்ளார்ந்த கடவுளை, எங்கும் நிறைந்திருக்கும் அவரை, அந்த ஞானி உணர்ந்து விடுவான். இதில் சந்தேகமே தேவையில்லை. *சர்வஞானோத்தர ஆகமம்.*

ஓ, ஆறுமுகக் கடவுளே! குழம்பிய புத்திக்கு மட்டுமே பல உருவங்களும் வடிவங்களும் உள்ளன. அவையெல்லாம் மாயையால் உருவாக்கப்பட்டவை. *சர்வஞானோத்தர ஆகமம்.*

'சுயம்' எனும் உயர்ந்த ஜோதியின் ஜொலிப்பு, இருமையற்ற ஒருமை எனும் ஞானத்தில் நிலைத்துள்ளது. இதுவே மந்திரத்தின் ரகசியம். *சிவ சூத்திரங்கள்.*

# சைவ சித்தாந்தம்



## சத்தியம் பற்றிய கோணங்கள்

*இந்த உடம்பை உருவாக்கி அதனுள் யார் நுழைந்துள்ளாரோ,*
*அவரே இப்பிரபஞ்சத்தையும் படைத்தவராவார்.*

*அவரே அனைத்தையும் படைத்தவர். அவரே உலகம்.*

***- சுக்ல யஜுர் வேதம்.***

# சைவ சித்தாந்தத்தின் இரு கிளைகள் யாவை?

### ஸ்லோகம் 146

*சைவ சித்தாந்தத்தில் இரண்டு வகையான போதனைக் கிளைகள் இருக்கின்றன. கடவுளை பலவாறாக ஏற்றுக்கொள்ளும் கோட்பாடு. அகோரசிவா மற்றும் மெய்கண்டர் ஆகியோர் வழி வருவது இது. இவ்வாறு கருதாமல், எங்கும் நிறைந்து எதிலும் முழுதுமாய் இருப்பது ஒரே சக்தி என்பது, இரண்டாவது வகைக் கோட்பாடு. திருமூலர் சொன்னது இது. இரண்டும் சற்றே மாறுபட்டிருந்தாலும், நம்பிக்கை, கலாச்சாரம் மற்றும் வணங்கும் வழிகள் ஆகியவற்றில் இவையிரண்டும் ஒன்றுக்கொன்று ஒத்ததாகவே உள்ளன. ஓம்.*

### விளக்கம்

இங்கு நாம் ஒப்பீடு செய்யப்போகின்றோம். ரிஷி திருமூலர் சொன்ன ஒரே சக்தி என்பதையும், மெய்கண்டரும் அவருடைய சீடர்களும் சொன்ன கடவுளின் பன்முகத் தோற்றத்தையும் ஒப்பிடுகின்றோம்.

இவ்விரு கோட்பாட்டினை வகுத்தவர்களும், வேற்றுமைகளை விட ஒற்றுமைகளையே மிக அதிகமாக தங்களது கோட்பாடுகளில் வைத்துள்ளார்கள்.

தென்னிந்தியாவில், இவ்விருவர்களுடைய கருத்துக்களும் பல நிலைகளில் ஒத்துப்போகின்றன. வழிகாட்டியாகின்றார், குரு. சிவனின் புனித உருவம், லிங்கம். சடங்கினையொத்த பூஜாமுறைகளே, வழிபாடு.

*இரு வகையினரும் படைப்பின் சாரமாய் சிவபெருமானை முன்வைக்கின்றார்கள்.*

*இருவருடைய 'சக்தி' தான் அனைத்துக்குமான காரணகர்த்தா என்பதையும் ஏற்கின்றார்கள்.*

*பல விதமாய் வெளியே கடவுள் உள்ளார் என்ற கருத்தினாலும், மாறாக உள்ளேயே உள்ள ஒரே ஜோதிதான் கடவுள் என்பதினாலும் எழும் கேள்வியில்தான் இவ்விருவருக்கும் இடையேயான வேறுபாடு அமைகின்றது. ஆக, படைப்பின் கர்த்தா யார் என்ற கேள்விக்கான விடையை அணுகுவதில், இருவரும் வேறுபடுகின்றார்கள்.*

*மேலும், ஆன்மா மற்றும் கடவுள் என்பதனை அடையாளம் காட்டுவதிலும், கடைசியாய் போய் முடியும் இடம் பற்றிய விளக்கத்திலும், இரு சாராரும் விலகி நிற்கின்றார்கள்.*

*2200 வருட முதுமையான திருமந்திரமே சித்தாந்தத்தின் அதிகார பூர்வம் என்று அத்வைத ஈஷ்வரவாதிகள் சொல்கின்றார்கள். கடவுளை பலவாக பார்க்கும் அநேகவாதிகளோ, 800 வருட முதுமையான அகோரசிவ பத்ததிகள் மற்றும் மெய்கண்டார் சாஸ்திரங்கள் ஆகியனவற்றை நம்புகின்றார்கள்.*

### திருமந்திரம் கேட்கின்றது:

*''நம் இறைவனின் கீர்த்தியை யாரால் அறிய முடியும்? அவரது நீள அகலங்களை யாரால் அளக்க முடியும்? அவரே ஆதியும் அந்தமுமற்ற ஒரே ஜோதி. அப்படிப்பட்ட அறிவதற்கரிய இறை துவக்கத்தை பற்றி நான் பேச விழைகின்றேன்.'' ஓம் நமசிவாய.*



இமயமலையில், தனது கையினை சின்முத்திரையில் வைத்த நிலையில், அனைவரையும் சத்குருவின் பாதாரவிந்தங்களை இறுகப் பற்றிக் கொள்ளுமாறு வேண்டிக் கேட்கின்றார் திருமூலர்.

நாற்பது செய்யுள்கள் கொண்ட சிவஞானபோதத்தினை தனது கையில் சுமந்தபடி, தெற்கு ஆதீனத்தில் அமர்ந்திருக்கின்றார் மெய்கண்டர்.

# படைப்பு பற்றிய இரண்டு பார்வைகள் யாவை?

## ஸ்லோகம் 147

*அனைத்திலும் இருப்பவர் ஒருவரே எனும் வகையான அத்வைத கோட்பாடு, சிவபெருமான் தானே உவந்து முன்வந்து பிரபஞ்சத்தை படைத்துள்ளார் என்று நம்புகின்றது. அவரது படைப்புகளில் உள்ளவர், அவரே. துவைத வழி செல்பவர்கள், பிரபஞ்சத்தை வடிவமைக்க என்றென்றும் அழியாதிருக்கும் பிரபஞ்சத்தையே சிவபெருமான் பயன்படுத்துகின்றார், ஆகவே, இது அவரது படைப்பில்லை என்கிறார்கள். ஓம்.*

## விளக்கம்

*துவைதிகள் - ஒன்றே பலவாய் இருக்கின்றது எனும் வழி செல்லாதவர்கள் - கடவுள், ஆன்மா மற்றும் உலகம் (பதி, பசு, பாசம்) ஆகிய மூன்றும் ஒன்றையொன்று சார்ந்திருக்கும் இறை சத்தியங்கள் என்கின்றனர்.*

*படைக்கும்போது, இங்கிருக்கும் மாயா எனும் பொருளையே வெவ்வேறாக தோன்றும்படி சிவபெருமான் வடிவமைத்துத் தருகின்றார் என்பது இவர்களது கொள்கை.*

*வேறு மாதிரி சொல்ல வேண்டுமென்றால், பற்பல வஸ்துக்கள் இப்பிரபஞ்சத்தில் இருக்க, ஒரு குயவனைப்போல, கடவுள் காரணமாய் இருப்பவர் என்று ஆகின்றது.*

*எண்ணற்ற பிரபஞ்ச வஸ்துக்களைப் படைக்கும் குயவன்தான் கடவுளே தவிர, பொருட்களாய் உருவாகும் களிமண் அவர் கிடையாது என்பது இவர்களது நம்பிக்கை.*

'படைப்பும் அவனே, படைக்கப்படுபவையும் அவனே' எனும்போது கடவுளின் மாசற்ற தரம் படைக்கப்பட்ட பொருட்களின் தரத்துக்கு குறைக்கப்படுகின்றது என்றும், கடவுளின் தரமானது என்றென்றும் குறைவற்ற செல்வம் என்றும் துவைதம் போதிக்கின்றது.

இந்த குயவன் கோட்பாட்டினை முழுதுமாய் ஒதுக்குகின்றது அத்வைதம்.

கடவுள், படைப்பாளியாகவும், படைக்கப்படும் பொருளாகவும், அப்படி அது உருவாகத் தேவையான உபகரணங்களாகவும், ஒரே வேளையில் பலவாக இருக்கவல்லவர் என்று போதிக்கின்றது அத்வைதம்.

இடைவிடாது தன்னுள்ளிருந்து படைப்புகளை வெளியிட்டுக் கொண்டேயிருக்கின்றார் சிவபெருமான்.

இவ்வாறு பலவாறாய் ஆகிக்கொண்டேயிருக்கும் அவருடைய இயக்கத்தினை, அக்னியிலிருந்து வெளியாகிக் கொண்டேயிருக்கும் உஷ்ணத்துக்கும், பூமியிலிருந்து எழும்பிக் கொண்டேயிருக்கும் மலைகளுக்கும், கடலிலிருந்து உருவாகிக் கொண்டேயிருக்கும் அலைகளுக்கும் ஒப்பாகக் கூறலாம்.

உஷ்ணம்தான் அக்னி. மலைதான் பூமி. அலைகள் கடலிலிருந்து வேறுபட்டவை அல்ல.

**வேதங்கள் முன்வைக்கின்றன:**

''அந்த ஒரே ஜோதியுடன் இங்கிருக்கும் அனைத்தும் ஐக்கியமாகின்றன. அந்த ஒரே ஜோதியிலிருந்தே அனைத்தும் உதிக்கின்றன. எங்கும் நிறைந்திருக்கும் அந்த ஒரே பரம்பொருளே, இங்கிருக்கும் அனைத்து பொருட்களின் உடல் பொருள் ஆவி.'' ஓம் நமசிவாய.



*‘இருப்பு’ என்பது, கடவுள் ஆன்மா மற்றும் உலகம் ஆகிய மூன்றின் இணைந்ததொரு கூட்டுத்தொகையே.*

*சைவ சித்தாந்தத்தில், கடவுள், பதி என விளிக்கப்படுகின்றார்.*

*தலைவன் என்ற அர்த்தத்தில்.  பசுமாட்டினைக் குறிக்கும் வகையில் ஆன்மாவுக்கு பசு என்ற பெயர் வருகின்றது.*

*உலகை கட்டி வைக்கும் கயிறான ‘பாசா’, சிவபெருமான் கையில் உள்ளது.*

# கடவுள் மற்றும் ஆன்மா ஆகியனவற்றின் மீதான கருத்துக்கள் யாவை?

## ஸ்லோகம் 148

*அத்வைதிகளுக்கு, இறைவனார் சிவபெருமானின் ஆக்கமே ஆன்மா. இது, நதி கடலில் போய் இறுதியில் கலப்பதைப் போல, கடைசியில் அவருடனேயே கலந்து விடும். துவைதிகளை பொறுத்தமட்டில், கடவுள் எங்கும் ஊடுருவியிருக்கிறார், ஆனால், ஆன்மாவை அவர் படைக்கவில்லை... ஆக கடவுளும் ஆன்மாவும் இருவேறு சத்தியங்களாய் என்றென்றும் நிலைத்துள்ளன. ஓம்.*

## விளக்கம்

*பல ரூபங்களை அங்கீகரிக்கும் துவைதிகள், ஆன்மாவில் ஊடுருவியிருப்பது சிவனே என்கின்றார்கள். ஆயினும், துவைதிகள், ஆன்மாவினைப் படைக்கப்படாத ஒரு சுயம்பு என்றும் இறைமை போல் என்றென்றும் அழியாதிருக்கும் வஸ்து என்றும் விளக்கு கின்றார்கள்.*

*ஆன்மா, குணமற்றது. ஆனாலும் நினைப்பது, நடத்துவது மற்றும் சிந்தனையின்படி இயங்குவது ஆகிய குணங்கள் கொண்ட தாகின்றது.*

*ஆன்மா பரிபூரணமாய் பரிணாம வளர்ச்சி கண்டு ஞானமெய்தும் போதுகூட, அந்த இறுதியிலும் அது 'அவனுடன்' முழுதுமாய் ஐக்கியமாவதில்லை. மாறாக, ஆன்மா, இறைவன் எனும் எல்லைக்குள் நுழைந்து, இறைமையுடன் கலப்பதால் ஏற்படும் பேரானந்தக் கருணையை, என்றென்றும் அழியாது கொண்டாடுகின்றது.*

*தண்ணீருக்குள் உப்பு கரைக்கப்பட்ட நிலைபோல, இங்கு ஆன்மாவும் கடவுளும் தனியான இருபொருட்கள் கிடையாது.*

ஆயினும் அவையிரண்டும் துல்லியமாய் கலந்து ஒன்றுக்குள் ஒன்றாய் கரைந்து விட்ட நிலையும் கிடையாது.

அத்வைதமும் துவைதமும் கலந்த கோட்பாட்டினைப் பொறுத்த மட்டில், கடலிலிருந்து உறிஞ்சப்பட்டு மழைமேகங்கள் உருவாவதை போல, இறைவனிலிருந்து ஆன்மா மலர்கின்றது.

நதியோட்டத்தினைபோல இந்த ஆன்மா பல பிறப்புகளை கடக்கின்றது.

இந்த ஆன்மாவுக்கு, சுயம்புவான இறைமை சாறு உள்ளது. மேலும், சிவனால் படைக்கப்பட்ட அழகான, காந்தமுள்ள, மனிதனை போன்ற வடிவமும் உள்ளது.

இவ்வடிவத்துக்கு, ஆன்மா-உடல் - அதாவது ஆனந்தமய கோஷா என்று பெயர்.

ஆன்மா-உடல் கொண்ட இவ்வமைப்பு முதிர்ந்து கொண்டிருக்கும் காலகட்டம் முழுதும் இறைவனிலிருந்து மாறுபட்ட ஒன்றாய் இருக்கும். இப்பொழுதும்கூட, இதன் சாறான சச்சிதானந்தம் மற்றும் பரசிவா எனும் பேரானந்தம், சிவனிலிருந்து வித்தியாசமானதோ வேறானதோ கிடையாது.

நிறைவாக, ஆன்மா முதிர்ந்து ஞானமெய்தி விட்டது என்று 'அவன்' கணக்கினை முடிக்கும்போது, எப்படி நதியாகப்பட்டது நேராய் கடலில் போய் கலந்து வேறுபாடின்றி கடலோடு கடலாய் ஆகிவிடுகின்றதோ, அதே இலக்கணப்படி, ஆன்மா, அதன் பிறப்பிடத்துக்கே - சிவனிடமே - திரும்பி விடுகின்றது.

ஆன்மாவும், இறைவனும் இப்போது துல்லியமாய், ஒன்றே.

**வேதங்கள் சொல்கின்றன:**

''ஓடும் நதிநீர் கடலில் கலக்கும்போது தனது பெயர் வடிவம் அனைத்தையும் இழந்து காணாமல் போய் விடுவதைப்போல, ஞானமடைந்தவன், தனது பெயர் வடிவம் ஆகிய அனைத்திலிருந்தும் விடுபட்டு தெளிந்தவன், அனைத்திலும் உணர்ந்த ஆதார ஆன்மாவினை எய்தி விடுகின்றான்.'' ஓம் நமசிவாய.



*அத்வைதமும் துவைதமும் கலந்த கொள்கையில் தேறிய ஒருவன், மேகங்கள் கடல் நீரிலிருந்தே உருவாவதைபோல, இறைவனிடமிருந்தே ஆன்மா எழுகின்றது என்பதை, ஒரு துவைதிக்கு விளக்குகின்றான்.*

*கீழே, வாழ்க்கை எனும் ஓடை, அனைத்து வஸ்துக்களையும் படைத்தும் கிரகித்தும் கொண்டிருக்கின்றது. நிறைவாக, சமுத்திரத்தில் போய் நதி கலந்து விடுவதைப்போல ஆன்மா இறைவனுடன் ஐக்கியமாகிவிடுகின்றது.*

# சாத்தான் (பாவம்) என்பதன் மீதான வெவ்வேறான பார்வைகள் யாவை?

## ஸ்லோகம் 149

*அத்வைத-த்வைதிகளுக்கு, மாயமான இவ்வுலகம், சிவனாரின் அப்பழுக்கற்றதொரு படைப்பாகும். இங்கு ஒரு வஸ்துவும் அதற்கு எதிரான குணம் கொண்ட மற்றொரு வஸ்துவும் உண்டு. துவைதி களுக்கு, உலகம் துன்மார்க்க பாவங்களால் அலைக்கழிக்கப் படுவதால் 'மாயா' என்பது பாவமேயற்ற இறைவனின் படைப்பாய் இருக்க முடியாது. ஓம்.*

## விளக்கம்

*'மாயமானது, உலகம். இது அதன் சுபாவமான பாவங்களும் ஒழுங்கீனமும் மட்டுமே கொண்டுள்ளது. வெறும் துக்கமும், அநீதியும், வியாதியும் மரணமும் மட்டுமே இங்கு நிறைந்துள்ளது.' இதுவே துவைதிகளின் கோட்பாடு.*

*ஆன்மாவேகூட ஆணவம் என்பதனால் சூழப்பட்டு அதற்கு கட்டுப்பட்டே கிடக்கின்றது என்பது இவர்களின் நிலைப்பாடு.*

*இக்கருத்தினை பின்வருமாறு ஸ்தாபிக்கவும் செய்கின்றார்கள். 'பொருள் சார்ந்த இவ்வுலகத்தினை மாயா என்ற பெயரில் கடவுள் படைத்திருக்க வாய்ப்பேயில்லை. ஆணவத்தில் திமிறும் ஆன்மாவையும் அவர் படைத்திருக்க முடியாது. இவற்றை இறைவன் எனும் புண்ணியன் படைத்திருந்தால், இவற்றில் 'பாவம்' இருந்திருக்காது... துக்கம் நிறைந்த தவறுகள் இடம்பெற்றிருக்காது. ஏனென்றால், பரிபூரணத்திலிருந்து, பூரணமற்ற எதுவும் உருவாகாது.'*

*ஆகவே ஆணவமும் கர்மமும் மாயையும் ஏற்கெனவே இங்கு இருந்திருக்கின்றன என்றும், இவற்றினால் உருவாகும் இருளிலும்*

பந்தத்தளைகளிலும் ஆன்மா முடக்கப்பட்டுள்ளது என்றும் துவைதிகள் முடிவுரை தருகின்றார்கள்.

அத்வைதிகளின் கருத்து பின்வருமாறு போகின்றது.

ஆன்மாவின் உயர்மட்டத்தில் போய் நின்று நோக்கினால், உலகம் எப்படிப்பட்டது என்பது அப்பட்டமாய் விளங்கும். அது - பரிபூரணம்.

உலகத்தில், அதன் சுபாவமாய் 'பாவங்கள்' கிடையாது. தேவை யென்றே எதிரெதிர் குணங்களை சிவபெருமான் இங்கு படைத்திருக்கின்றார். ஆன்மா முதிர்ச்சியடைந்து மேலெழ வேண்டும் என்ற தேவையே அது. ஆகவேதான் ஒவ்வொன்றுக்கும் அதன் எதிர் இங்கு உள்ளது.

அழகு, அவலட்சணம். ஜோதி, இருள். அன்பு, வெறுப்பு. சந்தோஷம், துக்கம். இப்படிப்பட்ட அனைத்துமே சிவன்தான். அவரே. அவராலேயே உருவாகுபவை.

அதனதன் இடங்களில் அனைத்தும் இயங்கிக் கொண்டிருக்கும் படியானதொரு துல்லியமான பிரபஞ்சம், பரிபூரணனிடமிருந்து தான் வர முடியும்.

திருமந்திரம் சொல்கின்றது: ''இயற்கையில் தோன்றும் அனைத்துமே 'அவருடைய' கருணையால் உதித்தவை. அனைத்து நகர்பவையும், நகராதவையும், அவரது கருணையின் படைப்புகள். இருளைப்போலவும், ஜோதியின் ஒளியினைப் போலவும், ஆண்டவனுடைய கருணை எங்கெங்கும் பரவியுள்ளது.'' ஓம்.



*ஈவிரக்கமற்ற கொலையைப் போன்றதொரு மன்னிக்க முடியாத, தண்டிக்கப்பட வேண்டிய வேறொன்று கிடையாது. மற்றவர்களுக்கு எதிராக இழைக்கப்படும் எந்தவொரு வன்முறையும் தனக்கே திரும்பும் என்பது இந்துக்களுக்கு தெரியும்.*

*வலிகளையும் அவதிகளையும் உண்டாக்குவோருக்கு, அவையே மீண்டும் நெருப்பாய் மூளும்.*

*அனைத்தும், அவற்றின் எதிரும், சிவபெருமானின் பரிபூரணமான பிரபஞ்சப் படைப்பே என்பது இந்துக்களுக்கு தெரியும்.*

# மகா பிரளயம் என்பது குறித்து பார்வைகள் எவையெவை?

## ஸ்லோகம் 150

*அத்வைதிகள், மகா பிரளயத்தின்போது அண்ட சராசரமே கரைந்து விடும் என்றும், அனைத்து படைப்புகளும் சிவபெருமானுக்குள்ளேயே இழுக்கப்பட்டுவிடும் என்றும், சிவன் ஒருவர் மட்டுமே அப்போது நிலைப்பார் என்றும் கருதுகின்றார்கள். துவைதிகள், உலகமும் ஆன்மாவும் விதை வடிவத்தில் தொடரும் என்றும் பிறகொரு முறை முளைக்கும் என்றும் கருதுகின்றார்கள். ஓம் நமசிவாய.*

## விளக்கம்

காலம், வடிவம் மற்றும் அண்ட சராசரம் ஆகியன சிவனாருக்குள்ளேயே இழுக்கப்பட்டு விடும் முடிவே, மஹா பிரளயம். அப்போது ஆன்மாவும் உலகமும் அவருக்குள்ளேயே அருகாமையாய் போய்விட, அப்போது சிவன் மட்டுமே நிலைப்பார் என்பது, துவைதம்.

அப்போதும்கூட உலகமும் ஆன்மாவும் தொடர்ந்து இருக்கும் - வடிவங்களாய் அல்ல, சக்திகளாய் என்பது துவைத நிலைப்பாடு.

ஆழ்ந்த தூக்கத்தில் இருப்பதைபோல, பிரளயம் கடந்ததும் உடலற்ற நிலையில் ஆன்மாக்கள் காத்திருக்கும். பிறகொரு முறை முளைத்தெழத் தயாராய் அவரவர் கர்மங்கள் வெறுமனே இருக்கும்.

மீண்டும் படைப்புக்கான கட்டளை உருவானதும், முதிராத அனைத்து ஆன்மாக்களும் தத்தமது கர்மங்களை சுமந்து கொண்டு ஆன்ம முதிர்ச்சியில் ஞானமெய்த வேண்டிய பிரயாணத்தைத் துவங்கும் - உடலெடுத்து.

*மகா பிரளயத்தின்போது மிஞ்சுவது சிவனார் மட்டுமே என்பது அத்வைதிகளின் ஒரே நிலைப்பாடு. அப்போது வேறொன்றோ, வேறு ஆன்மாவோ, வேறொரு தனியுலகமோ இருக்காது.*

*அண்ட சராசரமும் அனைத்து ஆன்மாக்களும் சிவனுக் குள்ளேயே இழுக்கப்பட்டு அடங்கி விடும்.*

*பாசத்துக்கு அடிப்படையான ஆணவம், கர்மம் மற்றும் மாயை ஆகிய அனைத்தும் அழிந்து விடும்.*

*மஹா பிரளய அழிவுக்கு முன்பு, காலநேரமே சுழன்றடித்து அதிவேகமாய் முன்னேறும். இவ்வீச்சினால், அனைத்து ஆன்மாக்களும் முழு முதிர்ச்சியினை ஞான ஒளியாய் அடைந்து விடும்.*

*இதுதான் சிவனுடன் விலக்கமுடியாதபடி ஐக்கியமாக தேவைப்படும் தகுதி.*

*ஆகவே அனைத்து ஆன்மாக்களும் தங்களது அடையாளத்தை இழந்து, சிவனுடன் சிவனாய் நிற்கும்.*

**வேதங்கள் வெளிப்படையாய் முன்வைக்கின்றன:**

*''அவருக்குள்ள இறை சக்தியால், அனைத்து உலகங்களையும் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கின்றார் அவர். படைப்பு மற்றும் அழிப்பு ஆகிய இரண்டு தருணங்களிலும் நிலைத்திருப்பது அவர் (சிவன்) மட்டுமே.'' ஓம் நமசிவாய.*



*அண்ட சராசரத்தையே இல்லாமல் ஆக்கிவிடும் இயக்கம்,*
*அழித்தல் என்று பார்க்கப்படுகின்றது. இதுவே பிரளயம்.*

*எரிமலைகள் வெடித்தெழும். கோள்கள் முட்டிக்கொண்டு நொறுங்கிவிடும்.*

*சமுத்திரங்கள் பொங்கும். இதுவும்கூட கருணைக்கடலான இறைவனின் ஓரியக்கமே.*

*வெளி வடிவங்கள் அனைத்தும் இல்லாமல் ஆகிவிடும்போது,*
*அனைத்து ஆன்மாக்களும், அனைத்து உலகங்களும்,*
*சிவனுடனேயே அன்றோ ஐக்கியமாகிப் போகின்றன!*

*உலகம் முழுவதுமே கடவுளால்தான் இயக்கத்தில் உட்படுத்தப் படுகின்றது. ஆதலால், தியானம் பண்ணத்தக்கதொரு பொருளாய் கடவுளையே நினைந்து தியானம் பழகவும். பிரம்மனும், விஷ்ணுவும், ருத்திரனும், இந்திரனும் அவராலேயே உருவாக்கப் பட்டுள்ளார்கள். இதேபோலவே அனைத்து உயிரினங்களுக்கும் அவனே படைப்பாளி. ஆண்டவனுடைய இறைமையே படைப்பின் காரணமாய் அமைந்துள்ளது. அந்தரத்தில் நின்றபடி விழுந்து விடாமல் இயங்கும் பற்பல கோள்கள் உட்பட அனைத்து அண்ட சராசரங்களும் அவனுடைய படைப்பாகவே உள்ளன. அதர்வண வேதம்.*

*அனைத்து புனித நூல்களும், அனைத்து புனித சடங்குகளும் பிரார்த்தனைகளும், வேதம் சொல்லும் ஒவ்வொரு வாசகங்களும், இறந்த, நிகழ் மற்றும் எதிர்காலங்களின் அத்தனை கணங்களும், அந்தத் தூய ஆவியிலிருந்தே பிறந்தன. அதிசயமானதொரு சக்தி, மாயா. இந்த மாயையால் ஆண்டவன் அனைத்தினையும் படைத்துள்ளான். இதே மாயையால்தான் மனித ஆன்மா கட்டப்பட்டுள்ளது. ஆக, இப்படிப்பட்டதுதான் மாயை என்ற அதன் குணத்தை அறிந்து கொள்... அதே சமயம், அந்த மாயையை ஆள்பவன் ஆண்டவனே என்பதையும் தெரிந்து கொள். இப்பிரபஞ்சத்தில் உள்ள ஒவ்வொன்றும் அவருடைய ஆச்சரியத்தின் ஒரு துளியே ஆகும். கிருஷ்ண யஜுர் வேதம்.*

*ஞானி, மரணத்தைப் பற்றி எண்ணுவது கிடையாது. வியாதிகளைப் பற்றியோ அல்லது துரதிர்ஷ்டங்களைப் பற்றியோ அவர் நினைப்பதே கிடையாது. 'முழுமை' எனும் இறை தெளிவை அடைந்துவிட்ட ஞானி, அந்த 'முழுமையை' மட்டுமே ஞானம் எய்திய அவர் நினைத்துக் கொண்டிருக்கின்றார். சத்தியம் மற்றும் அசத்தியம் ஆகிய இரண்டின் தன்மையையும் அனுபவித்து உணர வேண்டும் என்பதற்காகவே, இறைவனே உருவான ஆன்மாவுக்கு இருமை பண்பு உள்ளது. ஆமாம், இறைவனே உருவான ஆன்மா எனும் நம் சுயம், இருமை கொண்டுள்ளது! கிருஷ்ண யஜுர் வேதம்.*

*விளங்கிக் கொள்ள முடியாத, யாதுமாகியது ஆன்மா. அது அளக்க முடியாதது. சுயம்பு. ஆராய முடியாதது. சிந்தித்து அடைந்துவிட முடியாதது. ஆன்மாதான், இந்த எல்லையற்ற அண்ட*

சராசரம். இப்பிரபஞ்சமே கபளீகரம் ஆகிவிடும் காலத்தேகூட 'இவன்' மட்டுமே விழித்திருப்பான். இதே அண்ட சராசரத்திலிருந்துதான், இவன், சிந்தனையுள்ளதொரு உலகமாய் எழுந்துள்ளான். *கிருஷ்ண யஜுர் வேதம்.*

அனைத்து உலகங்களையும் அணுஅணுவாக வடிவமைப்பது, 'அவன்'தான். வாழ்க்கையை அவனே வடிவமைக்கின்றான். பிறப்பினை அவனே தருகின்றான். சிறிய மற்றும் பெரிய வஸ்துக்கள் அனைத்துக்கும் வடிவு தருபவன் அவனே. அவனே, மாபெரும் கட்டமைப்பாளனான ஆண்டவன். *திருமந்திரம்.*

அடிப்படையான ஒரே தலைவன். தனியானவன். இருந்தும் பெரியவன். அவனே இங்கு பலவாய் வகுந்து காணப்படுகின்றான். வடிவுள்ளதாய், வடிவற்றதாய், குருவாய், சிஷ்யனாய், சக்தியின் துணைவனாய் - அவனே எல்லாம். பல வடிவினதாய் உள்ள இத்தனையிலும் ஜீவனாய் துடித்துக் கொண்டிருப்பது - அவன் ஒருவனே. *திருமந்திரம்.*

அனைத்தையும் இயக்கிக் கொண்டிருக்கும் புத்தி அல்லது சாதுரியம், அது நானே. அனைத்து பிரபஞ்சங்கள், நகர்வன, நகராதவை, அனைத்தும் என்னுள்ளிருந்து எழுபவை. என்னுள்ளேயே அனைத்தும் பாதுகாப்பாய் வைக்கப்பட்டுள்ளன. பிரளயத்தின்போது அனைத்தும் எனக்குள்ளேயே இழுத்துக் கொள்ளப்படுகின்றன. எங்கும் வேறெதுவும் இல்லாமல் சுத்த ஆவி மட்டுமே உள்ளதாலும், அந்த பரிசுத்த ஆவியாய் நானே விளங்குவதாலும், எங்கும் வேறெதுவும் இல்லை. *சிவ சம்ஹிதா.*

நீயும் அவனும் வேறு வேறாக இல்லை. நீயும் அவனும் ஒன்றினுள் ஒன்றென இணைந்துள்ளவர்கள். இதனால், அனைத்து பந்தத் தளைகளிலிருந்தும் நீ விலகியே நில். பரப்பிரம்மத்தின் பாதாரவிந்தங்களைப் போற்று. சிவனுடன் சிவனாய் ஆகிவிடு. சித்தாந்த வழியில் பிரயாணித்து கடைத்தேற வழி இதுதான். *திருமந்திரம்.*

எப்போதும், என்னியக்கம் உன்னியக்கமே. நான் உன்னை தவிர்த்த வேறொன்று அல்ல. ஏனென்றால் நானிங்கு 'நான்' என்று சொல்லிக் கொண்டிருப்பது, உன்னிலிருந்து பிரிந்து விலகிய

ஒன்றாய் இருந்துவிட முடியாது. இதில்தான் வேதாந்தம் மற்றும் சித்தாந்தம் ஆகிய இரண்டின் இயல்பான ஒருங்கிணைப்பு திகழ்கின்றது. *தாயுமானவர்.*

*பூமியைப்போல. அக்னி, தண்ணீர்போல. அடிக்கும் அந்தக்காற்றினை போல. என்றும் அழியா நிலா மற்றும் கதிரவன் போல. எண்திசை தெய்வம்போல. நன்மை-தீமை போல. ஆண் பெண்போல. அனைத்து வடிவங்களும் மற்றும் 'அவன்' வடிவமும் போல. அனைத்தும் அவனே என்ற நிஜம்போல. நேற்று, இன்று, நாளைபோல. செந்நிற நீள் சடைமுடி கொண்ட தெய்வம், ஆஹாஹா... ஓர் அற்புதமாய் நிற்கின்றார். திருமுறை.*

*தெய்வீகத்தினைக் கண்களால் காண முடியாது, ஆயினும் அதுவே கண்களுக்குக் கண்ணாய் அமைகின்றது. அதனை காதுகளால் கேட்க முடியாது, ஆயினும் அதுவே காதுகளுக்குள் ஒலியாய் ஒலித்துக் கொண்டிருக்கின்றது. அதனை நுகர்ந்துவிட முடியாது, ஆயினும் அதுதான் நுகர்தலைச் சாத்தியமாக்கிக் கொண்டுள்ளது. வாயால் அதன் புகழை வாசித்துவிட முடியாது, ஆயினும் அதுவே வாயினைப் பேசச் செய்து கொண்டிருக்கின்றது. கைகளால் அதனை அள்ளி அளந்துவிட முடியாது, ஆயினும் அதுவே கைகளை அள்ளும்படி அறிவுறுத்துகின்றது. அதனை கால்களால் நடந்து போய் அடைந்துவிட முடியாது, ஆயினும் அதுவே இரு பாதங்களையும் நடக்க வைத்துக் கொண்டுள்ளது. அதனை மூளையால் சிந்தித்தறிய முடியாது, ஆயினும் அதுவே சிந்தைக்குள் சிந்தனை வடிவாகின்றது. கடந்த காலமும் எதிர் காலமுமற்ற அடிப்படை அதுவே. வயது மற்றும் நோய்களிலிருந்து இறைவடிவம் விடுதலை கொண்டது. அதுவே தந்தை தாயென உருக்கொள்கின்றது. சுயம்புவாய் அதுவே முகிழ்கின்றது. அது ஒன்று என்றோ இரண்டு என்றோ விளக்கவொண்ணாதது. எந்த ஓவியனாலும் அந்த இறைமையினை வரைந்துவிட முடியாது. நல்லதிலும் தீயதிலும் அதுவே பிணைந்துள்ளது. நல்லவர்களின் மனங்களில் அது என்றென்றும் உறைந்துவிடும். வேதாந்தம் மற்றும் சித்தாந்தம் ஆகிய இரண்டுக்கும், எவ்விதமான வேற்றுமைகளையும் அது அனுமதிப்பதில்லை. ஒலிகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட அடிவானத்தில் அதுதான் திருநடனம் புரிந்து கொண்டுள்ளது. நற்சிந்தனை.*

# சம்பிரதாயா:



உபநிடதம் பன்னிரண்டு:
*சக்தியினை வழிவழியாய் மாற்றித் தருவது*

# கைலாச பரம்பரா



கைலாச பரம்பரை

*ஆண்டவனின் கருணையை முழுதும் பெற்றுவிட்ட நாதர்களை நாடுங்கள். முதலில், நான்கு ரிஷிகள். அடுத்த புனிதர், சிவயோகா. பிறகு பதஞ்சலி.*

*நானும் வியாகரரும் எட்டு எனும் எண்ணிக்கையை நிறைவு செய்கின்றோம்.*

*கட்டளைகளை வழிவழி சொல்லித் தரும் விதத்தினால் எனக்கடுத்து மலங்கன், இந்திரன், சோமன், பிரம்மன், ருத்ரன், கலங்கி மற்றும் கஞ்சமலயம் ஆகியோர் என்னை தொடர்ந்து வருகின்றார்கள்.*

***- ரிஷி திருமூலர்.***

# இந்து மதத்தின் ‘நாத சம்பிரதாயம்’ என்பது யாது?

### ஸ்லோகம் 151

*‘தலைவனின் வழி’ எனும் பொருள்படும் நாத சம்பிரதாயம், சைவ வழியின் அதிசயமான ஓர் ஊற்று. இறைமையின் அழிவற்ற சத்தியம் யாது என்பதன் புனிதமான விளக்கமும், ஞானத்தை நோக்கிய பாதையில் பிரயாணித்து வெற்றி பெறுவது எப்படி என்பதும், நாத சம்பிரதாயத்தில் பூட்டப்பட்டுள்ளன. ஓம்.*

### விளக்கம்

‘நாதா’ என்றால் தலைவன், அல்லது இறைவன். ‘சம்பிரதாயம்’ என்றால், சமயவழி வாழ்தல்.

நாத சம்பிரதாயம் எனும் வெகுமதிப்புள்ள பரம்பரையின் வேர்கள், வரலாற்றுப் பதிவுகளையெல்லாம் தாண்டி, காலத்தின் வெகு ஆழம் வரை பரவிக்கிடக்கின்றன.

இறைவர்களின் இறைவனான சிவபெருமானை வழிபட்டனர், ஞானக்கண் திறக்கப்பட்ட ‘நாதர்கள்.’ அத்தகையவர்கள் யோக நிலையில் ஆழ்நிலைக்குள் அமிழும்போது, அவர்களுடைய அடையாளத்தினை அந்த சிவபெருமானுடனேயே காண்கின்றார்கள்.

மனத்தின் ஆழத்தில் உறைந்துள்ள இறைமையான சுயத்தினை தேடி அடையும் வழியினை வெளிச்சமிட்டுக் காட்டுகின்றது நாத சம்பிரதாயம். கோயில் வழிபாட்டால் தன்னை ஒருநிலைப் படுத்துதல். இவ்வெற்றியால், குண்டலினி யோகத்தில் வெற்றி பெற்று இறை சக்தியினை அடைதல். பிறகு தவவழியில் ஒழுகி உரமேறுதல். குரு-சிஷ்யன் எனும் அற்புத ஏற்பாட்டால் ஆன்மீக வலு அடைதல். கூடவே, பக்திப் பாதையில் சீர்தூக்கிவிடும்

*அறநூல்களின் வழிகாட்டுதலில், சாதனைகளும் தவங்களும் செய்து மேலேறுதல்.*

*இவ்வாறாய் மனித குலத்தினை மேன்மையடைய செய்து மனிதனும் தெய்வமாகலாம் என்று அமைகின்றது, நாத சம்பிரதாயம்.*

*இன்று, இரண்டு முக்கிய நாத பரம்பரை வகைகள் பிரசித்த மாகவுள்ளன.*

*ஒன்று, நந்திநாத சம்பிரதாயம். மஹரிஷி நந்திநாதரால் ஓங்கி வளர்க்கப்பட்டது.*

*மற்றது, ஆதிநாத சம்பிரதாயம். சித்த யோகி கோரக்ஷநாதரால் போஷிக்கப்பட்டது.*

*ஆயினும், ஆம்... அற்புதங்களால் நிறைந்த எண்ணற்ற நாதர்கள் நாமறியாமல் இன்னும் உள்ளார்கள்.*

**திருமந்திரம் உரைக்கின்றது:**

*''என் ஒப்புயர்வற்ற குருவான சத்குரு நந்திநாதர், மிக உயரத்தில் வைக்கப்பட்டு மேன்மையாகக் கருதப்படுகின்றார். ஆன்ம விடுதலைக்கான புனிதப் பாதையை காட்டியவர் அவரே. சன்மார்க்கம் அது. சிவபெருமானின் புண்ணிய பாதையாகும். அனைத்து உலகங்களிலிருந்தும் விடுவிக்கப்பட்டு என்றென்றும் விடுதலையுடன் வாழும் உய்வு வழியாகுமிது.'' ஓம் நமசிவாய.*



இமயமலையின் சத்குருவான நந்திநாதர், சுமார் 2200 வருடங்களுக்கு முன்னால், தட்டிப்பாய் கொண்டு வேயப்பட்ட ஒரு தாழ்வாரத்தில் அமர்ந்திருக்கின்றார்.

தெளிந்த ஞானத்தையும், ஒரே சக்தியனான இறைவனுடன் ஒன்று கலக்கும் ஐக்கிய முறையையும், தனது குருவிடமிருந்து பெற்றுக் கொண்டிருக்கிறார் சிஷ்யன் திருமூலர்.

சிவலிங்க வடிவத்தில் அங்கு வீற்றிருந்து கவனிக்கின்றார் சிவபெருமான்.

# கைலாச பரம்பரை என்பது யாது?

## ஸ்லோகம் 152

*நந்திநாதா சம்பிரதாய வழியில், பல்லாண்டுகளாய், பல நூற்றாண்டுகளாய் நீடித்துள்ள குரு பரம்பரையாகும், கைலாச பரம்பரை. இது, இந்நூற்றாண்டில், யோகஸ்வாமிகள் என்று திருவுருவம் கொண்டு வந்துள்ளது. இவரே, இந்த ஒப்புயர்வற்ற சந்ததியை மேற்கொண்டு சுமந்து செல்லுமாறு, 1949ல் ஸ்ரீலங்காவில் என்னை பணித்தார். ஓம்.*

## விளக்கம்

ஒரு குருவிடமிருந்து அவருடைய உன்னதமான சீடருக்கு, இந்து போதனைகளின் ஆழங்கள் ஓர் ஒழுங்குடன் பரிமாறப்பட்டுள்ளன. இதுவே 'பரம்பரை' எனும், வழிவழியாய் வாழையடி வாழையாய் தொடரும் ஓர் ஆன்மீக முறை.

கி.மு. காலத்திய மஹரிஷி நந்திநாதானந்தாவையும் முந்திக் கொண்டு, அவரது காலத்துக்கும் வெகு முன்னதாகவே நிலவியுள்ளது, கைலாச பரம்பரை. மஹரிஷி நந்திநாதானந்தா மற்றும் அவரது எட்டு சிஷ்யர்கள்: சனத்குமாரா, சனகர், சனாதனர், சனந்தனர், சிவயோகமுனி, பதஞ்சலி, வியாக்ரபாதா மற்றும் திருமூலர்.

இவ்வகையாய் பரப்பப்பட்ட சித்த யோகம், இன்று பல ஆறுகளாய் கிளைபரப்பி விரிந்துள்ளது. தென்னிந்தியாவின் சைவ சித்தாந்தம் இவற்றுள் முக்கியமான மற்றும் பிரதானமான ஒன்றாகும்.

எங்களுடைய கிளையான 'பரம்பரா' எனும் கிளை கி.முவில் வாழ்ந்த திருமூலர் வழி வருவதாகும். இதில், சமீப காலத்தில் தெரிந்துள்ள சத்குரு, இமயமலையில் வாழும் 'ரிஷி' ஆவார் *(1770 - 1840).*

*தெய்வ பலம், இவரிடமிருந்து பெங்களூரின் சித்தர் கடைத் ஸ்வாமிக்கு **(1804-1891)** மாற்றப்பட்டது.*

*பிறகு இவரிடமிருந்து சத்குரு செல்லப்பஸ்வாமிக்கும் **(1840-1915)** பிறகு ஸ்ரீலங்காவின் சத்குரு யோகஸ்வாமிக்கும் **(1872-1964)** மாற்றப்பட்டு, பிறகு இப்போது இறுதியாக என்னிடம் (சிவாய சுப்ரமுனியஸ்வாமி, **1927 ---**) வந்துள்ளது.*



குருதேவர் சத்குரு சிவாய சுப்ரமுனியஸ்வாமி, பீடத்தில் அமர்ந்திருக்கிறார். ஹவாயிலுள்ள கவாய் ஆதீனப் பீடமிது. நந்திநாதா சம்பிரதாயத்தினை தனது நான்கு ஆச்சார்யர்களுடன் அவர் பகிர்ந்து கொண்டுள்ளார். இங்கு நடராஜராக சிவன் உள்ளார்.

# கைலாச பரம்பரையின் ஆரம்பக்கால ஆச்சாரியர்கள் யாவர்?

## ஸ்லோகம் 153

*கைலாச பரம்பரையின் ஆரம்பக்கால குருக்கள் பலரில், குறிப்பிடும்படியான ரிஷி திருமூலரையும் அவர்வழித் தோன்றல்களையும் இப்பரம்பரை மிகமுக்கியமானவர்களாய் வைத்துள்ளது. 'இமயத்திலிருந்து வந்த ரிஷி' என்று வர்ணிக்கப்படும் அமைதி சித்தரை சமீபகாலத்தில் நாம் உயர்த்திப் போற்றுகின்றோம். ஓம்.*

## விளக்கம்

இமயமலையின் மஹரிஷி நந்திநாதானந்தாவின் பாதகமலங் களில் கற்று, துல்லியமும் பரிபூரணமும் நிறைந்த ஞானத்தை எய்திய பிறகு, எட்டு மகா சித்திகளையும் அடைந்து இறை ஸ்தானத்தில் தேறிய பிறகு, தனது குருவின் வழிகாட்டுதலால் சைவ சித்தாந்தத்தினைப் புதுப்பிக்கும் இலக்குடன் தென்னிந்தியாவுக்கு அனுப்பி வைக்கப்பட்டார் திருமூலர்.

இறுதியாய் அவர் திருவாவடுதுறையினை வந்தடைந்தார்.

இங்கு சைவ ஆகமங்கள் கூறும் சத்தியங்களையும், கிடைத்தற் கரிய வேதங்களையும், திருமந்திரம் எனும் நூலாய் தமிழில் பதிந்தார்.

3000-க்கும் அதிகமான செய்யுள்களை கொண்டதொரு நூலிது.

இது, நூற்றாண்டுகளாய், ஒரு சித்த யோகியிடமிருந்து அடுத்ததொரு சித்த யோகியின் கைகளுக்கு மாற்றப்பட்டுக் கொண்டே வந்துள்ளது.

*ஜோதி ஞானம் எய்திய இத்தகைய எண்ணற்றவர்களில், இமயமலையிலிருந்து பெயரில்லாமல் வந்த சித்தரும் ஒருவர். 1700ஆம் ஆண்டில் பெங்களூரிலிருந்த கிராமமொன்றின் தேநீர்க் கடைக்குள் நுழைந்தார் இவர். அங்கு அப்படியே உட்கார்ந்து ஆழ்ந்த சமாதி நிலைக்குப் போனார்.*

*ஏழு வருடங்களாய் அவர் நகரக்கூட இல்லை. பேசவும் இல்லை.*

*இந்த தரிசனத்தைக் காண மனிதர்கள் சாரைசாரையாய் வந்து சென்றனர்.*

*இவ்வாறு வந்த பக்தர்கள் வாய்விட்டுக் கூறாமல் முன்வைத்த கோரிக்கைகள் அனைத்துக்கும் அதிசயமான வகைகளில் தீர்வுகள் கிடைத்தன. கனவில் விடை கிடைத்தது. அல்லது, வைத்த கோரிக்கைக்கான தீர்வு ஒரு தாளில் எழுதப்பட்டு அது காற்றில் மிதந்து வந்து வீட்டுக்குள் விழுந்தது.*

*பிறகொருநாள் கிராமத்தை விட்டு அகன்றார் ரிஷி. தனது சக்தியினை பிறகு அவர் கடைத்ஸ்வாமிக்கு கொடுத்தார்.*

**திருமந்திரம் சொல்கின்றது:**

*''நந்தியின் கருணையால் நான் எனது அடிப்படை இலக்கினை அடைந்தேன். நந்தியின் கருணையால் நான் சதாசிவமானேன். நந்தியின் கருணையால் சத்தியமான இறைமையை அடைந்தேன்.'' ஓம் நமசிவாய.*



இமயமலையிலிருந்து பெயர் குறிப்பிடாமல் வந்த ரிஷி, தனது தண்டமும் புலித்தோலும் அருகிலிருக்க தனது ஆசிரமத்தில் அமர்ந்திருக்கின்றார்.

உள்ளே: பெங்களூர் கிராமத்தில் ஏழு வருடங்களாக சமாதியிலேயே அமர்ந்திருந்த காட்சி.

பிரபஞ்ச ஆசானான தக்ஷிணாமூர்த்தி அங்குள்ளார்.

# கடைத்ஸ்வாமி மற்றும் செல்லப்பன் ஆகியோர் யாவர்?

### ஸ்லோகம் 154

*விறுவிறுப்பான சத்குரு, கடைத்ஸ்வாமி. கத்தோலிக்க மதம் தலைதூக்கியிருந்த ஸ்ரீலங்காவின் யாழ்ப்பாணத்தில், 1800களில் சைவ சித்தாந்தத்தைப் புதுப்பித்தவர். செல்லப்பன் ஒரு தீவிர சந்நியாசி. இறை பிரக்ஞையால் நிரப்பப்பட்டவர். தெய்வத்துடன் தானாய் உரையாடிக் கொண்டிருப்பதிலேயே மூழ்கியிருப்பவர். ஓம்.*

### விளக்கம்

கடைத்ஸ்வாமி ஒரு சக்தி வாய்ந்த சித்தராய் வாழ்ந்தவர். இரண்டு மீட்டர் உயரமிருந்த இவரின் பேச்சு, ஆயிரமாயிரம் பேர்களை சைவத்துக்கு மாற்றியது.

உயர்நீதிமன்றத்தின் நீதிபதியாக இவர் பதவி வகித்தார் என்று சொல்லப்படுகின்றது. மரண தண்டனை விதிக்க மறுத்து விட்டு, பிறகு வாழ்க்கையை துறந்து சந்நியாசியாக ஆகிவிட்டார் என்ற செய்தி உள்ளது.

அதிசயங்கள் நடத்திக் காட்டும் சித்தராக ஆகிவிடும்படி இவரது சத்குரு வழிகாட்டியதால், இன்றளவும் பேசப்படும் சித்து வேலைகளை செய்தவராகின்றார் இவர்.

இரும்பை தங்கமாக்குவது. உருகிய மெழுகினை சாப்பிடுவது. இங்கு மறைந்து வேறெங்கோ தோன்றுவது. இப்படிப் பல.

பத்தொன்பதாம் வயதில் ஆன்மீகத்தில் புகுத்தப்பட்ட செல்லப்ப ஸ்வாமி, நல்லூர் கோயிலிலுள்ள தேரடியில் தனியாய் வாழ்ந்தார்.

*உள்ளார்ந்த இறைமை எனும் சுயத்துக்குள் ஈர்க்கப்பட்டுவிட்ட செல்லப்பஸ்வாமி, இருமை கடந்தவரானார். அனைத்திலும் ஒருமையான சமநிலை எய்தினார். தொடர்ச்சியாய் போதித்தார்: ''உள்ளார்ந்த சாத்தான் என்றோ பாவம் என்றோ ஒன்றும் கிடையாது. எல்லாம் என்றோ அழிந்து விட்டன. இருக்கும் அனைத்தும், 'சத்தியமே.' வேறொன்று நமக்கு தெரியாது.''*

**நற்சிந்தனை சொல்கின்றது:**

*''நல்லூரின் இண்டு இடுக்கெல்லலாம் சிரித்தபடி போவார் செல்லப்பன். ஏதோ சக்தியால் பீடிக்கப்பட்டவரை போல வெளியிலிருக்கும் அனைத்தையும் தூஷிப்பார். கருமையானவர் இவர். இவரது ஒரே உடை, சாக்குதான். இப்போது என்னுடைய அனைத்து பாவங்களும் கரைந்து விட்டன, ஏனெனில் அவர் அனைத்தையும் எரித்து விட்டார்! தனக்குள்ளேயே எப்போதும் எதையோ மிருதுவாய் சொல்லிக் கொண்டிருக்கும் அவர், அவரை நாடும் எவருக்கும் உண்மையான வாழ்க்கை என்ன என்பதைத் தந்தருளுவார். என் சிந்தையை அவர் ஒரு கோயிலாக்கித் தந்தார்.'' ஓம் நமசிவாய.*



*யாழ்ப்பாணம் நகரத்து தேருக்கருகே உட்கார்ந்திருக்கிறார் கடைத்ஸ்வாமி.*

*சூரியன் படாமலிருக்க குடைகள் மேலே. நல்லூர் முருகன் கோயிலின் ஓவியங்கள் மேலிருக்க தனது குடிசையில் அமர்ந்திருக்கிறார் செல்லப்பன்.*

*அர்த்தநாரீஸ்வரராகவும் திரிசூலமாகவும் உள்ளார், சிவபெருமான்.*

# மிகச் சமீப காலத்திய கைலாச குருக்கள் யார் யார்?

## ஸ்லோகம் 155

*நற்சிந்தனையின் ஆதாரம், தர்மத்தின் காவலர், யோகஸ்வாமி. அரை நூற்றாண்டுகாலமாய் ஸ்ரீலங்காவின் சத்குருவாய் உள்ளார். அவர் என்னை தட்டிக்கொடுத்து ஆட்கொண்டார். ''உலகம் முழுதும் சுற்றி, சிங்கத்தினை போல உறுமு!'' ஓம் நம சிவாய.*

## விளக்கம்

*நல்லூர் முருகன் கோயிலில் திருவிழா. ஏகப்பட்ட கூட்டம். அதன் நடுவில் அலங்கோலமாயிருந்த ஒரு சாது கத்தினார்: ''ஏய் யார் நீ?'' அத்தருணத்தில் யோகஸ்வாமி அசைவற்ற சிலையாய் ஆனார். ''ஒன்றுகூட இங்கு தவறாய் கிடையாது!'' பிறகு, ''எப்படியிருக்க வேண்டுமோ எல்லாம் அப்படியே உள்ளன! யாருக்கு எல்லாம் தெரியும்?'' என்றார் சாது செல்லப்பன். பிறகு சட்டென்று உலகம் மறைந்தது.*

*1915ல் செல்லப்பன் மகாசமாதி அடைந்ததும், யோகஸ்வாமி ஐந்து வருட கடும் தவமேற்றார்.*

*பிறகு, அனைத்துதரத்து மக்களும், பல நாடுகளிலிருந்து ஆன்மீக அன்பர்களும், அவருடைய தரிசனத்துக்காக வந்தார்கள்.*

*வந்த ஒவ்வொருவரிடமும் ''சுயத்தை நீங்களே தெரிந்து கொள்ளுங்கள்'' என்று கெஞ்சினார்.*

*அவரது ஓலைக்குடிசையில் 1949ல் நாங்கள் முதன்முதலில் சந்தித்துக் கொண்டோம்.*

*ஒரு வாரத்துக்கு முன்புதான், ஜலனி குகைகளில் தியானித்துக் கொண்டிருக்கும்போது, அவரது அனுக்கிரகத்தின் பேரில் நான் பரசிவத்தினை அனுபவித்திருந்தேன்.*

*''நீ என்னுள் இருக்கிறாய்'' என்றார் அவர். ''நான் உங்களுள் இருக்கிறேன்'' என பதிலளித்தேன் நான். பிறகு என் முதுகில் ஆதரவாய் தட்டிவிட்டு ''சுப்ரமுனியஸ்வாமி'' என்று எனக்குப் பெயரிட்டார். தீட்சை அளித்து என்னை சந்நியாசியாக்கி விட்டு அமெரிக்காவுக்கு அனுப்பினார்.*

*அப்போது சொன்னார்: ''நீ கோயில்கள் கட்டுவாய். ஆயிரமாயிரம் பேருக்கு உணவளிப்பாய்.'' நான் அப்போது 22ல் இருந்தேன். அவருக்கு வயது 77.*

*அவரது ஆணைகளை நிறைவேற்றியுள்ள நான், சிவாய சுப்ரமுனியஸ்வாமி, இந்த 155 ஸ்லோகங்களையும் அவற்றுக்கான பாஷ்யங்களையும் இயற்றியுள்ளேன். அவர் எனக்குள் புகுத்தியுள்ள இறைமையின் கடுகிலும் கடுகான பகுதியே இது. ஓம் நமசிவாய.*



*யாழ்ப்பாணம் கொழும்புத் துறை குடிசையில் சத்குரு யோகஸ்வாமி*
*ஆழ்ந்த இறைசிந்தனையில் இருக்கிறார்.*

*தியானத்தின் போதும் நற்சிந்தனையை இயற்றும்போதும்,*
*இறைவி தையல்நாயகியின் கொலுசோசையையும் வளையல் ஓசையையும்,*
*அசரீரியாய் இவர் கேட்டார். இங்கு திருவடியாய் இருக்கிறார் சிவன்.*

மூவுலகிலும் குருவைவிட உயர்ந்த ஒருவர் கிடையாது. இறை ஞானத்தினை புகட்டுவது குருதான். அவர், உயர்ந்தபட்ச பக்தியுடன் தொழப்பட வேண்டும். *அதர்வண வேதம்.*

அறியாமையின் மையத்தில் உட்கார்ந்து கொண்டு, தன்னையே புத்திசாலியாகவும் பண்டிதனாகவும் நினைப்பவர்கள் முட்டாள்கள். பார்வையற்ற ஒருவன் அப்படிப்பட்ட மற்றவனுக்கு திசை காட்டுவதைபோல, இலக்கின்றி இங்குமங்குமாய் அலையும் பதர்கள். *அதர்வண வேதம்.*

சத்தியமே அனைத்துக்கும் மேலானது. அனைத்துக்கும் மேலான கடவுள்தான் சத்தியம். சத்தியத்தில் நிற்பவர்கள் சொர்க்கத்திலிருந்து என்றுமே வழுவுவதில்லை. ஏனென்றால் சத்தியம் சத்தான சந்நியாசிகளுக்கானது. ஆகவேதான் அவர்கள் சத்தியத்தின் சாற்றினை அனுபவிக்கின்றார்கள். *கிருஷ்ண யஜுர் வேதம்.*

வேதத்தின் சாறு, ஓர் அதிசய இறைமை. பலகாலமாய் போதிக்கப் பட்டுள்ள நிஜமிது. ஆகவே வேதத்தின் இறுதிச்சாற்றினை சாந்தமெய்தாத ஒருத்தனுக்கு தர முடியாது. சிஷ்யனாயிருந்து முதிர்ச்சியடையாத பக்குவமற்றவனுக்கோ, உள்ளுக்குள் அமைதி கண்டு தன்னுள் தான் அடங்காதவனுக்கோ, இது தரப்பட மாட்டாது. கடவுளின்மீது உயர்ந்த அர்ப்பணிப்பையும், அதற்கு ஒத்த அர்ப்பணிப்பினை தனது குரு மீதும் கொண்டுள்ள ஒருத்தனுக்கே, வேதச்சாறு கிடைக்கும். *கிருஷ்ண யஜுர் வேதம்.*

குருவுக்கு உள்ள ஞானம், அவர்மீது வைக்கும் பக்தி ஒன்றினால் மட்டுமே சிஷ்யனுக்கு கிடைக்கின்றது. இந்த நிதர்சனம் ஞானி களாலும் பண்டிதர்களாலும் மூதாதையர்களாலும், மூவுலகங் களிலும் பிரகடனப்படுத்தப்பட்டுள்ளது. *குரு கீதா.*

எல்லையற்ற கருணைக் கடலின் ஆதாரத்தை நமக்குக் காட்டியுள்ள குருக்களின் தாமரைப் பாதங்களை நான் வணங்கு கின்றேன். சுயம்புவாய் இக்கருணைக்கடல் நம்முள்ளேயே பூத்துள்ளது என்பதை உணர்த்தி அதனை அறிய வைத்து சம்சாரம் எனும் ஆல-கால விஷத்திலிருந்து விடுதலை தந்தவர்கள், குருவினர். *குரு கீதா.*

தேவையானவை, எவை? நியாயம். சத்தியம். தியானம். சுயகட்டுப்பாடு. சாந்தம். அமைதி. சடங்குகள். மனிதநேயம். இவற்றை தரும், புனித போதனைகளும் பிரார்த்தனைகளும். *கிருஷ்ண யஜுர் வேதம்.*

குரு அனைத்திலிருந்தும் விடுபட்டவர் என்றாலும்கூட, சிஷ்யனை அவர் சிலகாலம் சோதிப்பார். இது இறை கட்டளை. பிறகே, அவனுக்கு, சத்தியம் எனும் மகத்துவத்தினை அளிப்பார். அப்போது, அந்த சிஷ்யனுக்கு, சத்தியத்தினை உலகெங்கும் பரப்பும் அதிகாரம் அளிக்கப்படுகின்றது. இவ்வாறு குருவினால் தெரிந்தெடுக்கப்பட்டு தேர்வாகும் சிஷ்யனுக்கு சிவபெருமானின் பரிபூரண கடாட்சமே உரித்தாகுகின்றது. நிறைவாய் பூதவுடலை அவன் உதிர்க்கும்போது, இறை கருணை முழுதும் அவனுள் நிறைந்து நிற்கும். இது இறைவனாலேயே உரைக்கப்பட்ட வேதம். ஆகவே, ஒரு முழுமையான கலாச்சாரத்தில் வேரூன்ற, அதன் குரு அவசியமாகின்றது. இறைவனே சொல்லுகின்றான்: 'முறையான வழிகாட்டுதலும் பயிற்சியும் ஒரு குருவிடமிருந்து இல்லாமல் (தீட்சை), சொர்க்கம் கிட்டாது (மோட்சம்.)' குரு இல்லாமல் கிடையாது தீட்சை. ஆகவேதான் 'பரம்பரை' எனும் வழிவழியாய் வரும் குருவின் பாதைகள் உள்ளன. குரு இல்லாவிட்டால், கற்றறிந்த தத்துவங்கள், ஞானம், மந்திரங்கள் அனைத்தும் காயாகவே இருக்கும். கனியாது. *குலார்ணவ தந்திரம்.*

என் உடல், பொருள், ஆவி அனைத்தையும் நான் அளித்தபோது நந்திநாதர் அவற்றை ஏற்றுக் கொண்டார். பிறகு அவர் என்னைத் தொட்டார். அவரது ஒரு சிறு பார்வை, என்னுடைய பாவங்கள் நிறைந்த கர்மங்களை கரைத்தழித்தது. அவர், தனது பாதங்களை என் தலையில் வைத்து உயர் பிரக்ஞைகளை உருவாக்கித் தந்தார். இவ்வாறாக, நான் சுமக்கவிருந்த கடும் பளு நிறைந்த பிறப்பு சுழற்சியை அவர் போக்கித் தந்தார். *திருமந்திரம்.*

நல்லூர் தெருக்களிலெல்லாம் இரவும் பகலுமாய் ஆனந்தமாய் ஆடினார் செல்லப்பன். சாந்தத்தில் உறையுமாறு ஆகியிருந்த உயர்ந்த யோகிகள்கூட அவரை அறியவில்லை. வீச்சாய் அவர் திரும்பத்திரும்ப சொன்னார்: 'அனைத்தும் சத்தியமே!' நல்லூர்

*தெருக்களிலெல்லாம் இரவும் பகலுமாய் ஆனந்த ஆட்டமாடினார் செல்லப்பன். என்னுடைய பிறப்பு எனும் முடிவற்ற சக்கர சுழற்சியை நிறுத்தும் விதமாய் அவர் என்னை அவருடைய எல்லைக்குள் இழுத்துக் கொள்ள, நான் கருணைக்கடலில் முங்கினேன். 'இங்கு பொருள் என்று ஒன்றும் கிடையாது. அனைத்தும் சத்தியமே!' அவரது கருணை, மாயை கவிந்து கிடந்த இருள் விலகுமாறு செய்தது. அந்நிலையில் என் உடலும் ஆன்மாவும் கருணையில் பீடிக்கப்பட்டுக் கிடந்தன. ஓ, அதிசயம்! இந்த உலகத்தில் இதனை யாரால் உணர முடியும்? நல்லூர் தெருக்களிலெல்லாம் இரவும் பகலுமாய் ஆனந்தமாய் ஆடினார் செல்லப்பன். நற்சிந்தனை.*

*அந்த அமைதியான ஞானி, அன்றைய தினம், அனைத்தும் சத்தியமே என்று உரக்க சொன்னார். குறையாய் இங்கு ஒன்றும் கிடையாது என்ற எண்ணத்துடன் சிவத்தொண்டு செய். பிறப்பு, அறுபடும். அனைத்து பாவங்களும் அழிக்கப்படும். எழுந்திரு, விழித்திரு! அனைத்து வெற்றிகளும் உன்னுடையதே! அந்த அமைதியான ஞானி, அன்றைய தினம், அனைத்தும் சத்தியமே என்று உரக்க சொன்னார். மனதில் மங்காதே. குரு சொல்லும் சத்திய வார்த்தைகளை நீ விளங்கிக் கொள்ளும்போது 'ஜீவனே சிவம்' என்பது துல்லியமாகும். அந்த அமைதியான ஞானி, அன்றைய தினம், அனைத்தும் சத்தியமே என்று உரக்க சொன்னார். நற்சிந்தனை.*